# உயர்நிலை காட்டும் "தந்த்ரா"

## ஓஷோ

தமிழில்:
சுவாமி ஆனந்த் பர்மேஷ்



கவிதா பப்ளிகேஷன்
தபால் பெட்டி எண் : 6123
8, மாசிலாமணி தெரு, பாண்டி பஜார்,
தி. நகர், சென்னை - 600 017.
✆ 2436 4243, 2432 2177.

## 1. தந்த்ரா வரைபடம் (THE TANTRA MAP)

சூத்திரா 1:

உண்மையான ஒன்றை விட்டு விட்டு ஏதோ ஒன்றின் பின்னால் முத்தமிட யாசித்துக்கொண்டு அதுதான் முடிவான உண்மையென்று இருப்பது விடைபெறும் ஒருவன் , வாசலில் நின்று கொண்டு நொடிப்பொழுது இன்பத்திற்கு ( பெண்ணிடம் ) அழைப்பு விடுப்பது போல் ஆகும்.

வெறுமையில் எழும்பும் மாறுபட்ட சக்திகள் செயற்கை இன்பங்களை, கொடுக்குமே பல வழியில் கற்பனை மயக்கத்தில் , நினைவற்ற நிலையில் யோகிகள் கீழ் நோக்கி விழுகிறார்கள் பேரின்பப் பரவெளியிலிருந்து - குருட்டுத்தனமாக இருள் சூழ்ந்த பள்ளத்தில்

யாக நெருப்பில் எரியும் வெண்ணை அரிசியை கருதுகிறான் பிராமணன் , கடவுளுக்குக் காணிக்கை என்று. பேரின்ப பரவெளியின் தேனைச் சேகரிக்க , பாண்டம் உண்டாக்கி அடைய நினைக்கிறான் அந்த முடிவான முடிவை -

கற்பனையாக தூண்டும் உள் சக்தியை, வைக்கிறான் தன் நாக்குக்கு அடியில் , தன் நாக்கினுள் அதைத்தடவும் சிலர், உடலுறவு இன்பத்தை பலமடங்கு உணர , குழம்புகிறார்கள் அது அடைக்கப்பட்ட சக்தியின் வெளிப்பாடு என்று."

உயர்நிலைக் காட்டும் " தந்தரா மனதிலுள்ள விஷயஞானம் , அறிவுமிக்க விளையாட்டுகள் , அதன் பல அமைப்புகள் என்று எல்லாவற்றிலிருந்தும் விடுதலையடைவதே தந்தராவின் நோக்கம் தந்தரா ஒரு வெறுமையான பரந்தவெளி மற்றும் சுதந்திரம்

சாதாரணமாகப் பார்க்கும் பொழுது, தந்தரா ஒரு மதம் அல்ல ஏனென்றால் , மதமும் ஒரு மனவிளையாட்டுதான் மதம் ஒருவகையான ஒழுங்குமுறையை உங்களுக்கு அளிக்கிறது. கிறிஸ்துவனுக்கு ஒரு ஒழுங்குமுறை இருக்கிறது. அதைப்போல ஹிந்து மற்றும் முஸ்லீம்களுக்கும் ஒரு ஒழுங்குமுறை இருக்கின்றது மதம் , ஒருவகையான ஒழுங்குமுறைகளையும் மற்றும் கொள்கை கோட்பாடுகள் என்று பலவற்றை உங்களிடம்

திணிக்கிறது ஆனால் , தந்தரா எல்லா ஒழுங்குமுறைகளையும் எடுத்துவிடுகிறது

மனிதர்களால் ஏற்படுத்தப்பட்ட எல்லா ஒழுங்குமுறைகளையும் திணிக்கப்பட்ட சகல கொள்கை கோட்பாடுகளையும் அகற்றிய பிறகு உங்களிடம் முற்றிலும் புதுமையான ஒழுங்குமுறைகள் ஏற்படும் லாசூ (LAOTZU) சொன்ன தாவோ (IAO). புத்தர் சொன்ன தர்மா இவைகள் உங்களிடம் நிகழும் அவை அனைத்தும், நீங்கள் (மனம்) செய்தது இல்லை அது இயல்பாக உங்களிடம் நிகழ்கிறது. அப்படி நிகழ்வதற்கு, தந்த்ரா ஒரு மையமாக இருக்கிறது. அந்த மைய வெற்று வெளி (SPACE) தயாராக இருக்கும் பொழுது, அனைத்தும் அதை நோக்கிச் செல்கின்றன)

நான் ஒரு மிகப்பழைய அழகான கதை ஒன்றைப் படித்திருக்கிறேன்

ஒரு மாநிலத்தில் , நெடுங்காலமாக மழையே பெய்யவில்லை. எங்கும் வரட்சி கடைசியில் , மக்கள் , அந்த மழையை உண்டாக்குபவரை சந்தித்து. முறையிட முனைந்தார்கள் ஆகவே ஒரு சிலரைத் தேர்ந்தெடுத்து வெகு தூரத்தில் உள்ள ஒரு நகரத்தில் வசிக்கும் அவரைச் சந்திக்க ஏற்பாடு செய்தார்கள்

மழையை உண்டுபண்ணுபவர் , ஒரு வயதான புத்திசாலி இவர்களுடைய குறையைக்கேட்ட அந்தக் கிழவன் , ஒரு நிபந்தனையின் பேரில் , தான் அங்கு மழையை உண்டாக்குவதாகச் சொன்னான் அதாவது, ஒரு திறந்தவெளியில் உள்ள ஒரு குடிசையில் தன்னை தனிமையாக இருக்க மூன்று நாட்கள் அனுமதிக்க வேண்டும் எந்த ஆகாரமும் , நீரும் தேவையில்லை தான் மேற்கொண்டு என்ன செய்வது என்பது பற்றி அப்பொழுது முடிவு செய்கிறேன் என்றான் அந்த மக்கள் குழுவும் அதற்குச் சம்மதித்தது

அந்த மூன்றாவது நாளின் முடிவில் , மிகுந்த மழைபெய்தது. மக்களும் மிகவும் மகிழ்ந்து, அவரைப் புகழ்ந்தவாறு, அவர் இருக்கும் இடத்துக்கு. தங்களுடைய நன்றியைச் சொல்லச் சென்றார்கள் . அவர்கள் . அவரிடம் கடைசியாக , ' எப்படி நீங்கள் இதைச் செய்தீர்கள் ? தயவுசெய்து எங்களுக்கு

விளக்கவும் என்று கேட்டார்கள்

அவர் . இது ரொம்ப எளிதானது. அந்த மூன்று நாட்களில் நான் என்னையே. ஒழுங்குபடுத்திக் கொண்டேன் நான் எவ்வளவுக்கெவ்வளவு

ஒழுங்கு முறையில் இருக்கிறேனோ, அந்த அளவுக்கு இந்த உலகமும் ஒழுங்காகவே இயங்கும். இந்த மழை வந்ததின் காரணம் இதுதான்' என்று சொன்னார்

தந்த்ரா என்ன சொல்கிறது என்றால் , " நீங்கள் இயற்கையின் நியதிப்படி ஒழுங்காக இருந்தால், இந்த உலகமும் உங்களுக்கு ஒழுங்காகவே நடக்கும். நீங்கள் இயற்கையோடு ஒருங்கிணைந்து இருந்தால் , இந்த முழுபிரபஞ்ச உயிர்த்தன்மை உங்களோடு ஒழுங்கினைந்து இருக்கும் . அந்த ஒழுங்குமுறை பொய்யானது அல்ல , மற்றும் அது உங்களிடம் திணிக்கப்பட்டது அல்ல ஏதாவது ஒழுங்குமுறையை உங்கள் மேல் திணித்தால், நீங்கள் பிளவுபடுகிறீர்கள். உங்கள் மன ஆழத்தில் , அந்த ஒழுங்கற்ற தன்மை தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கிறது.

இதை நீங்கள் நன்றாகக் கவனிக்கலாம். நீங்கள் ஒரு முன் கோபம் உள்ளவராக இருந்தால் , நீங்கள் அதை வலுக்கட்டாயமாக அடக்கி, உன்னுடைய பிரக்ஞையற்ற மன ஆழத்தில் புதைக்கலாம். ஆனால், அது ஒருபோதும் மறைவதில்லை. நீங்கள் அதை இப்பொழுது சுத்தமாக மறந்திருக்கலாம். ஆனால், அது அங்கேதான் இருக்கிறது. அது அங்கேயே இருப்பது உங்களுக்கும் தெரியும் அது. உங்களுக்குள்ளே ஓடிக்கொண்டுதான் இருக்கிறது. உங்களுடைய உயிர்த்தன்மையின் அடித்தளத்தில் அது இருந்துகொண்டேதான் இருக்கிறது. அதன்மேல் , நீங்கள் சிரித்தவாறு உட்கார்ந்திருக்கிறீர்கள். ஆனால், அது எந்த நேரத்திலும் மேலே கிளம்பும் என்று உங்களுக்குத் தெரியும் உங்களுடைய சிரிப்பில் எந்த ஆழமும் இருக்காது; அது உண்மையானது அல்ல , நீங்களே, உங்கள் முயற்சியாக , அதை ஏற்படுத்தியிருக்கிறீர்கள்.

வெளியில் உள்ள ஒழுங்குமுறைகளால் திணிக்கப்பட்ட

ஒரு மனிதன் , எப்பொழுதும் ஒழுங்கற்ற தன்மையிலேயே இருக்கிறான் ஆனால் தந்த்ரா வேறு ஒரு ஒழுங்குமுறை இருக்கிறது என்று கூறுகிறது. நீங்கள் எந்த ஒழுங்குமுறைகளையும் , பழக்கவழக்கங்களையும் மற்றும் சமுக சட்டவிதிகளையும் , உங்களிடம் திணித்துக் கொள்ளவேண்டாம் . நீங்கள் வெறுமனே இயற்கையோடு இயைந்து, அப்போதைக்கப்போது (SPONTANEOUS) செயல்படுங்கள் , ஒரு மனிதனிடம் வழங்கப்படவேண்டிய, மிகப்பெரிய ஏற்பாடு இதுதான். ஆனால் , இதற்கு மிகுந்த தைரியம் வேண்டும் . ஏனென்றால் , உங்கள் சமூகம் அதை விரும்பாது. மற்றும் அதற்கு மாறாகவே அது செயல்படும் . இந்த சமுகம், ஒருவித ஒழுங்குமுறையை, நீங்கள் பின்பற்ற வேண்டும் என்று நினைக்கிறது. நீங்கள் அந்த சமூகம் சொன்னதைக் கேட்டால் , அது உங்கள் மேல் பிரியம் கொள்கிறது. நீங்கள் அதற்குமாறாக , சற்று இப்படி அப்படி மாறுபட்டு செய்தால் , அது உங்கள் மேல் மிகுந்த கோபம் கொள்கிறது. ஏன் , அதற்கு பைத்தியமே பிடித்தால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.

தந்தரா மிகவும் புரட்சிகரமானது ஆனால் , அது அரசியல் புரட்சிபோல் அல்ல. மேலும், இந்த உலகத்தை மாற்றக்கூடியவகையில், அதனிடம் எந்த

புரட்சிகரமான திட்டமும் இல்லை இந்த நாட்டையும் சமூகத்தையும் மாற்றக்கூடிய வகையில் , அதனிடம் எந்தத் திட்டமும் கிடையாது அதனுடைய புரட்சித் தன்மை தனிப்பட்ட மனிதனுடையது ஏற்கனவே ஏற்படுத்தப்பட்ட கொள்கை கோட்பாடுகளிலிருந்தும் , அடிமைத்தனத்திலிருந்தும் வெளியே வருவதை அது குறிக்கிறது. அந்த அடிமைத்தனத்திலிருந்து வெளியே வந்து. நீங்கள் இதுவரை உணராத , உங்களைச் சுற்றியுள்ள வேறு ஒரு மாதிரியான உலகத்தை உணர்கிறீர்கள் அதாவது. இதுவரை நீங்கள் கண்களை மூடிக்கொண்டு குருட்டுத்தனத்தில் இருந்ததுபோலவும் , இப்பொழுது திடீரென்று குருட்டுத்தனம் நீங்கி, உங்கள் கண்கள் திறக்கப்பட்டு

நீங்கள் முற்றிலும் மாறுபட்ட உலகத்தைப் பார்ப்பதுபோல

எ அந்தக் குருட்டுத்தனம் என்பது, உங்களுடைய மனம், உங்களுடைய எண்ணங்கள் , உங்களுடைய கருத்துக்கள் , உங்களுடைய விஷய ஞானம் மற்றும் உங்களுடைய பழைய மத ஏடுகள்தான் இவைகள்தான் அந்த குருட்டுத்தனத்தின் மேலே அடர்த்தியாக மூடிக்கொண்டு இருக்கிறது அவைகள் உங்களை குருட்டுத்தனமாகவும் , சோம்பல் தன்மையோடும் , உங்களை வாழாமல் வாழச்செய்கிறது. ஆனால் தந்தரா நீங்கள் உயிரோட்டமிக்கவராக இருக்கவேண்டும் என்று விரும்புகிறது - அதாவது வளரும் மரங்களைப்போல , ஓடும் நதிகளைப்போல , ஒளியைக் கொடுத்துக் கொண்டிருக்கும் சூரிய , சந்திரனைப்போல இது உங்களுடைய பிறப்புரிமை

நீங்கள் உங்களுடைய அடிமைத்தனத்தை விடுவதால் , நீங்கள் எதையும் இழக்கப்போவது இல்லை, மாறாக நீங்கள் பெறுகிறீர்கள் ஒரு கணம்தான் என்றாலும் , முழுமையான சுதந்திரம் , உங்களைத் திருப்திப்படுத்தப் போதும் ஒரு காயடித்த காளையைப் போல அடிமையாக, ஒருவன் 100 வருடங்கள் வாழ்வது அர்த்தமற்றது

இந்தத் தந்தரா உலகத்தில் இருப்பதற்கு, மிகுந்த தைரியம் தேவை அது ஒரு தீரமான செயல்தான் . இதுவரையில் ஒரு சிலர் தான் , அந்தப் பாதையில் சென்றிருக்கிறார்கள் ஆனால் இப்பொழுது அதன் வருங்காலம் மிக நன்றாக இருக்கிறது. அது போகப்போக மிகுந்த முக்யத்வத்தை அடையும் அடிமைத்தனத்தைப் பற்றி, மக்கள் அதிக அளவில் புரிந்துகொள்வார்கள் மேலும் அரசியல் புரட்சி என்பது உண்மையான புரட்சி இல்லை என்பதையும் மேலும் மேலும் அவர்கள் நன்றாகப் புரிந்துகொள்வார்கள்.

எல்லா அரசியல் புரட்சிகளும் , கடைசியில் , அதே புரட்சிக்கு எதிராகவே செயல்படுகின்றன . அவர்கள் அதிகாரத்துக்கு வந்த பின்பு, புரட்சிக்கு எதிராகவே இயங்குகிறார்கள் அதிகாரம் என்பது புரட்சியற்றது. இது அதிகாரத்தின் மறுபரிமாணம் அதிலேயே அந்த புரட்சியற்றத் தன்மையும் கலந்தே இருக்கிறது. ( நீங்கள் ஒரு புரட்சிக்காரனிடம் , அதிகாரத்தைக்

கொடுத்துப்பாருங்கள் . அவன் புரட்சிக்கு எதிராக மாறிவிடுவான் அதிகாரம் . அதன் உலகத்தை தானே அமைத்துக் கொள்கிறது. ஆகவே, இதுநாள் வரை, இந்த உலகத்தில் அனேக

புரட்சிகள் நடந்திருக்கின்றன . ஆனால் எல்லாப் புரட்சிகளும் , கடைசியில் படு தோல்வியில் தான் முடிந்திருக்கிறது எந்தப் புரட்சியாலும் , எந்தப் பிரயோஜனமும் இல்லை என்பதை மக்கள் புரிந்துகொண்டுவிட்டார்கள்

தந்தரா, ஒரு வித்தியாசமான அணுகுமுறையை அளிக்கிறது அது ஒரு கூட்டுப் புரட்சியல்ல (REVOLUTION;) அது ஒரு தனிமனிதனின் புரட்சியாகும் (REBELLION). நீங்கள் உங்களைத் தனித்து மறுக்க வேண்டும் . அதற்கு, நீங்கள் ஒரு கட்சியை ஆரம்பிக்க வேண்டியது இல்லை. நீங்களே, உங்களையே மறுத்து. உண்மையை அறிய முயலவேண்டும் அது. இந்த சமூகத்தோடு, நீங்கள் போடும் சண்டை இல்லை. நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் அது, இந்த சமூகத்துக்கு அப்பால் இயங்குகிறது. அது இந்த சமூகத்தைத் துறக்கவில்லை. ஆனால் அது ஒரு கூட்டமான செயல் அல்ல . இந்த சமூகத்தோடு எதையும் செய்யத் தேவையில்லை அது உங்களுடைய அடிமைத்தனத்திற்கு எதிரானது இல்லை அது உங்களுடைய சுதந்திரத்திற்காக , அதாவது நீங்களே சுதந்திரத் தன்மையில் இருப்பதற்காக அமைக்கப்பட்டிருக்கிறது

உங்களுடைய வாழ்க்கையை, சற்று கவனித்துப் பாருங்கள் நீங்கள் உண்மையிலேயே சுதந்திரத்தில் இருக்கிறீர்களா? நிச்சயமாக இல்லை. உங்களைச்சுற்றி, ஆயிரம் பிணைப்புகள் இருக்கின்றன . ஆனால் , அவைகளை நீங்கள் பார்க்க விரும்பவில்லை. ஏனெனில் , அது உங்களிடம் சங்கடத்தை உண்டுபண்ணிவிடும் , அது உங்களிடம் துன்பத்தை உண்டாக்கிவிடும் . ஆகவே, அதை அடையாளம் கண்டுகொள்ள நீங்கள் விரும்பவில்லை. ஆகவே, உங்கள் நிலையில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. நீங்கள் இன்னும் ஒரு அடிமையாகவே இருக்கிறீர்கள் . நீங்கள் தந்த்ராவின் பரிமாணத்திற்குள் செல்லவேண்டும் என்றால் , நீங்கள்

உங்களுடைய அடிமைத்தனத்தைப் புரிந்துகொள்ள வேண்டும் . ஆனால் , அது மிக ஆழத்தில் வேர் விட்டிருக்கிறது. அதை நீங்கள் விலக்கவேண்டும். விட வேண்டும் . நீங்கள் அதைப்பற்றிப் புரிந்து கொண்டால்தான், உங்களால் அதை விலக்கமுடியும்.

உங்களையே நீங்கள் சமாதானம் செய்து கொள்ள வேண்டாம் . ' எல்லாம் சரிதான் ' என்று சொல்லிக்கொண்டு, உங்களையே தேற்றிக்கொள்ள வேண்டாம் . உண்மையில் , அது சரியல்ல . உங்களுடைய முழுவாழ்க்கையே ஒரு பயம் கலந்த கனவுதான் . அதை நன்றாக ஆழ்ந்து பாருங்கள் ! உங்கள் வாழ்க்கையில் , எந்தக் கவிதையும் , ஆடலும் பாடலும் , அன்போ, பிரார்த்தனையோ எதுவும் கிடையாது. எந்த மகிழ்ச்சியும், எந்தக் கொண்டாட்டமும் கிடையாது - அவைகள் அனைத்தும் அகராதியில் உள்ள வெறும் வார்த்தைகள்தான் . பேரானந்தம் ? - ஆமாம் , நீங்கள் அதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் ஆனால் அதைப்பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. கடவுள் ? அவர் கோவிலிலும் , மசூதிகளிலும் இருக்கிறார் . ஆமாம் . அப்படித்தான் மக்கள் பேசிக்கொள்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. அதைப்பற்றிக் கேட்பவர் களுக்கும் எதுவும் தெரியாது. எவைகளெல்லாம் அழகாக இருக்கின்றனவோ,

அவைகள் எல்லாம் அவர்களுக்கு அர்த்தமற்றுக் காணப்படும் ளெல்லாம் அர்த்தமற்று இருக்கிறதோ, அவைகளெல்லாம் , அவர்களுக்கு மிக மிக முக்கியமாகத் தெரியும்

ஒருவன் எப்பொழுதும் பணத்தைச் சேர்த்துக்கொண்டே இருக்கிறான் அவன் என்ன நினைக்கிறான் என்றால், வாழ்க்கையில் தான் பெரிய சாதனை செய்து இருக்கிறோம் என்று மனிதனின் முட்டாள் தனத்துக்கு அளவே இல்லை அதுதான் உங்களுடைய முழுவாழ்க்கையையே அழிக்கிறது பல நூற்றாண்டு காலமாக , அது பலலட்சம் மக்களை

அழித்திருக்கிறது

உங்கள் விழிப்பு நிலையை அதிகரித்துக் கொள்ளுங்கள் அந்த முட்டாள்தனங்களிலிருந்து விடுபட வேறுவழியே இல்லை

இன்றைய சூத்திராவுக்குள் செல்வதற்கு முன் , உள் பிரக்ஞை நிலையாக இருக்கும் தந்த்ராவின் வரைபடத்தைப்பற்றி, சிலவற்றை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் அதைப்பற்றி ஏற்கனவே, உங்களுக்குச் சொல்லியிருக்கிறேன் மேலும் சிலவற்றை இப்பொழுது சொல்ல வேண்டும்

முதலாவதாக ஒரு ஆண் என்பவன் முற்றிலும் ஆணாகவும், பெண் என்பவள் முற்றிலும் பெண்ணாக இருக்கவில்லை ஒரு ஆண், ஆண்தன்மையும், பெண தன்மையும் கலந்தே இருக்கிறான் அதைப்போல, ஒரு பெண், பெண் மற்றும் ஆண் தன்மையுடன் கலந்தே இருக்கிறாள் ஆடம் (ADAM) ஈவை (EYE) தன்னுள்ளே அடக்கியிருக்கிறான் அதைப் போல ஈவ், தன்னுள்ளே ஆடத்தை அடக்கி வைத்திருக்கிறாள் உண்மையில், யாருமே ஆடமாகவோ, அல்லதுஈவாகவோ இருக்கவில்லை. நாம் . ஆடம் பாவாகவே கலந்து இருக்கிறோம் இது இதுவரை அறிந்திராத மிகப் பெரிய உள் நோக்குதல்களில் ஏற்பட்ட கண்டுபிடிப்பு

நவீன ஆழ் நிலை மனநல மருத்துவம். இப்பொழுது இதுபற்றி புரிந்து கொண்டு இருக்கிறது. அதை அவர்கள் இருவேறு மாறுபட்ட ஒருங்கிணைப்பு (BI - SEXUALITY) என்று அழைக்கிறார்கள் ஆனால், இதை தந்த்ரா, கிட்டத்தட்ட 5000 வருடங்களுக்கு முன்பே அறிந்து, மக்களுக்கு எடுத்துக் கூறியது உலகத்தில் உண்டான மிகப்பெரிய கண்டுபிடிப்புகளில், இதுவும் ஒன்று ஏனென்றால் , இதைச் சரியாகப் புரிந்துகொண்டால் , நீங்கள் உங்களுக்குள்ளே எளிதாகச் செல்லமுடியும் எதற்காக ஒரு ஆண், ஒரு பெண்ணனை காதலிக்கிறான் ? ஏனென்றால் , அவன் தன்னுள்ளே ஒரு பெண்ணையும் சுமந்திருக்கிறான் இல்லாவிட்டால், அவனால் ஒரு பெண்ணை காதலிக்க முடியாது. அடுத்து, எதற்காக ஒரு குறிப்பிட்ட பெண்ணனை மாத்திரம் நீங்கள் காதலிக்கிறீர்கள் ? ஆயிரக்கணக்கில் பெண்கள் இருக்கும்பொழுது, எதற்காக ஒரு பெண்ணின் மீது மட்டும் திடீரென்று

உங்களுக்கு மிகவும் முக்கியமாகப்படுகிறது? அதாவது இந்த உலகத்தில் உள்ள மற்ற பெண்களெல்லாம் மறைந்துவிட்டு, இந்த ஒரு பெண் மாத்திரம்தான் உங்கள் கண்களுக்குத் தெரியும் இது ஏன்? எதற்காக, ஒரு

குறிப்பிட்ட ஆண் மட்டும் உங்களைக் கவரவேண்டும்? எதற்காக முதல் பார்வையிலேயே உங்கள் உள்ளே திடீரென்று அந்த உந்துதல் ஏற்படவேண்டும்? தந்தரா என்ன சொல்கிறது என்றால், நீங்கள் ஆணாக இருந்தால் ஒரு பெண்ணின் உருவத்தையும், நீங்கள் பெண்ணாக இருந்தால், ஒரு ஆணின் உருவத்தையும் உள்ளடக்கி இருக்கிறீர்கள் வெளியே இருக்கும் ஆண்களில் சிலர். உங்களுக்குள்ளே இருக்கும் ஆணின் உருவத்தோடு ஒத்துப்போனால் நீங்கள் அவனோடு காதல் உறவு வைக்க விரும்புகிறீர்கள் இதுதான் காதலின் அர்த்தம்

- இதை உங்களால் புரிந்துகொள்ள முடியாது நீங்கள் வெறுமனே உங்கள் தோள்களைத்தான் குலுக்குவீர்கள் - நீங்கள் எப்படியோ அது நிகழ்ந்துவிட்டது" என்றுதான் கூறுவீர்கள் ஆனால், உங்களுக்குள்ளே ஆழமாக, அது வேலை செய்து கொண்டே இருக்கிறது எதற்காக நீங்கள் ஒரு சில பெண்களால் கவரப்படுகிறீர்கள்? மற்ற பெண்களிடம் ஏன் அது ஏற்படவில்லை? ஏனென்றால் அந்தப் பெண், உங்களுக்குள்ளே உள்ள பெண்ணின் உருவத்தோடு கிட்டத்தட்ட ஒத்துப் போகிறாள். இந்த உள்ளே உள்ள உருவத்தோடு, அந்தப் பெண் ஒருங்கிணைகிறாள் அப்பொழுது நீங்கள், ' இவள் தான் என்னுடையவள் என்றும் இவர்தான் எனக்குரியவர் என்றும் உணருகிறீர்கள் இந்தப் பரவச உணர்வுதான் காதல் என்பது. ஆனால், வெளியில் இருக்கும் பெண், உங்களை முழுமையாகத் திருப்திப்படுத்த முடியாது. ஏனென்றால், எந்த வெளி உருவமும், உங்களுக்குள்ளே இருக்கும் பெண்ணின் உருவத்தோடு சரியாகப் பொருந்தவதே இல்லை.

உண்மையில், அப்படி ஒருபோதும் நடப்பதில்லை. அவள் சிறிது ஒத்துப்போகலாம் - அதனால் ஒரு

கவர்ச்சி, உங்களிடம் ஏற்படலாம் ஆனால், அது வெகு சீக்கிரத்தில் மறைந்துவிடும் விரைவிலேயே, உங்களுக்குப் பிடிக்காத ஆயிரம் அம்சங்கள் இருப்பதைக் கண்டு நீங்கள் அவளை வெறுக்கக் கூடும் அவைகளையெல்லாம் தெரிந்துகொள்வதற்கு, சற்று அவகாசம் தேவை அவ்வளவுதான்

முதலில் நீங்கள் கவர்ச்சியினால் முட்டாளாக்கப்படுகிறீர்கள் ஆரம்பத்தில் அந்த ஒற்றுமை மிகப் பெரிதாகத் தெரியும் அது உங்கள் கண்களையும் அறிவையும் மறைக்கும் நீங்கள் அவளால் மிகவும் ஆக்ரமிக்கப்படுகிறீர்கள். ஆனால், மெல்ல, மெல்ல உங்களுக்குப் பிடிக்காத பல அம்சங்கள் இருப்பதால், நீங்கள் இருவரும் கருத்தில் மாறுபட்டு, மனத்தளவில் அந்நியர்கள் போல் ஆகிவிடுவீர்கள், ஆமாம், நீங்கள் அவளை விரும்புகிறீர்கள் ஆனால், ஆரம்பத்தில் உள்ளது போல் கண்மூடித்தனமாக இல்லை. அந்தக் காதல் பார்வை இப்பொழுது மறைந்துவிட்டது. அதைப்போல, அவளும் தனக்குப் பிடித்த சில அம்சங்கள், அவனிடம் இருப்பதைப் புரிந்துகொள்கிறாள் ஆனால், ஆரம்பத்தில் உள்ள, அந்த முழுமையான கவர்ச்சி, இப்பொழுது அவளிடம் கிடையாது ஆகவேதான், ஒவ்வொரு மனைவியும் தன் கணவனை மாற்ற நினைக்கிறாள் அதைப்போல, ஒவ்வொரு கணவனும், தன் மனைவியை மாற்ற

நினைக்கிறான்

அவர்கள், என்ன செய்ய முயற்சிக்கிறார்கள் ? ஏன் ? எதற்காக ஒரு மனைவி, தன் கணவனை தொடர்ந்து மாற்ற நினைக்கிறாள்? என்ன காரணம்? ஆரம்பத்தில் அவன்மேல் தீவிரமாகக் காதல் கொண்டவள், விரைவிலேயே அவனை மாற்ற ஏன் முயல வேண்டும்? இப்பொழுது, எவ்வளவோ தன்னுடன் ஒத்துப் போகக் கூடாத பல விஷயங்கள் அவனிடம் இருப்பதைப் புரிந்துகொள்கிறாள் அதிலிருந்து விடுதலையடைய விரும்புகிறாள் அவனிடம் உள்ள பல பிடிக்காத அம்சங்களை அகற்ற முயலுகிறாள் அதைப்போல கணவனும் முயலுகிறான ஆனால், அந்தப் பெண்ணின் அளவுக்கு அவ்வளவு தீவிரமாக

கடுமையாக அவன் முயலுவதில்லை ஏனெனில் , கணவன் சீக்கிரமே தன் முயற்சியில் களைப்படைந்து விடுகிறான் - ஆனால் , அவன் மனைவி, தன் நம்பிக்கையை அவ்வளவு சீக்கிரம் தளரவிடுவதில்லை

அவள், "இன்றோ அல்லது நாளையோ அல்லது அதற்கு அடுத்த நாளோ என்றோ ஒரு நாள் நான் அவனை மாற்றிவிடுவேன் என்று நம்புகிறாள் ஆனால் , அவனை மாற்ற முடியாது என்று முழுமையாக அறிந்து கொள்ள 20 அல்லது 25 வருடங்கள் ஆகிவிடும் 50 வயதுக்குப் பிறகு அவளுக்கு மாதவிடாய் நின்ற பிறகு இருவரும் முதுமையை நெருங்கும் பொழுது. இனிமேல் எதுவும் செய்யமுடியாது என்றும் , எதுவும் அவர்களிடம் மாறவில்லை என்பதையும் ஒருவருக்கொருவர் தீர்க்கமாகப் புரிந்து கொள்கிறார்கள் அவர்கள் , ஒவ்வொரு நாளும் கடுமையாக முயலுகிறார்கள் ஆனால் , மனைவியும் அப்படியேதான் இருப்பாள், கணவனும் அப்படியேதான் இருப்பான் . யாரும் , யாரையும் மாற்ற முடியாது இது ஒரு மிகப்பெரிய அனுபவம் - மிகப்பெரிய புரிந்துகொள்தலாகும்

ஆகவேதான் , வயதானவர்கள் மிகவும் பொறுமையாகவும், சகித்துக்கொண்டும் போகிறார்கள் ஆனால் இளமையில் அவர்கள் இருவரும் மிகவும் தீவிரமாகவே இருந்தார்கள் , ஒருவரை ஒருவர் ஏற்றுக்கொள்வது இல்லை அவர்கள் தனக்குப்பிடிக்காத எல்லாவற்றையும் மாற்ற முனைகிறார்கள் அவர்களது விருப்பப்படி, இந்த உலகம் அமையவேண்டும் என்று நினைக்கிறார்கள் அதற்காக அவர்கள் கடுமையாகப்போராடுகிறார்கள் ஆனால் , அவர்கள் நினைத்தது நடக்கவில்லை. நடக்கவும் முடியாது - ஏனென்றால் இயற்கையே அப்படித்தான் அமைத்திருக்கிறது.

ஆகவே வெளியே உள்ள ஆண் , ஒரு பெண்ணின் உள்ளே இருக்கும் ஆணுடனும் , அதைப்போல வெளியே உள்ள பெண் , தன் உள்ளே இருக்கும் ஆணுடனும் ஒருக்காலும் முழுமையாக ஒத்துப் போகாது என்பதை ஒருவருக்கொருவர் முழுமையாகப் புரிந்துகொள்கிறார்கள் . ஆகவேதான் , காதல் , ஆனந்தத்தையும் , துக்கத்தையும் கொடுக்கிறது. அது

மகிழ்ச்சியையும் துயரத்தையும் ஒருங்கே கொடுக்கிறது. ஆனால் மகிழ்ச்சியைவிட , துயரம் , துக்கம் அனைத்தும் அதிகமாகவே இருக்கும்

இதற்கு தந்தரா என்ன சொல்கிறது? அதற்காக என்ன செய்ய வேண்டும்?

தந்த்ரா சொல்கிறது. " வெளியில் உள்ள ஆணையோ பெண்ணையோ திருப்தி செய்வதற்கு எந்த வழியும் கிடையாது நீங்கள் உங்களுக்குள்ளே செல்ல வேண்டியதுதான் அங்கேயுள்ள பெண்ணையும் மற்றும் ஆணையும் கண்டுபிடிக்க வேண்டும் நீங்கள் அதனுடன்தான் உடலுறவுகொள்ள வேண்டும் ." என்று சொல்கிறது. இது ஒரு மிகச்சிறந்த அறிவிப்பு.

எப்படி இது நிகழும் ? இந்த வரைபடத்தைப் புரிந்துகொள்ள முயலுங்கள் தந்த்ரயோக ரீதியாக , உங்களுக்குள்ளே 7 சக்கரங்கள் இருக்கின்றன என்று நான் முன்பே கூறியிருக்கிறேன். ஆணிடம், மூலாதார் (MULADHAR) என்பது உள்ளே உள்ள ஆண் , சுவாதிஸ்த்தான் ' (SWADIISTAN) என்பது உள்ளே உள்ள பெண் பெண்ணிடம் உள்ள மூலதார் (MULADHAR) என்பது உள்ளே உள்ள பெண் மற்றும் ' சுவாதிஸ்தான் ' என்பது ஆண் . இப்படி அடுத்தடுத்து செல்கிறது. இந்த ஏழு சக்கரங்களில், ஆறுவரை, இந்த இரு வேறுதன்மை நிலைத்து இருக்கிறது. ஆனால் ஏழாவது நிலை, தனித்தே இருக்கிறது.

ஆகவே, உங்களுக்குள்ளே மூன்று ஜோடிகள் இருக்கின்றன . அதாவது, மூலதார் - சுவாதிஸ்தான் திருமணமாகி இருக்கிறார்கள் . மணிப்பூராவும் அனஹதாவும் (MANIPURA - ANAHATA) திருமணம் செய்ய இருக்கிறார்கள் . அதைப்போல விஷுதாவும் ஆக்னாவும் (VISHUDHA - AINA) திருமணம் செய் இருக்கிறார்கள்.

உங்களுடைய சக்தி வெளியே செல்லும்பொழுது, உங்களுக்கு வெளியே ஒரு பெண் தேவைப்படுகிறாள். நீங்கள் , அவளால் ஒரு சில கணம் பேரின்பத்தில் சிறிய ஒளிக்கீற்றை உணர்கிறீர்கள் . ஏனென்றால் , பெண்ணோடு சேர்ந்து உடலுறவால் உணரும் இன்பம்

ஒருபோதும் நிலையாக இருக்காது - அதன் ஆயுள் மிகக் குறுகியது. ஒரு கணம்தான், ஒருவர் மற்றவரிடம் தன்னை இழக்கிறார்கள் அடுத்து, உடனே நீங்கள் திரும்பவும் உங்களுக்கே தள்ளப்படுகிறீர்கள் . அதில் இப்பொழுது பழிவாங்குதலும் கலந்து இருக்கிறது. ஏனென்றால் , ஒவ்வொரு காதல் உறவுக்குப்பின்னும் , ஒருவித ஏமாற்றமும் மற்றும் சலிப்பும் ஆரம்பிக்கிறது. நீங்கள் மறுபடியும், மறுபடியும் தோல்வி அடைகிறீர்கள். ஏன்னறால், நீங்கள் எதிர்பார்த்த அளவு, அது நிகழ்வது இல்லை. ஆமாம் , நீங்கள் அதன் உச்சத்தன்மையை அடைகிறீர்கள் . ஆனால் நீங்கள் அதை அறிந்துகொள்வதற்கு முன்பே, அது கீழே இறங்க ஆரம்பித்துவிடுகிறது. மறுபடியும் கீழே விழுந்துவிடுகிறது. நீங்கள் ஒரு ஆணையோ அல்லது பெண்ணையோ சந்திப்பதற்கு முன்பே, அந்தப் பிரிவு நிகழ ஆரம்பித்துவிடுகிறது. ஆகவே, கல்யாணத்திற்குப் பின்பு, தம்பதிகள் மிக விரைவில் அலுப்படைந்து, ஏமாற்றமடைந்து, விவாகரத்துக்கு வந்துவிடுகிறார்கள் . நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . எல்லா காதலர்களும் , சலிப்படைந்தவர்கள்தான் அவர்கள் அதிகமாக எதிர்பார்க்கிறார்கள் - அதாவது அந்த உச்ச இன்பத்தை அவர்கள் மறுபடியும் , மறுபடியும் எதிர்பார்கிறார்கள் . ஆனால், எதுவும் செய்ய முடிவதில்லை அதை நீட்டிக்க எந்த வழியும் தெரியவில்லை - ஏனென்றால் , இயற்கையின் நியதியை உங்களால் முற்றிலும் அழிக்க முடியாது. அதற்கு அந்த நியதியை நீங்கள் புரிந்துகொள்ள முயலவேண்டும்

வெளியே உள்ள உடல்களின் சந்திப்பிடை கிடைக்கும் இன்பம் உடனே மறையக் கூடியது. ஆனால் , உள்ளே நிகழும் சந்திப்பில் ஏற்படும் இன்பம் சாசுவதமானது. தெய்வீகமானது. நீங்கள் எவ்வளவுக்கெவ்வளவு உள்ளே செல்கிறீர்களோ, அவ்வளவுக்கவ்வளவு, அந்தத் தெய்வீக இன்பநிலை மேலே மேலே அதிகரித்துக் கொண்டே செல்லும்

ஆரம்ப மூலதார் . ஆணிடம் ஆண தன்மையாக இருக்கிறது நீங்கள் வெளியில் இருக்கும் ஒரு

பெண்ணோடு பேசும் பொழுது உங்கள் உள்ளே உள்ள பெண்ணை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் என்று தந்தரா சொல்கிறது உங்களுடைய பிரகஞைத் தன்மை, உள்நோக்கிச் செல்லட்டும் அப்பொழுது உங்கள் கண்களை மூடிக்கொண்டு, உங்கள் பிரக்ஞைத் தன்மையை உள்ளேயே இருக்க அனுமதியுங்கள் அது ஒரு தியானமாகட்டும் உங்களுடைய சக்தி தூண்டப்படும் பொழுது. அந்தச் சந்தர்ப்பத்தை நழுலவிடாதீர்கள் இந்தத் தருணத்தில் தான் , நீங்கள் முழுமையாக ஒருங்கிணைய முடியும் - அதுவே உள் நோக்கிச் செல்லும் ஆன்மீக யாத்திரை

சாதாரணமாக இதை ஆழ்ந்து பார்ப்பது கஷ்டம் ஆனால் காதல் விளையாட்டின் பொழுது, ஒரு சில நேரங்களில் நீங்கள் சாதாரண நிலையில் இருக்க மாட்டீர்கள் அப்பொழுது, நீங்கள் உச்ச உயர்வில் இருப்பீர்கள் அடுத்து உச்சகட்ட இன்பத்தில் (ORGASM) உங்களுடைய முழுசக்தியின் உணர்வு நாட்டியம் போல , துடிக்க ஆரம்பிக்கும் ஒவ்வொரு திசுவும் ஒவ்வொரு நரம்பும் ஒரே லயத்தில் இயற்கையோடு இயைந்து ஆனந்த ஆட்டம் போடும் அதை நீங்கள் சாதாரண வாழ்க்கையில் புரிந்துகொள்ள முடியாது இந்த ஒருங்கிணைந்த தருணத்தை, உள் நோக்கிச் செல்லும் வழியாக உபயோகியுங்கள் நீங்கள் காதல் பண்ண ஆரம்பிக்கும் பொழுதே, அதை தியானமாக்க முயற்சி செய்யுங்கள் அதை ஆழ்ந்து நோக்குங்குள் அதை சாட்சியாக நின்று பார்க்க முயலுங்கள்

அப்பொழுது, ஒரு கதவு திறக்க ஆரம்பிக்கிறது. இதுதான் ' தந்த்ரா அனுபவம் என்பது தந்த்ரா என்ன சொல்கிறது என்றால் , அந்தக் கதவு திறப்பதால்தான் மற்றும் உங்களுடைய உள் ஆனந்த நிலை மேலே எழும்பி, உங்களை ஆக்ரமிப்பதால்தான் , நீங்கள் ஆனந்தம் அடைகிறீர்கள் நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் அது. அந்த வெளியே உள்ள பெண்ணிடமிருந்து வரவில்லை அதைப் போல , அது வெளியே உள்ள ஆணிடமிருந்தும் வரவில்லை அது, உங்களுடைய உள் மைய நிலையிலிருந்து மேலே கிளம்பி வருகிறது வெளியே உள்ள உடல்கள் வெறும் கருவிதான் வெளிபெண்ணோடு காதல் விளையாட்டு விளையாடுவது, பாபம் என்று தந்த்ரா

சொல்லவில்லை அதனால், நீண்ட இன்பத்தை அடைய முடியாது என்றுதான் கூறுகிறது அது. இந்த சாதாரண காதல் விளையாட்டை குறைகூறவில்லை அந்த இயற்கையான உணர்வை. அது ஏற்றுக்கொள்கிறது. ஆனால் , அந்தக் காதல் உணர்வை, நீங்கள் உங்களுக்குள்ளே செல்ல , உபயோகியுங்கள் என்றுதான்

கூறுகிறது. அந்த உணர்ச்சிமயமான நேரத்தில் தங்கள் இந்த உலகத்தில் இருப்பதில்லை அப்பொழுது நீங்கள் மேலே பறக்கிறீர்கள் உங்களுடைய இலக்கை நோக்கி அந்த அம்பைத் திருப்ப முடியும் அப்பொழுது நீங்களும் ஒரு சாரமாவாக(SAKALIA) முடியும்

நீங்கள் காதல் உறவில் ஈடுபட்டிருக்கும் பொழுது அந்த உணர்வை தியானமாக்கலாம் நீங்கள் அமைதியாக கண்களை மூடிக்கொண்டு அந்த வெளியே உள்ள ஆனையோ அல்லது பெண்ணையோ மறந்து, நீங்கள் மெல்ல உங்களுக்குள்ளே செல்ல வேண்டும் அப்பொழுது அது நிகழும் உங்களுக்குள்ளே உள்ள ஆண்மையமான மூலதார் . உங்களுக்குள்ளேயே இருக்கும் சுவாதிஸ்தான் என்ற பெண்ணின் மையத்தை நோக்கிச் செல்ல ஆரம்பிக்கும். பிறகு அது ஒன்றில் ஒன்று கலக்க முயலும் (OTION) அப்பொழுது உள்ளேயே ஆழ்ந்த உடலுறவு ஏற்படும்

சிலசமயம் உங்களுக்குத் தெரியாமலே அது நடக்கலாம் இதுபற்றி அனேக சந்நியாசிகள் முன்பு எனக்கு கடிதம் எழுதியிருக்கிறார்கள். ஆனால் அதற்கு நான் பதிலளிக்கவில்லை ஏனென்றால் , அதற்கு என்னால் அப்பொழுது பதிலளிக்க முடியாது. ஆனால், இப்பொழுது என்னால் அதை விளக்க முடியும் நீங்கள் அதைப் புரிந்துகொள்ள முடியும்

ஒரு சந்நியாசி, மீண்டும் மீண்டும் எனக்கு கடிதம் எழுதி நான் ஏன் பதில்ளிக்கவில்லை என்று தான் மிகவும் ஆச்சிரியப்படுவதாக எழுதியிருந்தார் ஏனென்றால் அதுவரை அந்தவரைப்படம் எனக்குக் கிடைக்கவில்லை இப்பொழுது என்னால் அந்த வரைபடத்தை உங்களுக்கு அளிக்க முடியும் என்னை ஆழ்ந்து கேட்டாலே அவருக்கு அந்த உச்ச இன்பம்

ஏற்பட்டுவிடுகிறது அவரது உடல் முழுமையும் ஆனந்தத்தால் துடிக்க ஆரம்பித்துவிடுகிறது ஒரு பெண்ணோடு உடலுறவு கொள்ளும் பொழுது. ஏற்படும் இன்பத்தைப் போலவே, அந்த இன்பம் இருப்பதாகக் கூறினார் . இதனால் அவர் மிகவும் குழப்பமடைந்து கவலைப்பட்டார் . அது இயல்புதான் தான் என்ன கேட்கிறோம் என்பதை மறந்து, அந்த ஆனந்தத்திலும், உணர்ச்சியிலும் கலந்துவிடுகிறார் . அந்த அளவுக்கு, அந்த இன்பம் இருந்ததாம் ஆகவே, தனக்குள்ளே என்ன நிகழ்கிறது. என்ன இது என்று அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை

இதுதான் நிகழ்கிறது உங்களுக்குள்ளே உள்ள ஆண் மூலாதார் . உள்ளே உள்ள பெண் சுவாதிஸ்தானோடு காதல் உறவுகொள்ள ஆரம்பிக்கிறது நீங்கள் என் பேச்சை, தியானமாக்கும் பொழுது, பிரார்த்தனையாக்கும் பொழுது, அந்த இன்பம் உங்களுக்குள்ளேதானே நிகழ்கிறது. இதுதான் , உங்களுக்குள்ளே நடக்கும் கொண்டாட்டத்தின் அடிப்படை தத்துவம் அந்த மூலதாரும் , சுவாதிஸ்தானும் சந்திக்கும் பொழுது. அந்த காமசக்தி வெளிப்படுகிறது. இப்பொழுது அந்த சக்தி மேலே சென்று, மணிப்பூரா (MANIPURA) என்ற மையத்தை அடைகிறது.

ஆண்தன்மையும் அனாகதா (ANAIIATA) பெண தன்மையையும் உடையதாக இருக்கிறது அந்த ஆண்மையமும் , பெண்மையமும் ஒரு தடவை சந்தித்துக் கொள்ளும் வழி தெரிந்துவிட்டால் , அடுத்த சந்திப்பு திடீரென்று ஏற்படும் நீங்கள் அதற்காக எதையும் செய்யத் தேவையில்லை இந்த இரண்டாவது சந்திப்பில் ஏற்படும் சக்தியானது. மூன்றாவது சந்திப்பு நிகழ காரணமாகிறது

அந்த மூன்றாவது சந்திப்பு விஷுதாவுக்கும் (VISUDHA) ஆக்னா (AJNA) வுக்கும் இடையே நடக்கிறது இந்த மூன்றாவது சந்திப்பு நிகழும்பொழுது ஏற்படும் சக்தியானது நான்காவது சந்திப்பை உண்டாக்குகிறது அந்த நான்காவது நிகழ்ச்சி ஒரு சந்திப்பு அல்ல அது ஒரு முழுமை (UNITY) அதைத்தான் சகஸ்ரார் (SAHASRAR) என்கிறோம்

அதில் ஆண் - பெண் தன்மை எதுவுமில்லை அது தனித்து இருக்கிறது ஆடமும் (ADAM) ஈவும் (EVE) ஒருவருக்குள்ளே ஒருவர் முழுமையாக மறைந்துவிடுகிறார்கள் அப்பொழுது. ஆண் பெண்ணாகிறது. பெண் ஆணாகிறது எல்லா வேறுபாடுகளும் மறைந்துவிடுகின்றன இதுதான் முடிவான , முழுமையான தெய்வீக சந்திப்பு இதைத்தான் ஹிந்துக்கள் ' சச்சிதானந்தா (SATCHITANANDA) என்று அழைக்கிறார்கள் இதைத்தான் , ஜீசஸ் , கடவுளின் சாம்ராஜ்யம் (KINGDOM OF GOD) என்று அழைக்கிறார்.

எல்லா மதங்களும், இந்த 7 என்ற எண்ணுக்கு, அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றன வாரத்திற்கு ஏழு நாட்கள், ஏழாவது நாள், ஓய்வுநாள் அல்லது புனிதநாள் அதாவது ஆறுநாட்களில் கடவுள் வேலை செய்துவிட்டு, ஏழாவது நாளில் ஓய்வு எடுக்கிறாராம் அதைப்போல , ஆறு சக்ராவில் நீங்கள் வேலை செய்துவிட்டு. ஏழாவது நிலை என்பது நீங்கள் முழுமையான ஓய்வுநிலையில், உங்களுடைய சொந்த வீட்டில் இளைப்பாருகிறீர்கள்

இந்த ஏழாவது நிலையில் , இருவேறு தன்மைகள் இருவேறு துருவங்கள் (POLARITIES), மற்றும் எல்லா வேற்றுமைகளும் மறைந்து விடுகின்றன இரவு இரவாகவும் , பகல் பகலாகவும் இருப்பதில்லை வசந்தம் வசந்தமாக இருப்பதில்லை பனிக்காலம் , பனிக்காலமாக இருப்பதில்லை பொருள்கள், பொருள் களாக இருப்பதில்லை, மனம் ஒருபோதும் மனமாக இருப்பதில்லை - இந்த நிலையில் நீங்கள் இப்படிப்பட்ட பல வேறுபாடு களிலிருந்து மேலே செல்கிறீர்கள் அதுதான் அந்த புரியாத பரவெளி. புத்தர் இதை நிர்வாணா என்று அழைக்கிறார்

உங்கள் உள்ளே நடக்கும் இந்த மூன்று சந்திப்புகளும் நிகழ்ந்து, நாலாவது நிலையை அடைகிறீர்கள் . அந்த நான்காவது நிலை வேறு ஒரு பரிமாணத்தில் இருக்கிறது நான்கு நிலைகளைப்பற்றி, நான் ஏற்கனவே பேசியிருக்கிறேன் . அதாவது தூக்கம் , கனவு, விழித்தல் , துரியா (TURIYA) என்பதாகும் . துரியா என்றால் நான்காவது என்றும் அப்பால் (BFYOND) என்றும் அர்த்தம் இந்த ஏழு சக்ராவுக்கும் மற்றும் அதன் செயல்பாடுகளுக்கும் இந்த நான்கு

நிலைக்கும் சம்மந்தம் இருக்கிறது

மூலாதாருக்கும் . சுவாதிஸ்தானுக்கும் நடக்கும் முதல் சந்திப்பு தூக்கம் போன்றது இந்த சந்திப்பு நிகழ்வதை உங்களால் அறிந்து கொள்ள முடியாது. நீங்கள் அதனால் ஆனந்தம் அடையலாம் மற்றும் மிகுந்த புத்துணர்ச்சி உங்களுக்குள்ளே நேரிடலாம் நீங்கள் மிக ஆழ்ந்து தூங்கியபிறகு, நீங்கள் மிகுந்த ஓய்வுத் தன்மையை உணர்வீர்கள் ஆனால் , அதை உங்களால் சரியாகப் பார்க்க முடியாது. அந்த அளவுக்கு அது இருளாக இருக்கும் உங்களுக்குள்ளே உள்ள ஆணும் பெண்ணும் ஒன்று சேருகிறார்கள் ஆனால் இந்த சந்திப்பு பிரக்ஞையற்றத் தன்மையில் ஏற்படுகிறது அது பகல் வெளிச்சத்தில் நடைபெறுவது இல்லை; மிகுந்த இருட்டில்தான் நடக்கிறது. ஆமாம் , அதன்பின் விளைவுகளை மற்றும் பயனை, நீங்கள் உணரலாம் . நீங்கள் ஒரு புதிய உணர்வை, புதிய சக்தியை, நீங்கள் திடீரென்று உணர்வீர்கள் . உங்களிடம் ஒரு ஒளிவட்டம் ஏற்படும் . உங்களிடம் ஏற்பட்ட அந்த சக்தியின் துடிப்பை அடுத்தவர்களும் உணர ஆரம்பிப்பார்கள் உங்களுக்குள்ளே என்ன நிகழ்கிறது என்று உங்களால் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது. ஆகவேதான் , இந்த முதல் சந்திப்பு, தூக்கத்தை ஒத்து இருக்கிறது.

அடுத்த சந்திப்பு. ஒரு கனவு போல உள்ளது. அதாவது மணிப்பூராவும் - அனாஹதாவும் சந்திக்கும்பொழுது, நீங்கள் உங்களுக்குள்ளே உள்ள பெண்ணை சந்திக்கிறீர்கள் ஆனால், அது கனவில் நடப்பது போல, உங்களுக்குத் தோன்றும். ஆமாம், அதை நீங்கள் சிறிது அறிந்துகொள்ள முடியும் . எப்படி நீங்கள் தூங்கி, காலையில் விழிக்கும்பொழுது கனவின் ஞாபகம் இங்கும் அங்குமாக ஒரு சில நிகழ்ச்சிகள் உங்களுடைய நினைவுக்கு வரலாம் , சிலவற்றை மறந்திருக்கலாம் , ஏன் எல்லாவற்றையும் மறந்திருக்கலாம் - இருந்தும் அப்போதைக்கப்போது சிறிது ஞாபகம் வரலாம் . ஆகவே, இந்த இரண்டாவது சந்திப்பு. ஒரு கனவுபோலத்தான் நிகழ்கிறது. நீங்கள் முதல் நிலையைவிட இரண்டாவது நிலையை சிறிது புரிந்துகொள்ளலாம் . ஏதோ ஒன்று உங்களுக்குள்ளே நடக்கிறது என்பதை நீங்கள் உணர ஆரம்பிப்பீர்கள்

உங்களிடம் ஏதோ மாற்றம் நிகழ்கிறது என்றும் மற்றும் நீங்கள் பழைய ஆள் இல்லை என்பதையும் உணர ஆரம்பிப்பீர்கள் . இந்த இரண்டாவது சந்திப்புக்குப் பிறகு, வெளியே உள்ள பெண்ணோடு ஏற்பட்ட கவர்ச்சி குறைவதை உணர்வீர்கள்.

முதல் சந்திப்பில் கூட , அந்த மாற்றம் நிகழ்ந்திருக்கிறது. ஆனால் அதை உங்களால் அறிந்துகொள்ள முடியவில்லை இந்த முதல் சந்திப்புக்குப் பிறகு, நீங்கள் உங்களுக்குள்ளே இருக்கும் பெண்ணிடம் அதிக ஆர்வம்காட்டுவதை உணர ஆரம்பிப்பீர்கள். ஆகவே, அந்த வெளியே உள்ள பெண்ணின் மேல் காட்டிய அந்தக் கவர்ச்சி இப்பொழுது கொஞ்சம்கூட இல்லை என்பதையும், ஏன் வேறு எந்தப் பெண்ணின் மேலும் ஆர்வம் இல்லாததையும் உணருவீர்கள் , பலசமயம் , உங்களுடைய வெளிபெண்ணின் மேல் அலுப்பு ஏற்பட்டு, வேறு பெண்களுடன் சந்தோஷமாக இருக்க முடியும் என்றும் நீங்கள் நம்பலாம் . சில மாறுதல்கள் நல்லதுதான் , வேறு ஒரு சூழ்நிலை நல்லதுதான் . வேறுவிதமான பெண்களும் நல்லதுதான் . ஆனால் , இவைகள் அனைத்தும்



எதிர்ப்பார்ப்புதான்

இரண்டாவது நிலையில நீங்கள் எந்தப் பெண்ணோடும் ஆனோடும் ஒருக்காலும் ஆர்வம் காட்ட மாட்டீர்கள் நீங்கள் மேலும் மேலும் உங்களுக்குள்ளே செல்லவே ஆர்வம் காட்டுவீர்கள்.

மூன்றாவது நிலையில், நீங்கள் அதை முழுமையாகப் புரிந்துகொள்வீர்கள் அதாவது விஷுதா ஆக்னாவுடன் சேருவது இந்த சந்திப்பு பகல் வெளிச்சத்தில் நிகழும் அல்லது இப்படியும் கூறலாம் அதாவது முதல் சந்திப்பு நடு ராத்திரியில் நிகழலாம் . இரண்டாவது சந்திப்பு, இளங்காலையில் நேரிடலாம் . மூன்றாவது சந்திப்பு நடுப்பகலில் ஏற்படலாம் அப்பொழுது எல்லாம் உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் இப்பொழுது உங்களுக்கு வெளி உருவங்களோடு உள்ள தொடர்பு முடிந்துவிட்டது என்பதை தீர்க்கமாக

அறிந்துகொள்வீர்கள் இதற்காக , நீங்கள் உங்களுடைய மனைவியை விட்டு கணவனைவிட்டு பிரியவேண்டும் என்று அர்த்தம் இல்லை அதன் அர்த்தம் , பால்கவர்ச்சி இப்பொழுது உங்களிடம் கிடையாது என்பதுதான் அதற்குப் பதிலாக , நீங்கள் ஒருவருக்கொருவர் கருணையுடையவர்களாக இருப்பீர்கள் இதுவரை மனைவியாக , கணவனாக இருந்தவர்கள் , இப்பொழுது, சிறந்த நண்பர்களாகி, ஒருவருக்கொருவர் நன்றிமிக உடையவர்களாக இருப்பீர்கள் சரியாகப் புரிந்துகொள்ளுதல் ஏற்படும் பொழுது. அது எப்பொழுதும் அப்படித்தான் இருக்கும் அதாவது அது கருணைமயமாகிறது. நீங்கள் உங்கள் மனைவியைப் பிரிந்து. காட்டுக்குத் தப்பித்துச் சென்றால் , அது உங்களுடைய கருணையற்ற தன்மையையும் , கொடூரமான உள்ளத்தையுமே காட்டுகிறது அது, ஒருவரை ஒருவர் , சரியாகப் புரிந்துகொள்ளாததால் ஏற்படுவது நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டால் , நீங்கள் மிகவும் கருணையுடையவர்களாவே இருப்பீர்கள்

புத்தர் ஞானமடைந்தபொழுது, அவர்தன் சீடர்களிடம் முதன் முதலில் சொல்லியது என்னவென்றால், "நான் என் மனைவி யசோதராவிடம் செல்ல விரும்புகிறேன். அவளுடன் பேச விரும்புகிறேன் ' என்றார் அவர் மனைவியுடன் !

இதைக் கேட்ட அவரது சீடன் ஆனந்தா, மிகவும் குழப்பம் அடைந்தார் அவர் இப்பொழுது நீங்கள் அரண்மனைக்குச் சென்று, உங்களுடைய மனைவியை சந்தித்து, அவர்களுடன் பேச , என்ன இருக்கிறது? நீங்கள் உங்கள் மனைவியை விட்டுப் பிரிந்து இப்பொழுது 12 வருடங்கள் ஆகின்றன' என்றார் ஏன் இப்பொழுது. புத்தாவுக்கு, தன் மனைவியின் நினைப்பு வரவேண்டும் என்று ஆனந்தா குழம்பினார். புத்தாக்கள் , அப்படி எண்ணுவது வழக்கமில்லையே என்று அவர் நினைத்தார். எல்லோரும் சென்ற பிறகு, ஆனந்தா, புத்தரிடம் , " இது சரியில்லை மக்கள் உங்களைப்பற்றி என்ன நினைப்பார்கள் ? என்று கவலையுடன் கேட்டார்

புத்தர் . " மக்கள் என்ன நினைப்பார்கள் ? நான் , என்னுடைய நன்றியை அவளுக்குத் தெரிவிக்க

வேண்டும் அவள் செய்த இந்த மிகப்பெரிய உதவிக்கு,

நான் என் நன்றியை தெரிவிக்க வேண்டும் நான் ஞானமடைந்ததற்கு நன்றியாக , அவளுக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் அந்த அளவுக்கு, அவளுக்கு நான் நன்றிகடன்பட்டிருக்கிறேன் நான் அங்கு செல்லத்தான் வேண்டும் " என்றார்

அவர் , தன் அரண்மனைக்குத் திரும்பி, தன் மனைவியைச் சந்தித்தார் நிச்சயமாக , யசோதரா பைத்திய நிலையில்தான் இருந்திருக்கவேண்டும் " இந்த மனிதன் , என்னிடம் எதுவும் சொல்லாமல் , எனக்குத் தெரியாமல் , ஒரு இரவில் தப்பிச்சென்றார் என்று நினைத்து அவள் மிகுந்த வருத்தத்துடன் , ' நீங்கள் என்னை நம்பக்கூடாதா? நான் செல்ல வேண்டும் என்று ஏன் நீங்கள் , என்னிடம் சொல்லக் கூடாது? உங்களைத் தடுப்பதில் இந்த உலகத்தில் உள்ள பெண்களிலேயே, கடை ஆளாக நான்தான் இருப்பேன் . அந்த அளவுக்குக்கூட நீங்கள் என்னை நம்பவில்லையா?' என்று சொல்லி அழுதாள் 12 வருட கோபம் , இப்பொழுது கதறிக்கொண்டு வெளியேறுகிறது? ஏனென்றால் ஒரு சிறு குறிப்புகூட கொடுக்காமல் , ஒரு திருடனைப்போல நடு இராத்திரியில் , திடீரென்று அவளை விட்டுவிட்டு, தப்பித்துச் சென்றுவிட்டார்

புத்தர் இப்பொழுது அதற்காக அவளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, " நான் அப்பொழுது புரியாமல் , அறியாமல் செய்துவிட்டேன் நான் அப்பொழுது அந்த அளவுக்கு பிரக்ஞை நிலையில் இல்லை ஆனால் , இப்பொழுது நான் என் தவறை உணர்ந்துவிட்டேன் . இப்பொழுது நான் எல்லாம் புரிந்த நிலையில் இருக்கிறேன் ஆகவேதான் , நான் திரும்பி வந்திருக்கிறேன் நீ எனக்குச் செய்த உதவி மிகவும் மகத்தானது அந்தப் பழைய நிகழ்ச்சிகளையெல்லாம் இப்பொழுது மறந்துவிடு கொட்டிய பாலைப்பற்றி, மேலும் நினைப்பதில் எந்தப் பயனும் இல்லை இப்பொழுது என்னை நன்றாகக் கவனித்துப்பார் . என்னிடம் ஏதோ ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. நான் என் சொந்த வீட்டுக்குத் திரும்பி

வந்திருக்கிறேன் அதன் பிறகுதான் , என்னுடைய முதல் கடமை, உன்னை சந்தித்து என்னுடைய நன்றியையும் , மன்னிப்பையும் வேண்டுவது என்று உணர்ந்து உன்னை சந்திக்க வந்திருக்கிறேன். மேலும், என்னுடைய அனுபவத்தை உன்னோடு பகிர்ந்துகொள்ள ஆசைப்படுகிறேன் ' என்று சொன்னார்

இப்பொழுது அவளுடைய கோபம் மறைந்துவிட்டது. அவளுடைய வெறுப்பு அடங்கிவிட்டது அவள், புத்தரை கண்ணீரோடு நோக்கினாள் " ஆமாம் , இந்த மனிதன் முற்றிலும் மாறிவிட்டார். அவள் அறிந்த அதே மனிதர். இவரல்ல. இவர் ஒருக்காலும் அந்த மனிதராக இருக்க முடியாது. இவருடைய முகத்தில் ஒரு மெல்லிய ஒளி படர்ந்திருக்கிறது. அவரது தலையைச் சுற்றி ஒரு சிறு ஒளி வட்டத்தைக் காணுகிறேன் இப்பொழுது இவர் எவ்வளவு அமைதியாகவும் , நிதானமாகவும் இருக்கிறார் . அந்தப் பழைய கணவர் , கிட்டத்தட்ட முழுமையாக மறைந்தேவிட்டார் . அவர் இப்பொழுது இல்லவே இல்லை ' என்று உணர்ந்து, தான் என்ன செய்கிறோம் என்பதை மறந்து. அவள் அவருடைய காலில் விழுந்து, தன்னையும் அவரது சீடனாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினாள்!

நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டால் நீங்கள் கருணையுடையவர் களாத்தான் மாற வேண்டும். ஆகவேதான், நான் என் சந்நியாசிகள் , தங்களுடைய குடும்பத்தைவிட்டு வெளியே செல்லக்கூடாது என்று விரும்புகிறேன் நீங்கள் அங்கேயே இருங்கள்

புத்தர் தன் மனைவி யசோதராவை சந்திக்கும் நிகழ்ச்சியைப் பற்றி ஒரு கவிதையை, ரவிந்திரநாத்தாகர் எழுதியிருக்கிறார் . அதாவது அப்பொழுது யசோதரா புத்தரிடம் , நீங்கள் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் கூறுங்கள் நீங்கள் எதையெல்லாம் அடைந்திருக்கிறீர்களோ அவைகளை என்னால் கவனிக்க முடிகிறது. ஆனால் , அது என்னவென்று தெரியவில்லை ஒரே ஒரு விஷயத்தை மட்டும் சொல்லுங்கள் இங்கேயே இந்த வீட்டிலேயே

அதை உங்களால் அடைய முடியாதா? என்று கேட்கிறாள் அதற்கு புத்தாவால் முடியாது என்று சொல்ல முடியவில்லை அது. அந்த வீட்டிலேயே நிகழ முடியும் என்பது இப்பொழுது அவருக்கு மிக நன்றாகத் தெரியும். ஏனென்றால், அதற்கும் நீங்கள் ஒரு காட்டில், அல்லது ஒரு நகரத்தில் அல்லது குடும்பத்தில் அல்லது ஒரு ஆஸ்ரமத்தில் வசிப்பதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அதற்கும் , இடத்துக்கும் சம்மந்தமே இல்லை அதற்கும் , உங்களுடைய உள்மைய நிலைக்கும்தான் சம்மந்தமுள்ளது அந்தப் பேரியிக்க உயிர்த்தன்மை எங்கேயும் இருக்கிறது

முதலில் மற்றவர்கள் மேல் உள்ள ஆர்வம் மெல்ல மெல்ல குறைய ஆரம்பிக்கும். இதை நீங்கள் மெல்ல மெல்ல உணர ஆரம்பிப்பீர்கள் இது ஒரு மங்கலான இருட்டிலே நடக்கும் நிகழ்ச்சியைப் போல் இருக்கும் அது ஒரு கருமையான கண்ணாடி வழியாக பார்ப்பது போலவும் , பனிபடர்ந்த காலையில் பொருள்களைப் பார்ப்பது போலவும் , மங்கலாகவே தெரியும் . அடுத்ததாக, பொருள்கள் சிறிது தெளிவாக, அதாவது ஒரு கனவு போலத் தெரியும் அந்த பனியின் அடர்த்தி அவ்வளவாக இருக்காது மூன்றாவதாக நீங்கள் முழுமையான விழிப்பு நிலையில் இருக்கிறீர்கள் அது நிகழ்ந்திருக்கிறது உங்களுடைய உள்பெண் தன்மை உங்களுடைய ஆண் தன்மையோடு சந்தித்துவிட்டது. அங்கு இருமாறுபட்டநிலை இப்பொழுது இல்லை. திடீரென்று, நீங்கள் ஒன்றாக இருப்பதை உணர்வீர்கள் பிளவுபட்ட தன்மை மறைந்திருப்பதை உணர்வீர்கள் பிளவுபட்ட தன்மை மறைந்து விட்டது. நீங்கள் இப்பொழுது பிளவுபட்டு இருக்கவில்லை

இந்த ஒன்று கலந்த கலவையால், நீங்கள் ஒரு புதிய ஆளாக இருக்கிறீர்கள் அதற்கு முன்பு, நீங்கள் ஒரு தனி ஆளாக இல்லை நீங்கள் ஒரு கூட்டம், நீங்கள் பலவித மனநிலையுடையவர்களைக் கொண்ட ஒரு சந்தைக் கூடம்தான் திடீரென்று நீங்கள் ஒரு ஒழுங்கு நிலையயைப் பெறுகிறீர்கள் . இதைத்தான் இந்த பழைய கதை கூறுகிறது நீங்கள் அந்தப் பழைய கதைகளைக் கவனித்தால் அவர்களுடைய உபமானம் அல்லது அடையாளம் மிகவும் ஆச்சரியப்படத்தக்கதாக இருக்கும்

ஒரு மனிதன் தான் அமைதியாக உட்கார்ந்திருக்க மூன்று நாட்கள் விடுமுறை கேட்டான் எதற்காக மூன்று நாட்கள்? அது மூன்று நிலைகளாகிய தூக்கம், கனவு, விழித்தல் என்ற மூன்று தன்மைகளைக் குறிக்கிறது. அவன் அந்த மூன்று நிலைகளையும் ஒரு ஒழுங்கு நிலையில் கொண்டுவர விரும்பினான் முதலில், அது தூக்கத்திலும், அடுத்தது அது கனவிலும், அடுத்தது விழிப்பிலும் நிகழ்கிறது. இப்பொழுது, நீங்கள் ஒரு ஒழுங்கு முறையில் இருக்கிறீர்கள் அப்பொழுது இந்த முழு உலகமும் ஒரு ஒழுங்குத் தன்மையில் இருக்கும் நீங்கள் ஒரு புதிய தனி ஆளாக இப்பொழுது இருக்கிறீர்கள் உங்களுடைய வேற்றுமைகள் மறைந்து, எல்லாமே ஒன்றாகிவிட்டது இந்த நிகழ்வு, மிகவும் எதிரும் புதிருமாக இருப்பதுபோலத் தோன்றும் ஆனால், அதைச் சொல்லித்தான் ஆகவேண்டும். தனிமனிதன்தான் இந்த பிரபஞ்சம் நீங்கள், உங்களிடம் ஒரு ஒழுங்குமுறையை ஏற்படுத்திக்கொண்டு, ஒரு தனித்த ஆளாக இருக்கும் பொழுது. திடீரென்று நீங்களே இந்த பிரபஞ்சமாக இருப்பதை உணர்வீர்கள். அதுவரையில், நீங்கள் இந்த பேரியக்க உயிர்த் தன்மையிலிருந்து வேறுபட்டு இருந்ததாகவே உணர்ந்திருக்கிறீர்கள். இப்பொழுது. அப்படி உங்களால் எண்ண முடியாது.

ஆதாமும் ஏவாளும் ஒருவருக்குள்ளே ஒருவர் மறைந்து விட்டார்கள் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு வழியில், இந்த இலக்கை அடையவே முயன்றிருக்கிறார்கள் இதை அடைவதற்கு, தந்த்ராதான் ஒரு சர்வ நிச்சயமான விஞ்ஞானம் இதுவே அதன் இலக்கு அல்லது குறிக்கோள் எனலாம்.

இன்னும் சில விஷயங்கள்

முதலில் மூலதார் ஒய்வுத்தன்மையில் இருக்கவேண்டும் என்று நான் ஏற்கனவே கூறி இருக்கிறேன் அப்பொழுதுதான், சக்தியானது உள் நோக்கி மற்றும் மேல்நோக்கிச் செல்ல முடியும். இந்த உள்நோக்கி மற்றும் மேல்நோக்கி என்ற வார்த்தைகள், ஒரே அர்த்தத்தைத் தான் குறிப்பிடுகிறது. அதைப்போல வெளிநோக்கி, கீழ் நோக்கி என்ற வார்த்தையும், ஒரே அர்த்தத்தைதான் கொடுக்கும்

நீங்கள் மூலதாரை ஓய்வுத் தன்மைக்குக் கொண்டு வந்தால் சக்திமேல் நோக்கியும் கீழ் நோக்கியும் செல்லக்கூடும் . ஆகவே, முதலில் நீங்கள் மூலதாரை ஓய்வு நிலைக்குக் கொண்டு வரவேண்டும்.

நீங்கள் உங்களுடைய பால் உணர்வு மையத்தை மிகவும் இறுகிய நிலையில் வைத்திருக்கிறீர்கள் இந்த பால் உணர்வு மையத்தில் உங்களுடைய கவனம் எப்பொழுதும் இருக்கும்படி, இந்த சமூகம் உங்களை நெறிப்படுத்தி வைத்திருக்கிறது. உங்களுடைய மனம். அதனால் எப்பொழுதும் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் எப்பொழுதும் அதை இறுக்கியே வைத்திருக்கிறீர்கள் . இதை நீங்கள் சற்று உற்று கவனித்தால் , புரியும் . நீங்கள் எப்பொழுதும் உங்களுடைய பால் உணர்வு மையம் மற்றும் பால் உறுப்புகளையெல்லாம் எப்பொழுதும் நெருக்கியே வைத்திருக்கிறீர்கள் அதாவது, அவைகளை ஓய்வுத் தன்மையில் வைத்திருந்தால் ஏதாவது காணாமல

போய்விடுமோ என்று பயந்து கொண்டு இருப்பது போல உங்களுடைய முழுநெறிப்படுத்துதல் , அவைகளை மேல்நோக்கியே வைத்திருக்கும். ஆகவே முதலில் அது இருக்க வேண்டிய இயல்பான நிலையிலேயே ஓய்வுத் தன்மையில் அதை இருக்கச் செய்யவும் ஒன்றும் பயப்படவேண்டாம் பயம் பரபரப்பைத் தான் ஏற்படுத்தும் பயத்தை முழுமையாக அகற்றுங்கள் பாலுணர்வு மிகவும் அழகானது அது பாபம் இல்லை, அது புண்ணியமான காரியம் தான்

நீங்கள் , அதை ஒரு புண்ணியம் என்று கருதத் தொடங்கினால் உங்களால் ஓய்வுத்தன்மையில் இருக்க முடியும் எப்படி மூலதாரை ஓய்வுநிலைக்குக் கொண்டு வரமுடியும் என்பதைப் பற்றி ஏற்கனவே சொல்லியிருக்கிறேன் அதைப்போல , சுவாதிஸ்தானையும் எப்படி ஓய்வுநிலைக்குக் கொண்டு வருவது என்பதைப் பற்றியும் , நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். இது இறப்பு மையம் ஆனால் , இந்த இறப்பைப் பற்றி பயப்படவேண்டாம் . இந்த மனித குலத்தை, இந்த இரண்டு பயங்களும் ,

அதாவது பாலுணர்வைப் பற்றிய பயமும் இறப்பைப் பற்றிய பயமும் , மிகவும் ஆட்டிப்படைக்கின்றன இரண்டு பயங்களும் அபாயகரமானவையே ஏனெனில், அவைகள் இரண்டும் , ஆன்மீகத்தில் மேலும் வளர உங்களை அனுமதிப்பதில்லை இந்த இரண்டு பயங்களையும் விட்டுவிடுங்கள்

மூன்றாவது சக்கரா என்பது மணிப்பூரா அது மாறுபட்ட (NEGATIVE) உணர்வு கொண்டது நீங்கள் துன்பத்தில் உணர்ச்சி வசப்பட்டால், அது உங்களுடைய வயிற்றில் தொந்திரவு கொடுக்கும் அந்தத் துன்ப உணர்வு, உடனே உங்களுடைய மணிப்பூரா மையத்தை பாதிக்கும் இந்த உலகத்தில் உள்ள எல்லா மொழிகளிலும் , என்னால் அதை விழுங்க முடியவில்லை என்ற வகையில்தான் அதை வெளிப்படுத்துவார்கள் . ஆனால், அது உண்மைதான் சிலசமயம் உங்களால் சிலவற்றை விழுங்க முடியவில்லை என்றால் , அதை வாந்தி எடுக்க வேண்டிய உணர்வு உங்களிடம் ஏற்படும் உண்மையில், அதைப்போல உணர்வு மனரீதியாகவும் ஏற்படும் உதாரணமாக , உங்களுக்குப் பிடிக்காதவைகளைப் பற்றி, உங்களோடு பேசியிருக்கலாம் அதை உங்களால் எடுத்துக்கொள்ள முடியாது அதாவது விழுங்க முடியாது திடீரென்று, உங்களுக்கு வாந்தி எடுக்கவேண்டிய உணர்வு ஏற்படும் வாந்தி எடுத்த பிறகுதான் நீங்கள் ஓய்வுநிலைக்கு வருவீர்கள்

யோகாவில் இதற்கு சில முறைகள் இருக்கின்றன ஒரு யோகி, காலையில் முடிந்த அளவு நீரைக் குடிக்கவேண்டும் - ஒரு சிறிய வாளியில் உள்ள உப்பு கலந்த தண்ணீரை மடமடவென்று குடிக்க வேண்டும் அதன்பிறகு அதை வாந்தி எடுக்க வேண்டும் இது, மணிப்பூராவை ஓய்வு நிலைக்குக் கொண்டுவர உதவி செய்யும் இது ஒரு மிகச்சிறந்த சுத்தப்படுத்தும் முறையாகும்

நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள் இப்பொழுது உள்ள நவீன மருத்துவம் , இதைப்பற்றி அறிந்துகொண்டிருக்கிறது - அதாவது வாந்தி எடுத்தல், நல்லது

செய்யும் என்பதை அது மணிப்பூராவை சாதாரண நிலைக்குக் கொண்டுவரும் தந்த்ராவும் யோகாவும் இதைப்பற்றி எப்பொழுதும் அறிந்தே வைத்திருக்கின்றன

மாறுபட்ட உணர்வுகளான, கோபம், வெறுப்பு, பொறாமை போன்றவை உங்களிடம் அடக்கப்பட்டு அவைகள் மணிப்பூராவை கட்டுப்படுத்திவிடுகின்றன. இந்த அடக்கப்பட்ட உணர்வுகள் , சக்தியை மேலே செல்ல அனுமதிக்காது அது. அந்த வழியில் ஒரு பாறையைப் போல இருந்து கொண்டு, தடுக்கிறது என்கௌண்டர் (ENCOUNTER) கெஸ் டால்ட் " (GESTALT) போன்ற மருத்துவ முறைகள் , அவைகளுக்கே தெரியாமல் , அவைகள் மணிப்பூரா மையத்தைத் தூண்டுகின்றன . அவைகள் , உங்களுடைய கோபத்தையும் , பொறாமையையும் , பேராசையையும், ஆதிக்கத் தன்மை மற்றும் வன்முறை போன்ற அடிமனத்தில் உள்ள கெட்ட உணர்வுகளை மேலே கிளம்பிவர உதவி செய்கின்றன .) உங்களுடைய சமூகம் , எப்படி இவைகளையெல்லாம் அடக்கி வைப்பது என்பதற்கு சரியான பயிற்சிகளைக் கொடுத்திருக்கிறது. ஆனால் , அவைகள் எல்லாம் நன்மைக்கே, என்று சொல்லி நடிக்கிறது! இப்பொழுது, இந்த இரண்டுமே அபாயகரமானதுதான். அதைப்போல நன்மை என்று எடுத்துக்கொள்வதும், பொய், அடுத்து, அந்த மாறுபட்ட , கெட்ட உணர்வுகளை அடக்குவதும் , மிகவும் கெடுதல் . அது விஷத்தன்மையுடையது. அது உங்களுடைய உடலையும் , மனதையும் மிகவும் பாதித்துவிடும்

தந்த்ரா ' மாறுபட்ட கெட்டவைகள் அனைத்தையும் , வெளியே தள்ளுங்கள் நன்மை பயக்கக்கூடியவைகளை செயல்படச் செய்யுங்கள் ' என்று கூறுகிறது. உங்களிடம் கோபம் , ஆதிக்க எண்ணம், வன்முறை போன்றவைகள் தோன்றினால், அவைகளை அடக்காதீர்கள் . தந்த்ரா, " நீங்கள் அவனைக் கொல்லுங்கள் என்று சொல்லவில்லை அந்த அடக்கப்பட்ட கெட்ட உணர்வுகளை வெளியேற்ற, ஆயிரக்கணக்கான வழிகளை தந்த்ரா கூறுகிறது. நீங்கள் அப்பொழுது, தோட்டத்துக்குச் சென்று, மரங்களை வெட்டலாம் நீங்கள் மரம் வெட்டுபவர்களைப் பார்த்திருக்கிறீர்களா? அவர்கள் ,

மற்றவர்களைவிட மிகவும் அமைதியாகவே இருப்பார்கள் . அதைப்போல , வேட்டையாடுபவர்களை பார்த்திருக்கிறீர்களா? அவர்களெல்லாம் மிகவும் நல்லவர்களாகவே இருப்பார்கள் . அவர்கள் செய்யும் வேலை, கீழ்த்தரமானது. ஆனால் , அவர்கள் மிகவும் நல்லவர்கள் . அவர்கள் வேட்டையில் ஈடுபட்டு பல விலங்குகளைக் கொல்லும் பொழுது. அவர்களுக்குள்ளே ஏதோ நிகழ்கிறது. அப்பொழுது அவர்களுடைய கோபம் மற்றும் ஆதிக்கத் தன்மை மறைந்துவிடுகிறது. இந்த உலகத்திலேயே, மிகவும் அருவருப்பானவர்கள் யாரென்றால் , வன்முறைக்கு எதிரானவர்கள் ' என்று அழைக்கப்படுபவர்கள்தான் . அவர்கள் சிறந்த மனிதர்கள் அல்ல . ஏனென்றால் , அவர்களது அடிமனத்தில், எரிமலை கனன்றுகொண்டு இருக்கிறது. அவர்களோடு, நீங்கள் ஓய்வுத் தன்மையில் ஒருக்காலும் இருக்க முடியாது அவர்களிடம் ஏதோ ஒரு அபாயம் இருந்துகொண்டே இருக்கிறது. நீங்கள் அதை உணரலாம் . நீங்கள் அதைத் தொட்டுப் பார்க்கலாம். அது

அவர்களிடமிருந்து வழிந்துகொ...டை இருக்கிறது நீங்கள் காட்டுக்குச் சென்று தனிமையில் கத்தலாம் , கதறலாம் . பிரிமால் (PRIMAL) தெரபி என்கௌன்டர் (ENCOUNTER) தெரபி மற்றும் கெஸ்டாட் (GISTALT) தெரபி எல்லாம் இந்தக் கத்தல் , கதறல் தெரபிதான் இவைகளெல்லாம் , மணிப்பூராவை ஓய்வுத் தன்மைக்குக் கொண்டுவர மிகவும் உதவியாக இருக்கும்

. மணிப்பூரா ஓய்வு நிலைக்கு வந்துவிட்டால் , சார்பு (POSITIVE) நிலைக்கும் , மறுப்பு (NEGATIVE) நிலைக்கும் ஒரு சமச்சீர் (BALANCE) கிடைக்கும் அப்பொழுது சக்தி மேல் நோக்கிச் செல்ல , ஒரு வழி திறந்து கொள்ளும் மணிப்பூரா ஆண்தன்மையுடையது. அது தடைப்பட்டால் , சக்தி மேலே செல்லமுடியாது. ஆகவே, அது ஓய்வுத் தன்மைக்கு முதலில் வரவேண்டும் இந்த இருமாறுபட்டத் தன்மைகளும் (POSITIVE, NEGATIVE) ஒரு சமச்சீர் நிலைக்கு வர , அவைகளில் மாறுபட்ட காந்தநிலையை (POLARITY) சமச்சீர் செய்வது, மிகுந்த பயனைக்

கொடுக்கும் ஆகவேதான் , இந்த உலகத்தில் உள்ள சகல முறைகளையும் இந்த ஆஸ்ரமத்தில் , நான் அனுமதிக்கிறேன் எவைகளெல்லாம் பயனளிக்குமோ அவைகளையெல்லாம் அனுமதிப்பதில் தவறு ஏதும் இல்லை. எல்லாவித உதவிகளும் , இப்பொழுது மனிதனுக்குத் தேவைப்படுகிறது ஏனென்றால் அவன் அந்த அளவுக்கு சீர் குலைந்து கிடக்கிறான் ஏன், நான் எல்லாவித முறைகளையும் , உதாரணமாக யோகா, தந்த்ரா, தாவோ, சுபி, ஜைனம் , புத்திஸம் , ஹிந்துயிஸம் , கெஸ்டால்ட் சைக்கோத்ரமா (PSYCHODRAMA), என்கௌண்டர், பிரிமால் மாறுபட்ட காந்தத் தன்மையை சமச்சீர் செய்தல் ரோல் பிங் (ROLFING) அமைப்பை ஒழுங்குபடுத்துதல் (STRUCTURAL INTEGRATION) போன்றவற்றையெல்லாம் அறிமுகப்படுத்துகிறேன் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளாமல் இருக்கலாம் கீழைநாட்டில் உள்ள எந்த ஆஸ்ரமத்திலும் , இப்படிப்பட்ட பல செயல் முறைகளை அறிமுகப்படுத்தியதை. நீங்கள் கேட்டிருக்கமாட்டீர்கள் இப்பொழுது மனிதன் அந்த அளவுக்கு சீர்குலைக்கப்பட்டிருக்கிறான் ஆகவே, இப்பொழுது அவனுக்கு எல்லாவிதத் தன்மைகளிலிருந்தும் உதவி தேவைப்படுகிறது அப்பொழுதுதான் நம்பிக்கை ஏற்படும் - இல்லாவிட்டால் , அவன் முற்றிலும் அழிக்கப்பட்டுவிடுவான்.

நான்காவது சக்கரம் , அனாஹதா (ANAHATA) இந்த சக்கரம் செயல்பட உங்களுடைய சந்தேகமே தடையாக இருக்கிறது சந்தேகம் , அதைத் திறக்கச் செய்யாது நம்பிக்கைதான். அது திறக்க வழி செய்யும். ஆகவே, ஏதாவது சந்தேகத்தை எழுப்பினால் அது உங்களுடைய இதயத்தைப் பாதிக்கும் ஏனென்றால் , இது இருதய சக்கரா. தர்க்கம், தர்க்கத்தால் அலசுவது, அதிகமான பகுத்தறிவு, விவாதம் செய்தல் அதிகமாக அரிஸ்ட்டாட்டலின் தன்மை உங்களிடம் இருப்பது எல்லாம் அனாஹதாவை அழித்துவிடும் . அதைப் போல தத்துவம் , மத நூல்களின் கருத்துக்களில் சந்தேகம் கொள்ளுதல் போன்றவைகளும் , அதற்குக் கெடுதல் செய்யும் அ

ஆகவே நீங்கள் அனாஹதாவை திறக்கச் செய்ய வேண்டுமானால் , நீங்கள் மிகவும்

நம்பிக்கையுடையவராக இருக்க வேண்டும் . தத்துவத்தைவிட, கவிதை

மிகவும் உதவி செய்யும் பகுத்தறிவைவிட உள்ளுணர்வும் , நினைப்பதைவிட உணர்வும் மிகவும் உதவி செய்யும் ஆகவே, நீங்கள் சந்தேகத்திலிருந்து, நம்பிக்கைக்கு மாற வேண்டும் அப்பொழுதுதான் அது திறந்து கொண்டு மணிப்பூராவிலிருந்து வரும் ஆண் சக்தியை அது ஏற்றுக் கொள்ளும் ஏனென்றால் அணாஹதா பெண்தன்மையுடையது சந்தேகப்பட்டால் அது உலர்ந்துவிடும் அதனால் ஆணசக்தியை ஏற்றுக் கொள்ள முடியாது நம்பிக்கை கொண்டால்தான் அந்த சக்கராவில் ஈரக்கசிவு ஏற்படும் அப்பொழுதுதான் ஆண் சக்தி, அதனுள்ளே ஊடுருவ முடியும்

அடுத்து ஐந்தாவது சக்கரம் விஷுதா புதுமை படைக்கும் ஆற்றல் இல்லாமை, வேறு ஒன்றைப் பார்த்து நடிப்பது, கிளிப்பிள்ளை போல திருப்பி திருப்பிச் சொல்வது குரங்குத்தனம் எல்லாம் இதற்கு எதிரிகள்

ஒரு சிறிய உபமானம்

ஒரு பள்ளியில் படிக்கும் குழந்தையிடம் , அதன் ஆசிரியர் , " ஒரு வேலியில் ஒன்றை ஒன்று பார்த்து நடிக்கும் (COPY)10 பூனைகள் உட்கார்ந்திருந்தன ஒன்று குதித்து, வெளியே சென்றுவிட்டது எத்தனை பூனைகள் மீதம் இருக்கும் ? என்று ஒரு கேள்வியைக் கேட்டார்

அந்தக் குழந்தை. "ஒன்றுமில்லை! ' என்றது.

ஆசிரியர் , " ஒன்றுமில்லை? ஒன்றே ஒன்று மாத்திரம்தானே வெளியே சென்றது. என்றார்?

குழந்தை. அவைகள் ஒன்றை ஒன்று பார்த்து நடிக்கும் பூனைகள்! என்றது.

ஒரு பூனை குதித்ததும், எல்லாமே குதித்து ஓடிவிட்டன

ஒன்றைக் காப்பி அடிப்பதன் மூலம் ஒன்றைப் பார்த்து. ஒன்று நடிப்பதன் மூலமும் , இந்த சக்கரம் அழிக்கப்படுகிறது ஒரு கார்பன் காப்பி யாகி

விடாதீர்கள் ஒரு புத்தராகவோ அல்லது ஒரு ஜீசஸ் ஸாகவோ மாற ஆசைப்படாதீர்கள் 'தாமஸ் எ கெம்பிஸ் (THOMAS A GEMBIS) எழுதிய இமிடேசன் ஆப் கிருஸ்து (IMITATION OF CHRIST) போன்ற புத்தகங்களை தவிருங்கள் ஜாக்கிரதை எந்தக் காப்பி அடித்தலும் உதவாது புதுமை படைத்தல் , வெளிப்படுத்துதல் உங்களுடைய தனித்தன்மையான வாழ்க்கை முறை உங்களுடைய உள்ளுணர்வுப்படி நடக்கும் தைரியம் , கலை, பாடல் , ஆடல் புதிதாகக் கண்டு பிடித்தல் எல்லாம் இந்த விஷுதாவுக்கு மிகவும் உதவி செய்யும் நீங்கள் எதைச் செய்தாலும் , அதை புதுமையாகச் செய்ய முயலுங்கள் ஒரு கண்டு பிடிப்பவனாக இருங்கள் அதில் உங்களுடைய தனித்தன்மையை கொண்டுவர முயலுங்கள் . அதில் உங்களுடைய கையெழுத்து பொறிக்கப் பட்டும் தரையைத் துடைக்க வேண்டுமானாலும் அதை உங்களுக்கே

முறையில்

செய்யவும் நஙகள் செய்யும ஒவ்வொரு சிறு காரியத்திலும் புதுமையைப் புகுத்த முடியும் நீங்கள் எந்த அளவுக்கு புதுமையைப் படைக்கிறீர்களோ அந்த அளவுக்கு இந்த சக்கரம் திறந்து செயல்படும் இந்த சக்கரம் திறந்தால்தான் , சக்தியானது மேலே சென்று ஆக்னாவை (AINA) அடைய முடியும் இது மூன்றாவது நிலை, ஆறாவது மையம்

கீழ்கண்ட முறையை அடுத்தடுத்து செய்யுங்கள் ஒவ்வொருமையத்தையும் சுத்தம் செய்து அதன் இயல்புக்குக் கொண்டுவாருங்கள் அந்த மையத்தை எவைகள் கெடுக்கின்றன என்பதில் ஜாக்கிரதையாக இருங்கள் அது இயல்பாக செயல்பட உதவி செய்யுங்கள் அதன் தடைகளை நீக்குங்கள் இப்பொழுது சக்தி மேலே செல்லும்

ஆறாவது மையத்துக்கு அடுத்தது சகஸ்ரார் அல்லது துரியா என்பதாகும் இது ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரைபோல் உள்ளது. அது மலர ஆரம்பிக்கும் அப்பொழுது நீங்களும் மலருகிறீர்கள் மனிதனை ஒரு மரம் என்று கருதினால் மூலதார் என்பது அடிவேர் ,

சகஸ்ரார் என்பது அந்தத் தாமரை மலர் அந்த மலர் மலர்ந்து, அதனுடைய நறுமணம் எங்கும் வீசும் இதுவே பிரார்த்தனையாகும் இதைத்தான் , நீங்கள் அந்த தெய்வீகத்தின் காலடியில் சமர்ப்பிக்க வேண்டும் கடன் வாங்கிய மலர்களால் எந்தப் பிரயோஜனமும் இல்லை மரத்திலிருந்து பெறப்பட்ட மலர்களால் எந்த உதவியும் கிடைக்காது நீங்களே மலர்ந்து, அந்த மலர்களை சமர்ப்பிக்க வேண்டும்

இப்பொழுது சூத்ராவுக்கு வருவோம்

உண்மையான ஒன்றை விட்டு விட்டு ஏதோ ஒன்றின் பின்னால் முத்தமிட யாசித்துக் கொண்டு அதுதான் முடிவான உண்மையென்று - இருப்பது விடைபெறும் ஒருவன், வாசலில் நின்று கொண்டு நொடிப் பொழுது இன்பத்திற்கு (பெண்ணிடம்) கேட்பது போல் ஆகும்.

இங்கே 'ஒன்று கூடுவது என்பதை முத்தம் கொடுத்தல் என்று உருவகமாக எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது அது. ஆணும் , பெண்ணும் , சிவனும் , பார்வதியும் மற்றும் இங் - யங்கும் (YIN, YANG) சந்திப்பதைக் குறிக்கிறது நீங்கள் ஒரு பெண்ணுடன் கைகோர்த்துக் கொண்டு சென்றாலும் அது முத்தம் கொடுத்தல் தான் அதாவது கைகள் ஒன்றை ஒன்று முத்தம் கொடுத்துக் கொள்கின்றன நீங்கள் ஒரு பெண்ணின் உதடோடு உங்கள் உதடை சேர்த்தால் , அதுவும் முத்தம்தான் , ஒன்று கூடுதல்தான் அதைப்போல உங்களுடைய பால் உறுப்பும் , ஒரு பெண்ணின் பால் உறுப்பும் ஒன்று கூடுவதும் முத்தம்தான் ஆகவே, தந்த்ராவைப் பொருத்தவரையில் , இரண்டு மாறுபட்ட துருவங்கள் (POLARITIES) ஒன்று கூடுவதை முத்தம் என்று உருவகமாக அழைக்கப்படு கின்றது சிலசமயம் , ஒரு பெண்ணை பார்த்தமாத்திரத்திலேயே உங்களால் அவளுக்கு முத்தம் கொடுக்க முடியும் காதலர்களின் கண்கள் சந்திப்பது கூட முத்தம்தான் அங்கே சந்திப்பு மற்றும் ஒன்று கூடுதல் நிகழ்கிறது

உண்மையான ஒன்றை விட்டு விட்டு ஏதோ ஒன்றின் பின்னால் முத்தமிட யாசித்துக் கொண்டு.

சாரஹா, பிரக்ஞையற்ற மனிதன் என்கிறார் . மக்கள் ,

தான் என்ன செய்கிறோம் என்ற பிரக்ஞை இல்லாமல், விழிப்புணர்வு இல்லாமல் , ஒருவர் பின்னே ஒருவர் தொத்திக்கொண்டு சென்று, அடுத்தவர்களைத் தவறவிடு கிறார்கள் . ஆண் , பெண்ணையும் , பெண், ஆணையும் தவறவிடுகிறார்கள் அவர்கள் தொடர்ந்து ஒருவரை ஒருவர் சந்திப்பதிலேயே இருக்கிறார்கள் ஆனால் , உண்மையான சந்திப்பு அல்லது ஒன்று கூடுதல் ஒருபோதும் நடப்பதில்லை. அதில் உள்ள தவறு என்னவென்றால் , நீங்கள் , ஒருவர் பின்னால் ஒருவர் ஓடிக்கொண்டே இருக்கிறார்கள் ஆசைப்பட்டுக்கொண்டே இருக்கிறார்கள் . ஆனால் , முடிவில் சலிப்பைத் தவிர , வேறு எதையும் , நீங்கள் அடைவது இல்லை. முடிவான உண்மையான சந்திப்பு, இது அல்ல என்று சாரஹா சொல்கிறார். அந்த சந்திப்பு, உங்களிடம் உள்ள சகஸ்ரார் சக்கரத்தில்தான் நிகழ்கிறது ஒரு தடவை, அதில் சந்திப்பு ஏற்பட்டால் , அது எப்பொழுதும் நிகழ்ந்து கொண்டே இருக்கும் இதுதான் உண்மை' வெளியில் ஏற்படும் சந்திப்பு. பொய்யானது, கணத்தில் மறையக் கூடியது, மிகவும் தற்காலிகமானது மற்றும் அது ஒரு மாயைதான்

விடைபெறும் ஒருவன் வாசலில் நின்றுகொண்டு நொடிப்பொழுது இன்பத்திற்கு ( பெண்ணிடம் ) அழைப்பு விடுப்பது போல் ஆகும்

இந்த உவமை, மிகவும் அழகானது. "உங்களுக்குள்ளே ஒரு உண்மையான பெண் , உங்களைச் சந்திப்பதற்கு எப்பொழுதும் தயாராகக் காத்துக்கொண்டு இருக்கும் பொழுது, நீங்கள் வெளியே உள்ள பெண்ணின் கையைப்பிடித்துக் கொண்டு செல்கிறீர்கள் ' என்று சாரஹா சொல்கிறார்.

முதலில் ' வீட்டைவிட்டு வெளியேறுவது நீங்கள் , உங்களுடைய சொந்த வீட்டைவிட்டு, உங்களுடைய உள் மைய நிலையிலிருந்து நழுவி, வெளியில் உள்ள பெண்ணைத் தேடி ஓடுகிறீர்கள் ஆனால் , உண்மையான பெண் உங்களுக்குள்ளே இருக்கிறாள் நீங்கள் எங்கே சென்றாலும் , ஏன் , இந்த உலகம் முழுவதும் ஓடினாலும் , எல்லாவிதமான பெண்களையும் , ஆண்களையும் துரத்திக்கொண்டு சென்றாலும் , அவளை, அவனை நிச்சயமாக

தவறவிடுவீர்கள் அது ஒரு கானல் நீர் . வெறும் தோற்றம் (MIRAGE) மற்றும் வானவில்லைத் தேடி ஓடுவதற்கு சமம் எதையும் உங்களால் அடைய முடியாது. உங்களுக்குள்ளே, உங்களுடைய பெண் இருக்கும் பொழுது. நீங்கள் அவளைத்தேடி, வீட்டைவிட்டுச்சென்று, எங்கும் தேடுகிறீர்கள்

அடுத்து. 'வாசலில் நின்று கொண்டு '... இதுவும் ஒரு உருவகம்தான் . நீங்கள் எப்பொழுதும் உங்களுடைய சொந்த வீட்டின் கதவருகேதான்

நின்று கொண்டு இருக்கிறீர்கள் அதாவது உங்களுடைய புலன்களோடு இவைகள் தான் அந்தக் கதவுகள் கண்களும் , கைகளும் , பால் உறுப்புகளும் காதுகள் அனைத்தும் தான் அந்தக் கதவுகள் கண்கள் வழியாகப் பார்ப்பது காதுகள் வழியாகக் கேட்பது, கைகளின் மூலம் தொடுவதற்கு முயற்சி செய்வது போன்ற செயல்களினால் நீங்கள் தொடர்ந்து அந்தக் கதவுகளுக்கு அருகிலேயே நின்றுகொண்டு வீட்டின் உள்ளே செல்வதற்கு மறந்துவிடுகிறீர்கள்

அதனுடைய முட்டாள் தனமான பின் விளைவு என்னவென்றால் உங்களுக்குக் காதல் என்பதைப் பற்றி உண்மையாக எதுவும் தெரியாத நிலையில் நீங்கள் ஒருத்தியிடம் ( ஒருபெண்ணிடம் ) அவளுடைய புலன் இன்ப அனுபவங்களைக் கூறுமாறு கேட்கிறீர்கள் அவளுடைய பதிலைக் கேட்பதன் மூலம், நீங்களும் அந்த இன்பத்தை அடைய முடியும் என்று நினைக்கிறீர்கள் அது எப்படியென்றால் உணவுக்குப் பதிலாக உணவின் பட்டியலை (MENU) தின்பது போல இருக்கிறது

ஆகவே நீங்கள் முதலில் உங்களை விட்டுச் செல்கிறீர்கள் . பிறகு உங்களுடைய சொந்த வீட்டின் கதவுக்கு அருகில் நின்று கொண்டு மற்ற பெண்களிடம் புலன் இன்பம் என்றல் என்ன , வாழ்வு என்றால் என்ன மகிழ்ச்சி என்றால் என்ன , கடவுள் என்றால் என்ன என்று கேட்கிறீர்கள் ஆனால் கடவுள் உங்களுக்காக உங்கள் உள்ளேயே காத்துக் கொண்டு இருக்கிறார் . அவர் எப்பொழுதும்

உங்களுக்குள்ளேயேதான் தான் வசிக்கிறார் ஆனால் அவரைப்பற்றி, நீங்கள் அடுத்தவரிடம் கேட்டுக்கொண்டு இருக்கிறீர்கள் இப்படி பிறர் சொல்வதைக் கேட்பதன் மூலம் , நீங்கள் ஏதாவது அறிந்துகொள்ள முடியும், உணர்ந்து கொள்ள முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

அடுத்து. " வெறுமையில் எழும்பும் மாறுபட்ட சக்திகள் செயற்கை இன்பங்களை, கொடுக்குமே பலவழியில் கற்பனை மயக்கத்தில் , நினைவற்ற நிலையில் யோகிகள் கீழ்நோக்கி விழுகிறார்கள் பேரின்ப பரவெளியிலிருந்து - குருட்டுத்தனமாக, இருள் சூழ்ந்த பள்ளத்தில் "

முதலில் , பாலுணர்வு இன்பம் என்பது முடிவான பேரின்பம் அல்ல அது. இன்ப நிலைகளின் ஆரம்பம்தான் ஆல்பா (ALPHA) நிலை மற்றும் இன்பத்தின் (ABC தான் ) அது முடிவான ஓமேகா (UMEGA) நிலை அல்ல . ஆகவே, பாலுணர்வு இன்பம் என்பது முடிவான உண்மைநிலை அல்ல அது தெய்வீக பேரின்பநிலை அல்ல அது, அதனுடைய வெறும் எதிரொலிதான் சகஸ்ரார் வெகுதூரத்தில் இருக்கிறது. உங்களுடைய பாலுணர்வு மையம் , சிறிது மகிழ்ச்சியைக் கொடுத்தால் , அது, வெகுதூரத்தில் உள்ள சகஸ்ராவின் எதிரொலிதான் நீங்கள் சகஸ்ராவுக்கு அருகில் நெருங்கி வரவர, உங்களுடைய ஆனந்தம் பெருகிக்கொண்டே போகும்.

நீங்கள் உங்கள் களுடைய மூலாதாரிலிருந்து. சுவாதிஸ்தானுக்கு நகரும்பொழுது நீங்கள் அதிக ஆனந்தத்தை அடைந்து கொண்டே போகிறீர்கள் பிறகு மூலதார சக்தியும் , சுவாதிஸ்தானுடைய சக்தியும் ஒன்று கலக்கும் பொழுது, நீங்கள் மிகுந்த மகிழ்ச்சியை அடைகிறீர்கள். பிறகு, அடுத்த சந்திப்பில், மிக்க ஆனந்தம் அடைகிறீர்கள். அடுத்தது மூன்றாவது சந்திப்பு இந்த அளவுக்கு ஆனந்தம் பெருகிக்கொண்டே போகும் என்று உங்களால் நம்பவே முடியாது ஆனால் இதைவிட மிகச் சிறந்த பேரின்பம் உங்களுக்காகக் காத்துக்கொண்டு

இருக்கிறது ஏனென்றால் , நீங்கள் இன்னும் சகஸ்ராரிலிருந்து வெகுதூரத்தில் தான் இருக்கிறீர்கள். சகஸ்ரார் சக்கரா கொடுக்கும் பேரின்பத்துக்கு நிகராக எதுவும் இருக்க முடியாது அந்த பேரின்ப நிலையில் , நீங்கள் இருக்கமாட்டீர்கள் ஆனால் நீங்களே பேரின்பமாக மாறிவிடுகிறீர்கள் ! அப்பொழுது, " நான் மிகுந்த பேரின்ப நிலையில் இருக்கிறேன் என்றுகூட உங்களால் சொல்ல முடியாது. நீங்கள் அந்த பேரின்ப நிலையில் இருப்பதை வெறுமனே உணர்ந்துகொள்ள முடியும், புரிந்துகொள்ள முடியும்.

அந்த ஏழாவது சகஸ்ரார் நிலையில் , நீங்கள் பேரின்ப அலைகளால் துடிக்கிறீர்கள் ! ஆமாம் . இயல்பாக அப்படித்தான் ! ஆனால் அதை அடைவதற்காக, ஆறு நிலைகளைக் கடக்க வேண்டும் அந்த நிலைகள் கொடுக்கும் இன்பம் வெறும் பேரின்ப நிலையின் எதிரொலிதான் . ஜாக்கிரதை! இந்த எதிரொலி இன்பத்தை உண்மை என்று எடுத்துக்கொள்ளாதீர்கள் ஆமாம் அந்த எதிரொலி இன்பத்தின் பின்னால், உண்மையின் தன்மை சிறிது இருக்கிறது அந்த இன்பத்தின் நூலை (THREAD) அறிய முற்படுங்கள் அந்த நூலைப் பிடித்துக்கொண்டு, மேலே முயலுங்கள். அடுத்து.

"வெறுமையில் எழும்பும் மாறுபட்ட சக்திகள் செயற்கை இன்பங்களை, கொடுக்குமே பலவழியில்"

உடலுறவு இன்பம் தான் , இன்ப நிலையின் உச்சம் என்று நீங்கள் மயங்குவதால் , உங்களுக்கு பலவித செயற்கை பொருள்களெல்லாம் மிகவும் முக்கியமாகத் தோன்றுகிறது. நீங்கள் எதை வேண்டுமானாலும் பணம் கொடுத்து வாங்க முடியும் என்ற நிலையில் , பணம் உங்களுக்கு மிகவும் முக்கியமாகத் தோன்றுகிறது. பணத்தினால் , நீங்கள் உடலுறவு இன்பத்தை விலைகொடுத்து வாங்க முடியும் அதைப்போல அதிகாரம் அதிகாரபலத்தால் , நீங்கள் எவ்வளவு பெண்களின் இன்பங்களை வாங்க முடியுமோ, அவ்வளவு பெண்களை உங்களால் அடைய முடியும் இது, ஒரு ஏழையால் முடியாத காரியம் அதனால் தான் . அரசர்கள் , ஆயிரக்கணக்கான பெண்களை, தங்களுடைய மனைவிகளாக வைத்துக்கொண்டு இருந்தார்கள் - ஏன் , இந்த

இருபதாவது நூற்றாண்டில் கூட . ஹைதராபாத் நிஜாமுக்கு, ஐநூறு மனைவிகள் இருந்திருக்கிறார்கள்! ஆகவே, அதிகார பலத்தால் , உங்களுக்குத் தேவையான பெண்களை அடைவது மிகவும் சகஜமான காரியம்தான் எ

ஆகவே, இந்த பொய்யான நம்பிக்கையால் இந்த உடலுறவு இன்பம் என்பது முடிவான உண்மையாகத் தெரிகிறது. அதுமாத்திரமல்ல . அதையொட்டி பணம் , அதிகாரம் , கௌரவம் என்று பல பிரச்சனைகள் ஏற்படுகின்றன

''வெறுமையில் எழும்பும் மாறுபட்ட சக்திகள்

இது வெறும் கற்பனைதான் நீங்கள் இன்பநிலையில் இருப்பதாக எண்ணுவது. வெறும் கற்பனை மயக்கம் தான் இது ஒரு தானே வசியம் செய்துகொள்ளுதல் மற்றும் தானே கட்டளை ட்டுக்கொள்ளுதல் (AUTO SUGGESTION) தான் ஒரு தடவை உங்களுடைய கட்டளை வேலை செய்துவிட்டால் , அது எப்பொழுதும் இன்பமாகவே தோன்றும் கொஞ்சம் யோசனை செய்யுங்கள் நீங்கள் ஒரு பெண்ணின் கையை முதன் முதலாகப் பிடிக்கிறீர்கள் அப்பொழுது, நீங்கள் எவ்வளவு இன்பம் அடைகிறீர்கள் ? இது மனத்தின் வெறும் கற்பனைதான், வெறுமையானதுதான்.

இந்தக் கற்பனை எண்ணங்களினால் , உங்களுடைய உயிர்ச்சக்தி தூண்டப்பட்டு, எழும்புகிறது. ஏன் நீங்கள் ஒரு பிளேபாய் (PLAYBOY) படங்களைப் பார்த்தாலே, அது மேலே தூண்டப்படுகிறது அங்கே யாருமே இல்லை வெறும் கோடுகளும் , வர்ணங்களும்தான் - 1 ஆனால் , உங்களுடைய சக்தி உணர்வு தூண்டப்படுகிறது. சிலசமயம் , வெறும் மனத்தின் எண்ணங்கள் அல்லது ஞாபகங்கள் கூட போதும், அந்த சக்தி மேலே எழும்பிவிடும் கற்பனைகள் அந்த சக்தியைத் தொடர்ந்து வருகிறது. |

நீங்கள் பல கற்பனைக் கனவுகளை உண்டாக்க முடியும் ஒன்று மற்ற திரையில், அந்தக் கனவுகளைத் திரையிட்டுக் காட்ட முடியும்

'செயற்கை இன்பங்களைக் கொடுக்குமே பலவழியில் ''

நீங்கள் சற்று உற்று கவனித்தால் , மனிதனுடைய

குணாதிசயங்களைக் கண்டு ஆச்சரியப்படுவீர்கள் . அவர்களுடைய வித்தியாசமான எண்ணங்களைப் பார்த்து, இப்படியும் நிகழுமா என்று உங்களால் நம்பமுடியாது ஆபாசப்படங்களை (PORNOGRAPHY) ப் பார்க்காமல் , சில மனிதர்களால் , தன் மனைவியோடு உடலுறவு கொள்ள முடியாது பொய்மைக்கு முன்னால், உண்மை குறைவாகக் காணப்படுகிறது! இதைப் போல பலவற்றை நீங்கள் உங்கள் வாழ்க்கையில் அடிக்கடி பார்க்கவில்லையா?

இதோ, அங்கே ரஷ்மா (RUSHMA), நைரோபியிலிருந்து (NAIROBI) வந்து உட்கார்ந்திருக்கிறாள் சில நாட்களுக்கு முன்பு, அவள் என்னிடம், 'பகவான், நான் நைரோபியில் இருக்கும் பொழுது, நான் உங்களை நினைக்காத நேரமே இல்லை உங்களைப்பற்றி பல கற்பனைகளை உருவாக்கி மகிழ்ந்தேன் என் கனவிலும் , உங்களைத்தான் நினைப்பேன் உங்களை நேரில் பார்க்கவே, இவ்வளவு தூரம் கடந்து வந்திருக்கிறேன் ஆனால் , இங்குவந்த பிறகு, என் இதயம் அப்படித் துடிப்பது இல்லை எனக்குள் என்ன நேர்ந்தது? என்று

கேட்டாள் எதுவும் நடக்கவில்லை நீங்கள் உண்மையைவிட , கற்பனையில் , மிகுந்த விருப்பம் காட்டுகிறீர்கள் . உண்மையை விட பொய் மிகவும் உண்மையாகத் தெரிகிறது. ஆகவே, நீங்கள் நைரோபியில் இருக்கும் பொழுது, நீங்கள் ஏற்படுத்திக்கொண்ட பகவானோடு இருந்தீர்கள் ஆனால் , இது உங்களுடைய கற்பனைதான் பிறகு நீங்கள் இங்கு வந்த பின்பு, என்னை நேரில் பார்க்கிறீர்கள் திடீரென்று நீங்கள் கற்பனை செய்து கொண்டிருந்த பகவானோடு நான் ஒத்துவரவில்லை. நீங்கள் , உங்கள் மனத்தில் ஒரு கனவோடு வந்தீர்கள் என்னுடைய உண்மைத் தன்மை, உங்களுடைய கனவை அழித்துவிட்டது.

நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . உங்களுடைய பிரக்ஞைத் தன்மையை எப்பொழுதும் கற்பனையிலிருந்து விடுவித்து, உண்மை நிலைக்குக் கொண்டு வாருங்கள் . எப்பொழுதுமே. உண் மையை

காது கொடுத்துக் கேளுங்கள் . நீங்கள் மிக மிக ஜாக்கிரதையாக இல்லாவிட்டால் , இந்தக் கற்பனை என்ற கூட்டுக்குள் மாட்டிக் கொண்டு விடுவீர்கள்.

உ பலவித காரணங்களால் , கற்பனை உங்களுக்கு மிகவும் திருப்தியைக் கொடுக்கும் ஏனென்றால் , அது உங்களுடைய கையில் இருக்கிறது. உங்களுடைய கற்பனையில் , நீங்கள் உங்களுடைய விருப்பப்படி, பகவானுடைய மூக்கை, எவ்வளவு நீளமாக நினைத்துக் கொள்ள முடியுமோ, அவ்வளவு நீளமாக , ஆக்கிக் கொள்ளலாம் . உங்கள் விருப்பப்படி, நீங்கள் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளலாம் . யாரும் உங்களுடைய கற்பனையில் தலையிட முடியாது அதில் , நீங்கள் முழு சுதந்திரத்தில் இருக்கிறீர்கள் . நீங்கள் என்னை உங்கள் இஷ்டப்படி வரைந்து கொள்ளலாம், கற்பனை செய்துகொள்ளலாம், இப்படி, எப்படி வேண்டுமானாலும் எதிர்ப்பார்க்கலாம் . அப்பொழுது. உங்களுடைய அகங்காரம் மிகவும் திருப்தி அடைகிறது

ஆகவேதான் , ஒரு குரு , தான் உயிரோடு இருக்கும் பொழுதை விட இறந்த பிறகு மிக அதிக சீடர்களைப் பெறுகிறார் . இறந்தபிறகு, அவருடைய சீடர்கள் . மிகவும் ஓய்வுத் தன்மையை அடைகிறார்கள் உயிரோடு அந்த குரு இருக்கும்பொழுது, அவர்கள், சில சங்கடத்தில் இருக்கிறார்கள் புத்தர் , உயிரோடு இருக்கும்பொழுது, அவருக்கு சீடர்கள் மிகவும் குறைவு - அதாவது அவர் இறந்து இந்த இருபத்து ஐந்து நூற்றாண்டுகளில் உள்ளவர்களை ஒப்பிடும்பொழுது ஜீசஸ் உயிரோடு இருக்கும் பொழுது, அவருக்கு பனிரெண்டே சீடர்கள் தான் இருந்தார்கள் - இப்பொழுது இந்த உலகத்தில் பாதி அளவில் இருக்கிறார்கள் ! இந்தப் பெருக்கத்துக்குக் காரணம் , அந்த குரு இறந்ததுதான். இப்பொழுது ஜீசஸ், உங்கள் கைகளில் இருக்கிறார் - இப்பொழுது நீங்கள், உங்கள் விருப்பப்படி, எப்படி வேண்டுமானாலும் , அவரை செய்துகொள்ளலாம் . ஏனென்றால் , அவர் உயிரோடு உண்மையாக இல்லை. ஆகவே, அவரால் உங்களுடைய கனவுகளையும் , கற்பனைகளையும் அழிக்க முடியாது. இப்பொழுது, கிருஸ்துவர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் , அந்த உண்மையான ஜீசஸை ' நேரில் கண்டால் அவர்களுடைய இதயம் உடனே

நின்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை! என் ? ஏனென்றால், உண்மையை அவர்களால் நம்ப

முடியாது

அவர்களுடைய கறபனைகள் அந்த அளவுக்குப் பெரியது மற்றும் உண்மையைவிட மிகவும் உண்மையாக அவர்களுக்கு அது தெரிந்து இருக்கிறது. இது அந்த குருவின் மறைவு உண்டாக்கும் மாற்றம் இப்பொழுது, ஜீசஸ் உங்களுடைய கைகளில் இருக்கிறார். இப்பொழுது உங்கள் இஷ்டப்படி, அவரை எப்படி வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம். ஜீசஸ் உயிரோடு இருந்து நீங்கள் அவரைப் பார்க்க நேரிட்டால் அவர் ஒரு பொது இடத்தில் தன் நண்பர்களோடு குடித்துக்கொண்டு சிரித்தவாறு உரையாடிக் கொண்டிருப்பதை நீங்கள் பார்க்கக் கூடும். இப்பொழுது அவரை கடவுளின் ஒரே மைந்தன் என்று உங்களால் கத்த முடியாது. அவர் சாதாரண மனிதர்களில் ஒருவராகத்தான் உங்கள் கண்களுக்குத் தெரியும் அவர் ஜோசப் என்பவரின் மைந்தனாக மட்டுமே, உங்களுக்குத் தெரியும் ஆனால் , அவர் மறைந்தபிறகு உங்களுடைய கற்பனைகளில் அவரால் தலையிட முடியாது. ஆகவே, உங்கள் விருப்பப்படி அவரை வரைந்துகொள்ளலாம் . கற்பனைகளை உருவாக்கிக் கொள்ளலாம்

குரு வெகுதொலைவில் இருந்தால் உங்களுடைய கற்பனை தன் முழுசக்தியோடு இயங்கும் நீங்கள் இப்பொழுது எவ்வளவுக்கெவ்வளவு என் அருகில் வருகிறீர்களோ, அந்த அளவுக்கு, உங்களுடைய கற்பனையின் சக்தி குறைந்துகொண்டே வரும் நீங்கள் உங்களுடைய கற்பனைகளை விடாவிட்டால் , உங்களால் என்னை முழுமையாகப் பார்க்க முடியாது அதைப்போலத்தான் மற்ற இன்பங்களும் இருக்கும் அவைகள் செயற்கைத் தன்மை கொண்டது

"வெறுமையில் எழும்பும் மாறுபட்ட சக்திகள் செயற்கை இன்பங்களை, கொடுக்குமே பலவழியில் கற்பனை மயக்கத்தில் நினைவற்ற நிலையில் யோகிகள் கீழ்நோக்கி விழுகிறார்கள் , பேரின்ப பரவெளியிலிருந்து - குருட்டுத்தனமாக இருள் சூழ்ந்த

பள்ளத்தில்"

நீங்கள் அதிகமாகக் கற்பனையில் மூழ்கிவிட்டால் , நீங்கள் அந்த பேரின்ப பரவெளியை இழக்க நேரிடும் கற்பனை என்பது உங்களுடைய சம்சார வாழ்க்கை மற்றும் கனவுகள் நிறைந்தது உங்களுடைய கனவுகள் மிகவும் அதிகமாக இருந்தால் , நீங்கள் அந்தத் தெய்வீகப் பரவெளியை, அந்த தெய்வீக சாசுவதத் தன்மையை இழந்து, நீங்கள் பிரக்ஞைத் தன்மையில் இருக்கமாட்டீர்கள் கற்பனைகளால் , நீங்கள் ஆக்ரமிக்கப்படுகிறீர்கள் மற்றும் அழுத்தப்படுகிறீர்கள் நீங்கள் அந்த கற்பனையில் , உங்களையே தொலைத்துவிடுகிறீர்கள் அந்தக் கற்பனையில் நீங்கள் மயக்கமடையக்கூடும் ஆனால் நீங்கள் அதை சமாதிநிலை என்று தவறாக எண்ணிவிடுவீர்கள் . புத்தர் . இந்த சமாதிநிலையை ' தவறான சமாதி' (WRONG SAMADHIS) என்று அழைக்கிறார் . அதைப் போலவே சாரஹாவும் , ' தவறான சமாதி' என்று கூறுகிறார் . கடவுளைப் பற்றிய கற்பனைகள் பல கற்பனைகளை மேலும் மேலும் உண்டாக்கி அதை வளரச் செய்யும் , அதனால் பல கற்பனைக் கனவுகளைக் கண்டு நீங்கள் உங்களுடைய சகல பிரக்ஞை நிலையை இழந்து, மயக்கமடையக் கூடும் நீங்கள் உண்டாக்கிக் கொண்ட , அந்தக் கனவுகள் மிகவும் அழகானது. ரம்மியமானது

ஆனால் , இது. அந்த பேரின்பப் பரவெளியிலிருந்து, கீழே, இருண்ட பள்ளத்தில் விழுவதற்கு சமம்தான் . சாரஹா, இப்படி உண்மையான பிரக்ஞை நிலையிலிருந்து. இருண்ட பள்ளத்தில் விழுவதைத் தவிர வேறுவழியில்லை அந்த யோகிகள் எனப்படுபவர்களும் , உண்மையான யோகிகள் இல்லை என்று கூறுகிறார்.

. பேரின்பப் பரவெளி என்று எதை சாரஹா அர்த்தம் பண்ணுகிறார் ? கனவுகளற்ற வெற்றுப் பரவெளி கனவு காண்பது என்பது இந்த உலகம்தான் கனவுகளற்ற நிலையில் , நீங்கள் நிர்வாணா (NIRVANA)நிலையில் இருக்கிறீர்கள்

"யாக நெருப்பில் எரியும் வெண்ணை அரிசியை

கருதுகிறான் பிராமணன் , கடவுளுக்குக் காணிக்கை என்று. பேரின்ப பரவெளியில் தேனை சேகரிக்க பாண்டம் உண்டாக்கி அடைய நினைக்கிறான் அந்த முடிவான முடிவை - கற்பனையாக"

இந்தியாவில் பிராமணர்கள் யாகங்ககள் செய்து வருவது பழக்கம் அவர்கள் , கொழுந்துவிட்டு எரியும் நெருப்பில் வெண்ணெய் , அரிசி போன்ற பொருள் களை கடவுளுக்குக் காணிக்கையாக அளிக்கிறார்கள். அவைகள் கடவுளைச் சென்று அடைகிறது என்று நினைக்கிறார்கள் அதற்காக , அவர்கள் பல நாட்கள் பட்டினி இருந்து நெருப்பை மூட்டி, அதைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு சில சடங்குகளை செய்துகொண்டு, சில மந்திரங்களையும் , சில வேதங் களையும் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டு, அவர்கள் தங்களையே வசியம் (AUTO HYPNOSIS) செய்து கொள்கிறார்கள் இப்படி உங்களையே, நீங்கள் முட்டாளாக்கிக் கொண்டு நீங்கள் கடவுளை அடைந்ததாக, நினைத்துக் கொள்கிறீர்கள்.

சாரஹா , " ஒருவன் , உண்மையிலேயே கடவுளை அடைய விரும்பினால் அவன் தன்னுடைய உள் ஆசை என்ற நெருப்பை மூட்டி, எரியவிட வேண்டும் வெளித்தீயினால் எந்த பிரயோஜனமும் இல்லை. அந்தத் தெய்வீகத் தன்மையை அடைய விரும்புவார்கள் , தங்கள் உள்ளே உள்ள ஆசை என்ற விதையை தீயிட்டு எரிக்கவேண்டும் - அதுதான் உண்மையான காணிக்கை - வெளித்தீயை மூட்டி, பல பொருள்களை எரியவிடுவதில் அர்த்தமே இல்லை அவர்கள் தங்களுடைய அகங்காரத்தை எரிக்கவேண்டும் வெண்ணை மற்றும் , அரிசிபோன்ற பொருள்களை எரிப்பதால் எந்த நன்மையும் விளையப்போவது இல்லை வெண்ணெய் என்பது, பாலின் சுத்தமான, முக்கியமான அம்சம், அதைப்போல கனவுகளின் மிகவும் சுத்தமான நிலை, அகங்காரமாகும் , தன் முனைப்புமாகும் அதைப்போலவே நெய் நெய்யை நெருப்பில் இடுவதால் எந்தப் பிரயோஜனமும் இல்லை. நீங்கள் , உங்கள் உள்ளே, ஆசை மற்றும் அகங்காரம் போன்ற பயனில்லாத குணங்களை, தீயிலிட்டு பொசுக்க வேண்டும்

உங்களுடைய பாலுணர்வு சக்தியானது மேலே நகரும்பொழுது, அதுவே நெருப்பாகிறது. அது ஜுவாலையாகிறது. அதுவே வெளியே செல்லும்பொழுது. ஒரு உயிரை உண்டாக்கக் காரணமாகிறது பாலுணர்வு சக்தியானது. மிகவும்

அற்புதமானது இந்த சக்தியின் மூலமாகத்தான் ஒரு புதிய உயிர் பிறக்கிறது. உயிர் என்பதே நெருப்புதான் அது நெருப்பின் வேலையை செய்கிறது. அந்த நெருப்பு இல்லாமல், வாழ்வு ஒருக்காலும் நடைபெறாது சூரியன் இல்லாமல் இந்த உலகத்தில் மரங்களோ, மனித இனமோ பறவை, விலங்குகள் போன்றவைகள் எதுவுமே இருக்காது அது நெருப்பை கக்குகிறது அந்த நெருப்பே உயிராகிறது. வாழ்க்கையாகிறது

நீங்கள் ஒரு பெண்ணோடு சல்லாபித்தால் அந்த நெருப்பு வெளியே செல்கிறது அதுவே உள்ளே, மேல்நோக்கிச் சென்றால் அந்த நெருப்பு உங்களுக்குள்ளேயே செல்கிறது அந்த நெருப்பில் , நீங்கள் உங்களுடைய ஆசைகள் , எண்ணங்கள் , பேராசைகள் விருப்பங்கள் போன்ற விதைகளை எரித்தால், அவைகள் எரிக்கப்படும் கடைசியில் நீங்கள் எரிக்க வேண்டியது உங்களுடைய அகங்காரத்தைத்தான் - அதாவது உங்களுடைய கனவுகளின் சுத்தமான தன்மையை அதுதான் உண்மையான யாகம் உண்மையான சடங்கு மற்றும் தியானமாகும்

''யாக நெருப்பில் எரியும் வெண்ணை அரிசியை

கருதுகிறான் பிராமணன் , கடவுளுக்குக் காணிக்கை என்று பேரின்ப பரவெளியின் தேனை சேகரிக்க பாண்டம் உண்டாக்கி அடைய நினைக்கிறான் அந்த முடிவான முடிவை - கற்பனையாக.''

அவன் , இப்படி தன் விருப்பமாக , இதுதான் முடிவான முடிவு என்று எண்ணிக் கொள்கிறான் . அதைப்போல , ஒருவன் , பெண் இன்பத்தை அடைந்து. இதுதான் முடிவான இன்பம் என்று கருதுகிறான் இது வெளியே

உள்ள நெருப்பில் எரிவதற்குச் சமமே அவன், வெளியே தீ மூட்டி, பல பொருள்களை அதில் எரிக்கிறான் இதைப்போலத்தான் , ஒரு பெண்ணும் , தான் ஒரு ஆணோடு சல்லாபிக்கும்பொழுது, அந்தத் தெய்வீகப் பேரானந்த நிலையை அடைவதாக எண்ணிக் கொள்கிறாள்

அந்த நெருப்பு உங்களுக்குள்ளேயே நகரவேண்டும் அப்பொழுது, அது உங்களுக்கு மறுபிறப்பை உண்டுபண்ணுகிறது. புத்துணர்ச்சியை ஏற்படுத்துகிறது " தூண்டும் உள்சக்தியை, வைக்கிறான் தன் நாக்குக்கு அடியில் தன் நாக்கினால், அதைத் தடவும் சிலர் , உடலுறவு இன்பத்தை பல மடங்கு உணர , குழம்புகிறார்கள், அது அடைக்கப்பட்ட சக்தியின் வெளிப்பாடு என்று."

இதில் மிகவும் முக்கியமான விஷயம் அடங்கி இருக்கிறது. நான் ஐந்தாவது சக்ராவாக , விஷுதா (VISUDHA) ஒரு மனிதனுடைய நாக்குக்கு அடியில் இருக்கிறது என்று சொன்னதை, இப்பொழுது ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் . இதுதான் , நீங்கள் மீண்டும் கீழே விழக்கூடிய கடைசி நிலை ஆகவே, இந்த ஐந்தாவது சக்ரா வரை நீங்கள் மீண்டும் கீழே விழவேண்டிய சாத்யம் உண்டு ஆனால் , ஆறாவது சக்ராவாகிய , மூன்றாவது கண்ணை ( நெற்றிக்கண் ), உங்களுடைய சக்தி அடைந்துவிட்டால், அது மீண்டும்

கீழேவரமுடியாது அதற்குச் சாத்யமே இல்லை. கீழே மீண்டும் திரும்ப முடியாத நிலை ஆறாவது சக்ராவில் தொடங்குகிறது அதுவே மூன்றாவது கண்ணை அடைந்தபிறகு இறக்க நேரிட்டால் , உங்களுடைய மறுபிறப்பு. இந்த மூன்றாவது கண்ணோடுதான் இருக்கும் . நீங்கள் சகஸ்ராவை அடைந்துவிட்டால் நீங்கள் மீண்டும் பிறக்க முடியாது உங்களுக்கு மறுபிறவி கிடையாது ஆனால், நீங்கள் விஷுதா சக்ரா வரை சென்றிருந்தால் நீங்கள் மீண்டும் மூலதாருக்கு விழவேண்டிய சாத்யம் உண்டு ஆகவே, உங்களுடைய மறுபிறவியில் உங்களுடைய ஆன்மீக வளர்ச்சியை, ஆரம்ப மூலதாரத்திலே இருந்துதான் ஆரம்பிக்க

வேண்டும்

ஆகவே, ஐந்தாவது சக்ரா வரை உறுதியாகச் சொல்ல முடியாது. ஆனால் அதற்கும் மேலே சென்றால் உறுதி கூறலாம் . இந்தியாவில் உள்ள மக்கள் , இப்படி கீழேவிழக்கூடிய பல சந்தர்ப்பங்களில் ஒன்று என்னவென்றால், சாரஹாவின் கருத்துப்படி. அதாவது

'தூண்டும் உள் சக்தியை, வைக்கிறான் தன் நாக்குக்கு அடியில்'' என்பதாகும்.

நீங்கள் உங்களுடைய உள் சக்தியை தூண்டிவிட்டு, அந்தத் தீ மேலே சென்று, உங்களுடைய அடி நாக்குக்கு அடியில் ( அதாவது உங்களுடைய தொண்டையின் மேல் பாகத்தில் , மற்றும் நாக்கின் ஆரம்ப இடத்தில் ) அது வந்து சேருகிறது அப்பொழுது, அந்த இடத்தை. உங்களுடைய நாக்கினால் தடவவேண்டும் என்ற மிகுந்த உணர்வு, விருப்பம் ஏற்படுகிறது ஆனால் ஜாக்கிரதையாக இருக்கவும் இதைத் தவிர்க்கவேண்டும் ஆனால் இதைத் தவிர்ப்பது மிகவும் கஷ்டம் இந்தியாவில், அந்த இடத்தை நன்றாக நாக்கினால் தடவ ஒரு நூதன முறையை கையாண்டிருக்கிறார்கள் அதாவது, தன் நாக்கின் அடி வேர்களை வெட்டிவிடுவார்கள் அப்பொழுது. நாக்கு கொஞ்சம் நீளமாகி, பின்னால் நன்றாக வளைக்க முடியும் பல யோகிகள் இப்படிச் செய்திருப்பதை, நீங்கள் இங்கு காணலாம் . இப்படி நாக்கை மடித்து, அந்த ஐந்தாவது சக்கரத்தை நன்றாகத் தடவ முடியும் அந்த இடத்தில், பாலுணர்வு சக்தி, திரண்டு வருவதால் அது கிட்டத்தட்ட சுய இன்பம் (MASTURBATORY) காண்பதற்குச் சமம்தான்

இந்த ஐந்தாவது சக்கரமாகிய விஷுதா (VISUDHA) ஆண் தன்மை யுடையது என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன் ஆண் தன்மையுடைய பாலுணர்வு சக்தி. மேலே தொண்டைக்கு வந்ததும் , உங்களுடைய தொண்டை, வீறுகொண்ட பாலுணர்வு உறுப்பாகிவிடுகிறது. அப்பொழுது அது மிகவும் உணர்வு மிகுந்ததாகவும் , உங்களுடைய ஆண் உறுப்பைவிட மிகவும் மேன்மையான தன்மையில் துடிக்க ஆரம்பிக்கும். அதை உங்களுடைய நாக்கினால், சிறிது தடவினால் போதும், நீங்கள் சிறந்த இன்பத்தை அடைவீர்கள் . ஆனால் , அது சுய இன்பம்

காணுவதற்குச் சமம்தான் . நீங்கள் ஒரு தடவை, அதைத்தடவி, அந்த இன்பத்தை உணர்ந்துகொண்டால், நீங்கள் மேலும் மேலும் தூண்டும் அந்த ஆவலை அடக்குவது மிகவும் கடினம் அந்த அளவுக்கு, அது

ஆனந்தத்தைக் கொடுக்கும் உங்களுடைய சாதாரண உடலுறவு இன்பத்தை, அதனோடு ஒப்பிடுகையில் , அது மிகவும் சாதாரணமானது. ஏன் ஒன்றுமே இல்லை இதை நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் மீண்டும் சொல்கிறேன் உங்களுடைய சாதாரண உடலுறவு இன்பம் , அந்த இன்பத்துக்கு முன்னால் , ஒன்றுமே இல்லை உங்களுடைய நாக்கினால் வெறுமனே தடவினால் போதும் நீங்கள் அடையும் இன்பம் மிகவும் மகத்தானது ஆகவே, யோகாவில், இதற்கென்றே சில முறைகள் இருக்கின்றன

ஆனால் , எந்தத் தாந்தீர்களும் , இப்படிச் செய்யக்கூடாது என்று தெளிவாக சாரஹா சொல்லியிருக்கிறார் ஏனென்றால் , இது உங்களை ஏமாற்றிவிடும் நீங்கள் ஆன்மீக வளர்ச்சியில் , தோல்வியைத்தான் அடைய முடியும் ஏனென்றால் உங்களுடைய பாலுணர்வு சக்தி, அந்த ஐந்தாவது சக்கரத்தை அடைந்ததும் உங்களிடம் அதைத் தடவ பேரவா ஏற்படும் - அதுதான் உங்களுடைய கடைசியும், மிகவும் சக்தி வாய்ந்த ஆசையும் ஆகும்

. நீங்கள் மிகவும் ஜாக்கிரதையாகவும், பிரக்ஞை நிலையிலும் முழுமையாக இருந்தால் , அந்த ஆசையைக் கடந்து செல்ல முடியும் அப்பொழுது, நீங்கள் ஆறாவது சக்கரத்தை, அதாவது ஆக்னா (AJNA) சக்கரத்தை அடைய முடியும் இல்லாவிட்டால் , நீங்கள் மீண்டும் கீழே விழ நேரிடும் இதுதான் கடைசி உந்துதல் தந்த்ரா அணுகு முறைப்படி, இந்த உந்துதலை கடைசியாக சாத்தான் , ஜீசஸிடம் தூண்டியதாக நீங்கள் கூறிக்கொள்ளலாம் அல்லது மாரா (MARA) வந்து, கடைசி முயற்சியாக புத்தாவைத் தூண்டியதாக வைத்துக் கொள்ளலாம் . இதுதான் ஆசைகள் நிறைந்த உங்களுடைய மனத்தினுடைய கனவு உலகத்தின் கடைசி முயற்சியாக இருக்கும் உங்களுடைய அகங்காரம் முழுமையாக அழிவதற்கு முன்பு, அதனுடைய கடைசி முயற்சியும் இதுவே இந்தத்

தூண்டுதல் , மிகவும் சக்திவாய்ந்ததாக இருக்கும் . இதைத் தவிர்ப்பது என்பது சாமான்யமானது அல்ல . உங்களுடைய உடலுறவு இன்பத்தை ஒப்பிடும் பொழுது, இது எல்லையில்லாதது

உடலுறவு இன்பம்தான் , மகத்தானது என்று கருதும் சாதாரண மக்கள் இந்த மிகச் சிறந்த இன்பத்தை எப்படி அழைப்பது? இந்த இன்பத்தில் , நீங்கள் எந்த சக்தியையும் இழக்கவில்லை ஆனால் சாதாரண ஆண் - பெண் உறவில் , நீங்கள் சக்தியை இழக்கிறீர்கள் , நீங்கள் அதில் சலிப்படைந்து, களைத்து இளைத்து விடுவீர்கள் ஆனால் இந்த இன்பத்தில் , நீங்கள் எந்த சக்தியையும் இழப்பதில்லை நீங்கள் , நாள் முழுவதும் அந்த இடத்தை, உங்கள் நாக்கினால் தடவிக்கொண்டே இருக்க முடியும் இதைத்தான் , இயந்திரத்தின் உதவியால் டெல்காடோ (DELGADO) செய்து காட்டினார்.

" தூண்டும் உள் சக்தியை, வைக்கிறான் நாக்குக்கு அடியில் தன் நாக்கினால் அதைத்தடவும் சிலர் , உடலுறவு இன்பத்தை பலமடங்கு உணர , குழம்புகிறார்கள் அது அடைக்கப்பட்ட சக்தியின் வெளிப்பாடு என்று'

அதாவது, அவர்கள் மீண்டும் சம்சாராவில் விழுகிறார்கள்

" குழம்புகிறார்கள் , அது அடைக்கப்பட்ட சக்தியின் வெளிப்பாடானது என்று"

ஆனால் , அவர்கள் முடிவான யோகநிலையை அடையவில்லை அவர்கள் அதைத் தவறவிட்டுவிடுகிறார்கள் உண்மையில் , அவர்களை யோகி என்பதற்குப் பதிலாக யோகப்பிரஸ்த்தா" (YOGABRASHTA) என்று அழைப்பதே சரியாகும் . அதாவது, யோக நிலையிலிருந்து கீழே விழுந்தவர் ' என்று அர்த்தம் ஆகவே,

இந்த ஐந்தாவது சக்கரா என்பது, மிகவும் அபாயகரமான மையம் ஏனென்றால் , வேறு எந்த மையத்தையும் , நீங்கள் உங்கள் நாக்கினால் தடவ முடியாது இதுதான் மிகவும் அபாயகரமானது நீங்கள்

மணிப்பூரா சுவாதிஸ்தான் மற்றும் அனாஹதா போன்ற மையங்களை உங்களுடைய நாக்கினால் தடவ முடியாது அவைகள் உங்களுடைய கைக்கு அப்பால் இயங்குகிறது. அதைத் தொடுவதற்கு எந்த வழியும் கிடையாது. நீங்கள் உங்களுடைய மூன்றாவது கண்ணையும் தொடமுடியாது. ஏனென்றால் , அது ஏற்கனவே தயாராக இருக்கிறது உங்களுடைய வாயைத் திறந்து, நாக்கை பின்பக்கம் மடித்து, அந்த மையத்தைத் தடவுவது, மிகவும் சுலபமானது

யோக சாஸ்திரத்தில் , இதை, மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்று குறிப்பிட்டிருக்கும் ஆனால் , உண்மையில் அப்படியில்லை ஆகவே, இந்த விஷயத்தில், மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவும்

இவைகள்தான் தந்த்ரா உள் வரைபடத்தில் கண்டுள்ள ரசவாத இராசயன மாற்றம் . இதனால் , கீழ்நிலையில் உள்ள பாலுணர்வு சக்தி மேலான ஆன்மீக சக்தியாக மாற்றப்படுகிறது. அந்த சக்தி மேலே கிளம்ப எப்பொழுதும் தயாராக இருக்கிறது. நீங்கள் தியானத்தன்மையை உங்களுடைய உடலுறவு நிலையில் , சிறிது கொண்டு வரவேண்டும் நீங்கள் சிறிது உள்ளே, பிரக்ஞையாக , சாட்சியாக நின்று கவனிக்க வேண்டும் நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் தந்த்ரா உடலுறவை எதிர்க்கவில்லை ஆகவே அதில் மீண்டும் , மீண்டும் ஈடுபடுங்கள். அது, அதற்காகவே இருக்கிறது. ஆனால், அதுமாத்திரம் போதாது. அது, ஒரு ஏணியின் முதல் படியாக மட்டுமே இருக்கிறது. அந்த ஏணியில் ஏழுபடிகள் இருக்கின்றன.

மனிதன் தான் அந்த ஏணி அதில் உள்ள முதல் படி பாலுணர்வு கொண்டதாகும் , ஏழாவது படி சகஸ்ரார் - சமாதி நிலையாகும் . அந்த முதல்படி, உங்களை சம்சாரா மற்றும் உலகத்தில் ஈடுபட வைக்கிறது. அந்த ஏழாவதுபடி, உங்களை நிர்வாணா நிலையோடு ஒன்று கலக்கச் செய்கிறது - அது அப்பால் இயங்குவது. நீங்கள் பிறப்பு, இறப்புகளை மீண்டும் மீண்டும் எடுத்தாக வேண்டும் . அது ஒரு வேண்டாத சக்கரம் ஆனால் , ஏழாவது நிலையில் , நீங்கள் பிறப்பையும் , இறப்பையும் கடந்து செல்கிறீர்கள் . அப்பொழுது சாசுவதமான , தெய்வீக வாழ்வு உங்களுடையதே.

அதுவே "கடவுளின் சாம்ராஜ்யம்'

சுதந்திரம், மிகவும் மதிப்புமிக்கது (FREEDOM IS A HIGHER VALUE)

கேள்வி 1

'' அன்புள்ள குருவே, என்னுடைய அன்பு இந்த வெளி உலகத்தை சார்ந்தே இருக்கிறது. அதே சமயம், 'நீங்கள் முழுமையாக உங்களுக்குள்ளே செல்லுங்கள் ' என்று எங்களுக்கு நீங்கள் சொல்வதையும் நான் ஏற்றுக்கொள்கிறேன் . உள்ளே எதுவுமே மற்றும் யாருமே இல்லாத நிலையில் , அதைப் புரிந்து கொண்டு, யார் சுவைக்கிறார்கள் ? சீடர்களே இல்லாமல், நீங்கள் யார்?''

முதலில் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால் அன்பு மற்றும் காதல் என்பது இருவகைப்படும் சி எஸ் லெவிஸ் (C.S.LEWIS)என்பவர். இதை தேவைக்கான அன்பு (NEED - LOVE) மற்றும் அன்பளிப்பான அன்பு (GIFT LOVE) என்று இருவகைப்படுத்தியிருக்கிறார் . அதைப்போல ஆப்ரஹாம் மாஸ்லோ' (ABRAHAM MASLOW) என்பவர் இப்படி அதை இரண்டு வகையாகப் பிரித்திருக்கிறார் முதல் அன்பை, ' குறையுள்ள அன்பு (DEFICIENCY LOVE) என்றும் இரண்டாவது அன்பை, ' உயிர்த்தன்மையான அன்பு (BEING LOVE) என்று அழைக்கிறார் இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆகவே, அவைகளை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்

இந்த ' தேவைக்கான அன்பு மற்றும் ' குறையுள்ள அன்பு' என்பவைகள் பிறரைச் சார்ந்தே இருக்கும் இது முதிர்ச்சியடையாத அன்பு உண்மையில் , இது உண்மையான அன்பு கிடையாது - இது, தேவையை அடிப்படையாகக் கொண்ட அன்பு. அதற்கு நீங்கள் பிறரை ஒரு கருவியாக உபயோகிக்கிறீர்கள் நீங்கள் அவரை ஏமாற்றுகிறீர்கள் , அவரை அதிகாரம் செய்கிறீர்கள் மற்றும் உங்கள் இஷ்டப்படி நடக்கச் சொல்கிறீர்கள் இதனால் , அவர்

சீர்குலைக்கப்படுகிறார் மற்றும் அழிக்கப்படுகிறார் இதைப்போலவே, மற்றவர்களும் செய்கிறார்கள்

அவர்களும் உங்களை அதிகாரம் செய்ய அவர்கள் இஷ்டப்படி நடக்க உபயோகித்துக்கொள்ள மற்றும் உங்களை தன் உடமையாக்க நினைக்கிறார்கள் இப்படி அடுத்தவர்களை உபயோகப்படுத்த நினைப்பது மிகவும் அன்பற்ற செயல் ஆனால் அது அன்புபோலவே தோற்றம் அளிக்கும் அது ஒரு போலியான நாணயம் ஆனால் சேதம் மக்களிடம் இதுதான் நிகழ்ந்துகொண்டு இருக்கிறது ஏனென்றால் அன்பு என்பதை நீங்கள் உங்களுடைய குழந்தைப் பருவத்திலேயே கற்றுக்கொள்கிறீர்கள்

ஒரு குழந்தை பிறந்ததும் , அது தாயைச் சார்ந்தே இருக்கிறது அந்தக் குழந்தை தன் தாயின் மீது வைக்கும் அன்பு குறையுள்ள அன்புதான் அது. தாய் இல்லாமல் உயிர்வாழ முடியாது தாய் , தன் உயிராக இருப்பதால் , அது தன் தாயை நேசிக்கிறது. அதற்கு தாய் மிகவும் அவசியம் உண்மையில் , அங்கு அன்பு கிடையாது ஏனென்றால், அது, தன்னைக் காப்பாற்றும் எந்தப் பெண்ணையும் நேசிக்கும் தன்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்யும் , தான் வாழ்வதற்கு உதவி செய்யும் எந்தப் பெண்ணையும் , அது நேசிக்கவே செய்யும் தாய் என்பவள் , அது சாப்பிடும் ஒருவகை உணவுதான் அது, தன் தாயிடமிருந்து பாலை மட்டும் பெறவில்லை. அன்பையும் பெறுகிறது அதற்கு இரண்டும் தேவைதான்.

, தங்கள் வாழ்க்கை முழுவதும் , பலகோடி மக்கள் குழந்தைத்தனமாகவே இருக்கிறார்கள் அவர்கள் மனத்தளவில் வளரவே இல்லை, வயதில் தான் வளர்ந்திருக்கிறார்கள் அவர்களுடைய மனவளம் முதிராமல் , அப்படியேதான் இருக்கிறது. அவர்களுக்கு எப்பொழுதும் பிறருடைய அன்பு தேவையாக இருக்கிறது உணவைப்போல , அதற்குப் பின்னாலேயே அவர்கள் எப்பொழுதும் ஓடிக்கொண்டு இருக்கிறார்கள்

எப்பொழுது மனிதன் , பிறரிடமிருந்து அன்பை எதிர்ப்பார்க்காமல் , தான் பிறரிடம் அன்பு செலுத்த

ஆரம்பிக்கிறானோ, அப்பொழுதுதான் , அவன் முதிர்ச்சியடைந்தவனாகிறான் அவனிடம் ஏற்பட்ட அன்பு நிறைந்து வழிகிறது. ஆகவே, அதைப் பிறருக்கு வழங்க , பிறரோடு பங்கிட்டு மகிழ முற்படுகிறான் இந்த வித்தியாசம் முற்றிலும் வேறுவிதமானது முதல்நிலையில் , எப்படி அன்பை பிறரிடமிருந்து எதிர்பார்ப்பது என்பது முக்கியமாகப்படுகிறது இரண்டாவது நிலையில் , எவ்வளவு அதிகமாக அன்பை, பிறருக்குக் கொடுப்பது. அதுவும் எந்த எதிர்ப்பார்ப்பும் இல்லாமல் கொடுப்பது முக்கியத்வம் பெறுகிறது. இதுதான் உங்களை வந்து அடையும் வளர்ச்சி, மற்றும் முதிர்ச்சி எனலாம்

ஒரு முதிர்ச்சியடைந்த மனிதன் கொடுத்துக் கொண்டே இருப்பான் . அவன் , ஒருவனால் மட்டுமே கொடுக்க முடியும் . ஏனென்றால் , அவனிடம்தான் அன்பு தேங்கிக்கிடக்கிறது. அப்பொழுது. அன்பு பிறரைச் சார்ந்து இல்லை. அந்த நிலையில் அடுத்தவர் உங்கள் மேல் அன்பு செலுத்தினாலும், செலுத்தாவிட்டாலும் சரி, நீங்கள் அன்பை கொடுத்துக்கொண்டே இருப்பீர்கள் . அப்பொழுது, அன்பு, எந்த உரிமையையும் எதிர்ப்பார்ப்பது இல்லை. எந்த உறவையும் ஏற்படுத்துவது இல்லை. அப்பொழுது அது, வெறும் தன்னிலையாக (STATE) விளங்குகிறது.

எல்லா சீடர்களும் அகன்று நான் மட்டும் தனியாக இருந்தால் , என்ன நேரிடும் ? ஏதும் மாற்றம் இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ஒரு அடர்ந்த காட்டில் யாருமே அதைப் புகழ்வதற்கு இல்லாத நிலையில் யாருமே அதனுடைய நறுமணத்தை அறியாத தன்மையில், அது எவ்வளவு அழகானது' என்று சொல்ல எவருமே இல்லாதபோது. அதன் அழகைக் கண்டு ஆனந்தமடைய , பங்கிட்டுக் கொள்ள ஒருவரும் இல்லாத வெறுமையான நிலையில் ஒரு அழகிய மலர்ந்த மலருக்கு, என்ன நேரிடும் ? அது இறந்துவிடுமா? அது துன்பப்படுமா? அதற்குப் பைத்தியம் பிடிக்குமா? அல்லது தற்கொலை செய்து கொள்ளுமா? அவைகள் மலர்ந்து கொண்டேதான் இருக்கும் அதைத்தவிர , அதற்கு வேறு எதுவும்

தெரியாது. வேறு எதையும் எதிர்பார்ப்பது இல்லை யாருடைய பாராட்டுக்கும் அல்லது இகழுரைக்கும் அதற்கு வித்தியாசம் தெரிவது இல்லை அவைகள் அதற்கு அனாவசியம் சம்மந்தமில்லாதது அது. காற்றில் , தன் நறுமணத்தை எப்பொழுதும் காற்றில் கலந்து வீசிக்கொண்டே இருக்கிறது அது. எப்பொழுதும் தன் மகிழ்ச்சியை கடவுளுக்கு, அந்த முழுமைக்கு அர்ப்பணித்துக்கொண்டே இருக்கிறது

உங்களோடு சேர்ந்து இருக்கும் பொழுது, எப்படி அன்புமயமாக இருக்கிறேனோ, அதைப்போலவே, நான் தனியாக இருந்தாலும் , அப்படியேதான் இருப்பேன் என்னுடைய அன்பை நீங்கள் உண்டாக்கவில்லை அப்படி நீங்கள் உண்டாக்கி இருந்தால் , நீங்கள் செல்லும்பொழுது, அந்த அன்பும் உங்கள் கூடவே சென்றுவிடும் நீங்கள் , என் அன்பை என்னிடமிருந்து இழக்கவில்லை நான் அதை உங்கள் மேல் சொரிக்றேன் . அதுதான் அந்த அன்பளிப்பான அன்பு' (GIFT LOVE) மற்றும் உயிர்த்தன்மையான அன்பு (BEING LOVE)

ஆனால் , சி எஸ் லெவிஸ் மற்றும் ஆப்ரஹாம் மாஸ்லோவோடு, நான் முழுமையாக ஒத்துப்போகவில்லை. முதலில் அன்பு என்று அவர்கள் சொல்லியது. அன்பே இல்லை, அது ஒரு தேவை ஒரு தேவை எப்படி அன்பாக முடியும் ? அன்பு மிகவும் செழிப்பான தன்மையுடையது அதனிடம் அந்த அளவுக்கு வாழ்க்கை புத்துணர்ச்சி பெற்று பெருக்கெடுத்து ஓடுகிறது அதை என்ன செய்வது என்றே உங்களுக்குப் புரியவில்லை ஆகவே அதை எல்லோருக்கும் பங்கிட்டு அளிக்கவே விரும்புகிறீர்கள் அது, உங்களுடைய இதயத்தில் அனேக சங்கீதங்களை அடக்கி வைத்திருக்கிறது. ஆகவே அவைகளை நீங்கள் பாடித்தான் ஆக வேண்டும் அதை பிறர் கேட்டு மகிழ்கிறார்களா, இல்லையா என்பது உங்களுக்கு முக்கியமில்லை யாருமே இல்லாவிட்டால் கூட நீங்கள் பாடித்தான் ஆகவேண்டும் ஆடித்தான் ஆகவேண்டும்

அடுத்தவர்கள் அதை எடுத்துக் கொள்ளலாம் அல்லது தவற விடலாம் . ஆனால் உங்களைப் பொருத்தவரையில் , அது. ததும்பி வழிந்துகொண்டே இருக்கிறது உங்களுக்காக , ஆறு ஓடவில்லை நீங்கள்

இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அது தன்பாட்டுக்கு ஓடிக்கொண்டேதான் இருக்கும் உங்களுடைய தாகத்துக்காக , உங்களுடைய விளை நிலத்தின் தாகத்துக்காக,

அது ஓடவில்லை அது வெறுமனே, இயல்பாக ஓடிக்கொண்டு இருக்கிறது. நீங்கள் அதன் மூலம் , உங்கள் தாகத்தைத் தணித்துக் கொள்ளலாம், அல்லது அதைத் தவறவிடலாம் அது உங்களைப் பொருத்தது. அது உங்களுக்காக ஓடவில்லை நீங்கள் , உங்களுடைய நிலத்துக்கு அதன்மூலம் தண்ணீர் பாய்ச்சுவதோ அல்லது உங்களுடைய தேவைக்கு. அதை உபயோகப்படுத்திக் கொள்வதோ தற்செயலானதுதான்

ஒரு குரு என்பவர் ஒரு ஆறுபோல , ஆனால் சீடர்கள் என்பவர்கள் தற்செயலாக வந்தவர்கள் தான் அவர் வெறுமனே அன்புமயமாக வழிந்து கொண்டு இருக்கிறார் அதில் நீங்கள் பங்கு பெறலாம் மகிழ்ச்சியடையலாம் , அவருடைய அன்புமயமான தன்மையில் பங்குபெறலாம் நீங்கள் அவருடைய அன்பால் ஆக்ரமிக்கப்படலாம் . ஆனால் , அவர் உங்களுக்காக இல்லை அவர் உங்களுக்காக அன்புமயமாக இருக்கவில்லை அவர் வெறுமனே அன்பாகவே இருக்கிறார் . ஆகவே, இதை நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் இதைத்தான் , நான் முதிர்ந்த அன்பு உண்மையான அன்பு நிலையான அன்பு என்று அழைக்கிறேன்

( நீங்கள் பிறரைச் சார்ந்து இருந்தால் , அது எப்பொழுதும் துன்பத்தைத்தான் கொடுக்கும் எப்பொழுது நீங்கள் பிறரைச் சார்ந்து இருக்கிறீர்களோ அந்தக் கணமே. துன்பத்தை உணர ஆரம்பிப்பீர்கள் ஏனென்றால் , சார்ந்து இருப்பது, ஒருவகை அடிமைத்தனம்தான் பிறகு, நீங்கள் உங்களுடைய மன ஆழத்தில் , அவரை வஞ்சம் தீர்க்க முயல்கிறீர்கள் அதற்கு என்ன வழி என்று தேடுகிறீர்கள் ஏனென்றால், நீங்கள் சார்ந்து இருந்த அவர், இப்பொழுது உங்களை ஆதிக்கம் செலுத்தும் அளவுக்கு, அதிகாரம் உடையவராகிறார் . பிறர் தன்னை அதிகாரம் செய்ய ,

யாருமே விரும்ப மாட்டார்கள் யாருமே, பிறரைச் சார்ந்து இருக்க விரும்புவது இல்லை ஏனென்றால் சார்ந்து இருப்பது. உங்களுடைய சுதந்திரத்தைக் கொன்றுவிடும் அந்த நிலையில் , அன்பு பரிமாற்றம் எப்படி ஏற்படும்? அன்பு என்பது ஒரு சுதந்திரமான மலர் அதற்கு முழுமையான சுதந்திர நிலை தேவைப்படுகிறது. அடுத்தவர்கள் , அதில் குறுக்கிட எந்த அதிகாரமும் இல்லை அது அவ்வளவு மென்மையானது, உன்னதமானது)

ஆகவே, நீங்கள் அடுத்தவரைச் சார்ந்து இருக்கும் பொழுது, அந்த அடுத்தவர் உங்களைக் கண்டிப்பாக அதிகாரம் செய்யக்கூடும் . அதைப்போல , நீங்களும் அவரை அதிகாரம் செய்யத் தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து இருப்பீர்கள் இந்தச் சண்டைதான் காதலர்களுக்கு இடையே, கணவன் மனைவிக்கு இடையே எப்பொழுதும் நடந்துகொண்டு இருப்பது அவர்கள் நெருங்கிய பகைவர்கள் - தொடர்ந்து சண்டை போடுபவர்கள் தம்பதிகள் இதைத்தவிர, வேறு என்ன செய்து கொண்டு இருக்கிறார்கள் ? அன்போடு இருப்பது என்பது மிகவும் அரியது. விதிவிலக்கானது சண்டைதான் அவர்களுடைய சட்டம் ஒவ்வொரு வழியிலும் , ஒருவரை ஒருவர் அதிகாரம் செய்யவே முயல்வார்கள் கணவன் , மனைவியிடம் ஒன்றைக் கேட்டால்

மனைவி அதை மறுப்பதுதான் வழககம் - அது, அவளைப் பொருத்தவரையில் அனாவசியம் அவள் மிகவும் கஞ்சத்தனமாகவே இருப்பாள் அவள் கொடுப்பாள் ஆனால் மனமில்லாமல் அலட்சியமாக ! அவளைச் சுற்றி, உங்கள் வாலை ஆட்டிக்கொண்டே இருக்கவேண்டும் என்று விரும்புவாள் ! அதைப்போலத்தான் , ஒரு கணவனும் இருப்பான் . மனைவி, தன் தேவையை கணவனிடம் தெரிவிக்கும் பொழுது, கணவன் மிகவும் களைப்பாக இருக்கிறது என்று அலட்சியமாகக் கூறுவான் . தன்னுடைய அலுவலகத்தில் , நிறைய வேலை இருந்ததாகவும் , ஆகவே அதிகமாக வேலை செய்து களைப்படைந்து வந்திருப்பதாகவும், உடனே தூங்கச் செல்ல வேண்டும்,

என்பான்

முல்லா நசுருதீன், தன் மனைவிக்கு எழுதிய கடிதத்தை, நான் படிக்க நேர்ந்தது அதைக் கொஞ்சம் கேளுங்கள்

" என்னுடைய அன்பார்ந்த மற்றும் எப்பொழுதும் அன்பாக இருக்கும் என் மனைவிக்கு

சென்ற வருடம் , சராசரி ஒரு நாளைக்கு ஒரு தடவை வீதம் , 365 தடவை உன்னோடு காதல் உறவு கொள்ள விரும்பினேன் . ஆனால் , என்னை மறுப்பதற்கு, கீழ்க்கண்ட காரணங்களை, நீ கூறினாய்! அதாவது

1. சரியான வாரம் இல்லை 11 குழந்தைகளை எழுப்பிவிடும் மிகவும் உஷ்ணமாக இருக்கிறது 15 மிகவும் குளிராக இருக்கிறது 3 5 மிகவும் களைப்பாக இருக்கிறது 19 ரொம்ப நாழியாகிவிட்டது 16 ரொம்ப சீக்கிரம் தூங்குவதுபோல பாசாங்கு 33 ஜன்னல் திறந்திருக்கிறது பக்கத்து வீட்டார் கேட்கலாம் 3 10. முதுகுவலி 16 11. பல்வலி 2 12. தலைவலி 6 13 அந்த மனநிலையில் இல்லை 31 14. குழந்தை தூங்காமல் இருக்கிறது. கத்த ஆரம்பிக்கும் 18 15 இரவில் நீண்ட 2 7 3 4. 6 7 9 8 9 2

நேரம் படம் பார்த்தது 15

ஓஷோ 16 8 4 7 7 மாதவிலக்கு 17 முகத்தில் எண்ணை வழிகிறது 18 மிகவும் குடித்திருக்கிறேன 19 மருந்துகடைக்குச்செல்ல மறந்துவிட்டேன் 10 20 அடுத்த அறையில் , விருந்தாளிகள் தூங்குகிறார்கள் 21 முடியை வெட்டிக்கொண்டு வந்திருக்கிறேன் 28 22. 'எப்பொழுதும் இதே நினைப்புதானா 62 அன்பே, வரும் வருடம் , நாம் இந்த எண்ணிக்கையை அதிகரிக்க முடியும்

என்று எண்ணுகிறாயா, என்ன?

உன்னை எப்பொழுதும் விரும்பும்

முல்லா நசுருதீன்

எப்படி ஒருவர் , மற்றவரை ஆட்டிப்படைப்பது, எப்படி அவர்களை பட்டினிபோட்டு, தன்னையே மேலும் , மேலும் சார்ந்து இருக்கும்படி, எப்பொழுதும் பட்டினியாக இருக்க வைப்பது என்பதற்கு,

பலவழிகளை காட்டியிருக்கிறேன்.

இயல்பாகவே, ஆணைவிட பெண் இந்த விஷயத்தில் மிகவும் தந்திரமாக செயல்படுவாள் ஏனென்றால் , ஆண் ஏற்கனவே அதிகாரத்தில் இருக்கிறான் . அதற்காக அவன் தந்திரமாக , மறைவாக எதையும் செய்யத் தேவை இல்லை. அவனால் பணத்தைச் சம்பாதிக்க முடியும் - இது அவனுடைய பலம். உடலைப் பொருத்தவரை, அவன் அதிக வலிவு உள்ளவன் பல நூற்றாண்டுகாலமாக, தான் மிகவும் பலசாலி என்றும், அதிகாரமுடையவன் என்றும், பெண்களின் மனத்தை நெறிப்படுத்தி வைத்திருக்கிறான் . ஒவ்வொரு வழியிலும், தன்னைவிட பெண் தாழ்ந்தவளாக இருக்க வேண்டும் என்று முயற்சி செய்கிறான் தன்னைவிட படித்த பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள, எந்த ஆணும் விரும்புவதில்லை ஏனென்றால் அவனுடைய அதிகாரபலம் முடக்கப்பட்டுவிடும் தன்னைவிட வளர்ந்த உயரமான , பெண்களை தன் மனைவியாக்கிக் கொள்ள ஒரு ஆண் விரும்புவதே இல்லை. ஏனென்றால் , அந்த உயரமான பெண் , தனக்கு மேலானவள் என்று காட்டுவதாக அவன் நினைக்கிறான் . அதைப்போல தன்னைவிட அறிவுமிக்கவளாக, தன் மனைவி இருப்பதையும், ஒரு கணவன் விரும்புவதில்லை. ஏனென்றால் , அவள் தன்னை எதிர்த்து எப்பொழுதும் சர்ச்சையில் ஈடுபடுவாள் அதனால் , தான் அதிகார பலத்தை இழக்கக்கூடும். தன்னைவிட, புகழ்பெற்ற பெண்ணை, ஆண் தன் மனைவியாக்கிக் கொள்ள , விரும்புவது இல்லை. ஏனென்றால், அவன் இரண்டாவது நிலைக்கு வந்துவிடுகிறான் . அதைப்போலவே, பழங்காலந்தொட்டே, ஆண், தன் மனைவி

தன்னைவிட வயதில் குறைந்தவளாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறான் ஏன் தன் மனைவி தன்னைவிட மூத்தவளாக இருக்கக்கூடாது? அதில் என்ன தவறு? ஏனென்றால் , அவளுக்கு தன்னைவிட அனுபவம் அதிகம் தன்னுடைய அதிகாரத்தை அழித்துவிடும்

உடல் ஆகவே, ஆண் , தன்னுடைய மனைவி, எல்லா வகையிலும் தன்னைவிட தாழ்ந்தவளாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறான் - ஆகவேதான்,

பெண் தன் உயரத்தை இழந்து நிற்கிறாள் அவர்கள். ஆண்களைவிட உயரத்தில் குறைவாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. அதற்கு வேறு காரணமும் இல்லை அதற்கு முக்கியக் காரணம், ஆண்கள், தன்னைவிட உயரம் குறைவான பெண்களையே எப்பொழுதும் தேர்ந்து எடுக்கிறார்கள் என்பதுதான் இப்படியே, பெண்கள் ஆழமாக நினைத்துக் கொண்டு இருந்ததால் அது அவர்களுடைய மனத்தில் நன்றாகப் பதிந்து, அவர்களுடைய உயரத்தை குறைத்துவிட்டது அதைப் போல, தன்னைவிட ஒரு புத்திசாலி மனைவியோடு வாழ்வது. எப்பொழுதும் தொல்லைதான். ஆனால், இந்த நூற்றாண்டில், பெண்களின் வளர்ச்சி அதிகமாக இருப்பதைக் கண்டு, நாம் ஆச்சரியப்படலாம் இது ஆச்சரியப்படக்கூடிய விஷயம்தான் அவர்களுடைய எலும்புகள் முன்பைவிட இப்பொழுது அதிக உறுதியாக, நீளமாக வளர்ந்து கொண்டு இருக்கிறது பொதுவாக அவர்களுடைய எலும்புகள் அனைத்தும் பெரிதாகிக்கொண்டே வருகிறது. அதாவது 50 வருடத்தில் முக்கியமாக அமெரிக்காவில் அவர்களுடைய மனதும் வளர்ச்சியடைந்து, முன்பைவிட அதிக விஷயஞானமிக்கவர்களாக இருக்கிறார்கள். ஏன் அவர்களுடைய மண்டை ஓடுகூட பெரிதாகிக் கொண்டே போகிறது!

இப்பொழுது, பெண்களுக்கு சுதந்திரம் அதிகரித்து இருக்கிறது அது. அவர்களுடைய மனத்தில் ஆழப்புதைந்த நெறிப்படுத்தியவைகளை அழித்துக் கொண்டு இருக்கிறது ஆண், ஏற்கனவே அதிகார பலத்தில் இருக்கிறான் அதற்காக அவன் மேலும் புத்திசாலியாக இருக்கத் தேவையில்லை ஆனால் பெண்களுக்கு அதிகாரபலம் இல்லை உங்களிடம் அதிகாரம் இல்லாதபொழுது, நீங்கள் நிலைமைக்கு ஏற்றவாறு புத்திசாலித்தனமாக நடந்துகொள்ள வேண்டும். இதுதான் அதற்கு சரியான மாற்று அவர்கள், அதிகாரமுடையவர்களாக

இருப்பதற்கு, அவர்கள் எப்பொழுதும் ஆண்களுக்கு தேவையாக இருக்க, இதுதான் ஒரே வழி

இது அன்பு இல்லை, இது ஒரு பண்டமாற்று வியாபாரம்! அவர்கள், அந்த விலைக்காக தொடாந்து

போராடிக்கொண்டு இருக்கிறார்கள். சி.எஸ் லெவிசும் ஆப்ரஹாம் மாஸ்லோவும் அன்பை இரண்டு விதமாகப் பிரித்திருக்கிறார்கள் ஆனால், நான் அப்படிப் பிரிக்க விரும்பவில்லை. இந்த முதலாவது அன்பை, வெறும் பெயருக்குத்தான், அது ஒரு பொய்யான நாணயம் என்று நான் கூறுகிறேன் அதில் உண்மை இல்லை. இரண்டாவது அன்புநிலைதான். உண்மையான அன்பு

நீங்கள் இயல்பாக இருந்தால்தான் உங்களிடம் உண்மையான அன்பு நிகழும் நீங்கள் வளர்ந்த பிறகுதான் உங்களால் முழுமையாக, உண்மையாக அன்பு செலுத்த முடியும் அதாவது அன்பு என்பது தேவையைப் பொருத்து அல்ல அது தானே உங்களிடம் எழும்பி ததும்பி வழிய வேண்டும் என்று நீங்கள் அறிந்து கொள்ளும் பொழுது. அதாவது அன்பாக இருத்தல் அல்லது அன்பளிப்பான அன்பைச் செலுத்துதல் நீங்கள் எந்த நிபந்தனையையும் விதிக்கமாட்டீர்கள்

முதல் வகை அன்பு. ஒரு மனிதனின் ஆழமான அவசியமான அடுத்தவர்களது உதவி தேவைப்படும் பொழுது ஏற்படுவது ஆனால் அன்பளிப்பான அன்பு மற்றும் அன்பாக இருத்தல் என்பது ஒரு வளர்ந்த முதிர்ந்த மனிதனிடமிருந்து, தன் இயல்பாக வழிந்து அடுத்தவரைச் சென்று அடைவது அது அவனிடம் வெள்ளம் போல் பெருக்கெடுத்து வழிகிறது அது உங்களிடம் எழும்பி, ததும்பி, உங்களைச் சுற்றி பரவிக்கொண்டு இருக்கிறது எப்படி ஒரு விளக்கு எரியும் பொழுது, அதனுடைய கதிர்கள் சுற்றிலும் பரவி இருட்டைப் போக்குவது போல உங்களுடைய இருத்தலின் அல்லது உங்களுடைய உயிர்த்தன்மையின் வெளிப்பாடுதான் அன்பு என்பது நீங்கள் நீங்களாக இருக்கும் பொழுது, உங்களைச் சுற்றி அன்புவட்டம் ஏற்படுகிறது. நீங்கள் நீங்களாக இல்லையென்றால் உங்களிடம் உண்மையான அன்பு இல்லையென்றால், அந்த ஒளிவட்டம் ஏற்படாது இந்த நிலையில்தான், நீங்கள் பிறருடைய அன்பை எதிர்ப்பார்க்கிறீர்கள் மீண்டும் சொல்கிறேன் உங்களிடம் அன்பு இல்லாத காரணத்தினால்தான், நீங்கள் ஒரு பிச்சைக்காரனைப்போல

அடுத்தவர்களிடம் அதைக் கேட்கிறீர்கள் அதைப் போல அடுத்தவரும் உங்களிடம் அதையே எதிர்பார்கிறார் இப்பொழுது இரண்டு பிச்சைக்காரர்கள் , ஒருவருக்கொருவர் கையேந்திக்கொண்டு, அது அடுத்தவரிடம் இருக்கும் என்ற நம்பிக்கையில், நின்று கொண்டு இருக்கிறார்கள்! ஆனால், முடிவில் இரண்டு பேருமே தோற்றுப் போய் , இருவருமே தாங்கள் ஏமாற்றமடைந்ததை உணர்கிறார்கள்

நீங்கள் ஒரு கணவனிடமோ அல்லது ஒரு மனைவியிடமோ அல்லது காதலர்களிடமோ கேட்டுப்பாருங்கள் அவர்கள் உண்மையைச் சொல்ல நினைத்தால் , இருவருமே ஏமாற்றப்பட்டிருப்பதை ஒத்துக் கொள்வார்கள் அடுத்தவரிடம் அது இருக்கிறது என்பது நீங்களாக ஏற்படுத்திக்கொண்ட கற்பனை இந்தத் தவறான எண்ணம் உங்களிடம் இருந்தால் , அடுத்தவர் அதற்காக என்ன செய்ய முடியும் ? உங்களுடைய எதிர்பார்ப்புப்படி அவர்கள் இல்லாததால், உங்களுடைய கற்பனை உடைக்கப்பட்டு விடுகிறது. அவ்வளவுதான் . உங்களுடைய எதிர்பார்ப்புப்படி, அடுத்தவர் இருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை

இதனால், நீங்கள் பிறரை ஏமாற்றுகிறீர்கள். இதுதான் உங்களைப்பற்றிய அடுத்தவர் நினைப்பு ஏனென்றால், உங்களைப்போலவே, அவரும் அந்த அன்பு உங்களிடமிருந்து வரும் என்று எதிர்பார்த்தார். ஆகவே, ஒருவருக்கொருவர்

தவறாக நம்பிக்கொண்டு, ஏமாற்றம் அடைந்திருக்கிறீர்கள் இருவரிடமும் அது கிடையாது. அப்படி இருக்கும் பொழுது அன்பு எப்படி நிகழும் கடைசியில் இருவருமே துன்பத்தைத்தான் அடைவீர்கள் அதற்கு முன்பு நீங்கள் தனித்தனியாக துன்பத்தில் இருந்தீர்கள் இப்பொழுது இருவரும் சேர்ந்து அந்த நிலையில் இருக்கிறீர்கள் நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . இரண்டு பேர்கள் ஒன்றாக துன்பநிலையில் இருந்தால் அது கூட்டல் இல்லை பெருக்கல்தான்

நீங்கள் முன்பு தனியாக விரக்தியடைந்தீர்கள்

இப்பொழுது சேர்ந்து விரக்தியடைந்திருக்கிறீர்கள் இதனால் ஏற்பட்ட ஒரு சிறு நன்மை என்னவென்றால் உங்களுடைய பொறுப்பை, இப்பொழுது பிறாமேல் சுலபமாக போட்டுவிடலாம். அதாவது, அடுத்தவர்தான் உங்களுடைய துன்பத்துக்குக் காரணம் என்று இது ஒரு நல்ல வழிதான் என்னிடம் எந்தத் தவறும் இல்லை அடுத்தவரிடம்தான் என்று கூறிக்கொண்டு நீங்கள் கொஞ்சம் அமைதியடையலாம். இந்த அருவருப்பான, எப்பொழுதும் குத்தலாகப் பேசும் இந்த மனைவியை என்ன செய்வது? என்று நீங்கள் கேட்கலாம் ஒருவர் துன்பத்தை அடைந்தே தீரவேண்டும் . அதைப்போல உங்கள் மனைவி, இந்த அருவருப்பான , கஞ்சத்தனமுள்ள புருஷனை வைத்துக்கொண்டு, நான் என்ன செய்வது? என்று கேட்கலாம். இப்படி, நீங்கள் உங்களுடைய பொறுப்பை அடுத்தவர் மேல் சுமத்திவிடலாம் இப்பொழுது உங்களுக்கு ஒரு பலி ஆடு கிடைத்திருக்கிறது. ஆனால் , துன்பம் அப்படியேதான் இருக்கும் ஏன் அது பெருகிக்கொண்டே போகும்

இப்பொழுது, இதுதான் வித்தியாசமான நிலை அதாவது யார் ஒருவன் காதலில் விழுகிறனோ, அவனிடம் அன்பு என்பதே கிடையாது ஆகவேதான் அதில் விழுகிறார்கள் . அவனிடம் அன்பு இல்லாத காரணத்தினால் , அவனால் அன்பை கொடுக்க முடியாது அடுத்ததாக ஒன்று ஒரு முதிர்ச்சியடையாத ஆண் எப்பொழுதும் ஒரு முதிர்ச்சியடையாத பெண்ணின் மேல்தான் காதலில் விழுவான் அல்லது ஒரு முதிர்ச்சியடையாத ஒருவன் , இன்னொரு முதிர்ச்சியடையாத ஒருவனிடம் , அன்பைக் காண விரும்புவான். ஏனென்றால், அப்பொழுதுதான் ஒருவர் மொழியை, அடுத்தவர் புரிந்துகொள்ள முடியும் ஒரு முதிர்ச்சியடைந்த ஒருவன் , ஒரு முதிர்ச்சி அடைந்த மற்றவரிடம் தான் அன்பு செலுத்த முடியும் அதைப் போலத்தான் முதிர்ச்சியடையாத மனிதர்களும் முதிர்ச்சியடையாத மனிதர்களையே விரும்புகிறார்கள்.

நீங்கள் , உங்கள் மனைவியையும் அல்லது கணவனையும் ஆயிரம் தடவைகள் மாற்றிக்கொண்டே இருக்கலாம் ஆனால் , நீங்கள் அதே போன்ற கணவனையும் மனைவியையும் தான் மீண்டும் பார்ப்பீர்கள். மற்றும் அதே துன்பம், கிட்டத்தட்ட முன்பு

இருந்த அளவிலேயே திரும்பவும் இருக்கும் நீங்கள் உங்களுடைய மனைவியை மாற்றலாம் ஆனால் , நீங்கள் மாறவில்லையே? இப்பொழுது. யார், மற்றொரு மனைவியை தேர்ந்து எடுப்பது? நீங்கள் தான் தேர்ந்து எடுக்கிறீர்கள் அதாவது உங்களுடைய முதிர்ச்சியடையாத

நிலையிலிருந்தேதான் , அந்த தேர்ந்து எடுத்தல் மீண்டும் நடக்கிறது. நீங்கள் கிட்டத்தட்ட அதேமாதிரியான பெண்ணைத்தான் தேர்ந்து எடுக்கிறீர்கள்

அன்பின் அடிப்படைப் பிரச்சினை என்னவென்றால் முதலில் நீங்கள் முதிர்ச்சியடைய வேண்டும் அப்பொழுதுதான் , நீங்கள் ஒரு முதிர்ச்சியடைந்த ஆளைத் தேர்ந்து எடுக்க முடியும் அப்பொழுது, முதிர்ச்சியடையாதவர்கள் உங்களை ஒருக்காலும் கவரமாட்டார்கள் அது எப்படி என்றால் உங்களுடைய வயது 25 என்றால், நீங்கள் 2 வயது குழந்தையிடம், காதலில் விழமாட்டீர்கள் நிச்சயமாக அது நிகழாது அதைப்போல , நீங்கள் உடல் அளவிலும் , ஆன்மீக நிலையிலும் முதிர்ச்சியடைந்து விட்டால் , உங்களால் ஒரு குழந்தையோடு காதலில் விழமுடியாது. அது நடக்கவே முடியாது அது அர்த்தமற்றது என்பது உங்களுக்கு மிக நன்றாகவே தெரியும்

பார்க்கப்போனால் , ஒரு முதிர்ச்சியடைந்தவன் , காதலில் விழமாட்டான் மாறாக , அவன் காதலில் , மேலே செல்வான் இந்த ' விழுதல் என்ற வார்த்தை சரியானது அல்ல . முதிர்ச்சியடையாதவர்கள் தான் , தடுக்கி, காதலில் விழுவார்கள் . பிறகு எப்படியோ சமாளித்து, எழுந்து நிற்க முயல்வார்கள் ஆனால் , அவர்களால் எழுந்து நிற்க முடியாது. அப்பொழுது ஒரு ஆணையோ ஒரு பெண்ணையோ பார்த்து எழுந்து நிற்கிறார்கள் . ஆனால் , அவர்களும் சென்றபிறகு, மீண்டும் அந்த ஆணும் பெண்ணும் தரையில் விழுந்து, ஊர்ந்து செல்ல முனைகிறார்கள் அவர்களுக்கு முதுகெலும்புகிடையாது அவர்கள் தாங்களே தனியாக நிற்கக்கூடிய அளவிற்கு, அவர்களிடம் ஒருங்கிணைப்பு கிடையாது. தைரியம் கிடையாது.

ஆனால் , அந்தத் தகுதி. ஒரு முதிர்ச்சியடைந்த மனிதனிடம் காணப்படுகிறது. அவனால் தனித்து நிற்க முடியும். அவன் அன்பைக் கொடுத்தால், அதில் எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல்தான் கொடுப்பான் . அவன் இயல்பாகக் கொடுக்கிறான் . அவன் அப்படி அதை வழங்கும் பொழுது அவனுடைய அன்பை நீங்கள் பெற்றுக்கொண்டதற்காக, அவன் உங்களிடம் நன்றியுடையவனாக இருப்பான் , அந்த நன்றி உங்களிடமிருந்து வருவதில்லை! நீங்கள் அவனுக்கு நன்றியுடையவனாக இருக்கவேண்டும் என்று அவன் விரும்புவது இல்லை அது. ஒருக்காலும் கிடையாது. அவனுக்கு உங்கள் நன்றி ஒருக்காலும் தேவையில்லை. அவனுடைய அன்பை, நீங்கள் பெற்றுக்கொண்டதற்காக , அவன்தான் உங்களுக்கு நன்றி சொல்வான் . அடுத்து. இரண்டு முதிர்ச்சியடைந்தவர்கள் , அன்பைப் பரிமாறிக்கொள்ளும் பொழுது, வாழ்க்கையில் பெருத்த வித்தியாசமான மாறுதல் நிகழ்கிறது. அது, வாழ்க்கையில் மிகவும் அழகு வாய்ந்தவைகளில் ஒன்றாகும். அதாவது, அவர்கள் சேர்ந்தே இருந்தாலும், அவர்கள் மிகவும் தனிமையில்தான் இருக்கிறார்கள் . அதேசமயம் அவர்கள் சேர்ந்து இருப்பது. கிட்டத்தட்ட ஒருமை நிலையாகிவிடுகிறது. அதில் எந்த வேற்றுமையையும் காண முடியாது. ஆனால் , இந்த ஒருமைநிலை, அவர்களுடைய தனித்தன்மையை அழிப்பது இல்லை. மாறாக அது அதிகரிக்கவே செய்கிறது. இரண்டு முதிர்ச்சியடைந்தவர்கள் , ஒருவருக்கொருவர் அன்பு

செலுத்தும் பொழுது, அது அவர்களை மேலும் சுதந்திரமாக இருக்க உதவி செய்கிறது. அங்கு எந்த அரசியல் தனமோ, எந்தத் தந்திரமான செய்கையோ மற்றும் ஆதிக்க முயற்சியோ கிடையாது உங்கள் மேல் அன்பு செலுத்தும் ஒருவரை நீங்கள் எப்படி ஆதிக்கம் பண்ண முடியும்?

இதைச் சற்று நினைத்துப்பாருங்கள் ஆதிக்கம் செலுத்துவது, அதிகாரம் செய்வது என்பது ஒருவகையான வெறுப்பு, கோபம் , பகை உணர்வு இவைகளே. உங்களிடம் அன்பு செலுத்தும் ஒருவரிடம்

நீங்கள் எப்படி அதிகாரம் செய்ய முடியும் ? நீங்கள் , அந்த மனிதரை முற்றிலும் சுதந்திரத் தன்மையில் பார்க்கும் வகையில்தான் , உங்களால் அன்பு செலுத்த முடியும் நீங்கள் அவருக்கு மேலும் தனித்தன்மையை வழங்குவீர்கள் ஆகவேதான் , நான் அதை மிகச் சிறந்த மாறுபட்ட எதிரும் புதிருமான நிலை என்று கூறுகிறேன் . அவர்கள் இருவரும் ஒன்று கலந்து ஒருமையில் இருந்தாலும் அவர்கள் தங்களுடைய தனித்தன்மையை இழக்கவில்லை அதில் இப்பொழுது அவர்கள் , மிகவும் புத்துணர்ச்சியோடு இருக்கிறார்கள் அவர்களுடைய சுதந்திரத்தன்மையைப் பொருத்த அளவில் , அவர்கள் மேலும் மேலும் அதில் சிறப்பாக இயங்குகிறார்கள்

முதிர்ச்சியடையாத மக்கள் , காதலில் விழுந்தால் , அவர்கள் மற்றவருடைய சுதந்திரத்தை அழித்து அவர்களைச் சங்கிலியால் பிணைத்து, சிறையில் அடைத்துவிடுகிறார்கள் . மாறாக , முதிர்ச்சியடைந்தவர்கள் , ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தினால் அவர்களுடைய சுதந்திரம் மேலும் சிறப்பாகிறது. எல்லா விலங்குகளையும் அகற்றி, மிகவும் சுதந்திரமாக இருக்க , ஒருவருக்கு ஒருவர் உதவிசெய்துகொள்கிறார்கள் அன்பு, சுதந்திரத்தோடு செல்லும்பொழுது, அதன் அழகே தனிதான் மாறாக , அன்பு பிறரைச் சார்ந்து சென்றால் அது அருவருப்பானது

நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . அன்பைவிட , சுதந்திரம் மிகவும் மதிப்பு வாய்ந்தது ஆகவேதான் , இந்தியாவில் அந்த முடிவான தெய்வீக நிலையை மோட்சா' (MOKSHA) என்று அழைக்கிறார்கள் மோட்சா என்றால் சுதந்திரம் என்று அர்த்தம் . சுதந்திரம் . அன்பைவிட மிகப்பெரியது ஆகவே, அன்பு, சுதந்திரத்தை அழித்தால் அந்த அன்பு மதிப்பு இல்லாதது அந்த கட்டத்தில் , அன்பை விட்டுவிட்டு சுதந்திரத்தைக் காப்பாற்ற வேண்டும் ஏனென்றால் சுதந்திரம் மிகவும் மதிப்பு வாய்ந்தது. சுதந்திரமற்ற நிலையில் நீங்கள் ஒருக்காலும் மகிழ்ச்சியாக இருக்க முடியாது - அது நடக்க முடியாத காரியம் . ஒவ்வொரு ஆணிலும் பெண்ணிலும் , இந்த சுதந்திர உணர்வு கலந்தே இருக்கிறது. அதாவது முழுமையான சுதந்திரம் , கலப்பில்லாத சுதந்திரம்

ஆகவே, அந்த அரிய சுதந்திரத்தை அழிக்கும் எதுவாக இருந்தாலும், யாராக இருந்தாலும், அதை அவர்களை வெறுக்கவே செய்வார்கள்

உங்களிடம் அன்பு செலுத்தும் மனிதரை நீங்கள் வெறுக்கவில்லையா? உங்களிடம் அன்பு செலுத்தும் பெண்ணை, நீங்கள் வெறுக்கவில்லையா ? நீங்கள் வெறுக்கத்தான் செய்கிறீர்கள் இது ஒரு தேவையான கெட்ட தன்மைதான்

(EVIL) நீங்கள் அதை சகித்துக்கொள்ளத்தான் வேண்டும். ஏனென்றால், உங்களால் தனியாக இருக்க முடியவில்லை. நீங்கள் பிறரோடு சேர்ந்து இருக்க , எப்படியோ உங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும் . அடுத்தவர்களுடைய கோரிக்கையை, தேவைகளை, நீங்கள் தான் சரிசெய்து கொண்டு செல்ல வேண்டும் . நீங்கள் சகித்துக்கொண்டுதான் , தாங்கிக்கொண்டுதான் செல்ல வேண்டும்.

அன்பு உண்மையாக இருக்க வேண்டுமானால் , அது ' இருத்தல் அன்பாகவும் , அன்பளிப்பு அன்பாகவும் இருக்கவேண்டும் . இருத்தல் அன்பு என்பது ஒரு அன்புமயமான நிலை. நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டுக்கு வந்துவிட்டால் , நீங்கள் யார் என்று நீங்கள் தெரிந்துகொள்ளும் பொழுது, அன்பு தன் இயல்பாக உங்களுடைய உயிர்த்தன்மையிலிருந்து கிளம்பி மேலே வரும். பிறகு அதனிடமிருந்து எங்கும் நறுமணம் வீசும் . நீங்கள் , அதை பிறருக்கு அளிக்க முடியும் . உங்களிடம் இல்லாததை, எப்படி நீங்கள் பிறருக்கு அளிக்க முடியும்? ஆகவே, பிறருக்குப் கொடுப்பதற்கு, முதல் தேவை, நீங்கள் அதை பெற்றிருக்கவேண்டும்.

நீங்கள் சொல்கிறீர்கள் : ' என்னுடைய அன்பு இந்த வெளி உலகத்தை சார்ந்தே இருக்கிறது' ' என்று. அப்படியென்றால், அது உண்மையான அன்பு இல்லை. அல்லது சி.எஸ் லெவிஸ் போலவும் , எ . ஹெச் . மாஸ்லோ போலவும் , நீங்கள் வார்த்தைகளோடு விளையாட எண்ணினால் , அந்த அன்பை, ' தேவையான அன்பு என்றும் குறையுள்ள அன்பு' என்றும் கூறிக்கொள்ளுங்கள். இது எப்படியென்றால், ஒரு வியாதியை நலமான வியாதி (HEALTHY

DISEASE) என்று அழைப்பதைப் போலத்தான் இருக்கும் .- இது அர்த்தமற்றது. குறையுள்ள அன்பு என்பதில் உள்ள வார்த்தைகள் ஒன்றுக்கு ஒன்று முரணானது. ஆனால் , நீங்கள் ' அன்பு' என்ற வார்த்தையை விரும்பினால் , அது சரியே (O.K.) நீங்கள் அப்படியே, தேவையான அன்பு மற்றும் குறையுள்ள அன்பு என்று அழைத்துக்கொள்ளலாம்.

"அதே சமயம், 'நீங்கள் முழுமையாக உங்களுக்குள்ளே செல்லுங்கள் '' என்று நீங்கள் எங்களுக்கு சொல்வதையும் நான் ஏற்றுக் கொள்கிறேன் '' என்று கூறுகிறீர்கள் . இல்லை, நான் கூறுவதை, உங்களால் பார்க்க முடியாது. நீங்கள் என்னைக் கேட்கலாம் , அறிவோடு அதை நீங்கள் புரிந்துகொள்ளலாம் . ஆனால் , அதை உங்களால் பார்க்க முடியாது. நான் ஒரு மொழியில் பேசுகிறேன் . ஆனால் , நீங்கள் வேறு ஒரு மொழியில் அதை புரிந்துகொள்கிறீர்கள் . நான் ஒரு படியில் அமர்ந்து கத்துகிறேன் . ஆனால் , நீங்கள் வேறு ஒரு படியில் இருந்து அதைக் கேட்கிறீர்கள் . ஆமாம் , நீங்கள் உபயோகிக்கும் அதே வார்த்தைகளையே, நானும் உபயோகிக்கிறேன் . ஆனால், நான் உங்களைப்போல அல்ல. அப்படியிருக்க, நீங்கள் அர்த்தம் பண்ணும் அதே வார்த்தைக்கு, நான் எப்படி அதே அர்த்தத்தில் , அந்த வார்த்தையை உபயோகிக்க முடியும் ? உங்களுடைய அறிவைக்கொண்டு அதை நீங்கள் புரிந்து கொள்ளலாம். ஆனால், அப்பொழுது நீங்கள் என்னை தவறாகவே புரிந்துகொள்வர்கள் . நனறாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . அறிவைக்கொண்டு புரிந்துகொள்தல் தவறான புரிந்துகொள்தலாகும்.

ஒரு நிகழ்ச்சி.

அயர்லேந்து (IRELAND) க்குச் செல்லும் , ஒரு பிரெஞ்சுக்காரன் , ஒரு ரயில்பெட்டியில் ஏறி உட்கார்ந்தான் . அந்தப்பெட்டியில் , ஏற்கனவே இரண்டு ஐரிஸ்காரர்கள் இருந்தார்கள் . அவர்கள் வியாபார

சம்பந்தமாக , ஊர் ஊராக செல்பவர்கள் . அதில் ஒருவன் மற்றவனிடம் , " கடைசியாக , நீங்கள் எங்கு இருந்தீர்கள்?" என்று கேட்டான்.

அடுத்தவன் , " நான் கடைசியாக (KILMARY) கில் மேரியில் இருந்தேன் . இப்பொழுது நான் கில்பேட்ரிக்கு(KILPATRICK)க்குச் செல்கிறேன். நீங்கள் என்ன?'' என்று கேட்டான்.

அதற்கு முதல் ஆள் , ' நான் கடைசியாக கில்கேனியிலும் (KILKENNY), கில் மிச்சலிலும் (KILMICHAEL) இருந்தேன் . இப்பொழுது கில் மோருக்கு (KILMORE)ச் செல்கிறேன்." என்றான்.

அந்தப் பிரெஞ்சுக்காரன் அதிர்ச்சியடைந்து, "கொலை பண்ணும் அயோக்கியர்கள் ' என்று நினைத்துக்கொண்டு, அடுத்த ரயில் நிலையத்தில் இறங்கிக்கொண்டான்.

இப்பொழுது, ' கில்மேரி, கில்பேட்ரிக் , கில்கேனி, கில்மிச்சல் , கில்மோர் என்ற வார்த்தைகளை சற்று உற்று கேளுங்கள். இதில் உள்ள 'கில்' (KILL) என்ற வார்த்தை, ( அதாவது கொலை செய்வது ) அவர்கள் கொலை செய்பவர்கள் என்ற எண்ணத்தை, அந்த பிரெஞ்சுக்காரனிடம் தோற்றுவித்துவிட்டது! ஆகவேதான் , அவன் பயந்து " கொலை பண்ணும் அயோக்கியர்கள் " என்று நினைத்துக் கொண்டு கீழே இறங்கிவிட்டான்!

இதைப் போலத்தான் , தொடர்ந்து உங்களிடம் ஏற்பட்டுக் கொண்டு இருக்கிறது. நான் ஒன்றைக் குறிப்பிட்டுச் சொன்னால் , நீங்கள் அதை வேறுவிதமாக அர்த்தம் பண்ணிக்கொள்கிறீர்கள் . ஆனால் , இது இயல்புதான் . இதை நான் கண்டிக்கவில்லை. நீங்கள் இதை பிரக்ஞையாக புரிந்துகொள்ள வேண்டும் என்று சொன்னேன். .

அடுத்தது.

ஒரு தத்துவவாதிக்கு, மூன்று பையன்கள் இருந்தார்கள் . அவர் , அந்த மூன்று பையன்களுக்கும் அர்த்தமுள்ள பெயர்களை வைத்திருந்தார் . அதாவது ஒருவன் பெயர் , 'மேனர்ஸ்' (MANNERS) நல்ல பழக்க வழக்கங்களையுடையவன் ) இரண்டாவது பையன்

பெயர் ட்ரபில்ஸ் ' (TROUBLES தொந்தரவு என்று அர்த்தம் ) மூன்றாவது பையன் பெயர் ' மைண்ட்யுவர் ஓன் பிஸினஸ்' (MIND - YOUR OWN BUSINESS, உன் வேலையை பார்த்துக்கொண்டு செல் என்று அர்த்தம்)

இப்பொழுது, இந்த அர்த்தமுள்ள பெயர்கள் எவ்வளவு ஆபத்தானது என்பதைக் கவனியுங்கள்.

ட்ரபில் ஸ் என்ற பையனைக் காணவில்லை. ஆகவே, மேனர்ஸும் , மைண்ட் யுவர் ஓன் பிஸினஸ் என்ற பையனும் காவல் நிலையத்துக்குச் சென்றார்கள் . அங்கு சென்றதும் , மைன்ட் யுவர் ஓன் பிஸினஸ் , மேனர்ஸிடம் , ' நீ கொஞ்சம் வெளியே இரு' என்று சொல்லிவிட்டு, காவல் நிலையத்துக்குள் சென்றான்.

உள்ளே உட்கார்ந்திருந்த போலீஸ்காரனிடம் , ''என்னுடைய தம்பி காணாமல் போய்விட்டான்'' என்று புகார் கூறினான்.

அதற்கு போலீஸ்காரன், "உன்னுடைய பெயர் என்ன?'' ''மைண்ட் யுவர் ஓன் பிஸினஸ்'

அந்த போலீஸ்காரன் எரிச்சலடைந்து, " உன்னுடைய நல்ல பழக்கங்கள் எங்கே போயிற்று என்ற அர்த்தத்தில்

"வேர் இஸ் யுவர் மேனர்ஸ்?'' என்று சற்று கோபமாகக் கேட்டான்.

'அவன் வாசலுக்கு வெளியே நிற்கிறான்!''

"நீ ஏதாவது தொந்திரவு கொடுக்க வந்திருக்கிறாயா?" என்ற அர்த்தத்தில் , ஆர் யு லுக்கிங் பார் ட்ரபில்ஸ் ? என்று ஆங்கிலத்தில் கேட்டான்.

"ஆமாம். அவனை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?"'!

இப்படித்தான் தொடர்ந்து நடந்து கொண்டு வருகிறது. ஆகவேதான், 'நீங்கள் முழுமையாக உங்களுக்குள்ளே இல்லாவிட்டால் , அன்பு முழுமையாக எழும்பி, ததும்பி வெளிவராது என்று நான் கூறுகிறேன் . மேற்கண்ட நிகழ்ச்சிகளில் உள்ள வார்த்தைகளை, நீங்கள் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் . ஆனால் , அவைகளுக்கு, உங்களுடைய சொந்த அர்த்தத்தைக் கொடுத்து

இருக்கிறீர்கள் . நான் ' நீங்கள் முழுமையாக உங்களுக்குள்ளே இல்லாவிட்டால், அன்பு முழுமையாக எழும்பி, ததும்பி வெளிவராது என்று சொல்லும்போது, நான் ஒரு விதியை அல்லது ஒரு சூத்திரத்தை அறிவிக்கவில்லை. நான் அதை ஒருக்காலும் தத்துவமாக்கவில்லை. நான் , வாழ்வின் உண்மை நிலையை, வெறுமனே சுட்டிக்காட்டுகிறேன் . நான் , '' உங்களிடம் இல்லாத ஒன்றை, எப்படி நீங்கள் பிறருக்கு அளிக்க முடியும் ? உங்களிடம் அன்பு இல்லாதபொழுது, அது எப்படி உங்களுக்குள்ளே எழும்பி, ததும்பி வெளியே வரும் ? அன்பு என்பது ததும்பி வெளியே வருதல் தான் . உங்களுடைய தேவைக்குமேல் அதிகமாக இருந்தால் தான் , நீங்கள் பிறருக்கு அளிக்க முடியும் . அப்பொழுது அது ' அன்பளிப்பு - அன்பாக மாறுகிறது என்றுதான் கூறுகிறேன்.

உங்களிடம் அன்பு இல்லாதபொழுது, நீங்கள் எப்படி அன்பளிப்பாக பிறருக்குக் கொடுக்க முடியும் ? இதை நீங்கள் கேட்டுப் புரிந்துகொள்ளலாம்.

ஆனால் , உங்களுடைய புரிந்து கொள்ளுதல , அறிவுப்பூர்வமாக இருப்பதால் தான் , பிரச்னையே ஆரம்பமாகிறது. நீங்கள் உங்களுடைய இருப்புநிலையில் ஆழமாகச் சென்றால் , நீங்கள் அதனுடைய உண்மை நிலையை நேரடியாகப் பார்த்தால் , இந்தக் கேள்வியே உங்களிடம் உண்டாகி இருக்காது. பிறகு, நீங்கள் சகல சார்பு உறவு நிலைகளையெல்லாம் மறந்துவிட்டு , நீங்கள் உங்களுடைய சொந்தத் தன்மையில் , செயல்பட ஆரம்பிப்பீர்கள் . உங்களையே மேலும் சுத்தம் செய்துகொண்டு, உங்களுடைய இருப்புநிலையை அல்லது உயிர் மைய நிலையை, மிகவும் பிரக்ஞைத் தன்மைக்குக் கொண்டு வருவீர்கள் . நீங்கள் அந்த வழியிலேயே, வேலை செய்ய ஆரம்பித்துவிடுவீர்கள் . ( நீங்கள் ஒருவிதமான முழுமையை, மேலும் மேலும் உணர ஆரம்பிக்கும் பொழுது, உங்களிடம் அன்பு மேலும் , மேலும் வளர ஆரம்பிப்பதை உணர ஆரம்பிப்பீர்கள் - இது, அந்த முழுமையின் அடுத்த செயல்பாடுதான்.)

அன்பு என்பது அந்த முழுமையின் வெளிப்பாடுதான். இதைப் புரிந்துகொண்டால் , அந்தக் கேள்வியே எழுந்திருக்காது. ஆனால் , அந்தக் கேள்வி உங்களுக்குள்ளேயே இருப்பதால் , உங்களால் அந்த உண்மையைப் பார்க்க முடியவில்லை. நீங்கள் அதனுடைய விளக்கத்தைக் கேட்டிருக்கலாம் ; அதைப் புரிந்து கொண்டும் இருக்கலாம் ; நீங்கள் அதன் தர்க்கரீதியான தன்மையை விளங்கிக்கொண்டும் இருக்கலாம் . இப்படி புரிந்துகொள்வதால் மட்டும் எந்தப் பிரயோஜனமும் இல்லை. நீங்கள் அதன் ருசியை அனுபவித்திருக்க வேண்டும்.

உங்களுடைய கேள்வி, " என்னுடைய அன்பு, இந்தவெளி உலகத்தைச் சார்ந்தே இருக்கிறது. அதேசமயம் , ' நீங்கள் முழுமையாக உங்களுக்குள்ளே செல்லுங்கள் ' என்று நீங்கள் எங்களுக்கு சொல்வதையும் நான் ஏற்றுக் கொள்கிறேன் . உள்ளே எதுவுமே மற்றும் யாருமே இல்லாத நிலையில், அதைப் புரிந்துகொண்டு , யார் சுவைக்கிறார்கள்?" என்பது.

அதைக் கண்டு கொள்ள , யாரும் தேவையில்லை. அதை ஒருவர் அறிந்து கொள்ள வேண்டும் என்றும் , அதற்கு பிறருடைய அத்தாட்சி வேண்டும் என்றும் மற்றும் அதை ருசிக்க வேண்டும் என்றும் எந்தக் கட்டாயமும் இல்லை. பிறர் , அதை ருசிப்பது என்பது தற்செயலானது. பிறரிடம் அன்பு செலுத்த வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஏனென்றால் , அவர்களிடமிருந்து அன்பு தானே வழிந்தோடுகிறது. அதை யாரும் ருசிக்கவோ, கண்டுகொள்ளவோ, மகிழ்ச்சியில் சந்தோஷமாக இருப்பதோ தேவையில்லை. அன்பு, தானே வழிந்தோடிக் கொண்டு இருக்கிறது; அப்படித் தானே அது ததும்பி வழிதலில் , நீங்கள் மிகுந்த ஆனந்தத்தையும், புத்துணர்ச்சியையும் அடைகிறீர்கள் , அந்த வழிந்தோடுதலில் ... உங்களுடைய சக்திதான் வழிந்தோடுகிறது.

நீங்கள் ஒரு காலியான அறையில் , உட்கார்ந்து கொண்டு இருக்கும் பொழுது, அந்த அறை, உங்களுடைய வழிந்தோடும் சக்தியால் நிரப்பப்பட்டு, அன்புமயமாக விளங்குகிறது. அங்கே யாருமே

இல்லை. ஆனால் , அந்த அறையின் சுவர்கள் மட்டும், உங்களுக்கு நன்றி சொல்லிக்கொண்டே

இருக்கும்! மற்றவர் அதை அறிந்து கொள்ளவேண்டும் என்ற அவசியமே இல்லை. உங்களுடைய சக்தி அன்புமயமாக வெளிப்படுகிறது, அதனால் நீங்கள் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள் . காற்றில் , தன் நறுமணத்தை வெளியிடும் பொழுது, ஒரு மலர் மிகவும் மகிழ்ச்சி அடைகிறது. அந்தக் காற்றுக்கு, அது தெரியுமோ, தெரியாதோ, அது இங்கு முக்கியமில்லை.

அடுத்து , "சீடர்களே இல்லாமல், நீங்கள் யார்?"

நான் நானாகவே இருக்கிறேன் . ஆமாம் , நான் நானகவே இருக்கிறேன் . எனக்குச் சீடர்கள் இருந்தாலும் , இல்லாவிட்டாலும் , நான் நானாகவே இருக்கிறேன் . அவர்கள் எனக்கு அவசியமே இல்லை. நான் உங்களைச் சார்ந்து இருக்கவில்லை. அதைப் போலவே, நீங்களும் , என்னிடமிருந்து விலகி, சுதந்திரமாக இருக்க வேண்டும் என்பதே என்னுடைய முழு முயற்சியும், விருப்பமும் ஆகும்.

நீங்கள் சுதந்திரமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே, நான் இங்கு இருக்கிறேன் . நான் எதையும் உங்களிடம் திணிக்க விரும்பவில்லை. நீங்கள் முடமாகி, ஊர்ந்து செல்ல வேண்டும் என்று நான் ஒருக்காலும் விரும்பவில்லை. நீங்கள், நீங்களாக இருக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய முழுவிருப்பமே எப்பொழுது அந்த நிலை உங்களிடம் ஏற்படுகிறதோ, அப்பொழுதுதான் , நீங்கள் என்னைவிட்டு விலகி, உங்களுடைய சுதந்திரத்தில் இருப்பீர்கள் . அப்பொழுதுதான் நீங்கள் என்னை உண்மையாக நேசிக்க முடியும், அன்பு செலுத்த முடியும் - அதற்கு முன்னால், அது ஏற்படாது.

நான் உங்களை முழுமையாக விரும்புகிறேன் , முழுமையாக அன்பு செலுத்துகிறேன். இதை என்னால் தவிர்க்க முடியாது. என்னால் அன்பு செலுத்தமுடியும் அல்லது முடியாது என்ற கேள்விக்கே இடமில்லை. நான் வெறுமனே அன்பு செலுத்துகிறேன் . நீங்கள்

யாருமே இல்லாவிட்டாலுங்கூட , இந்த சாங்க்சூ அரங்கம் (CHUANG TZU AUDITORIUM) என்னுடைய அன்பால் நிறைந்திருக்கும் . அந்த அன்பில் , எந்த வித்தியாசமும் இருக்காது. இந்த மரங்களும் , இந்தப் பறவைகளும் , என்னுடைய அன்பை அடைந்துகொண்டு இருக்கின்றன . இனிமேலும் அடைந்துகொண்டேதான் இருக்கும் . மற்றும் இந்த மரங்களும் , பறவைகளும் மறைந்தால் கூட என்னுடைய அன்பில் , எந்த வித்தியாசமும் ஏற்படாது - அது வழிந்து ஓடிக்கொண்டேதான் இருக்கும் . ஏனென்றால் , ததும்பி வெளிப்படும் அளவுக்கு, என்னிடம் அன்பு இருக்கிறது.

அன்பு என்பது எப்பொழுதும் இயங்கிக்கொண்டு இருக்கும், ஒரு சக்தி. அது ஒருக்காலும் ஒரே இடத்தில் நிற்காது. யாராவது அதில் பங்குபெற்றால் நல்லது. அப்படிப் பங்குபெறவில்லையென்றாலும் , நல்லதுதான்.

கடவுள், மோசஸிடம் என்ன சொன்னார் ? உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா? மோசஸ் , கடவுளைச் சந்தித்தபொழுது, சில செய்திகளை மக்களுக்கு எடுத்துச் சொல்லும்படி கட்டளையிட்டார். மோசஸ் ஒரு உண்மையான யூதர்.

அவர் கடவுளிடம்,

' ஐயா, தயவுசெய்து உங்களுடைய பெயரைச் சொல்லுங்கள் ஏனென்றால், மக்கள் என்னிடம் இந்தச் செய்திகளை என்னிடம் கொடுத்தது யார் என்று கேட்டார்கள் என்றார்.

அதற்கு கடவுள், " நான் நானாக இருக்கிறேன். (I AM THAT I AM) நீ, உன் மக்களிடம் சென்று, நான் நானாக இருப்பதுதான் அப்படிச் சொன்னதாகச் சொல்லவும் , ' நான் நானாக இருப்பதிலிருந்தான், அந்த செய்திகள் வந்தன என்று கூறவும். என்றார்.

இது வேடிக்கையாகத் தோன்றும் . ஆனால் , இது மிகுந்த முக்யத்வம் வாய்ந்தது. ' நான் , நானாக இருக்கிறேன் . ஏனென்றால் , கடவுளுக்கு எந்தப்

பெயரும் கிடையாது, எந்த அமைப்பும் கிடையாது. அது உயிர்த்தன்மையாக (BEING) இயங்கிக்கொண்டே இருக்கிறது.

கேள்வி 2: '' அன்புள்ள குருவே, நான் எங்கும் செல்லமாட்டேன் . எதற்காக ஒரு வரைபடம் (MAP) தேவை? நான் இங்கேயே, 'இப்பொழுது - இங்கே' என்ற நிலையில் இருப்பது போதாதா?''

ஆமாம் எந்த இலக்கும் கிடையாது. நீங்கள் எங்கேயும் செல்லத் தேவையில்லை. நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்து கொண்டால், எந்த வரைபடமும் தேவையில்லை. நீங்கள் என்னை சரியாகப் புரிந்து கொள்ளா விட்டால் தான் , அந்த வரைபடம் தேவைப்படும் . இலக்கு என்று எதுவும் இல்லாத நிலையில் , நீங்கள் எங்கேயும் போகவேண்டாத கட்டத்தில் , எந்த வரைப்படமும் தேவையில்லை. நீங்கள் எங்கேயாவது சென்றிருந்து, 'இங்கே - இப்பொழுது' திரும்பி வரவேண்டும் என்றால் தான் , அந்த வரைபடம் தேவை. நீங்கள் எங்கேயாவது செல்ல மற்றும் நீங்கள் எங்கேயாவது சென்றிருப்பது போல் , கனவு கண்டால் , அந்த வரைபடம் தேவையில்லை. நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டுக்குத் திரும்பிவரத்தான், அந்த வரைபடம் தேவை. நீங்கள் உங்களுக்குள்ளே சற்று உற்று பார்க்காமல் , நீங்கள் உங்கள் இஷ்டப்படி, உங்களுடைய கற்பனையையொட்டி, உங்களுடைய ஆசையில் மற்றும் எதிர்பார்ப்பில் எங்கேயோ சென்று விட்டீர்கள் . உங்களுடைய சொந்த இருப்புநிலையை, பின்னால் வைத்துவிட்டு, நீங்கள் எங்கேயோ ஓடிவிட்டார்கள் . ஆகவே, நீங்கள் திருப்பிப் பார்க்க வேண்டும் ; உங்களையே, உங்களுடைய இருப்புநிலையை அல்லது உயிர்த்தன்மையை, நீங்கள் எதிர்கொள்ள வேண்டும், சந்திக்க வேண்டும்.

ஆனால் , நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்துகொண்டால் , - அதாவது ' இப்பொழுது இங்கே' இருப்பதுதான் எல்லாமே என்று அறிந்துகொண்டால் , நீங்கள் அந்த வரைபடத்தை எரித்துவிடலாம் அல்லது தூக்கி எரிந்துவிடலாம். ஏனென்றால் அது உங்களுக்கு இனிமேல் தேவையில்லை. நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டுக்குத் திரும்பிவந்துவிட்டால் , அந்த வரைபடம் எதற்கு தேவை? ஆனால் , நீங்கள் திரும்பி

வரும்வரை, அந்த வரைபடத்தை எரிக்க வேண்டாம்.

ஒரு ஜென் சந்நியாசி, புத்தமதக் கொள்கைள் அடங்கிய மத நூலை எரிப்பது போல , புகழ்பெற்ற ஓவியம் ஒன்று இருக்கிறது. சிலர் அவரிடம் '' குருவே, நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ? நீங்கள் எப்பொழுதும் இந்த மத நூலில் உள்ள கொள்கைகளைத்தான் போதித்து வந்திருக்கிறீர்கள் . அந்த மதக் கொள்கைகளைத்தான் விளக்கிக்கொண்டும் , எடுத்துக் கூறியும் வந்திருக்கிறீர்கள் - இப்பொழுது அதை ஏன் எரிக்கிறீர்கள்?''

அதற்கு அவர் சிரித்துக்கொண்டே, "ஏனென்றால், நான் என் வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டேன். ஆகவே, இந்த வரைபடம் இனிமேல் தேவையில்லை" என்று சொன்னார்.

ஆனால் , நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டுக்கு வரும்வரை நீங்கள் அவைகளை எரிக்கக் கூடாது. நீங்கள் வெளியே செல்லும் பொழுது, அந்த வரைபடத்தை எடுத்துக்கொண்டு செல்லலாம் . அதில் அர்த்தம் இருக்கிறது. நீங்கள் திரும்பி வந்தபிறகு, அதை எரிந்து விடலாம். நீங்கள் திரும்பி வருவதற்குள், அதை எரிந்து விட்டால் , நீங்கள் ஆபத்தில் மாட்டிக்கொண்டு விடுவீர்கள்.

ஆமாம் , நீங்கள் இப்பொழுது இங்கே இருப்பது தேவைக்கு மேல் அதிகம் தான் - தேவைக்கு ஏற்றார் போல் அல்ல ; தேவைக்கு மேலேயே இருக்கிறது. அதுதான் எல்லாமும் . ஆனால் , நீங்கள் இப்பொழுது இங்கே இருக்கவில்லை. ஆகவே, நீங்கள் திரும்பிவர , எல்லா வரைபடங்களும் தேவைதான் . உண்மையில் நீங்கள் வேறு எங்கேயும் செல்லவில்லை. ஆனால் , எங்கேயோ சென்றிருப்பது போல , நீங்கள் கனவுகண்டு கொண்டிருக்கிறீர்கள் . ஏன் , இந்த வரைபடங்கள்கூட, கனவு வரைபடங்கள்தான்! நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . இந்த வரைபடங்கள் , உண்மையில் கனவு வரைபடங்கள்தான் . எப்படி உங்களுடைய சம்சார வாழ்க்கை பொய்யோ அல்லது எப்படி உங்களுடைய

உலகம் பொய்யோ, அதைப்போல , இந்த வரைபடங்களும் பொய்தான்.

அந்த முடிவான மதநூலில் , எந்த வார்த்தையும் இல்லை.

சுபிக்களிடம் ஒரு வேதப் புத்தகம் இருக்கிறது. அதன் பெயர் 'நூல்கள் எல்லாம் அடங்கிய நூல் (THE BOOKS OF THE BOOKS) என்று பெயர் . அந்த நூலில் எந்த வார்த்தையும் இல்லை, அதாவது அதில் ஒரு வார்த்தையைக் கூட எழுதவில்லை; வெறும் வெற்றுத்தாள்கள் ! அதை பலநூற்றாண்டுகாலமாக , ஒரு குருவிடமிருந்து, அடுத்த குருவுக்கு பொக்கிஷம் போல கொடுக்கப்பட்டு வந்திருக்கிறது. கடைசியில் வந்த ஒரு குரு, அதை ஒரு சீடரிடம் கொடுக்க , அது மிக்க மரியாதையுடன் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அதுதான் மதநூல்களிலேயே, முடிவான நூல் என்று கருதப்படுகிறது. உங்களுடைய வேதங்களோ, அல்லது பைபிளோ அதைப்போல அழகானது இல்லை. ஏனென்றால் , அவைகளில் ஏதோ எழுதப்பட்டு இருக்கிறது. இந்த 'நூல்கள் எல்லாம் அடங்கிய நூல்' மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆனால் , இதை உங்களால் படிக்க முடியுமா? முதன் முதலாக , இந்த சுபிக்கள், மேலை நாட்டில் இருக்கும் பொழுது, அதை

அச்சிட்டு வெளியிட முயற்சி செய்தார்கள். ஆனால, எந்த வெளியீட்டாளரும் முன்வரவில்லை. ஏன்? ஏனென்றால், அதில், அச்சடிக்க எந்த வார்த்தையும் இல்லை! அவர்கள் , " இதுவெறும் வெற்று புத்தகம்தான் . எதற்காக இதை அச்சிட்டு வெளியிடவேண்டும்?" என்று கேட்டார்கள்.

மேலைநாட்டு மனம் , வெள்ளைத்தாளில் கறுப்பு மையால் எழுதப்பட்ட வார்த்தைகளைத்தான் புரிந்துகொள்ளும் . அதனால் , அந்த வெறும் வெள்ளைத்தாளை ஒருக்காலும் நேரடியாகப் பார்க்க முடியாது. அந்த மேலைநாட்டு மனங்களுக்கு, அந்த வெறும் வெண்மையான பக்கங்கள் ஒருக்காலும் பதியாது; அந்த கறுப்பு வர்ணம் தான் பதியும் அந்த மனங்களில் மேகங்கள்தான் பதியும், வெற்று ஆகாயம் அல்ல . மேலைநாட்டு மனங்களில் , மனம்தான்

நிறைந்து இருக்கிறது - அதாவது எண்ணங்கள் - அதில் பிரக்ஞைத் தன்மை எதுவும் கிடையாது. அவர்களுடைய மனதில் , பொருள்கள் தான் நிறைந்திருக்கின்றன . ஆனால் , அவர்கள் , அந்த பொருள்கள் அடங்கிய பெட்டியை மறந்துவிட்டார்கள்.

எண்ணங்கள் என்பது, வெள்ளைத்தாளில் எழுதப்பட்ட கறுப்பு மை போல எண்ணங்கள் என்பது எழுதப்பட்ட செய்திகள் . எண்ணங்களெல்லாம் மறைந்த பிறகு, நீங்கள் நூல்கள் எல்லாம் அடங்கிய நூலாகிவிடுகிறீர்கள் ! - அதாவது ஒன்றும் அற்ற நிலையில் (EMPTY), ஆனால் , அதுதான் கடவுளின் குரல்!

நீங்கள் சொல்கிறீர்கள் , " நான் எங்கேயும் செல்ல விரும்பவில்லை. எதற்காக இந்த வரைபடம் ? நான் இந்த இடத்தில் இப்பொழுது இங்கே இருப்பது போதாதா? என்று.

நீங்கள் இப்படி ஒரு கேள்வியைக் கேட்டதால் , அந்த வரைபடம் உங்களுக்கு மிகவும் தேவை. அந்த கேள்வி, அந்த வரைபடத்துக்கான கேள்வி. நீங்கள் என்னை முழுமையாகப் புரிந்து கொண்டால், எந்தக் கேள்வியும் உங்களிடம் மீதம் இருக்காது. பிறகு, கேள்வி கேட்பதற்கு என்ன இருக்கிறது? ' இங்கே இப்பொழுது இருப்பதைப் பற்றி, நீங்கள் என்ன கேட்க முடியும் ? எல்லா கேள்வியும் , எங்கேயோ உள்ள இலக்குகளை நோக்கித்தான் கேட்கப்படுகின்றன - அது பிறகு, அங்கே யே உள்ளவை. கேள்வி 3:

" அன்புள்ள குருவே, நான் ஏற்கனவே 20 வருடங்களுக்கு முன்பு திருமணம் செய்து கொண்டேன் ." என் மனைவி, ஏன் என்னை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை' ' என்ற உணர்வு எனக்கு இருந்து கொண்டே இருந்தது. இதனால், அவளை பல சமயம் மறக்க நேர்ந்தது. சிலசமயம் , அவளோடு தேனிலவில் இருப்பது போன்ற உணர்வும் ஏற்படுகிறது. என் மனம், ஏன் இப்படி ஊசலாடுகிறது?"

மனம் எப்பொழுதும், ஒரே நிலையில் இருக்காது. அது வழுக்கி விழுந்து கொண்டேதான் இருக்கும் . இது அதன் இயல்பு. அது தொடர்ந்து

மாறிக்கொண்டேதான் இருக்கும் . இரண்டு சமயங்களில் , அது ஒருபோதும் ஒரே தன்மையில் இருக்காது. ஒவ்வொரு கணத்திலும் , அது வித்தியாசமாகவே செயல்படும் . ஆமாம் , ஒரு சமயத்தில் , நீங்கள் அவளோடு 20 வருடங்கள் வாழ்ந்திருந்தாலும், உங்களுடைய முழுவாழ்க்கையில், அவளைச் சந்தித்ததே இல்லை என்ற உணர்வு ஏற்படுவது சகஜம்தான் . அடுத்த சமயம் , நீங்கள் அவளோடு தேனிலவில் இருப்பது போன்ற இன்ப உணர்வு ஏற்படலாம் - அப்பொழுது, அவள் உங்கள் கண்களுக்கு மிகவும் அழகாகவும் , கவர்ச்சியும் , மகிழ்ச்சியும் உடையவளாகக் காணப்படுவாள் . அப்புறம் , அது மறைந்துவிடும் . ஆகவே, இந்தக் காட்சிகள் எப்பொழுதும் மாறிக்கொண்டேதான் இருக்கும்.

மனம் , எப்பொழுதும் மிகவும் வழுக்கி விழும் தன்மை படைத்தது. அதற்கு, ஒரே இடத்தில் நிலையாக நிற்கத் தெரியாது. அது மாறிக்கொண்டேதான் இருக்கும் . மனத்தோடு சம்மந்தப்பட்ட அனைத்தும் அப்படித்தான் . ஒரு சமயம் நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்கள் . அடுத்தசமயம் , நீங்கள் மகிழ்ச்சியற்று சோர்வாக இருப்பீர்கள் . ஒரு சமயம் , நீங்கள் சந்தோஷமாக இருப்பீர்கள் ; அடுத்த சமயம் நீங்கள் துக்கத்தில் இருப்பீர்கள் . இப்படியேதான் , நீங்கள் உங்கள் மனத்தோடு வாழவேண்டும் . மனம் என்ற சக்கரம் , இப்படிச் சுழன்று கொண்டேதான் இருக்கும் . ஒரு சமயம் , அதனுடைய ஒரு கம்பி, மேலே இருக்கும் . அடுத்த சமயம் , வேறு ஒரு கம்பி மேலே இருக்கும் . பிறகு அடுத்தடுத்து, வேறு கம்பிகள் மேலே இருந்து கொண்டே வரும் . இப்படி மாறி, மாறி அவைகள் வந்துகொண்டேதான் இருக்கும் . ஆகவேதான் , கீழை நாட்டில், இந்த வாழ்க்கை சக்கரத்தை 'சம்சாரா' என்று அழைக்கிறார்கள் . இந்த உலகமே, ஒரு சக்கரம்தான் . ஒரே சக்கரம் இப்படி மாறி மாறி சுழன்று கொண்டேதான் இருக்கும் . அது எப்பொழுதும் , எல்லா நேரங்களிலும் மாறிக்கொண்டேதான் இருக்கும்.

அது திரையில் காட்டப்படும் , சினிமாப் படம் போலத்தான் . அந்தப் படம் , சற்று நின்றால் , நீங்கள்

அந்தத் திரையைப் பார்க்க முடியும், ஆனால் அந்தப் படம் ஓடிக்கொண்டு இருக்கும் பொழுது, நீங்கள் அந்தத் திரையை உணர முடியாத அளவுக்கு, அந்தப் படத்தோடு ஒன்று கலந்துவிடுவீர்கள். ஆனால், அந்தத் திரைதான் உண்மையானது. அந்தத் திரையில் ஓடும் படம், ஒரு கனவு போலத்தான். .

ஒரு நிகழ்ச்சி.

தங்களுடைய ஓய்வு ஊதியத்தை வாங்குவதற்காக, ஒரு வயதான தம்பதியர் ஒரு தபால்நிலையத்தில், அவற்றை வழங்கும் இடத்தில் நின்றுகொண்டு இருப்பதை, ஒரு பெரும் லட்சாதிபதி பார்த்தார். அவர், அப்பொழுது நல்ல மனநிலையில், உதவி செய்யும் தன்மையில் இருந்தார். அந்த வயதான தம்பதிகளைக் கண்டு வருந்தினார். அவர்களை அழைத்து, ஒரு வாரம் தன் வீட்டில் வைத்திருந்து, நன்றாக உபசரித்து, வாழ்வின் மகிழ்ச்சி என்றால் என்ன என்று காட்ட வேண்டும் என்று விரும்பினார். ஆகவே, அவர்களிடம் சென்று, " நீங்கள் ஏன் என்னோடு, என் வீட்டில் ஒரு வாரம் போல் தங்கக் கூடாது? நீங்கள்

அப்பொழுது, உங்களுடைய நேரததை மிக ஆனந்தமாக செலவழிப்பீர்கள் என்றார்.

அந்த வயதான தம்பதியரும் மகிழ்ச்சியோடு ஒத்துக்கொள்ள, அந்த லட்சாதிபதி, அவர்களைத் தன்னுடைய ரோல்ஸ் ராய்ஸ் காரில் ஏற்றி, தன் அரண்மனை போன்ற வீட்டுக்கு அழைத்து வந்து, நல்ல உணவு, வண்ண தொலைக் காட்சிப் பெட்டி, என்று அவர்கள் கனவில் கூட கண்டிராத பொருள்களை அனுபவிக்கக் கொடுத்தார். அந்த வாரக்கடைசியில், அவர், தன் வீட்டில் உள்ள நூலகத்துக்கு சென்றபொழுது, அந்த வயதான பையன் (1) கையில் ஒரு கிளாஸ் மதுவை வைத்துக் கொண்டு, ஆனந்தமாக சிகரெட்டை ஊதிக்கொண்டிருந்தார். அவரிடம், " என்ன, நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தீர்களா? " என்று அந்த லட்சாதிபதி ஆர்வமாகக் கேட்டார்.

அதற்கு அந்த வயதான பையன், "நிச்சயமாக. ஆனால், உங்களிடம் ஒரு கேள்வி கேட்கலாமா?''

'ஓ தாராளமாக''

'' ஒன்றுமில்லை. இந்த வாரம் முழுவதும் என்னோடு தூங்கிய அந்த வயதான பெண் யார்?!''

ஆகவே, தங்கள் மனைவியோடு தங்கள் கணவனோடு வாழ்க்கை முழுவதும் வாழும் தம்பதியர்களின் நிலைமை இப்படித்தான்.

20 வருடமாக உங்களோடு படுத்துத் தூங்கிய , அந்தப் பெண்மணி யார் ? இந்த நேரங்களில் தான் , நீங்கள் உண்மைநிலையை உணரமுடியும் . இந்த சமயங்களில்தான் , நீங்கள் திடீரென்று ஒரு சைனா சுவரையும் , தெளிவில்லாத இருண்ட வாழ்க்கையையும் உணர்வீர்கள் - உங்களுக்கு என்ன சொல்வது என்று தெரியாது. அந்தப் புதிய ஆள் (மனைவி) யார் என்று உங்களுக்குத் தெரியாது!

ஆகவே, நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள் . நாம் அறிந்துகொண்டவைகள் அனைத்தும் , மிகவும் மேலோட்டமானது. நாம் , அந்நியர்களாகவே வாழ்ந்து கொண்டிருக்கிறோம் . நீங்கள் 20 வருடம் ஒரு பெண்மணியோடு வாழ்ந்தும் , அது எந்த வித்தியாசத்தையும் உங்களிடம் ஏற்படுத்தவில்லை. நீங்கள் எப்பொழுதும் போல , அந்நியர்களாகவே வாழ்கிறீர்கள் . இதற்கு முக்கிய காரணம் என்ன தெரியுமா? நீங்கள் உங்களையே முழுமையாக அறிந்து கொள்ளவில்லை. அப்படியிருக்கும் பொழுது, உங்களால் எப்படி பிறரை உண் மையாக அறிந்துகொள்ள முடியும்? அது ஒருக்காலும் நடக்காது. உங்களுடைய நம்பிக்கை, ஒருக்காலும் நிறைவேறாது. நீங்களே, உங்களுக்கு அன்னியமாக இருக்கிறீர்கள் . நீங்கள் யார் என்றே உங்களுக்குத் தெரியவில்லை. ஆனால் , நீங்கள் நிலையாக இங்கேதான் இருக்கிறீர்கள் . இந்தப் பேரியக்க உயிர்த்தன்மையோடு கலந்து, பல லட்சக்கணக்கான பிறவிகளை எடுத்து வந்தும், உங்களுக்கு, நீங்கள் யார் என்பதே தெரியவில்லை! ஆகவே, உங்களுடைய 20 வருட வாழ்க்கையைப் பற்றி, என்ன சொல்வது?

உங்களிடமிருந்து வெகுதூரத்தில் உள்ள பெண்ணைப் பற்றி, நீங்கள் எப்படி அறிந்து கொள்வீர்கள் ? உங்களால் , அவளுடைய கனவுகளிலும் எண்ணங்களிலும் , ஆசைகளிலும் நுழைய முடியாது. அப்படியிருக்கும்பொழுது, அவளைப்பற்றிய உண்மைநிலையை , நீங்கள் எப்படி அறிந்துகொள்ள முடியும் ? உங்களுடைய கனவுகளில் கூட , அது முடியாது. நீங்கள் அவளோடு இருபது வருடமாக ஒன்றாகப் படுத்துத் தூங்கியிருக்கலாம் . ஆனால் , அவளுடைய கனவுகள் வேறு ; உங்களுடைய கனவுகள் வேறு ; உங்கள் இருவருடைய தன்னிலையும் , இந்த உலகத்தில் வெவ்வேறு இடங்களில்தான் இருக்கும்.

நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கும் பொழுது, அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு இருக்கிறீர்கள் . நீங்கள் உண்மையிலேயே அங்கே இருக்கும் பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு இருக்கிறீர்களா? அல்லது ஒரு கற்பனை உருவத்தின் அல்லது உங்களுடைய மனத்தில் உள்ள ஒரு பெண் உருவத்தின் கைகளைப் பிடித்துக்கொண்டு இருக்கிறீர்களா? அல்லது வெறும் தோற்றத்தின் கைகளைப் பிடித்துக்கொண்டு இருக்கிறீர்களா? நீங்கள் அந்தப் பெண்ணைத்தான் காதலிக்கிறீர்களா? அல்லது நீங்கள் காதலிக்கும் பெண்ணைப் பற்றிய கருத்துக்கள் , அந்த பெண்ணிடம் பிரதிபலிப்பதைக் காதலிக்கிறீர்களா? ஒரு படுக்கையில் இரண்டு பேர்கள் படுத்திருந்தால் , அங்கே நான்கு பேர்கள் இருப்பதாகவே, நான் உணர்கிறேன் . இரண்டு பேர்களிடமும் , இரண்டு வேறு உருவங்கள் , அவர்களுக்குள்ளே இருக்கின்றன . ஒரு மனைவி, அந்த உருவத்தை தன் கணவனிடம் காண்கிறாள் ; அதைப்போல கணவன் , அந்த உருவத்தை தன் மனைவியிடம் காண்கிறான்.

தன் மனதில் உள்ள அந்த உருவத்துக்கு ஏற்றார்போல, ஒருவன் , தன் மனைவியை மாற்றிக்கொண்டே இருப்பது, தற்செயலான நிகழ்ச்சி இல்லை. அதைப்போல , ஒரு பெண் , தன் கணவனை மாற்றிக்கொண்டு இருப்பது - அல்லது மாற்ற

முனைவது, தற்செயலான காரியம் அல்ல . ஆகவே, அவர்களுக்குள்ளே இரண்டு தனிப்பட்ட உருவங்கள் இருக்கின்றன. அதனால், உங்களால் அந்த வெளியில் உள்ள பெண்ணோடு ஒத்துப்போக முடியவில்லை. அப்படி உங்களால் முடியுமா, என்ன ? அதற்கு நீங்கள் உங்களுக்குள்ளே பல மாற்றங்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் . அப்படி முடியாவிட்டால் - உதாரணமாக , கடவுள் ஒரு நாள் நேரில் இந்த உலகத்துக்கு வந்து, " சரி, இப்பொழுது உங்கள் விருப்பப்படி, எல்லா கணவன்களும் , தங்களுடைய மனைவிகளை மாற்றிக்கொள்ளலாம் . அதைப்போல , எல்லா மனைவிகளும் , தங்களுடைய விருப்பப்படி, எல்லா கணவன்களையும் மாற்றிக்கொள்ளலாம் " என்று சொன்னால் , என்ன நடக்கும் ? நீங்கள் சற்று கவனியுங்கள் . இந்த உலகம் அப்பொழுது பைத்தியத் தன்மையில் தான் இருக்கும் ! பெண்கள் , தங்கள் கணவன்களை மாற்றிக்கொள்ளலாம் என்ற நிலைவந்தால் , நீங்கள் எந்த மனிதனையும் , அடையாளம் கண்டுகொள்ள முடியாது. எல்லா கிழவர்களும் தனியாகவே நிற்பார்கள் ! அதைப்போல எல்லா கணவன்களும், தங்களுடைய

மனைவிகளை மாற்றிக்கொள்ளலாம் என்று சுதந்திரம் கொடுத்தால் , எந்தப் பெண்ணையும் நீங்கள் தனியாக பார்க்கவே முடியாது!

ஆனால் , இப்படிச் செய்வதால் , நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்று நினைக்கிறீர்களா? அது நடக்காது. ஏனென்றால் , நீங்கள் மாற்றிக்கொண்ட பெண் , உங்களுடைய கற்பனைப் பெண்ணோடு ஒத்துவராததை விரைவிலேயே புரிந்துகொள்வீர்கள் . அவளிடம் எந்த அற்புதமும், உண்மையான கவர்ச்சியும் கிடையாது என்பதை விரைவிலேயே அறிந்துகொள்வீர்கள்.

ஆகவே, உங்களுடைய மனத்தின் முட்டாள் தன்மையையும் , அதன் கற்பனைத் தேவைகளையும் - அதாவது தற்கொலைக்குச் சமமான தேவைகள் - சற்று உற்று நோக்குங்கள் . நீங்கள் உங்களுடைய

கணவனை மாற்ற முடியுமானால் , உண்மையிலேயே அவனை மாற்றப் போதுமான சக்தியாக நீங்கள் ஆகிவிட்டால் உங்களால் அவனை முழுமையாகக் காதலிக்க முடியுமா? உங்களால் சேர்க்கப்பட்ட ஒரு வஸ்து (THING) போலத்தான் அவன் உங்களுக்குக் காணப்படுவான் . அவனிடம் எந்த அற்புதமோ, அதிசயமோ, ஆத்மாவோ மற்றும் அவனுக்கென்று எந்தத் தனித்தன்மையோ, உங்களால் உற்சாகமாகக் கண்டு பிடிக்கக் கூடிய எதுவுமே அவனிடம் இல்லாததைக் கண்டு, சலிப்படைந்து விடுவீர்கள் . அவனிடம் உங்களுக்குள்ள ஆர்வம் குறைந்து, அவனிடம் ஏற்படும் சலிப்பு அதிகரித்துக்கொண்டே போகும் . ஏனென்றால் அவைகளை நீங்களாக உண்டாக்கிக் கொண்டீர்கள் அதில் என்ன ஆர்வம் இருக்கப்போகிறது?

ஏதோ ஒன்று, உங்களுக்கு புரியாத நிலையில் , தெரியாத நிலையில் இருந்தால்தான், அந்தப் புரியாத புதிரை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படும் . உங்களுக்கு மிகவும் அன்னியமான அதன் சவாலை, முறியடிக்க வேண்டும் என்ற உற்சாகம் ஏற்படும்.

ஆகவே, முதலில் , உங்களையே நீங்கள் அறிந்து கொள்ளாதபொழுது உங்களுடைய மனைவியை உங்களால் எப்படிப் புரிந்துகொள்ள முடியும் ? ஒருக்காலும் நடக்காது. முதலில் உங்களைப் புரிந்துகொள்வதில் , ஆரம்பியுங்கள் . இதுதான் அதில் உள்ள அழகு என்றைக்கு நீங்கள் உங்களை அறிந்து கொள்கிறீர்களோ, அப்பொழுது உங்களுடைய மனைவியை மாத்திரம் அல்ல , இந்த முழுப் பிரபஞ்சத்தையுமே அறிந்து கொள் வீர்கள் . அப்பொழுது மனிதர்களை மாத்திரம் அல்ல , இந்த மரங்கள், பறவைகள், விலங்குகள், மற்றும் பாறைகள், ஆறுகள் , மலைகள் ... என்று எல்லாவற்றையும் புரிந்துகொள்வீர்கள் . உங்களிடம் எல்லாமும் அடங்கியிருக்கிறது. நீங்கள் ஒரு சிறிய பிரபஞ்சம்தான் . இதை நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்.

அடுத்து, அழகான , மதிக்கமுடியாத அனுபவம் என்னவென்றால் , எப்பொழுது நீங்கள் உங்களையே

அறிந்து கொள்கிறீர்களோ, அந்த அற்புதம் அல்லது புரியாத புதிர் முடிவடைவதில்லை. ஆனால் நிச்சயமாக, முதலில்

ஏற்படும் அந்த அனுபவம், மிகவும் பேரானந்தமாகவே இருக்கும். நீங்கள் அதை அறிந்துகொள்ளலாம். இருந்தாலும் அந்த அளவுக்கு அறியவேண்டியது இன்னும் இருக்கிறது என்றும் அறிந்து கொள்வீர்கள். இருந்தாலும் அதன் எல்லை வெகுதூரத்தில் இருக்கிறது என்பதையும் அறிந்துகொள்வீர்கள். இப்பொழுது, நீங்கள் அந்தப் பிரபஞ்சக் கடலில் நுழைந்திருக்கிறீர்கள். நீங்கள் அதன் அடுத்த கரையை அடையவே இல்லை. அந்தக் கணத்தில்தான், இந்த பிரபஞ்ச உயிர் இயக்கப் பொருள்கள் அனைத்தும், உதாரணமாக உங்கள் மனைவி, உங்கள் குழந்தை, உங்கள் நண்பர்கள் அனைவரும் புரியாத புதிராக விளங்குவார்கள். அந்த புரிந்து கொள்ளுதல் என்பது வாழ்வின் கவிதைத் தன்மையையும், புரிந்து கொள்ள முடியாத மாயங்களையும் அழிப்பதில்லை. மாறாக, கவிதை, மாயம் (MAGIC), அதிசயம் மற்றும் புரியாத புதிர் அனைத்தையும் அதிகரிக்கவே செய்யும்.

நீங்கள் சொல்கிறீர்கள், "நான் 20 வருடங்களுக்கு முன்பே திருமணம் செய்து கொண்டேன். ஆனால் 'என் மனைவி, ஏன் என்னை சரியாகப் புரிந்துகொள்ளவில்லை' ' என்ற உணர்வு எனக்கு இருந்துகொண்டே இருந்தது'' என்று கூறுகிறீர்கள்.

நீங்கள் உங்களையே அறிந்திருக்கிறீர்களா? நீங்கள் பிற்பாடு வருத்தப்படும் அளவுக்கு, எந்தக் காரியத்தையும் செய்ததில்லையா? அப்பொழுது நீங்கள், 'என்னையறியாமலேயே அந்தக் காரியத்தை செய்துவிட்டேன் ' என்று உணரவில்லையா? நீங்கள் நன்றாகப் புரிந்துகொண்டு தான், ஒரு காரியத்தைச் செய்கிறீர்களா? யாராவது உங்களைத் தாக்கினால், நீங்கள் உடனே கோபம் கொள்கிறீர்கள். இதை நீங்கள் புரிந்துகொண்டுதான் செய்கிறீர்களா? அல்லது உங்களை உங்களுடைய சட்டையைப் பிடித்துத் தள்ளியதால், வெறுமனே கோபம் கொண்டீர்களா?

உங்களைப்பற்றி, நீங்கள் அறிந்துகொண்டது, மிகவும்

மேலோட்டமானது. ஒரு காரோட்டி போலத்தான் அது. ஆமாம் , அவனுக்குச் சில விஷயங்கள் தெரிந்திருக்கலாம் . அதாவது எப்படி சக்கரத்தை நகற்றுவது, எப்படி அதன் வேகத்தை தன்கட்டுப்பாட்டில் வைத்திருப்பது, கிளட்ச் , கியர் பாக்ஸ் மற்றும் பிரேக்கையெல்லாம் எப்படிக் கையாள்வது என்பது பற்றி மட்டும் தான் தெரிந்திருக்கலாம் . அவ்வளவுதான் . அந்தக் காரைப்பற்றி, எல்லாம் அவனுக்கு தெரிந்திருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அதன், முன் மூடிக்கு அடியில் (BOUNET) என்னென்ன இருக்கிறது. அதை எப்படிக் கையாள்வது என்று அவனுக்குத் தெரியுமா? ஆனால் , அதுதான் உண்மையான கார் . அங்கேதான் அந்தக்காரின் உண்மையான செயல்பாடுகள் அடங்கி இருக்கின்றன . அவன் , தள்ளுவதோ அல்லது இழுப்பதோ, பட்டன்களை (BUTTONS) த் தவிர வேறு எதுவும் இல்லை. இன்னும் சிறிதுகாலத்தில், இவைகள் எல்லாம் மறைந்துவிடும் ; மறையத்தான் வேண்டும் . ஏனென்றால் , அந்த இயந்திர முறை, மிகவும் பழமையானது. அவைகளையெல்லாம் , ஒரு கணிப்பொறி (COMPUTER)மிகத் திறமையாக இயக்கும். அப்பொழுது, ஒரு சிறு குழந்தைகூட, அதைச் சுலபமாக ஓட்டலாம் - அப்பொழுது கார் ஓட்ட, அனுமதி (LICENSE) கூடத் தேவையில்லை!

ஆனால் , அதற்குள் என்ன நடக்கிறது என்று உங்களால் புரிந்துகொள்ள முடிகிறதா? நீங்கள் ஒரு பொத்தானை அமுக்கினால் , மின்சாரம் அதனுள் பாய்கிறது. அவ்வளவுதான் . மின்சாரம் என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியும் ? அந்தப் பொத்தான்களை எப்படி அழுத்துவது என்பது மட்டும்தான், உங்களுக்குத் தெரியும். அவ்வளவுதான்.

ஒரு நிகழ்ச்சி.

முதன் முதலாக, வீயன்னா (VIENNA) வுக்கு, மின்சாரம் வந்தபொழுது சிக்மண்டு பிராய்டு (SIGMUND FREUD)வின் நண்பர் ஒருவர், அவரைப் பார்க்க வந்தார். அவர் , அதுவரை மின்சாரத்தைப் பார்த்தது இல்லை.

பிராய்டு, அவரை ஒரு தனி அறையில், இரவில் படுக்க வைத்தார் . அந்த நண்பருக்கு மிகவும் கவலை ஏற்பட்டது. ஏனென்றால் , அந்த அறையில் , மின்சார பல்ப் எரிந்துகொண்டே இருந்தது. அதை எப்படி அணைப்பது என்று அவருக்குத் தெரியவில்லை. திரும்பி, பிராய்டிடம் சென்று அதைப்பற்றிக் கேட்பதற்கும் கூச்சம் . அவர் , தன்னை முட்டாள் என்றல்லவா நினைத்துக் கொள்வார் . " என்ன ஜனங்கள் இவர்கள் ? ஒரு பல்பைக் கூட அணைக்கத் தெரியவில்லை? இந்த சின்ன விஷயம் கூடவா தெரியவில்லை? என்று அவர் நினைக்கக் கூடும். அந்த நண்பர் , ஒரு கிராமத்திலிருந்து வந்தவர் . அவர் , தன்னை இகழ்ச்சியாகப் பார்த்து சிரிக்கக்கூடும் . இப்படி அவர் பலவாறாக சிந்தித்து, அந்தப் பல்பை, ஒரு துணியைக் கொண்டு மறைத்து விட்டுத் தூங்க ஆரம்பித்தார் . ஆனால் அவருக்குத் தூக்கம் வரவில்லை. அந்த பல்பைப் பற்றியே மீண்டும் , மீண்டும் அவருக்கு நினைப்பு வந்துகொண்டே இருந்தது. மறுபடியும் எழுந்து முயன்றார் ; முடியவில்லை. இப்படியாக , அவர் தூங்கியும் தூங்காமலும், அந்த இரவைக் கழித்தார்.

காலை, பிராய்டு அவரை சந்தித்து, ''என்ன, நன்றாகத் தூங்கினீர்களா? '' என்று அன்புடன் விசாரித்தார் . அதற்கு அவர் , " எல்லாம் மிக நன்றாக இருந்தது. ஆனால் , ஒரே ஒரு விஷயத்தை உங்களிடம் கேட்கவேண்டும் இந்த மின்சார பல்பை, எப்படி அணைப்பது?

பிராய்டு, ' உங்களுக்கு மின்சாரத்தைப் பற்றி தெரியாதல்லவா? இங்கே வாருங்கள். அந்த சுவற்றில் இருக்கும் பொத்தானை (SWITCH) அழுத்தினால் , அங்கு விளக்கு எரியும்'' என்று சொன்னார்.

அதற்கு அந்தக் கிராமத்து நண்பர், "ஓ இவ்வளவுதானா! இப்பொழுது மின்சாரம் என்றால் என்னவென்று புரிகிறது'' என்றார்.

சரி, உங்களுக்கு மின்சாரம் என்றால் என்னவென்று தெரியுமா? உங்களுக்கு கோபம் என்றால் , அன்பு, மகிழ்ச்சி மற்றும் துக்கம் என்றால் என்னவென்று தெரியுமா?

எதுவுமே தெரியாது. உங்களுக்கு, உங்களைப் பற்றியே தெரியாது. உங்களுடைய மனத்தைப் பற்றியும் மற்றும் உங்களுடைய உள்தன்மையைப் பற்றியும் , இந்த முழு வாழ்க்கை எப்படி நிகழ்கிறது என்றும் உங்களுக்குத் தெரியுமா? எங்கேயிருந்து இந்த உயிர் இயக்கம் வந்தது? எங்கேயிருந்து இந்த கோபம், மகிழ்ச்சி எல்லாம் வந்தது. ஒரு சமயம் , நீங்கள் மகிழ்ச்சியும் , கொண்டாட்டமும் உடையவராக உணர்கிறீர்கள் . அடுத்த சமயம் , நீங்கள் தூக்கு மாட்டிக்கொள்ளக்கூடத் தயாராக இருப்பீர்கள்.

நீங்கள் , " ஏன் , அவள் என்னைப் புரிந்துகொள்ளவில்லை? " என்று கேட்கிறீர்கள் . உங்கள் மனைவியைப் பொருத்த அளவில் , அது இயல்புதான் . ஆனால் , உங்களால் , அவளை எப்படி சரியாகப் புரிந்துகொள்ள முடியும் ? உங்களுக்கு, உங்கள் மனத்தைப் பற்றியே எதுவும் தெரியாது. என்றைக்கு நீங்கள் , உங்கள் மனத்தையும் , உங்களுடைய உயிர்த்தன்மையையும் அறிந்து கொள்கிறீர்களோ, அன்றைக்குத்தான் , உங்களால் எல்லா மனங்களையும் , எல்லா உயிரினங்களையும் சரியாகப் புரிந்து கொள்ள முடியும் . ஏனென்றால் இயற்கையின் அடிப்படைச் சட்டம் ஒன்று தான். நீங்கள் ஒரு துளிகடல் நீரை ருசித்துவிட்டால் , அது எல்லா கடல்களையும் ருசித்துவிட்டதற்கு சமம் - மற்றும் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் - மற்றும் இந்த பூமியை, பிற கோள்களைப் பற்றியும் தெரிய வரும் . ஏனென்றால் , தண்ணீரின் மூலக்கூறு H2° என்று தெரிந்துவிட்டால் , நீங்கள் எல்லாத் தண்ணீரைப் பற்றியும் தெரிந்தவராவீர்கள் . எங்கே தண்ணீர் இருந்தாலும் , அதன் மூலக்கூறு ஒன்றுதான் . நீங்கள் உங்களுடைய கோபத்தை உணர்ந்துகொண்டால் , புரிந்துகொண்டால் , நீங்கள் எல்லாக் காலங்களிலும் ( இறந்தகாலம் , நிகழ்காலம் , வருங்காலம் ), எல்லா மனித இனங்களிடம் உள்ள கோபத்தை அறிந்துகொள்ளலாம் . நீங்கள் , உங்களுடைய பாலுணர்வை, சரியாகப் புரிந்துகொண்டால் , நீங்கள் எல்லா உயிரினங்களில் உள்ள பாலுணர்வையும்

புரிந்துகொள்ள முடியும்.

ஆகவே, தயவு செய்து, பிறரைப் புரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படாதீர்கள் . அது சரியான வழியில்லை. சரியான வழி எதுவென்றால் , நீங்கள் உங்களையே புரிந்து கொள்வதுதான் . நீங்கள் ஒரு சிறிய பிரபஞ்சம்தான். இந்த முழு உயிர்த்தன்மையின் வரைபடம் , உங்களுக்குள்ளேதான் இருக்கிறது.
கேள்வி 4:

அன்புள்ள குருவே, நான் என் கணவ்னை விரும்புகிறேன். ஆனால், உடலுறவை விரும்பவில்லை. இது எங்களிடையே வேற்றுமையையும் , விரிசலையும் ஏற்படுத்துகிறது. இந்த உடலுறவு மிருகத்தனமான செயல் அல்லவா?"

ஆமாம் . ஆனால் , மனிதனும் ஒரு மிருகம்தானே அதாவது எந்த அளவுக்கு ஒரு மிருகம் இருக்குமோ, அந்த அளவுக்கு மனிதனும் இருக்கிறான் . ஆனால் , மனிதனும் ஒரு மிருகம்தான் என்று நான் குறிப்பிடும்பொழுது, அவன் மிருகத்தன்மையுடையவன் என்று மட்டும் கூறி முடித்துக்கொள்வதாக, அர்த்தம்

ா' ' பண்ணிக்கொள்ள வேண்டாம். அவன், ஒரு மிருகத்தைவிட, மிக மேலான நிலையையும் அல்லது கீழான நிலையும் அடையலாம். இதுதான் மனிதனுடைய பெருமை எல்லாம் . அது, அவனை சுதந்திரத் தன்மையிலும் உயர்த்தும், கீழான அபாயத்திலும் கொண்டுபோய் விட்டு விடும். அதுவே துன்பத்தையும் கொடுக்கும் , பேரானந்தத்தையும் கொடுக்கும். ஒரு மனிதன் , மிருகங்களைவிட, கீழான நிலைக்கும் செல்ல முடியும், கடவுளைவிட மிகமேலான நிலைக்கும் செல்ல முடியும் . அவனிடம் , எல்லையில்லாத ஆற்றல் இருக்கிறது.

ஒரு நாய் , எப்பொழுதும் ஒரு நாயாகவே இருக்கும் . அது, நாயாகவே பிறந்து, நாயாகவேதான் இறக்கும் . ஆனால் , ஒரு மனிதன் புத்தாவாகவோ, அல்லது ஒரு அடால்ப் ஹிட்லராகவோ மாறலாம் . அவனுக்கு, இரண்டு பக்கமும் வழி இருக்கிறது.

நீங்கள் ஒரு மனிதனைவிட , மிகவும் அபாயகரமான மிருகத்தைப் பார்த்திருக்கிறீர்களா? அவனைவிடப் பைத்திய நிலையில் உள்ள மிருகத்தைப் பார்த்திருக்கிறீர்களா? இந்தக் காட்சியை சற்று கவனியுங்கள் . ஒரு வெட்டவெளி அரங்கத்தில் , சுமார் 50,000 குரங்குகள் , உட்கார்ந்துகொண்டு, அந்த அரங்கத்தின் நடுவே உள்ள எரியும் நெருப்பில் , தன் குட்டிகளை எறிந்து, மகிழ்ச்சியடைகின்றன . அந்த குரங்குகளைப்பற்றி, நீங்கள் என்ன நினைப்பீர்கள் ? அவைகளுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது என்று நீங்கள் நினைக்கமாட்டீர்களா? ஆனால் , இப்படிப்பட்ட சம்பவம் , மனிதகுலத்தில் நடந்திருக்கிறது. கார்த்தேஜில் (CARTHAGE) இப்படி நடந்திருக்கிறது. 50,000 மனிதர்கள் , இப்படி தன் குழந்தைகளை எரித்திருக்கிறார்கள் ! ஒரே நேரத்தில் , கடவுளுக்கு அர்ப்பணிப்பதாக எண்ணிக்கொண்டு ஆயிரக்கணக்கான குழந்தைகளை, அப்படி எரித்திருக்கிறார்கள் , அதுவும் தன்னுடைய குழந்தைகளை!

கார்த்தேஜில் நடந்த இந்த நிகழ்ச்சியை சற்று மறந்துவிடுங்கள் . இது நடந்து ரொம்ப காலமாகிவிட்டது. இந்த நூற்றாண்டில் , அடால்ப் ஹிட்லர் என்ன செய்தான் ? பார்க்கப்போனால் , இந்த நூற்றாண்டு, மிகவும் நாகரீகமடைந்தது என்று கூறலாம் . ஆகவே, கார்த்தேஜில் நடந்ததைவிட , அடால்ப் ஹிட்லர் மிகப் பிரமாதமாக அதைச் செய்யக்கூடிய நிலையில் இருந்தான் . அவன் , பல லட்சம் யூதர்களைக் கொன்றான் . ஆயிரக்கணக்கானவர்களை ஒரே சமயத்தில் , ஒரு கூண்டுக்குள் அடைத்து, விஷவாயுவைச் செலுத்திக் கொன்றான் . இதை நூற்றுக்கணக்கான மக்கள் வெளியிலிருந்து பார்த்தார்கள் அதாவது சிறிய கண்ணாடிகள் வழியாக!

இந்த மக்களைப்பற்றி, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இவர்களெல்லாம் என்ன மனிதர்கள்? மக்களை விஷவாயுமூலம் கொன்று எரிப்பதை, மற்றவர்கள் பார்த்து மகிழ்கிறார்கள் ! இதைப்போன்ற அநாகரீகமான , இரக்கமற்ற தன்மையை, விலங்குகள் செய்யும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

சென்ற 3000 வருடங்களில் , மனிதர்கள் 5000 சண்டைகள் போட்டிருக்கிறார்கள் - கொல்லுதல் , கொல்லுதல், கொல்லுதல்தான். ஆனால்,

நீங்கள் உடலுறவு மிருகத்தனமானது என்று கூறுகிறீர்கள் மனிதர்களைவிட விலங்குகள் இந்த மிருகத்தனமாக செயலை ஒருக்காலும் செய்திருக்காது. நீங்கள் , மனிதன் விலங்கு இல்லை என்று நினைக்கிறீர்கள்.

மனிதன் ஒரு மிருகம்தான் . மனிதன் , விலங்கு இல்லை என்ற உங்களுடைய நினைப்பே, உங்களுடைய வளர்ச்சிக்குத் தடையாக இருக்கிறது. ஆகவே, நீங்கள் உங்களை மிருகம் இல்லையென்று நினைத்துக்கொண்டு, நீங்களே உங்களுடைய வளர்ச்சியைத் தடைப்படுத்திக் கொள்ளலாம் முதலில் , நீங்கள் புரிந்துகொள்ளவேண்டியது என்னவென்றால் , ' நான் ஒரு மிருகம்தான் . நான் மிகவும் பிரக்ஞையாக இருந்து, அதைத்தாண்டிச் செல்லவேண்டும் " என்பதுதான்.

அயர்லேந்தில் உள்ள ஒரு சாதாரண ஹோட்டலுக்கு, ஒருவன் , தன்னுடைய நாயை அங்கே தங்க அனுமதிப்பீர்களா? என்று கேட்டு எழுதியிருந்தான் . அதற்கு அந்த ஹோட்டலிலிருந்து, அவனுக்கு கீழ்கண்ட பதில் கடிதம் வந்தது.

'அன்பார்ந்த ஐயா,

நான் இந்த ஹோட்டல் தொழிலில், சுமார் 30 வருடமாக இருந்து வருகிறேன் . ஆனால் , விடிகாலையில் , எந்த நாயும் ஒழுங்கற்ற முறையில் நடந்ததாக, நான் காவல் நிலையத்துக்கு புகார் கொடுத்தது இல்லை. எந்த நாயும் , எனக்கு ஒரு பொய் செக்கைக் கொடுக்க முயன்றதில்லை. எந்த நாயும் , சிகரெட்டு பிடித்து, படுக்கை விரிப்பை எரித்தது இல்லை. எந்த நாயின் பையிலும் , ஹோட்டல் துண்டை மறைத்து வைத்திருந்தது பார்க்கவில்லை. ஆகவே, உங்களுடைய நாயை, நாங்கள் வரவேற்க காத்துக்கொண்டு இருக்கிறோம்.

குறிப்பு: அந்த நாய் , உங்களுடைய நேர்மைக்கு

உத்திரவாதம் கொடுத்தால், நீங்கள் கூட வரலாம்!'

விலங்குகள் , எப்படி இருந்தாலும் , அவைகள் அழகானவைகளே. அவைகள் கள்ளம்கபடு அற்றவைகள் . ஆனால் , மனிதன் மிகவும் தந்திரமானவன், மிகவும் கணக்குப் பார்க்கும் தன்மை படைத்தவன் , அவனுடைய மனம் மிகவும் அருவருப்பானது. விலங்குகளைவிட, மனிதன் கீழான நிலைக்கு வரலாம், மற்றும் அவன் மற்றவர்களைவிட மேலான நிலைக்கும் செல்லலாம் அதாவது கடவுளைவிட மேலான நிலைக்கு. மனிதனிடம் அளப்பரிய ஆற்றல் இருக்கிறது. அவனால் கீழேயும் செல்ல முடியும்; மேலேயும் செல்ல முடியும். அவனிடம் ஒரு முழு ஏணியே இருக்கிறது - முதல்படியிலிருந்து, கடைசிப் படிவரை

ஆகவே, முதலில் , நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது என்னவென்றால் , உடலுறவை, மிருகத்தனமானது என்று சொல்லவேண்டாம். ஆனால், அது மிருகத்தனமாக மட்டும் இருக்கலாம் . அது சாத்யம்தான். ஆனால், அது அப்படியேதான் இருக்கும் என்பது அவசியமில்லை. அது மேலே சென்று அன்பாகவும் மாறலாம் மற்றும் பிரார்த்தனையாகவும் மாறலாம். அவைகள் உங்களைப் பொருத்தது.

' பாலுணர்வு என்பது ஒரு நிலையான பொருள் அல்ல . அதை உங்கள் விருப்பப்படி, எப்படி வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம் . இதுதான் தந்த்ராவின் முழுச் செய்தியே. பாலுணர்வை, சமாதி நிலைக்குக்கொண்டு செல்லலாம். இதுதான் தந்த்ராவின் நோக்கம் அல்லது பார்வை. உடலுறவு இன்பத்தின் வழியாக , அந்த முடிவான பேரானந்த நிலை உங்களை வந்து அடையும். உங்களுக்கும் , அந்தத் தெய்வீகத் தன்மைக்கும் (ULTIMATE), அதை பாலமாக விளங்க வைக்கலாம்.

நீங்கள் சொல்கிறீர்கள் . " நான் என்கணவனை விரும்புகிறேன். ஆனால் உடலுறவை விரும்பவில்லை. இதனால் எங்களுக்குள் மாறுபட்ட கருத்தும், விரிசலும்

ஏற்படுகின்றன" என்று. உடலுறவை வெறுத்து, எப்படி உங்கள் கணவன் மேல் அன்பு செலுத்த முடியும் ? நீங்கள் வார்த்தைகளில் விளையாடுகிறீர்கள் . எப்படி உடலுறவு இல்லாமல் , உங்கள் கணவனை நேசிக்க முடியும்?

முதலில் இதைப் புரிந்து கொள்ளுங்கள் . நீங்கள் ஒரு ஆணை விரும்பினால் , அவனுடைய கையைப் பிடித்துக்கொள்ள விரும்புவீர்கள் மற்றும் சில சமயம் , அவனுடைய கழுத்தைப் பிடித்துக்கொண்டு தொங்க விரும்புவீர்கள் . அதுமாத்திரமல்ல , அவனுடைய குரலையும் மற்றும் அவனுடைய முகத்தையும் உற்று நோக்க விரும்புவீர்கள் . நீங்கள் விரும்பும் ஆணின் குரல் . தூரமாகக் கேட்டாலும், அவனுடைய முகத்தைப் பார்த்தால்தான், உங்களுக்கு மிகுந்த திருப்தி ஏற்படும். நீங்கள் அவனைத் தொட்டால் , நிச்சயமாக நீங்கள் மேலும் திருப்தியடைவீர்கள் . அவனுக்கு முத்தம் கொடுத்தால் , நீங்கள் நிச்சயமாக மேலும் திருப்தி அடைவீர்கள் . உடலுறவு என்றால் என்ன ? இரண்டு ஆழமான சக்திகள், ஒன்றை ஒன்று சந்திப்பதுதான்.

நீங்கள் அதைப்பற்றிய கற்பனைகளை, உங்கள் மனத்தில் சுமந்து கொண்டுதான் அலைகிறீர்கள் . பாலுணர்வின் நோக்கம் என்ன ? இரண்டு பேர்கள் , ஒருவரை ஒருவர் கலந்து, அந்த உச்ச இன்பத்தை அடைவதுதான் - நீங்கள் வெறும் கைகளை மாத்திரம் கோர்த்துக்கொண்டு செல்வது அல்ல , நீங்கள் ஒருவர் உடலை மற்றவர் தழுவிக்கொள்வது அல்ல . அது, இரண்டு சக்திகள் , மிக ஆழமாக ஒன்றினுள் ஒன்று கலப்பதுதான் . நீங்கள் எதற்காக அதை வெறுக்க வேண்டும் ? உங்களுடைய மனம் ஏற்கனவே, மகாத்மாக்களாலும் , மதத்தன்மையுடைய வர்கள் என்று அழைக்கப்படுபவர்களாலும் , விஷமாக்கப்பட்டுவிட்டது. ஏன் , இந்த மனிதகுலமே விஷமாக்கப்பட்டிருக்கிறது. அது, உங்களுடைய வளர்ச்சியின் ஆரம்பநிலையை விஷமாக்கிவிட்டது.

நீங்கள், ஏன் அதை வெறுக்க வேண்டும்? நீங்கள் ஒரு ஆணைக் காதலித்தால் , நீங்கள் உங்களுடைய முழு உயிர்த்தன்மை மற்றும் உடலையும் அவனோடு பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறீர்கள் . அவனை வெறுப்பதற்கு எந்தத் தேவையும் இல்லை. நீங்கள்

உடலுறவை மட்டும் வெறுக்கிறேன் என்றால், அதற்கு என்ன அர்த்தம் ? நீங்கள் சொல்ல விரும்புவது என்னவென்றால், உங்கள்

வீட்டைக் கவனித்துக்கொள்ள வேண்டும் , உங்களுக்குக் கார் வாங்கிக்கொடுக்க வேண்டும் . உங்களுக்குக் கம்பளி ஆடை வாங்கித் தரவேண்டும் என்று விரும்புகிறீர்கள் . நீங்கள் , அவனை உங்கள் இஷ்டப்படி உபயோகித்துக்கொள்ள விரும்புகிறீர்கள் .. .ஆனால் அதை அன்பு, காதல் என்று அழைக்கிறீர்கள். நீங்கள் அவனோடு எதையும் பங்கிட்டுக்கொள்ள விரும்பவில்லை.

நீங்கள் உண்மையாக , உங்களுடைய கணவனை விரும்பினால் , நீங்கள் எல்லாவற்றையும் அவனோடு பங்கிட்டுக்கொள்ள விரும்புவீர்கள் . உங்களுடைய அன்பு மற்றும் காதல் உண்மையாக இருந்தால் , உங்களிடம் எந்த ரகசியமும் இருக்காது. அப்பொழுது உங்களுடைய இதயம் முழுமையாகத் திறந்திருக்கும். உங்களுடைய உள்ளமும் , உடலும் அவனுக்காக எப்பொழுதும் தயாராக இருக்கும். அவன் நரகத்துக்குச் சென்றாலும் , நீங்கள் அவன் கூடவே நரகத்துக்குச் செல்லவும் தயாராக இருப்பீர்கள்.

ஆனால் , நடைமுறையில் இப்படித்தான் நடக்கிறது. அதாவது, நாம் வார்த்தைகளைக் கையாள்வதில் , மிகவும் தேர்ந்தவர்கள். நான் உன்னை உண்மையாகக் காதலிக்கவில்லை என்று அவனிடம் நேரிடையாகச் சொல்ல நீங்கள் விரும்பவில்லை. ஆகவே, அவனைக் காதலிப்பது போல சொல்லிக்கொண்டு, உடலுறவை மட்டும் வெறுப்பதாகக் காட்டிக்கொள்கிறீர்கள். ஆனால், உடலுறவு மாத்திரம் , காதல் அல்ல - அதுவும் உண்மைதான் . அன்பு. மற்றும் காதல் என்பது உடலுறவுக்கு மேலே உயர்ந்த இடத்தில் இருக்கிறது. ஆனால், காதலுக்கு அடித்தளம் உடலுறவுதான். ஆமாம். ஒரு நாள் அந்த உடலுறவில் உள்ள ஆர்வம் மறைந்து விடும். ஆனால், அதை வெறுத்து ஒதுக்குவது என்பது, அது மறைவதற்கான சரியான வழியில்லை. மாறாக , அது, பாலுணர்வை அடக்கவே செய்யும் . ஆனால் , எவைகளெல்லாம் அடக்கப்படுகிறதோ,

அவைகளெல்லாம் ஏதோ ஒரு வழியில் மேலே வரத்தான் செய்யும்.

ஆகவே, தயவு செய்து ஒரு துறவியாகவோ அல்லது கன்னியாஸ்திரியாகவோ (NUN) மாறவேண்டும் என்று ஆசைப்படாதீர்கள். ஒரு

நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . பாலுணர்வு என்பது இயற்கையானது. ஒருவன் , அதற்கு அப்பால் செல்ல வேண்டும் . ஆனால் அதை அடக்கி, அப்பால் செல்லக்கூடாது. அப்படிச் செய்தால் , அந்த அடக்கப்பட்ட பாலுணர்வு, இப்பொழுதோ அல்லது எப்பொழுதோ, ஏதோ ஒரு வழியில் தன்னைக் காட்டிக்கொள்ளும் . சில விபரீத எண்ணங்கள் , உங்களுக்குள்ளே நுழைந்துவிடும் - அதற்கு மாற்றாக (SUBSTITUDE) நீங்கள் வேறு எதையாவது கண்டுபிடிக்க வேண்டும் . ஆனால் , அந்த மாற்று, உங்களுக்கு உண்மையில் ஒருக்காலும் உதவி செய்யாது. அதனால் , அந்த அளவுக்கு உதவி செய்யவும் முடியாது. ஒரு இயற்கையான உணர்வு, அப்படி அடக்கப்பட்டு, உங்களால் மறக்கப்பட்டால், அது ஒரு மாற்றுமுறையில் , மேலே கொப்பளித்து வரும் . நீங்கள்

அதனுடன் எப்பொழுதும் சண்டைபோட்டவாறே இருப்பீர்கள் . அதனால் எந்தப் பிரயோஜனமும் இல்லை.

ஒரு நிகழ்ச்சி.

ஒரு சாதாரண , குறுகிய தூரத்துக்கான (SUBURBAN RAIL) புகைவண்டியில் உள்ள ஒரு பிரயாணப்பெட்டியில் , ஒரு புதிய ஆள் ஏறினான் . அதில் , ஏற்கனவே இரண்டு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள் . அவர்களில் , ஒருவனுக்கு ஒரு வித்தியாயசமான பழக்கம் இருந்தது - அவன் மீண்டும், மீண்டும் தன்தாடையை சொறிந்தவாறு இருந்தான் . இந்தச் செயல் , அந்தப் புதிய ஆளை பைத்திய நிலைக்கே கொண்டு சென்றுவிட்டது. ஏன் , எதற்காக இந்த ஆள் , இப்படிச் சொறிந்து கொண்டே இருக்கிறான் என்று அவனால் புரிந்து கொள்ள

முடியவில்லை. அதற்குள் , அடுத்த நிலையத்தில் (STATION) அவன் இறங்கிப் போய்விட்டான்.

பிறகு, அந்த புதிய ஆள் , அவனுடைய நண்பனிடம் , '' பாவம் உங்களுடைய நண்பனுக்கு, ஏதோ கடுமையான தோல் வியாதிபோல இருக்கிறது'' என்று சொன்னான்.

அந்த நண்பன் , '' ஆமாம் . அவன் மிக கடுமையான மூலவியாதியால் கஷ்டப்படுகிறான் (PILES)

''நான் மூலவியாதியைப் பற்றிப் பேசவில்லை. அவன் சொறிந்தவாறு இருந்ததைத்தான் சொல்கிறேன்.''

ஆமாம் . அவனுக்கு மூல வியாதிதான் (PILES) அவன் ஒரு மதத்தை தீவிரமாகப் பின்பற்றுபவன் . மேலும் , அவன் ஒரு அரசாங்க ஊழியனும்கூட. அந்த சொறிதல், அந்த மூலவியாதியை மறைப்பதற்காகவே. அது, அந்த மூலவியாதிக்கு ஒரு மாற்றுதான்''

ஆகவே, ஒன்றுக்குப் பதிலாக வேறொன்று (SUBSTITUTE) ஒருக்காலும் உதவி செய்யாது. அது, மேலும் பல விபரீதங்களை உண்டுபண்ணும் , பல விபரீத ஆசைகளை ஏற்படுத்தும் . ஒருநாள் , அந்த இயற்கையைக் கடந்து செல்ல வேண்டும் என்றால் , நீங்களும் இயற்கையோடு ஒட்டி வாழுங்கள். இதுதான் உங்களிடம் ஏற்பட வேண்டிய அடிப்படைத் தேவை. இயற்கையைவிட, வேறு எதுவும் இல்லை என்று நான் கூறவில்லை. சாதாரண இயற்கை நிலையைவிட , மேலான இயற்கைநிலை என்று ஒன்று உண்டு என்றுதான் சொல்கிறேன். இதுதான் தந்த்ராவின் முழு செய்தியாகும் . ஆகவே, முதலில் இந்த உலகத்தையொட்டி இருங்கள் . அதாவது, இந்த உலகத்தின் ஆசாபாசங்களில் முழுமையாக , பிரக்ஞையாக ஈடுபடுங்கள் . அப்பொழுதுதான் , உங்களால் அந்த ஆகாயத்தைத் தொடமுடியும்.

இந்த மரங்களை, நீங்கள் பார்க்கவில்லையா? அவைகள் , இந்த பூமியில் வேர் விட்டு, வளர்ந்து கொண்டு இருக்கிறது. எந்த அளவுக்கு அந்த வேர்கள்,

அதிக ஆழத்துக்குச் செல்கிறதோ, அந்த அளவுக்கு அந்த மரம் , மேலே வளரும் . அது மேலும் வளர வேண்டுமானால் , அதனுடைய வேர்கள் , பூமிக்குள் மிகவும் ஆழமாகச் செல்லவேண்டும் . அந்த மரம் , ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்களைத் தொடவேண்டும் என்றால் , அது பூமிக்குள் மிக ஆழமாகச் சென்று, அந்தப் பாதாளத்தைத் தொடவேண்டும்! இதைத்தவிர வேறுவழியில்லை.

நீங்கள் ஆத்மாவாக வேண்டுமானால் , முதலில் , நீங்கள் உங்களது உட உடலில் வேர்விட்டு ஆழமாகச் செல்லவும் . நீங்கள் ஒரு உண்மையான காதலிப்பவர் என்றால் , உடலுறவில் வேர்விட்டு ஆழமாகச் செல்லவும் . ஆமாம் . நீங்கள் காதல் அன்பில் மிக அதிகமாக உங்களுடைய சக்தியை செலவிட்டால், அது அன்பாகவே மாறுகிறது. அப்பொழுது பாலுணர்வு தானாகவே குறைந்துகொண்டு வரும் . நீங்கள் அதை வெறுக்க முடியாது. எந்த விஷயம் என்றாலும் , வெறுப்பது சரியான முறையில்லை. அது, எதைக்காட்டுகிறது என்றால் , நீங்கள் அந்த காரியத்தைக் கண்டு மிகவும் பயப்படுவதைத்தான் . ஆனால் , மன ஆழத்தில் , அது உங்களைக் கவர்ந்துகொண்டுதான் இருக்கிறது. நீங்கள் உடலுறவை வெறுத்தால் , அந்தப் பாலுணர்வு சக்தி, வேறு எங்கேயோ செல்ல ஆரம்பிக்கிறது. சக்தியின் இயல்பு, எப்பொழுதும் நகர்ந்துகொண்டே இருப்பதுதான்.

மனிதன் , தன்னுடைய பாலுணர்வை அடக்கினால் , அதில் பிறகு மிகவும் ஆர்வம் உள்ளவனாகிறான் . ஆகவே, நீங்கள் அதில் மிகவும் ஆர்வம் உள்ளவர்களாக வேண்டுமானால் , உங்களுடைய பாலுணர்வை அடக்கவும் . அப்பொழுதுதான் அந்த சக்தி, உங்களுடைய ஆர்வத்தில் சுழன்று கொண்டு இருக்கும் . இல்லாவிட்டால் , உங்களிடம் எந்தச் சக்தியுமே இருக்காது. ஒரு அரசியல் வாதி, தன்னுடைய பாலுணர்வை அடக்கத்தான் வேண்டும் . இல்லாவிட்டால் , அவனால் டெல்லிக்கு ஓட முடியாது! அதற்கு அந்தப் பாலுணர்வு சக்திதான் தேவைப்படுகிறது. நீங்கள் எப்பொழுதெல்லாம் அதை அடக்குகிறீர்களோ அப்பொழுது நீங்கள் இந்த முழு உலகத்தையே கோபமாகப் பார்க்கிறீர்கள் - அதனால் ,

நீங்கள் ஒரு விபரீதமான புரட்சிக்காரராக மாறினாலும், ஆச்சரியப்படுவதற்கு இல்லை. எல்லா புரட்சிக்காரர்களும் , தங்களுடைய பாலுணர்வை அடக்கியவர்களாகவே இருப்பார்கள்.

எந்த மதக்கோட்பாடுகளும் , மூடக் கொள்கைகளும் குறுக்கிடாமல், உடலுறவை இயல்பாக, சாதாரணமாக எப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படுகிறதோ, அப்பொழுது அரசியலும் , புரட்சிகளும் மறைந்து, ஒரு சிறந்த இயல்பான உலகம் பரிணமிக்கும் - எந்த அரசியலும், புரட்சியும் தேவையில்லை. ஒருவன் , தன்னுடைய பாலுணர்வை அடக்கினால் , அவன் பணத்தின் மீது மோகம் கொள்வான் . அந்தப் பாலுணர்வு சக்தி எங்கேயோ, எப்படியோ சென்று செலவழியத்தான் வேண்டும் . ஒரு நூறு ரூபாய்த்தாளை, தன்னுடைய காதலியை, மிகப்பிரியத்துடன் பிடித்துக்கொண்டு இருப்பது போல , ஒருவன் தன் கையில் வைத்திருப்பதை, நீங்கள் பார்த்தது இல்லையா? அவர்களுடைய கண்களில் , அதே காமவெறி இருப்பதை, நீங்கள் பார்த்தது இல்லையா? ஆனால் , இது மிகவும்

' ' அருவருப்பானது.

ஒரு ஃபெண்ணின் மற்றும் ஒரு ஆணின் கையை, காதலுடன் , அன்புடன் பிடிப்பது, மிகவும் அழகானது. ஆனால், அதே விருப்பத்துடன், ஒரு ரூபாய் நோட்டை பிடிப்பது மிகவும் அருவறுப்பானது - அதுவெறும் மாற்றுதான்

உங்களால் மிருகங்களை ஏமாற்ற முடியாது. ஒரு நிகழ்ச்சி :

ஒருவன், தன் மகனை, ஒரு மிருகக்காட்சிச்சாலைக்கு, அங்குள்ள குரங்குகளைக் காட்ட அழைத்துச் சென்றான் . அந்தப் பையன் , அதுவரை, குரங்குகளையே பார்த்தது இல்லை. ஆனால், அவர்கள் அங்கே சென்று பார்க்கும் பொழுது. அங்கே எந்தக் குரங்கும் இல்லை. ஆகவே, அவன் மிருகச்சாலையை கண்காணிப்பவரைப் பார்த்து " என்ன நடந்தது? ஏன் ஒரு குரங்குகூட இல்லை' என்று கேட்டான்.

அதற்கு அந்த கண்காணிப்பவர் , " இப்பொழுது குரங்குகள் இணைசேரும் காலம் . ஆகவே, அவைகள் எல்லாம் கூண்டுக்குள் சென்றுவிட்டன." என்றார்.

அந்த மனிதனுக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. அந்தப் பையனை மிருகச்சாலைக்கு அழைத்துவர, பல மாதங்கள் முயன்றிருக்கிறார் . ஏனென்றால் , அவர்கள் மிக தொலைவிலிருந்து அங்கு வரவேண்டும் . இப்பொழுது என்ன செய்வது? இது உடலுறவுப் பருவமாம் ! ஆகவே, அவன் , ' நாம் கடலைகளை எறிந்தால், அவைகள் வெளியே வராதா?''

அது உங்களால் முடியுமா? அது நடக்காது''

ஆனால் , மனிதன் வெளியே வரலாம் என்று நான் நினைக்கிறேன் . நீங்கள் கொட்டைகளை எறிந்தால் , அவன் கண்டிப்பாக வெளியே வருவான் . ஆனால் , குரங்குகள் வெளியே வராது. ஏன் பணம் கொடுத்தால் கூட, அவை வெளியே வராது. அவைகள், "உன்னுடைய பணத்தை, நீயே வைத்துக்கொள் . எங்களுக்கு இதுதான் இனிமையான காலம் . எங்களுக்கு உன் பணம் தேவையில்லை! " என்றுதான் சொல்லும் . நீங்கள் இந்தியாவின் ஜனாதிபதி பதவியைக் கொடுத்தாலும், அவைகள் ஒருக்காலும் சம்மதிக்காது.

ஆனால் , மனிதனிடம் , அந்த ஜனாதிபதி பதவியைக் கொடுக்கிறேன் என்று சொன்னால் , அவன் , தன் காதலியைக் கொலை செய்யக்கூடத் தயங்கமாட்டான். அதுதான் நிலைமை என்றால் , அந்த காரியத்தை அவன் கண்டிப்பாகச் செய்வான் . இவைகளெல்லாம் பாலுணர்வுக்குப் பதிலாக இருப்பவைகள் . ஆனால் , இதைப்போல , விலங்குகளை நீங்கள் ஏமாற்ற முடியாது.

பல மாற்றுப் பொருள்களோடு தான், மனிதன் வாழ்ந்து கொண்டு இருக்கிறான் . ஆனால் , இவைகள் அனைத்தும் , பாலுணர்வுக்கு ஈடாகாது. பாலுணர்வு என்பது இயல்பானது. பணம் என்பது செயற்கையானது. பாலுணர்வுக் கவர்ச்சி என்பது இயல்பானது. ஆனால், அதிகாரம், கௌரவம்,

மரியாதை எல்லாம் செயற்கையானது. நீங்கள்

உண்மையிலேயே ஒன்றை வெறுக்க வேண்டும் என்றால் , பணத்தை வெறுங்கள் , அதிகாரத்தை வெறுங்கள் . கௌரவத்தை வெறுங்கள் . ஆனால் , எதற்காக அன்பை, காதலை வெறுக்க வேண்டும்?

பாலுணர்வு என்பது, இந்த உலகத்தில் உள்ள மிக அழகான தன்மைகளில் ஒன்று. ஆனால் அது கீழான நிலையில் தான் இருக்கிறது. அந்தக் கீழான நிலையிலிருந்துதான் , மிகவும் மேலான நிலைக்குச் செல்ல வேண்டும் - தாமரை, சேற்றிலிருந்துதான் முளைக்கிறது. ஆகவே, சேற்றை வெறுக்காதீர்கள் . அப்படிச் செய்தால் , எப்படி தாமரை அதிலிருந்து கிளம்பி, மேலே வந்து மலரும் ? அந்தச் சேற்றைப் பக்குவப்படுத்துங்கள் , அதற்கு உதவி செய்யுங்கள் . ஆனால் , தாமரை மலர் , அந்த சேற்றிலிருந்து வெகுதூரத்தில் இருக்கிறது. அவைகளுக்குள்ள உறவை, உங்களால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாது. நீங்கள் அந்தத் தாமரை மலரைப்பார்த்தால் , அது அந்த அசிங்கமான சேற்றிலிருந்துதான் வந்தது என்று உங்களால் ஒருக்காலும் நம்ப முடியாது. ஆனால், அது சேற்றிலிருந்துதான் வந்திருக்கிறது. அது, அந்த அசிங்கமான சேற்றின் வெளிப்பாடுதான் . அதாவது அசிங்கமான சேறு, இப்பொழுது தாமரையாக மலர்ந்து சிரிக்கிறது!

உடலிலிருந்து, ஆன்மா பிரிகிறது. அதைப்போல , பாலுணர்விலிருந்து, அன்பு பிரிக்கப்படுகிறது. பாலுணர்வு என்பது உடல் சம்மந்தப்பட்டது. ஆன்மா என்பது ஆன்மீகத்தைப் (SPIRTUAL) பொருத்தது. சேறு இல்லாமல் , தாமரை இருக்காது. பாலுணர்வு என்பது சேறு. அன்பு என்பது தாமரை ஆகவே, சேற்றை வெறுக்காதீர்கள்.

தந்த்ராவின் முழுச் செய்தியே, மிகவும் சுருக்கமானது. அது மிகவும் விஞ்ஞானப்பூர்வமானது மற்றும் இயல்பானது. அதனுடைய முக்கிய செய்தி என்னவென்றால் , நீங்கள் இந்த உலகத்தைவிட்டு அப்பால் செல்ல விரும்பினால் , இந்த உலகத்தில் ஆழமாக , முழு பிரக்ஞையோடு, ஜாக்கிரதையாகச் செல்லவும் என்பதுதான்.

கேள்வி 5:

'' அன்புள்ள குருவே, என்னிடம் நிறையக் கேள்விகள் இருக்கின்றன . ஆனால் , ஒவ்வொரு சமயம் , என் உள்ளே இருந்து ஒரு குரல் "கேட்க வேண்டாம். நீயே கண்டுபிடி'' என்று சொல்கிறது. ஆனால், இப்பொழுது என்னால் தாங்க முடியவில்லை. இந்தக் குரல் எங்கே இருந்து வருகிறது என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.'

இந்த கேள்வி தர்மசேட்னாவிடமிருந்து வந்திருக்கிறது.

என்னுடைய குரலை, உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லையா?

## 3. நான்கு அடைப்புகளை (முத்திரை) நீக்குதல்

## (BREAKING THE FOUR SEALS)

உயர்வான விழிப்புணர்வு ஒன்று என்று அவர்கள் உள்ளுக்குள் அனுபவித்ததை பிறருக்குப் போதிக்கிறார்கள் . அவர்களைப் பிணைத்துக் கொண்டிருக்கிற ஒன்றை விடுதலை என்று அவர்கள் சொல்வார்கள்.

பச்சை நிறக் கண்ணாடிக் கல் ஒன்றை அவர்கள் ( விலை உயர்ந்த ) மரகதக் கல் என்று கொண்டாடுவார்கள் . நவரத்தினம் எப்படி இருக்க வேண்டும் என்று அப்படி இல்லை இது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

தாமிரத்தை தங்கம் என்று கொண்டாடுவார்கள் . அவர்கள் இந்த எண்ணங்களே முடிவான உண்மை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் . கனவில் அனுபவிக்கும் சுகங்களைப் பெற விரும்புகிறார்கள் . அவர்கள் அழிந்துவிடும் இந்த உடலையும் பணத்தையும் பேரின்பம் என்கிறார்கள்.

சுயத் தெளிவு அடையப் பெற்றதாக அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

வெவ்வேறு சூழ்நிலைகளில் அதற்கு ஒரு முத்திரை வேண்டும் என்று அடம் பிடிப்பார்கள் . தன்னிச்சைத்

தன்மை அடைந்துவிட்டதாகவும்

அவர்கள் சொல்லிக் கொள்வார்கள் . இது எல்லாம் கண்ணாடியில் பிம்பங்களைப் பார்ப்பது போன்றதுதான்.

அறியாமையால் மான் கூட்டம் கானல் நீரை நீரெனக் கண்டு தாகம் தணிக்க ஓடுவது போல் சங்கிலிகளால் பிணைப்புண்டு அதில் இன்பம் கண்டு அதையே முடிவான உண்மை என்று அவர்கள் எல்லாம் சொல்லிக் கொள்வார்கள்.

தந்த்ரா என்பது ' உங்களுக்கு அப்பால் செல்வது என்பதாகும் . அது, இந்த உடலுறவு இன்பத்தில் , தீவிரமாக ஈடுபடுதல் என்றோ அல்லது அதை அடக்குதல் என்ற அர்த்தத்தில் இல்லை. அது, கயிற்றின்மேல் நடப்பதற்கு ஒப்பாகும் . அது மிகத் தந்திரமாக சமச்சீர் நிலையில் செயல்படுவது. அது, நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ளும் அளவுக்கு, அவ்வளவு சுலபமானது அல்ல . அதற்கு உங்களிடம் மிக நுண்மையான விழிப்புணர்வு வேண்டும். அது ஒரு சிறந்த ஒருங்கிணைந்த 'லயம்' (HORMONY)

( மனம் , மிகச் சுலபமாக ஒன்றில் ஈடுபட்டுவிடும் . அதற்கு மாறாக உள்ள 'விட்டு விடுதல் என்பதும் மிகச் சுலபம்தான் . மனம் , ஒன்றின் எல்லைக்குச் செல்வது (EXTREME) மிகவும் சுலபம் தான் . ஆனால் , அது சரியான நடுநிலைமையில் இருப்பது என்பது அதற்கு மிகவும் கஷ்டமான காரியம் . அந்த நடு நிலையில் , மனம் இறக்கிறது; மனமற்ற நிலை மேலே கிளம்புகிறது. ஆகவேதான் புத்தர் , தன்னுடைய பாதையை ' மஜ்ஹிம் நிக்கயா' (MAJJHIM NIKAYA) என்று அழைக்கிறார் - அதாவது ' நடுநிலைவழி' என்பதாகும்.

சாரஹாவை, புத்தருடைய சீடர் என்றும் அழைக்கலாம். ஏனென்றால் இருவருடைய புரிந்து கொள்தலும் , விழிப்புணர்வும் ஒன்று தான் . ஆகவே, தந்த்ராவின் அடிப்படைத் தன்மையை, நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும் . இல்லாவிட்டால் , நீங்கள் தந்த்ராவை, தவறாகப் புரிந்துகொள்ள நேரிடும் . இந்த கத்தியின் கூர்மை என்றால் (RAZORS EDGE) என்ன ? சரியான நடுநிலையில் உள்ள , அந்த உயிர்த்தன்மை (BEING)

அல்லது இருப்புநிலை என்ன?

இந்த உலகத்தின் ஆசைகளை அனுபவிக்க , எந்த பிரக்ஞைத்தன்மையும் தேவையில்லை. அதைப்போல, அந்த ஆசைகளை அடக்கவும் , எந்தப் பிரக்ஞை நிலையும் தேவையில்லை. நீங்கள் கருதும் இந்த உலகத்தை ஒட்டிய மக்களும் மற்றும் இந்த உலகத்தைத் துறந்த மக்களும் , எதிலும் வித்தியாசப்படவில்லை. அவர்கள், ஒருவர் முதுகுக்குப் பின்னால் , மற்றொருவர் நின்று கொண்டு இருக்கிறார்கள் . அவர்களிடம் பெருத்த வித்தியாசம் என்று எதுவுமில்லை. அவர்களுடைய மனங்கள் , கிட்டதட்ட ஒன்றுதான் . சிலபேர்கள் , பணத்தைப் பிடித்துத் தொங்கிக்கொண்டு இருக்கிறார்கள். மற்றும் சிலர் , பணத்துக்கு எதிராக செயல்படுகிறார்கள் ; இவர்கள் பண நோட்டுகளைக் கூட ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. அதைப் பார்த்து, அவர்கள் பயப்படுகிறார்கள், நடுங்கிக்கொண்டு

இருக்கிறார்கள் . இவர்களிடம் எந்த வித்தியாசமும் இல்லை - இருவருக்குமே பணம் மிக முக்கியமாகப்படுகிறது. ஒருவன் அதில் பேராசை கொள்கிறான் ; அடுத்தவன் அதைக்கண்டு மிகவும் பயப்படுகிறான் . ஆனால் , அந்தப் பணத்தின் முக்கியத்துவம் , இருவரிடையே ஒன்றுபோலவே இருக்கிறது - இருவருமே பணத்தினால் ஆக்ரமிக்கப்படுகிறார்கள்.

ஒருவன் எப்பொழுதும் பெண்களைப் பற்றி எண்ணியவாறு கற்பனைகளில் மூழ்கி, கனவுகளைக் கண்டுகொண்டு இருப்பான் . அடுத்தவன் , பெண்களைப்பற்றி, பயந்துகொண்டு, அவர்களைத் தவிர்க்க , இமயமலைக்கு ஓடுகிறான் . ஆனால் , இருவருமே ஒரே நிலையில்தான் இருக்கிறார்கள் இருவருக்குமே, பெண்கள் முக்கியமாகப்படுகிறார்கள், பெண்களாக இருந்தால் , ஆண்களைக் கண்டு முக்கியமாகப் பயப்படுகிறார்கள் . ஒருவர் மற்றவர்களை விரும்பியோ அல்லது தவிர்த்தோ வாழ்கிறார்கள் . இருவருக்குமே, அடுத்தவர்கள் தான் முக்கியம் . தந்தரா சொல்வது என்னவென்றால் , எந்த

வழியிலும் , அடுத்தவர்கள் ( ஆண் - பெண் ), உங்களுக்கு முக்கியமாகப்படக் கூடாது. ஆனால், மிக நன்றாகப் புரிந்துகொள்தல் மூலமாகவே, இது நடக்க முடியும் . ஒரு பெண்ணிடம் ஏற்படும் காமவெறியை, சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும் . அதில் ஒருவன் மிக்க ஈடுபாடு கொண்டோ அல்லது தவிர்த்தோ வாழக்கூடாது. ஆனால் , அதை சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும் . தந்த்ரா மிகவும் விஞ்ஞானப்பூர்வமானது.

விஞ்ஞானம் ' என்ற வார்த்தைக்கு புரிந்து கொள்தல் மற்றும் அறிந்து கொள்தல் என்றுதான் அர்த்தம் புரிந்துகொள்தல் மற்றும் அறிந்து கொள்ளுதல் , உங்களை விடுவிக்கும் என்று தந்த்ரா சொல்கிறது. நீங்கள் , உங்களுடைய பேராசையை சரியாகப் புரிந்துகொண்டால் , நீங்கள் அதிலிருந்து விடுதலையடைகிறீர்கள் . அதைத் துறக்க வேண்டிய அவசியம் இல்லை. அதை சரியாகப் புரிந்துகொள்ளாத நிலையில்தான் , நீங்கள் அதைத் துறக்க வேண்டும் என்ற விபரீத ஆசை ஏற்படுகிறது. அதைப்போல , பாலுணர்வை துறக்க வேண்டும் என்ற எண்ணம் ஏன் ஏற்படுகிறது என்றால் , நீங்கள் பாலுணர்வு என்றால் என்ன என்பதைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அதை, இந்த சமூகம் அனுமதிக்கவில்லை

இந்த சமூகம் , நீங்கள் அதை சரியாகப் புரிந்துகொள்ளாமல் இருக்க , மிகவும் உதவியாக இருக்கிறது. பல நூற்றாண்டு காலமாக, இந்த சமூகம், பாலுணர்வை, பலவழிகளிலும் தடுத்தே வந்திருக்கிறது. அதைப்பற்றி பேசக் கூடாது, நினைக்கக்கூடாது, எழுதக்கூடாது, அதைப்பற்றி ஆராய்ச்சி செய்யக்கூடாது என்றும் மற்றும் அதைத் தவிர்க்க வேண்டும் என்றே, அது வற்புறுத்தி வந்திருக்கிறது. இதனால் , அதைப்பற்றி மிகுந்த அறியாமை, மக்களிடம் நிலவுகிறது. அந்த அறியாமைதான் , எல்லாவற்றிற்கும் அடிப்படைக் காரணம் . இதனால் , இரண்டு வகையான மக்கள் உலவுகிறார்கள் . ஒரு வகை, அதில் பைத்தியமாக ஈடுபடுகிறார்கள் . அடுத்தவகை, மிகவும் களைப்படைந்து, தப்பித்து ஓடுகிறார்கள்.

ஓஷோ

தந்த்ரா சொல்வது என்னவென்றால் , யார் ஒருவன் , அதே நினைவாக பைத்தியமாக அலைகிறானோ, அவனால் , அதை ஒருக்காலும் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது. அவன் , அந்த பழக்கத்தை திரும்பத் திரும்ப செய்யவே முயல்வான் . அவன் , அந்தப் பழக்கத்தை உற்றுக் கவனிக்கமாட்டான் , அதனுடைய ஆணிவேர் எங்கே இருக்கிறது என்பது புரியாது. அதன் காரணத்தை, அவனால் ஒருக்காலும் உற்றுக் கவனிக்க முடியாது. எந்த அளவுக்கு, அவன் அதில் ஈடுபடுகிறானோ, அந்த அளவுக்கு, அவன் அதில் இயந்திரத்தனமாகி விடுகிறான்.

நீங்கள் கவனித்தது இல்லையா? உங்களுடைய முதல் காதல் , மிகப் பிரமாதமாக இருக்கும் , அடுத்த காதல் , அதைவிடச் சற்று குறைவாக இருக்கும் , மூன்றாவது காதல் , சாதாரண நிலையில் இருக்கும் . நான்காவது காதல் , மிகவும் சாதாரணதுக்கு வந்துவிடும் . என்ன நிகழ்ந்தது? ஏன் , முதல் காதல் , மிகவும் அற்புதமாக இருக்கிறது? எதற்காக , மக்கள் வாழ்வில் , ஒரே ஒரு தடவைதான், காதல் ஏற்படும் என்று சொல்கிறார்கள்? ஏன் ? ஏனென்றால் , முதல்தடவை, அது இயந்திரத்தனமாக இருக்கவில்லை. ஆகவே, அதைப்பற்றி சிறிது பிரக்ஞை நிலையில் இருக்கிறீர்கள். அடுத்த தடவை, நீங்கள் அதைப் போல எதிர்பார்க்கிறீர்கள் . மூன்றாவது தடவை, அதைப்பற்றித் தெரியும் என்று எண்ணுகிறீர்கள் . ஆகவே, அதில் புதிதாக கண்டுபிடிப்பதற்கு, எதுவுமே இல்லை என்று ஈடப்படுகிறீர்கள். நான்காவது தடவை, நீங்கள் மிகவும் இயந்திரத்தனமாக அந்தப் பழக்கத்தில், நிலைகொள்கிறீர்கள்.

ஆகவே, பாலுணர்வில் வெறிபிடித்து அலைந்தால் , அது ஒரு பழக்கமாகிவிடுகிறது. ஆமாம் . அது சிறிது ஓய்வு கொடுப்பது சரிதான் - அதாவது சளியை மூக்கிலிருந்து வெளியேற்றுவதுபோல ; அதற்குமேல் எதுவும் இல்லை. அது, உடலளவில் , சக்தியை வெளியேற்றுதலதான் . அந்த சக்தி, உங்களிடம் ஒரு சுமையாக இருக்கிறது. நீங்கள் , அந்த சக்தியை, உணவு மூலம், உடற்பயிற்சி மூலம் மற்றும் சூரிய ஒளி மூலம் மீண்டும் பெறுவதற்காக , அதை வெளியேற்றத்தான் வேண்டும் . மறுபடியும் , அதை

சேகரித்து, மறுபடியும் வெளியே தள்ள வேண்டும். இதைத்தான், உடலுறவை இயந்திரத்தனமாகச் செய்பவர்கள், செய்துகொண்டு இருக்கிறார்கள். இப்படி சக்தியை சேகரித்து, வெளியே தள்ளுவதால், நீங்கள் அடையப்போவது என்ன ? அதில் எந்த முக்யத்வமும் இல்லை, எந்தப் பெரிய நோக்கமும் இல்லை. அந்தச் சக்தி வளருவதால், ஒருவித பரபரப்பால் இறுக்கத்தால் கஷ்டப்படுகிறீர்கள். அதை வெளியேற்றிய பிறகு, உடல் தளர்வால் கஷ்டப்படுகிறீர்கள். ஆகவே, இரண்டு நிலைமைகளிலும், நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள்!

உடலுறவில், மிகுந்த ஈடுபாட்டுடன் இருப்பவன், சந்தோஷமான மனிதன் என்று ஒருக்காலும் நீங்கள் நினைக்க வேண்டாம். ஒருக்காலும் இல்லை! இந்த உலகத்திலேயே, மிகவும் துன்பப்படுபவன் அவன்தான். எப்படி அவனால் மகிழ்ச்சியாக இருக்க முடியும்? அவன் எதிர்ப்பார்க்கிறான், அந்த மகிழ்ச்சியில் மீண்டும் மீண்டும் ஈடுபட ஆசைப்படுகிறான். ஆனால், அந்த ஆசையின் முழுமையை, அவனால் ஒருக்காலும் அடையவே முடியாது.

ஆனால், நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். இப்படி சொல்வதால் நீங்கள் அடுத்தமுனைக்கு நகரவேண்டும் என்று தந்த்ரா அறிவிக்கவில்லை. இந்த ஆசாபாசங்கள் நிறைந்த உலகத்திலிருந்து, நீங்கள் தப்பித்துச் செல்ல வேண்டும் என்று தந்த்ரா விரும்பவில்லை. தப்பிச் செல்லுதல் கூட, மீண்டும் ஒரு இயந்திரத்தனமான செயலாகிவிடும். ஒரு குகையில் உட்கார்ந்திருந்தால் உங்களுக்கு ஒரு பெண் கிடைக்காமல் போகலாம். ஆனால், அதனால் பெருத்த வித்தியாசம் ஏதும் ஏற்படப்போவது இல்லை. ஏனென்றால், அந்த நிலையில், யாராவது ஒரு பெண் அகப்பட்டால், காமவெறிபிடித்த அதே பழக்கத்தில் உள்ள மனிதனைவிட, இந்த ஆள் மிகமிக மோசமாக நடந்துகொள்வான். ஏனென்றால், ஒருவன் எதைத் தீவிரமாக அடக்குகிறானோ, அது, மிக ஆழத்தில், மிகவும் சக்தி படைத்ததாகிவிடுகிறது; மற்றும், அது கவர்ச்சி மிக்கதாகவும், காந்தம் போல், உங்களை

தன்வசம் இழுக்கும் தன்மை படைத்ததாகிவிடுகிறது. அது, பல கோணங்களிலிருந்தும் சக்தியைப் பெறுகிறது.

இந்த நிகழ்ச்சியை கவனியுங்கள்.

ஒரு அழகிய பூங்காவின் நடுவில் , இரண்டு வெண்கலச் சிலைகள் , நிறுத்தப்பட்டிருந்தன ( ஒன்று ஆண் , மற்றொன்று பெண் ) அவைகள் இரண்டும் காதல் பார்வை பார்த்துக்கொண்டு, தங்கள் கைகளை ஆவலுடன் நீட்டியவாறு ( தொடாமல் ) சுமார் 300 ஆண்டுகளாக நின்று கொண்டு இருந்தன . ஒருநாள், ஒரு மந்திரவாதி, அந்தச் சிலைகளைப் பார்க்க நேர்ந்தது. அவன் கருணையோடு , " இந்தச் சிலைகளுக்கு, ஒருமணிநேரம்வரை உயிர் கொடுக்க என்னால் முடியும் . இதை நான் இப்பொழுது செய்யப் போகிறேன் . பாவம் , இந்த காதலர்கள் , ஏங்கித் தவிக்கிறார்கள் . அந்த ஒரு மணிநேரம் , இவர்கள் சல்லாபித்து இருக்கட்டும்" என்று சொல்லி, அவன் சில வார்த்தைகளை முணுமுணுத்தான் . உடனே, அந்தச் சிலைகள் உயிர்பெற்று, பக்கத்தில் உள்ள புதருக்குள் மிக மகிழ்ச்சியாக ஓடிவிட்டன . பிறகு, அங்கிருந்து விதவிதமான குரல்கள் , சப்தங்கள் போன்றவைகள் கேட்க ஆரமபித்தன . அடக்க முடியாத ஆவலில் , அந்த மந்திரவாதி, அங்கே சென்று இலைகளை நீக்கி, என்ன நடக்கிறது என்று பார்க்கிறான்.

அந்தப் பையன் , ஒரு பறவையைப் பிடித்துக்கொண்டு நிற்க , அந்தப்பெண் , அதன்மீது தன் சிறுநீரை விட்டுக்கொண்டிருந்தாள் . திடீரென்று அவன் எம்பி குதித்து அவளிடம் , "இப்பொழுது உன்னுடைய முறை நீ இதை சரியாகப் பிடித்துக்கொள் . நான் அதன்மீது என் சிறுநீரை கழிக்கப்போகிறேன் ' என்றான்.

300 வருடங்களாக , அந்தச் சிலைகளின் மீது, பறவைகள் எச்சம் விட்ட விளைவு, அந்த சிலைகளிடம் பழி வாங்கும் எண்ணத்தைத் தோற்றுவித்து, அது ஆழமாகப் பதிந்துவிட்டது. இப்பொழுது உயிர்பெற்றதும், அந்தப் பழிவாங்கும் எண்ணம், மிகத் தீவிரமாக மேலே கிளம்பிவந்துவிட்டது. காதல் பண்ணுவதா இப்பொழுது முக்கியம்?!

நீங்கள் ஒரு குகைக்குள் சென்று, அங்கு ஒரு சிலை

போல அமர்ந்திருக்கலாம் . ஆனால் , உங்களால் அடக்கப்பட்ட உணர்வுகள் , உங்கள் மன ஆழத்தில் வட்டமடித்துக்கொண்டேதான் இருக்கும் . நீங்கள் இப்பொழுது அதைப்பற்றித்தான் தீவிரமாக நினைத்துக்கொண்டு இருப்பீர்கள்.

தந்த்ரா சொல்கிறது. " உஷார் ! மிகுந்த ஈடுபடுதலில் ஜாக்கிரதையாக இருந்து, தவிர்க்கவும். அதைப்போல துறவு எண்ணத்திலும் ஜாக்கிரதையாக இருந்து தவிர்க்கவும். இரண்டிலும், ஜாக்கிரதையாக இருங்கள். இரண்டுமே, எலிப்பொறிபோலத்தான். இந்த இரண்டில் ஒன்றில் , உங்கள் மனம் ஈடுபட ஆரம்பித்துவிடும் . அப்புறம் ஏது வழி?" என்று.

தந்த்ரா சொல்வது என்னவென்றால் பிரக்ஞைத் தன்மைதான் சரியான வழி. மிக்க ஈடுபாடும் , அடக்குதலும் இயந்திரத்தனமானது. இந்த இயந்திரத்தனமான செயல்களிலிருந்து விடுபட பிரக்ஞைத் தன்மையும் , ஜாக்கிரதை உணர்வும்தான் ஒரே வழி. நீங்கள் இமயமலைக்கு ஓடவேண்டாம் . இமயமலையின் அமைதியை, உங்களுக்குள்ளே கொண்டு வாருங்கள். தப்பித்துச் செல்ல வேண்டாம். ஆனால் , மேலும் மேலும் ஜாக்கிரதை உணர்வுடன் இருங்கள் , உங்களுடைய மன ஆழத்தில் உள்ளவைகளை, பயம் ஏதும் இல்லாமல் , நன்றாகக் கவனிக்கவும். உங்களுடைய மதத்தலைவர்கள் என்று அழைக்கப்படுபவர்களால் , சொல்லப்படும் கருத்துக்களில் கவனம் செலுத்த வேண்டாம். அவர்கள் எப்பொழுதும் உங்களைப் பயத்திலேயே வைப்பார்கள். அவர்கள் , உங்களுடைய பாலுணர்வையும் , உங்களுடைய மன இறப்பையும் காண அனுமதிக்கமாட்டார்கள் . உங்களுடைய பயத்தை, எப்படித் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்துவது, உங்களை எப்படி ஏமாற்றுவது என்பதிலேயே அவர்கள் குறியாக இருப்பார்கள்.

ஒருவனை, தன் இஷ்டப்படி நடக்கவைக்க , ஒரேவழி, முதலில் அவனிடம் ஒருவித பயத்தை உண்டுபண்ண வேண்டும் . நீங்கள் பயந்துவிட்டால் , நீங்கள் அதற்கு

தயாராக இருக்கிறீர்கள் என்று அர்த்தம் . பயம்தான் ஆரம்பநிலை அல்லது அடித்தளம் . உடலுறவு என்பது பாபம் என்ற பயத்தை உங்களிடம் ஏற்படுத்தியிருக்கிறார்கள் . இப்பொழுதுங்கூட , ஒரு பெண்ணோடு / ஆணோடு காதல் செய்வதை, உங்களால் நேரடியாகப் பார்க்க முடியாது. அதைத் தவிர்க்கவே முயல்வீர்கள் . அதாவது, நீங்கள் காதலில் ஈடுபட்டும் மற்றும் அதை தவிர்த்தும் வருகிறீர்கள் . அதனுடைய உண்மை நிலையை, நீங்கள் பார்க்க விரும்பவில்லை அதன் உண்மையான தன்மை என்ன, அது எப்படி உங்களை முழுமையாக ஆக்ரமிக்கிறது. அது என்ன கொடுக்கிறது, எங்கே உங்களை அழைத்துச் செல்கிறது, அதனுள்ளே என்ன நிகழ்கிறது. அதற்கு வெளியே என்ன நிகழ்கிறது, அந்தக் காதல் உறவால் , நீங்கள் மீண்டும் , மீண்டும் எங்கே வருகிறீர்கள் , எதையாவது நிலையாக அடைந்திருக்கிறீர்களா? இப்படிப்பட்ட பல விஷயங்களை, நீங்கள் எதிர்கொள்ள வேண்டும் , ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

வாழ்வின் உண்மைநிலையை, எதிர்கொள்வதுதான் , தந்த்ராவின் நோக்கம். அதற்கு ஆதாரம் உடலுறவுதான்; அதைப்போல மன இறப்பும் . மூலதார் மற்றும் சுவாதிஸ்த்தான் என்ற இரு சக்கராக்கள் தான் , தந்த்ராவுக்கு, மிகவும் அடிப்படையானவைகள் . இந்த இரண்டு சக்கராவை, நீங்கள் சரியாகப் புரிந்துகொண்டால் , மூன்றாவது சக்கரா திறக்கிறது. இது திறந்ததும், அடுத்து

நான்காவது சக்கரா திறக்கிறது. இப்படியே செல்கிறது. நீங்கள் ஆறாவது சக்கராவை புரிந்துகொள்ளும் பொழுது, அந்த புரிந்துகொள்தலே, ஏழாவது சக்கராவைத் திறக்க வழிவகுக்கிறது. அப்பொழுது, அது ஆயிரம் இதழ்கள் கொண்ட மலராக மலர்கிறது. அதுதான் மிகமிகப் பெருமை வாய்ந்த தெய்வீகநிலை. அந்த நாளில்தான், கடவுள் உங்களை நோக்கி வருகிறார், மற்றும் நீங்கள் கடவுளை நோக்கிச் செல்கிறீர்கள் . அந்த நாள் தான் சங்கம (MEETING)நாளாகும். அந்த நாள் தான், அந்தத் தெய்வீகப் பேரானந்த நிலையாகும் (COSMIC

ORGASM) அந்தத் நாளில் , அந்தத் தெய்வீக சக்தி, உங்களைத் தழுவுகிறது; நீங்களும் அதைத் தழுவுகிறீர்கள் . அந்த நாளில் , நதி கடலில் கலந்து மறைந்துவிடுகிறது. அவ்வளவுதான் . பிறகு, நதி ஒருபோதும் திரும்பிவராது.

ஆகவே, ஒவ்வொரு மனநிலையிலிருந்து, புரிந்து கொள்தல் , மேலும் , மேலும் அதிகரிக்கிறது. நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும் , ஒன்றும் பயப்படவேண்டாம் . இதுதான் தந்த்ராவின் முக்கிய செய்தி. நீங்கள் எங்கே இருந்தாலும், ஒன்றே ஒன்றை விட்டு விடவேண்டும் - அதுதான் பயம் . நீங்கள் ஒன்றில் மட்டும்தான் , பயப்படவேண்டும் - அதுதான் பயம்.

மிகுந்த தைரியத்தோடு, எந்தவிதப் பயமும் இல்லாமல், உண்மை நிலையை கவனிக்கவும் . அந்த உண்மைநிலை எப்படி இருந்தாலும் , நீங்கள் ஒரு திருடனாக இருந்தாலும், அதன் தன்மையை ஆழமாகக் கவனியுங்கள் . நீங்கள் கோபம் உடையவராக இருந்தால் , அந்தக் கோபத்தை ஆழமாகப் பாருங்கள் ; அதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுங்கள் . நீங்கள் கஞ்சத்தனமும், பேராசையும் உடையவராக இருந்தால், அவைகளை வெறுமனே கவனிக்கவும். நீங்கள் எங்கே இருந்தாலும் , எந்த நிலையில் இருந்தாலும் , அதை ஆழமாகப் பார்க்கவும் . அதைவிட்டு தப்பிச் செல்ல முயலவேண்டாம் . அவைகளை நன்றாகப் பாருங்கள் , அதற்குள் ஆழமாகச் செல்லுங்கள் , அதைச் சரியாகப் புரிந்து கொள்ளுங்கள் . நன்றாகக் கவனியுங்கள் . நீங்கள் பேராசை, பாலுணர்வு, கோபம் , பொறாமை ... இவைகளுக்குள், உங்கள் கண்களைத் திறந்து (மனம்) கொண்டு பயமில்லாமல் , ஆழமாகச் சென்றால் , நீங்கள் அதிலிருந்து விடுதலையடை கிறீர்கள் . இதுதான் தந்த்ராவின் சத்தியம் : உண்மை உங்களுக்கு விடுதலை அளிக்கிறது. அறிந்து கொள்ளுதல் , உங்களை விடுவிக்கிறது. அறிந்து கொள்ளுதலே, விடுதலை மாறாக , நீங்கள் அதை அடக்கினாலும் , இயந்திரத்தனமாக மிகவும் ஈடுபட்டாலும், அவைகளின் முடிவு ஒன்றுதான்.

ஒரு நிகழ்ச்சி:

ஒருவன் , மிக அழகான ஒரு பெண்ணை தன்

மனைவியாக்கிக் கொண்டான். ஆனால், அவள்மேல், எப்பொழுதும் சந்தேகப்பட்டவாறே இருந்தான்.

அது இயற்கைதான் . உங்களுடைய மனைவி, எவ்வளவுக்கெவ்வளவு அழகாக இருக்கிறாளோ, அவ்வளவுக்கவ்வளவு, நீங்கள் சந்தேகம் உடையவராக இருப்பீர்கள்!

முல்லா நசுருதீன், மிக அசிங்கமான, அருவருப்பான ஒரு பெண்ணை தேர்ந்து எடுத்து, திருமணம் செய்துகொண்டார்.

நான் அவரிடம், 'என்ன முல்லா? என்ன உனக்கு? நீ . ஏன் இப்படி ஒரு காரியத்தைச் செய்தாய்?"

" வேறு ஒன்றும் இல்லை. சரியாகப் புரிந்து கொண்டேன்? "என்ன புரிந்து கொண்டீர்கள்?"

'இப்பொழுது, நான் ஒருபோதும் சந்தேகப்படமாட்டேன், ஏனெனில் என் மனைவியை, எவனும் காதலிப்பான் என்று நான் கற்பனை கூடச் செய்ய முடியாது.'

ஆகவே, இரண்டு பேர்களும் ஒரே வழியில்தான் செல்கிறார்கள் - நீங்கள் இமயமலையில் இருந்தாலும் சரி, அல்லது இந்த உலகத்தில் இருந்தாலும் சரி, அவைகள் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தப்போவது இல்லை. ஒன்றை அடக்குதலும், மற்றும் அதில் பிரக்ஞையின்றி, மிகவும் ஈடுபடுதலும், ஒரே செயற்பாடும் , ஒரே பலனையும் கொடுக்கும் தன்மை படைத்தது. அவைகளுடைய வெளித்தோற்றம் வெவ்வேறானது. ஆனால் , அதன் உள்தன்மை ஒன்றுதான்.

பிரக்ஞைநிலை, உங்கள் வாழ்க்கையின் தன்மையையே , மாற்றிவிடும். பிரக்ஞைநிலையில், எல்லாமே மிகவும் மாறிக்கொண்டே இருக்கும். அந்த மாறுதல் , நீங்கள் பார்க்கும் பொருளில் அல்ல ; உங்களிடம் தான் பிரக்ஞைநிலையில் உள்ளவன் , எதையும் மாற்ற மாட்டான் . பிரக்ஞையற்ற மனிதன் தான், எல்லாவற்றையும் மாற்ற முயல்வான். ஆனால், அவனால் எதையும் முழுமையாக மாற்ற முடியாது. பிரக்ஞையுள்ள மனிதன், மாற்றம் தானே நிகழ்வதை,

வெறுமனே பார்த்துக்கொண்டு இருப்பான் . அப்பொழுது, அவனிடம் பெருத்த மாறுதல் ஏற்படும் . உங்களுடைய முயற்சி என்று ஏதும் இல்லாமல் , உங்களுடைய பிரக்ஞைநிலை, அந்த மாறுதலை உண்டாக்கும் . நீங்கள் வேறு ஒரு வித்தியாசமான நிலையில் இருப்பதால் , இந்த உலகமும் வித்தியாசமான நிலையில் தான் காணப்படும். நீங்கள் இப்பொழுது ஒரு வித்தியாசமான உலகத்தை உண்டுபண்ணவில்லை. ஆனால், நீங்களே உங்களிடம் ஒரு வித்தியாசமான நிலையை உண்டு பண்ணிக் கொள்கிறீர்கள் . நீங்கள் உங்கள் உலகத்தில்தான் இருக்கிறீர்கள் - ஆகவே, நீங்கள் மாறினால் , இந்த உலகமும் உங்களைப் பொறுத்த அளவில், மாறிவிடும். நீங்கள் மாறாமல் , இந்த உலகத்தை மட்டும் மாற்ற நினைத்தால் - எந்த மாறுதலும் ஏற்படாது. நீங்கள் அதே உலகத்தைத்தான் மீண்டும் ஏற்படுத்துவீர்கள்.

நீங்கள் , உங்களுக்கென்று ஒரு உலகத்தை ஏற்படுத்திக் கொள்ளலாம் . பிரக்ஞைத் தன்மை என்பதுதான் அதன் சாவி; அதாவது வாழ்வின் எல்லா கதவுகளுக்கும் பொருந்தும் ஒரே சாவி என்று தந்த்ரா சொல்கிறது.

ஆகவே, நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . மேற்கண்ட விஷயங்கள் உண்மையிலேயே மிகவும் சங்கடமானதுதான். நான், அடக்குதலில்

உள்ள முட்டாள்தனத்தைப் பற்றி பேசினால் , நீங்கள் மிக்க ஈடுபாட்டைப் பற்றி நினைக்க ஆரம்பித்து விடுவீர்கள். அதைப்போல , ஈடுபாட்டில் உள்ள முட்டாள்தனத்தைப் பற்றி பேசினால் , நீங்கள் அடக்குதலைப்பற்றி நினைக்க ஆரம்பித்துவிடுவீர்கள் . அது ஒவ்வொரு நாளும் நிகழ்கிறது. நீங்கள் உடனே எதிர்முனைக்கு ஓடிவிடுகிறீர்கள் . எதிர்முனையால் தூண்டப்படாமல் இருக்க வேண்டும் என்பதே இங்கு முழு விஷயமாகிறது.

இப்படி எதிர்முனையால் தூண்டப்படுவதை, சாத்தான்தான் தூண்டுவதாக அர்த்தம் பண்ணிக்கொள்ளலாம் . தந்த்ராவின்படி,

எதிர்முனைதான் அந்த சாத்தான் . வேறு சாத்தான் என்று எதுவும் இல்லை. உங்கள் மனம் இப்படி தந்திரமாக , அடுத்த முனைக்குச் செல்லத்தூண்டுவதுதான் அந்த ஒரே சாத்தான் நீங்கள் ஈடுபாட்டுக்கு எதிராக செயல்பட்டால் , மனம் என்ற அந்த சாத்தான் " மிக எளிது. .. அதாவது அடக்குதல் . அதில் தீவிரமாக ஈடுபடவேண்டாம் , தப்பித்துச் செல் . இந்த உலகத்தையே துறந்துவிடு. அதைப்பற்றி நினைப்பதை விட்டுவிடு. இது மிக எளிது. அதற்காக ஏன் , மலையை நோக்கி, நீ ஓட வேண்டும் ? எதற்காக பயப்படவேண்டும் ? இவ்வளவு எளிதாக , அந்தப் பாலுணர்வை மறக்கும் வழி இருக்கும் பொழுது, நீ இங்கேயே இருந்து கொண்டு மறக்கலாமே? " என்று சொல்லி, அடக்குதலை வற்புறுத்தும்.

ஆனால், உங்களால் இங்கு அடக்கிக்கொண்டு இருக்க முடியாது. இந்த உலகம் அதைத் தூண்டிவிடும் என்று உங்களுக்கு மிக நன்றாகத் தெரியும். ஆகவே, இப்படித் தவறாகப் புரிந்து கொள்தலால் , எந்தப் பிரயோஜனமும் இல்லை. உங்களுடைய ஆசைகளிலிருந்து, அந்தத் தூண்டுதல் ஏற்பட்டால் , நீங்கள் கண்டிப்பாக அதற்கு பலியாகிவிடுவீர்கள் . அது உங்களுக்கும் தெரியும் . ஆகவே, அது நிகழ்வதற்கு முன்பே, நீங்கள் வெகுவேகமாக தப்பித்து ஓட நினைக்கிறீர்கள் . அந்த சந்தர்ப்பத்துக்கு இடம் கொடுக்காமல் , நீங்கள் தப்பிக்க நினைக்கிறீர்கள் . ஏன்? எதற்காக?

இந்தியாவில் , தங்களை சந்நியாசிகள் என்று அறிவித்துக்கொள்பவர்கள் . தங்கள் வீட்டிலேயே தங்க முடியாது. எதற்காக இந்தப் பயம் ? இந்தியாவில் , சந்நியாசம் பூண்டவர்கள் , பெண்களைத் தொடக்கூடாது; பார்க்கக்கூடக் கூடாது? ஏன்? எதற்காக இந்த பயம்? எங்கே இருந்து, இந்த பயம் எழும்பியது? -

அவர்கள் அந்த சந்தர்ப்பத்தை தவறவிட்டதிலிருந்துதான் . இப்படி சந்தர்ப்பத்தைத் தவறவிடுவது என்பது பெரிய சாதனை இல்லை. சந்தர்ப்பங்களை தவறவிட்டு விட்டு, அவர்கள் அடையும் பிரம்மச்சரியம் என்பது வெறும் பொய்தான் ; உண்மை இல்லை.

ஆகவே, சந்தர்ப்பங்களைத் தவிர்ப்பதினால் , எந்தப்

பிரயோஜனமும் இல்லை. அது ஒரு பொய்யான கருத்து. நீங்கள் அதை நம்பலாம், ஆனால், கடவுளை உங்களால் ஏமாற்ற முடியாது. உண்மையில், நீங்களே, உங்களை ஏமாற்றிக் கொள்ள முடியாது. எவைகளையெல்லாம் நீங்கள் ஒதுக்கி, அடக்கி வைத்திருக்கிறீர்களோ, அவைகள் தொடர்ந்து உங்களுடைய கனவுகளில்

மீண்டும், மீண்டும் வந்து கொண்டே இருக்கும். அது உங்களைப் பைத்தியமாக்கிவிடும். நீங்கள் குறிப்பிடும் அந்த சந்நியாசிகள், சரியாகத் தூங்குவது கூட இல்லை. அவர்கள் தூங்கவே பயப்படுகிறார்கள். ஏன்? ஏனென்றால், நீங்கள் தூங்கும் பொழுது, உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் விழித்துக்கொண்டு, எவைகளையெல்லாம் அடக்கி வைத்திருக்கிறீர்களோ, அவைகளெல்லாம், உங்களுடைய கனவுகளின் மூலம் தங்களை உறுதிப்படுத்தும். உங்களுடைய பிரக்ஞையற்ற மனம், " இங்கே நீ என்ன செய்து கொண்டு இருக்கிறாய்? நீ ஒரு முட்டாள் ?" என்று சொல்லி, அது தன்னுடைய வலையை மீண்டும் விரிக்கும்.

நீங்கள் விழித்திருந்தால், அதை அடக்கலாம். ஆனால், நீங்கள் தூங்கும் பொழுது, அதை எப்படி அடக்க முடியும் ? உங்களுடைய அடக்கும் திறனை, நீங்கள் இழக்கிறீர்கள். உங்களுடைய பிரக்ஞைமனம்தான், அதை அடக்கிக்கொண்டு இருக்கிறது. ஆனால், அதுதான் தூங்கச் செல்ல வேண்டும். ஆகவேதான், பழங்காலச் சந்நியாசிகள், தூங்குவதற்கு எப்பொழுதும் பயந்துகொண்டு இருப்பார்கள். அவர்கள், தங்கள் தூக்கத்தை, 8 மணியிலிருந்து 7 மணிவரை, 7 லிருந்து, 6, 6 லிருந்து, 5, 4,3,2 என்று குறைத்துக்கொண்டே வருவார்கள். ஆனால், முட்டாள் ஜனங்கள், இதை ஒரு பெரிய செயல் ' என்று நினைத்துக் கொண்டுவிடுவார்கள். அவர்கள், "இந்த சந்நியாசி மிக உயர்ந்தவர். இவர் ஒரு நாளைக்கு 2 மணி நேரம்தான் தூங்குகிறார்" என்று நினைத்துக் கொள்வார்கள். உண்மையில், அது ஒன்றை மட்டும்தான் எடுத்துக்காட்டுகிறது. அதாவது, அவர், தன்னுடைய பிரக்ஞையற்ற மனதைக் கண்டு தான்

பயப்படுகிறார் . அது தன்னை வெளிப்படுத்திக்கொள்ள , அவர்கள் அனுமதிப்பதே இல்லை.

நீங்கள் இரண்டு மணி நேரம் தூங்கினால் , உங்களுடைய பிரக்ஞையற்ற மனம் , தன்னை வெளிப்படுத்தாது. ஏனென்றால், அந்த 2 மணி நேரம், உங்களுடைய உடல் ஓய்வுக்குத் தேவைப்படும் . அப்பொழுது நீங்கள் அழகான , அருமையான கனவுகளைக்காண முடியும் . அந்த 2 மணி நேரம் , அதற்குள் முடிந்துவிடும் - ஆகவேதான , நீங்கள் விடிகாலையில் , நல்ல கனவுகளைக் காண்கிறீர்கள் . முதலில் , உடல் தேவை பூர்த்தி செய்யப்படுகிறது. பிறகு, மனம் ஓய்வு எடுக்க ஆரம்பிக்கிறது - இது அடுத்ததுதான்.

மனம் ஓய்வில் இருக்கும் பொழுது, பிரக்ஞையற்ற மனமும் ஓய்வுத்தன்மையில்தான் இருக்கும் . அப்பொழுது, அது, அந்த அடக்கப்பட்ட ஆசைகளை வெளிப்படுத்த , அது கனவாக மாறுகிறது. நீங்கள் இரவில் இரண்டு மணி நேரம்தான் தூங்கினாலும் , கனவுகள் வரலாம். ஆனால் , அவைகளை உங்களால் ஞாபகப்படுத்த முடியாது. ஆகவேதான் , உங்களுக்குக் காலையில் உதிக்கும் கனவுகளை மட்டும்தான் ஞாபகத்துக்குக் கொண்டுவர முடிகிறது. இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட நேரத்தில் , நீங்கள் ஆழமாகத் தூங்குகிறீர்கள் . அதனால் , அவைகளை உங்களால் ஞாபகப்படுத்திப் பார்க்க முடியவில்லை. ஆகவேதான் , சந்நியாசிகள் , உடலுறவைப் பற்றியும் , பணம், அதிகாரம்,

அந்தஸ்த்து மற்றும் கௌரவம் போன்றவைகளைப்பற்றியும் , தாங்கள் கனவு காண்பதில்லை என்று நினைத்துக் கொள்கிறார்கள். நீங்கள், பாதி விழிப்பு நிலையிலும், பாதி தூக்கத்திலும் இருக்கும் பொழுதுதான் , நீங்கள் காணும் கனவுகளை, உங்களால் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியும் . ஏனென்றால் , அவைகள் பிரக்ஞைநிலையை ஒட்டி இருக்கின்றன. அப்பொழுது, சில கனவுகள் , உங்களுடைய பிரக்ஞையான

மனத்துக்குள் நுழைந்து விடும். ஆகவே, காலையில், அவைகளில் சிலவற்றை, உங்களால் ஞாபகப்படுத்திப் பார்க்க முடியும் . ஆகவேதான் , நீங்கள் நல்ல உழைப்பாளியிடம் சென்று, " நீ இரவில் கனவுகள் காண்கிறாயா? " என்று கேட்டால் , அவன் ' இல்லை' என்றுதான் சொல்வான்.

பழங்கால மனிதர்கள் , கனவுகள் காண்பதில்லை. ஆனால் , அவர்களுக்கு கனவுகளே வராது என்பதும் உண்மையில்லை. அவைகளை, அவர்களால் ஞாபகப்படுத்திப் பார்க்க முடியவில்லை. அவ்வளவுதான் . நாள் முழுவதும் , ஒருவன் விறகுவெட்டினால் , குழி தோண்டினால் , கல்லுடைத்தால் , அவன் இரவில் 8 மணி நேரம் தூங்கும்பொழுது, அவன் கிட்டத்தட்ட மயக்கநிலைக்கே (COMA)சென்றுவிடுகிறான்.

ஒருசமயம் , என்னிடம் ஒரு இளைஞனை அழைத்துக்கொண்டு வந்தார்கள் . அவன் ஒருவித பைத்திய நிலையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். அவன், ரிஷிகேசில் உள்ள சுவாமி சிவானந்தாவின் சீடர்களின் ஒருவன் . அவனிடம் நான், " உனக்கு என்ன பிரச்சினை என்று கேட்டான். அதற்கு அவன், ' ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. நான் , ஆன்மீகத்தில் ஈடுபாடுடையவன் . ஆனால் , நான் ஒருவித வித்தியாசமான மனநிலையில் இருக்கிறேன் என்று எல்லோரும் நினைக்கிறார்கள் என்றான் . நான் , அவனுடைய பெற்றோர்களை விசாரித்தேன் . அவர்கள் மிகுந்த கவலையில் இருந்தார்கள் . அவர்களிடம் விபரம் கேட்டேன்.

அந்த விபரம் : அவன் சிவானந்தாவிடம் சென்றிருக்கிறான் . அவர் , ' நீ அதிகமாகத் தூங்குகிறாய் . இது நீ ஆன்மீகத்தில் மேலான நிலையை அடைய உதாவது. நீ குறைவாகத் தூங்கவேண்டும் '' என்றிருக்கிறார். ஆகவே, அவன் தன் தூக்கத்தை 3 மணி நேரமாகக் குறைத்துவிட்டான்; அதாவது 8 மணியிலிருந்து, 3 மணி நேரமாக! ஆகவே, அவன் நாள் முழுவதும் தூக்கக் கலக்கத்திலேயே இருந்திருக்கிறான். இதைப் பார்த்த சிவானந்தா, " நீ மிகவும் ' தாமச ' குணத்தில் இருக்கிறாய். நீ மிகவும்

கீழான நிலையில் இருக்கிறாய் . உன்னிடம் , இப்பொழுது சேரும் சக்தி கெடுதலானது. ஆகவே, உன்னுடைய உணவுப் பழக்கத்தை மாற்று. நீ, மிகவும் சத்தான உணவுகளையும் , தூக்கம் தரக்கூடிய உணவுகளையும் தவிர்க்க வேண்டும்'' என்றிருக்கிறார். ஆகவே, அவன் வெறும் பாலைமட்டும் அருந்தி வந்திருக்கிறான் . இதனால் , அவன் மிகவும் இளைத்துப் போய் விட்டான் . அதாவது, அவனுக்கு முதலில் தூக்கம் போய்விட்டது. இப்பொழுது உணவும் போய்விட்டது! இப்பொழுது அவன் , எந்த நேரத்திலும் கீழே விழும் நிலையில் இருக்கிறான்.

சாப்பாடு இல்லாமல் , உங்களால் 3 மணி நேரம் கூட ஆழமாகத் தூங்க முடியாது. நல்ல ஆழ்ந்த தூக்கத்துக்கு, உணவு மிகவும் முக்கியம் . வயிற்றில் , செரிப்பதற்கு எதுவும் இல்லாத நிலையில் , உங்களுடைய முழு சக்தியும், தலைக்குச் சென்றுவிடும் - ஆகவேதான், நீங்கள் பட்டினியோடு விரதம் இருக்கும் பொழுது, உங்களால் நன்றாகத் தூங்கமுடிவதில்லை வயிற்றுக்கு சக்தி தேவைப்படும் போது தலைக்கு அது செல்லாது. ஏனென்றால் , இப்பொழுது வயிறுதான் பிரதானமாக இருக்கிறது; மூளை இரண்டாம்பட்சம்தான்.

உங்கள் உடல் , ஒரு ஒழுங்குமுறையில் நடக்கிறது. வயிறுதான் பிரதானம் . தலை இல்லாமல் , வயிறு வேலை செய்யலாம். ஆனால் வயிறு இல்லாமல் தலை ஒருபோதும் இருக்க முடியாது. ஆகவே, உடலைப் பொருத்த அளவில் , வயிறுதான் பிரதானம் . வயிற்றுக்கு சக்தி தேவைப்படும் பொழுது, அது எல்லா உறுப்புகளிலிருந்தும் சக்தியை இழுத்துக்கொள்கிறது.

இப்பொழுது, அவனால் மூன்று மணி நேரம் கூடச் சரியாகத் தூங்க முடியவில்லை. அவனுடைய கண்களில் உயிரே இல்லை. அவன் உடல் பொலிவிழந்து, உயிரோட்டம் குறைந்து, மென்மையாக நடுங்கிக்கொண்டு இருப்பதைக் கண்டேன் . அவனுடைய உடல் , பல மாதங்களாக ஓய்வில் இல்லவே இல்லை. ஆனால் , அவன் இப்பொழுது என்ன நினைத்துக் கொண்டிருக்கிறான் , தான்

ஆன்மீகத்தில் முன்னேறிக் கொண்டிருப்பதாக!

இந்த மாதிரியான முட்டாள் தனம் , பல காலமாக மதிப்புமிக்கதாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது. ஒரு விஷயம் , நீண்ட காலமாக நீடித்துவந்ததால் , அது மதிப்புமிக்கதாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது - அதன் ஆயுளில், மக்கள் மதிப்பு வைக்கிறார்கள்!

முதலில் , நீங்கள் உங்களுடைய உடலின் தேவைகளைப் பூர்த்தி செய்யுங்கள். உங்கள் உடலின் குரலுக்கு மதிப்பு கொடுங்கள் . பிறகு மனதின் குரலைக் கேட்டு, அதன் தேவைகளைப் பூர்த்தி செய்யுங்கள், எதையும் தவிர்க்காதீர்கள். அவைகளின் தேவைகளில் ஆழமாகச் செல்லுங்கள் , அதனுடைய தேவைகளை அன்புடன் கூர்ந்து கவனியுங்கள். நீங்கள் உங்கள் உடலோடும், மனத்தோடும் நட்பாக இருங்கள். அப்பொழுதுதான் , ஒரு நாள் அவைகளைக் கடந்து செல்ல முடியும். இப்படி நட்பு முறையில் இருப்பது, மிக மிக அவசியம் . இதுதான் , வாழ்க்கையைப் பற்றிய , தந்த்ராவின் நோக்கம் . வாழ்க்கைச் சக்தியோடு, நட்பாக இருங்கள் . அதற்கு எதிராக ஒருபோதும் செயல்படாதீர்கள்.

இப்பொழுது, சூத்திராவுக்கு வருவோம். இந்த சூத்திரம், மிகவும் முக்யத்வம் வாய்ந்தது.

சாரஹா அரசனுக்குச் சொல்வதாவது:

உயர்வான விழிப்புணர்வு ஒன்று என்று அவர்கள் உள்ளுக்குள் அனுபவித்ததை பிறருக்குப் போதிக்கிறார்கள் . அவர்களைப் பிணைத்துக் கொண்டிருக்கிற ஒன்றை விடுதலை என்று அவர்கள் சொல்வார்கள்.

பச்சை நிறக் கண்ணாடிக் கல் ஒன்றை அவர்கள் ( விலை உயர்ந்த ) மரகதக் கல் என்று கொண்டாடுவார்கள் நவரத்தினம் எப்படி இருக்க வேண்டும் என்று அப்படி இல்லை இது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

நீங்கள் மகாத்மா என்றும் யோகிகள் என்றும் அழைக்கப்படுபவர்களைப் பற்றி, நான் மீண்டும் மீண்டும் கூறுவதையே , அவரும் கூறகிறார்.

சாரஹா

உயர்வான விழிப்புணர்வு ஒன்று என்று அவர்கள் உள்ளுக்குள் அனுபவித்ததை பிறருக்குப் போதிக்கிறார்கள்.

இந்த அறிக்கை மிகச் சிறந்தது. இதைச் சரியாக விளக்க வேண்டும் . முதலில் நீங்கள் , உண்மையான முடிவான தெய்வீகநிலை என்று உங்களுக்குள்ளே அடையும் அனுபவங்கள் , ஒருபோதும் உண்மையான அனுபவம் இல்லை. ஏனென்றால் , நீங்கள் ஏதாவது ஒன்றை அனுபவிக்கும் பொழுது, எப்பொழுதும் அதில் இரண்டு நிலைகள் இருக்கும் . அதாவது அனுபவிப்பர் மற்றும் அனுபவங்கள் என்று. ஆகவே, நீங்களே உங்களுக்குள் அடையும் அனுபவங்கள் , உண்மையிலேயே முடிவான அந்தத் தெய்வீக அனுபவங்கள் இல்லை. ஒருபோதும் இல்லை. நீங்களே எப்படி அனுபவிக்க முடியும் ? அப்பொழுது, நீங்கள் இரண்டாக பிரிக்கப்படுகிறீர்கள் . அங்கே தன்னிலை - முன்னிலை (SUBJECT, OBJECT) என்று வருகிறது.

தந்த்ரா, " நீங்கள் எவைகளையெல்லாம் அறிகிறீர்களோ, அப்பொழுது நீங்கள் அது ' வாக இல்லை என்று அறிந்துகொள்ளுங்கள் . இது மிகச் சிறந்த அறிக்கை மிகவும் உள்ளுணர்வு உடையது. நீங்கள் ஏதாவது ஒன்றைப் பார்க்கும் பொழுது, நீங்கள் அந்த பொருளாக இல்லை என்பதை அறிந்து கொள்ளுங்கள் . ஏனென்றால் , நீங்கள் காண்பவர்கள் (SEER) உங்களை யாரும் ஒருபோதும் பார்ப்பதில்லை. நீங்கள் ஒரு முன்னிலையாக , ஒரு பொருளாக (OBJECT) உங்களையே குறைத்துக்கொள்ள முடியாது. நீங்கள் ஒரு உண்மையான , சுத்தமான , பார்க்க முடியாத ஒரு தெய்வீகத் தன்னிலையாக இருக்கிறீர்கள் . நீங்கள் ஒரு பொருளாக மாற , முன்னிலையாக மாற , எந்த வழியும் கிடையாது. உங்களுக்கு முன்னால் , உங்களையே நிறுத்த முடியாது. நீங்கள் எதை உங்களுக்கு முன்னால் நிறுத்தினாலும், அது நீங்களாக முடியாது. உங்களுக்கு

முன்னால் இருக்கும் எந்தப் பொருளோடும் , நீங்கள் கலக்காமல் தனியாகவே நிற்பீர்கள்.

அனுபவம் ' என்று எதுவும் கிடையாது. அதுவும் ' உண்மை' ஒருபோதும் அனுபவமாக முடியாது. உண்மை என்பது அனுபவித்தல் (EXPERIENCING); அனுபவம் (EXPERIENCE) அல்ல . அது ஒரு அறிந்து கொள்ளுதல் (KNOWING); அறிந்த பொருளல்ல(KNOWLEDGE), விஷய ஞானமல்ல. எ

இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாடு மிகப்பெரியது. ஒன்று, உங்களைவிட்டுத் தனியாக இருக்கும் பொழுது, நீங்கள் , தன்னிலையாக இருந்து, அந்த முன்னிலையை அனுபவிக்கிறீர்கள். ஆனால், நீங்களே (BEING)உங்களை

அனுபவித்துக் கொள்ள முடியாது. ஆகவே, தந்த்ரா அனுபவித்தல் என்ற புதிய வார்த்தையை உண்டு பண்ணி இருக்கிறது.

சம்ஸ்கிருதத்தில் , இரண்டு வார்த்தைகள் இருக்கின்றன. அதாவது, அனுபவ் (ANUBHAV) மற்றும் அனுபூதி' (ANUBHUTI) என்று அனுபவ் என்றால் , அனுபவம் (EXPERIENCE) என்று அர்த்தம் . இது ஒரு பெயர்ச்சொல் (NOUN) அனுபூதி' (EXPERIENCING) என்றால் அனுபவித்தல் (VERB) என்று அர்த்தம். இங்கு, அனுபவிப்பதற்கென்று எதுவும் தனியாக இல்லை. அப்படி உங்களுக்கு முன்னால் , எதுவும் கிடையாது. அங்கே வெறும் , வெறுமை தான் (EMPTINESS) இருக்கிறது. ஆனால் , நீங்கள் அங்கே முழுமையாக இருக்கிறீர்கள் உங்களைத் தடுப்பதற்கு, நீங்கள் இடரிவிழ அங்கே எந்தப் பொருளும் கிடையாது. நீங்கள் அங்கே முழுமையாக ' தன்னிலை யாக இருக்கிறீர்கள் . ' பாண்டம் தான் (CONTAINER) இருக்கிறது. ஆனால் அதனுள் எந்தப் பொருளும் கிடையாது (NO OBJECT) திரைப்படம் (MOVIE) நின்றுவிட்டது. இப்பொழுது திரைச்சீலை (SCREEN) மட்டும் தான் இருக்கிறது. ( சுத்தமான வெண்திரை ). ஆனால் , இந்த சுத்தமான வெண்திரையை, பார்ப்பதற்கு யாரும் கிடையாது. ' நீங்கள் தான் அந்த வெண்திரை! ஆகவே, அனுபூதி'

என்ற வார்த்தை மிகவும் முக்யத்வம் வாய்ந்தது.

ஆங்கிலத்தில் , இப்படி இரண்டு வார்த்தைகள் கிடையாது. ஆகவேதான் , நான் , ' அனுபவித்தல் (EXPERIENCING) என்று புதிய வார்த்தையைச் சொல்ல வேண்டி இருக்கிறது. ( அந்த வித்தியாசத்தைக் காட்டுவதற்காக ) அனுபவம் என்பது ஒரு முன்னிலை பொருளாகிவிடுகிறது (object) அனுபவித்தல் ' என்பது ஒரு இயக்கம் (PROCESS) நடந்து கொண்டு இருக்கிறது. அது ஒரு பொருளல்ல . விஷய ஞானம் என்பது ஒரு பொருள் . விஷயத்தை அறிந்து கொள்ளுதல் என்பது ஒரு இயக்கம் அன்பு என்பது ஒரு பொருள் . அன்பு செலுத்துதல் அல்லது காதலித்தல் என்பது ஒரு இயக்கம்

உங்களுடைய உள் மைய நிலை, ஒரு இயக்கமாக இருக்கிறது. பொருள்களாக அல்ல என் தந்த்ரா கூறுகிறது. அறிந்துகொள்ளுதல் அங்கே நடக்கிறது. ஆனால் , விஷய ஞானம் என்று எதுவுமில்லை. அன்பு செலுத்துதல் அங்கே இருக்கிறது; அன்பு இல்லை. பெயர்ச்சொற்கள் அங்கு இல்லை; வெறும் வினைச்சொற்கள்தான் ! உண்மையைப் பற்றிய , மிகச் சிறந்த புரிந்துகொள்ளுதல் அல்லது அறிவிப்பாகும் அது. அதாவது வினைச்சொற்களாகவே இருக்கின்றன என்பது நீங்கள், "இது ஒரு மரமாக இருக்கிறது'' என்று சொல்வது மிகத் தவறானது - அது மரம் வளர்தலாகும் (TREEING); அது மரம் அல்ல ஏனென்றால் , அது வளர்ந்து கொண்டே இருக்கிறது; அது ஒரு நிலையான பொருளல்ல . நீங்கள் , '' இது ஒரு ஆறு' ' என்று சொல்லும் பொழுது, அந்தச் சொல்லை, சற்று உற்று நோக்குங்கள். அது முட்டாள்தனமாகப்பட வில்லையா? அது 'ஆறு ஓடுதல்' (RIVERING) ஆகும். ஏனென்றால் , அது எப்பொழுதும் டிக்கொண்டே இருக்கிறது, இயக்கமாக இருக்கிறது. ஒரு வினாடிகூட அது,

முன்புபோல் இல்லை. ஆகவே, ஏன் நீங்கள் அதை 'ஆறு' என்று ஒரு நிலையான பொருளாகக் கருதுகிறீர்கள் . ஏன் , ஒரு பாறைகூட , பாறையாக இல்லை. அதுவும் ஒரு இயக்கம்தான்!

உயிர்த்தன்மை, பொருள்களற்று, வெறும் நிகழ்ச்சிகளாக , இயக்கமாக விளங்குகிறது. ஒரு பெண்ணிடம் , நீங்கள் , " நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்று கூறுகிறீர்கள். மாறாக, "நான் காதல் உணர்வில் இருக்கிறேன் " என்று கூறுங்கள். அன்பு ஒரு பொருளல்ல . நீங்கள் காதல் உணர்வில் தான் இருக்க முடியும் . நீங்கள் காதலிக்க முடியாது. புத்த மதத்தைத் தழுவிய, பல மொழிகளில், எல்லாமே இயக்கமாக (PROCESS) த்தான் குறிப்பிடப்பட்டிருக்கின்றன . முதன் முதலில் , புத்த மதத்தைத் தழுவிய பல தேசங்களில் , உதாரணமாக பர்மா, தாய்லாந்து, போன்ற தேசங்களில் , பைபிளை, தங்கள் மொழியில் எழுதும் பொழுது, கடவுள் என்ற வார்த்தையையே விட்டு விட்டார்கள் ! இதைப்பார்த்த கிருத்துவ மதத்தைப் பரப்புபவர்கள் மிகவும் அதிர்ச்சியடைந்தார்கள் , ஆற்றை, நீங்கள் ஆறுகள் ஓடுதல் என்றும், மரத்தை, மரமாக வளருகிறது என்றும், பெண் , பெண்ணாக வளருகிறாள் என்றும் ... நீங்கள் எழுதினால் பரவாயில்லை. சரி என்று எடுத்துக் கொள்ளலாம். ஆனால், கடவுளைப் பற்றி....? கடவுளாக எதுவும் வளர்வது இல்லை. ஆனால், பர்மா மொழியில், எல்லா வார்த்தைகளுமே, வினைச்சொல்லிலேயே இருக்கின்றன ! ஒவ்வொரு வினைச்சொல்லும் , ' ஆகுதல் ' ' வளருதல் ' (BECOMING) என்றே குறிக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால் , கடவுளை, இப்படி ஒரு வினைச்சொல்லாக (PROCESS) மாற்றுவதை, கிருஸ்துவ மதத்தினரால் ஜீரணிக்கவே முடியவில்லை. அவர்களுடைய மதப்படி, கடவுள் நிலையாக , சாசுவதமாக , தெய்வீகமாக அப்படியே இருக்கிறார் . கடவுளுக்கு எதுவும் நேர்வது இல்லை. புத்தமதம் என்ன சொல்கிறது என்றால் , " கடவுளுக்கு எதுவும் நேர்வது இல்லை என்றால் , கடவுள் இறந்துவிட்டார் என்று அர்த்தம் . அப்பொழுது, அவர் எப்படி உயிரோடு இருக்க முடியும் ?" என்று சொல்கிறது. பொருள்களின் இயக்கமாக , உயிர்த்தன்மை இருக்கிறது. உயிர்த்தன்மை என்பது ஒரு இயக்கம் தான் , நிகழ்தல்தான் (HAPPENING) ஆனால் , அந்த முடிவான அனுபவத்தை ....? நீங்கள் இந்த உலகப் பொருள்களை, அப்படி அழைத்தால் , சரி என்று வைத்துக்கொள்ளலாம் . நீங்கள் நாற்காலியை,

' இது ஒரு நாற்காலி' என்று கூறலாம். அதைப்பற்றி, நாம் அதிகக் கவலைப்படத் தேவை இல்லை. ஆனால், இப்பொழுது எல்லாவற்றையும் இயக்கமாகச் சொல்வது என்பது, உதாரணமாக ' நாற்காலியாக இருத்தல் (CHAIR-ING), மரமாக வளருதல் (TREEIN) என்று சொல்வது, மிகவும் கடினம். ஆனால், அந்த முடிவான உண்மை நிலையைப் பற்றி, ஒருவன் மிகவும் பிரக்ஞையாக இருக்க வேண்டும்.

உயர்வான விழிப்புணர்வு ஒன்று என்று அவர்கள் உள்ளுக்குள் அனுபவித்ததை பிறருக்குப் போதிக்கிறார்கள்.

நீங்கள் , பண்டிட் கோபி கிருஷ்ணாவுடைய புத்தகத்தைப் படித்தால், அவர் ''குண்டலினி' என்பது ஒரு முடிவான அனுபவம்'' என்று எழுதியிருப்பதைப் பார்க்கலாம். ஆனால், அது அப்படி இல்லை. சாரஹா இதை ஒத்துக் கொள்ளமாட்டார். சாரஹா , அவரைப் பார்த்துச் சிரிக்கக்கூடும்.

உங்களுடைய முதுகுத்தண்டின் வழியாக , ஒருவித சக்தி மேலே எழும்புவதை. நீங்கள் அனுபவமாக அறிந்தால் , நீங்கள் தான் அதை பார்க்கிறீர்கள் , அறிந்துகொள்கிறீர்கள். உங்கள் முதுகுத் தண்டும் , குண்டலினி சக்தி ஏறுதலும் உங்களிடமிருந்து வேறுபட்டே இருக்கிறது. நீங்கள் எப்படி அதனுடன் இருக்க முடியும்?

நான் இந்தக் கையைப் பார்க்க முடியும். இப்படி நான் தனித்து இந்தக் கையைப் பார்ப்பதாலேயே, நான் அந்தக் கையிலிருந்து வேறுபடுகிறேன். நான் இந்தக் கையாக இருக்க முடியாது. நான் இந்தக் கையை உபயோகப்படுத்து கிறேன். ஆனால், நான் இந்தக் கையிலிருந்து, தனியாக இருக்கிறேன். ஒரு சமயம், நான் இந்தக் கைக்குள் இருக்கலாம். ஆனால், நான் இந்தக் கையாக இருக்க முடியாது.

குண்டலினி என்பது ஒரு ஆன்மீக அனுபவம் இல்லை. நீங்கள் எப்பொழுது, அனுபவிக்கக் கூடிய நிலையில் எதுவுமே இல்லாமல் இருக்கிறீர்களோ, அந்த

வெறுமையான அனுபவநிலையே, ஆன்மீக அனுபவம் என்பது. எல்லா அனுபவங்களும் அங்கே மறைந்துவிடுகிறது. நீங்கள் வெறுமனே , உங்களுடைய இருத்தலில் சுத்தமான உயிர் இயக்கமாக இருக்கிறீர்கள். இதை நீங்கள், அனுபவம் என்று கூற முடியாது.

ஆகவே, சாரஹா சொல்வதாவது: உங்களால் கருதப்படும் , அந்த யோகிகளும் , சந்நியாசிகளும் , தாங்கள் அந்த மேலான பிரக்ஞை நிலையை அடைந்துவிட்டதாகச் சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் எதை அடைந்தார்கள்? சிலர், குண்டலினி மேலே எழும்பிவிட்டதாகவும் , சிலர் , தங்களுக்குள்ளே ஒரு நீலவெளிச்சத்தைக் கண்டதாகவும் - இப்படி ஏதோ சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள் . சிலர் , சில தோற்றங்களைக் கண்டதாகவும், சிலர் கிருஷ்ணாவைக் கண்டதாகவும், மற்றும் சிலர் முகமதுவையும், மஹாவீரரையும், மகா காளியையும் கண்டதாகவும் சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள் - ஆனால் , அவைகளெல்லாம் தீவிரமான மனக் கற்பனைகளே.

இந்தக் கற்பனை (IMAGINATION) என்பது அழகானது; அது ' தோற்றம் (IMAGE) என்ற வார்த்தையிலிருந்து வந்தது. ஆகவே, எல்லா அனுபவங்களும் உங்களுடைய பிரக்ஞையான மனநிலையில் மிதக்கும் தோற்றங்களைத் தவிர, வேறல்ல. நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . உங்களுடைய பிரக்ஞைத் தன்மையில், எதுவுமே மிதக்காமல் இருந்தால், ஏன், இந்த ' எதுவுமே' (NOTHING) கூட , மிதக்காத , மிகசுத்தமான பிரக்ஞைத் தன்மைதான் உங்களுடைய உண்மையான ' அனுபவம் ' என்று கூறலாம் . இதைத்தான் தந்த்ரா சொல்கிறது.

ஆனால் , இதைக்கூட அனுபவம் என்று கூறக் கூடாது. அதனுடைய இயல்பான தன்மை, அப்படியில்லை. ஒரு சாட்சியை, நீங்கள் சாட்சியாக இருந்து பார்த்தால் , நீங்கள் அதை எப்படி சாட்சியாகப் பார்த்தல் என்று

கூறமுடியும்? நீங்கள், அறிந்தவரை(KNOWER) அறியும் பொழுது நீங்கள் எப்படி, அதை விஷயஞானம் (KNOWLEDGE) என்று அழைக்கலாம் ? ஆகவேதான், அவர் முதலில்,

உயர்வான விழிப்புணர்வு ஒன்று என்று அவர்கள் உள்ளுக்குள் அனுபவித்ததை பிறருக்குப் போதிக்கிறார்கள்.

இரண்டாவதாக, நீங்கள் ஞாபகம் வைக்க வேண்டியது. உள் மற்றும் வெளித் தன்மைகளின் வேற்றுமை, பொய் என்பதுதான் . ஆனால் , ஒரு வகையில் இது தேவைதான் நீங்கள் வெளித்தன்மையிலேயே வாழ்ந்து கொண்டு இருந்தால், நீங்கள் உள்ளே செல்ல வேண்டும் என்று கூறவேண்டியதாக இருக்கிறது. ஆனால் , உள் மற்றும் வெளித்தன்மை என்பது ஒரே நாணயத்தின் இருபக்கங்கள் தான். ஒருநாள், நீங்கள் இந்த இரு வேறு தன்மைகளையும் விட்டுவிட வேண்டும் உங்களுக்குக் கூற வேண்டும் - எப்படி வெளித்தன்மையை விட்டு விட்டு, உள்ளே சென்றீர்களோ, அதைப் போல உள் தன்மையையும் விட்டுவிட வேண்டும். அதாவது, இரண்டையும் கடந்து செல்லுங்கள் - அதாவது உள் மற்றும் வெளித்தன்மைகளுக்கு அப்பால்

வெளித்தன்மையில் எப்படி எதுவுமே இல்லையோ, அதைப் போல உள்தன்மையிலும் எதுவுமே இல்லை!

உள்தன்மை என்றால் என்ன ? நான் இப்பொழுது உங்களைப் பார்த்துக் கொண்டு இருக்கிறேன், நீங்கள் வெளித்தன்மையில் இருக்கிறீர்கள். பிறகு, நான் என் கண்களை மூடிக்கொண்டு, என்னுடைய குண்டலினியைப் பார்க்கிறேன் அது உள்ளேயா இருக்கிறது? நான் எதைக் கண்டாலும் , அது என்னைவிட்டு வெளியேதான் இருக்கிறது; அது உள்ளே இருக்க முடியாது. பிறகு, நான் நீலவெளிச்சத்தைப் பார்க்கிறேன் - அதுவும் வெளியில்தான் இருக்கிறது! ஆனால் , நான் இவைகளையெல்லாம் , என் கண்களை மூடிக்கொண்டுதான் பார்க்கிறேன் அவைகள் என்னை மிகவும் நெருங்கி இருக்கின்றன இருந்தும் அது வெளியேதான் இருக்கிறது. இரவில் , நான் கனவு காண்கிறேன். அந்தக் கனவில், நீங்கள் வருகிறீர்கள் -

அப்பொழுது நீங்கள் என்னுள்ளேயா இருக்கிறீர்கள் ? நீங்கள் வெளியேதான் இருக்கிறீர்கள் . என் கண்கள் மூடி இருந்தாலும் சரி. ஆனால், நான் எப்படி உங்களை இப்பொழுது நேரடியாகப் பார்க்கிறேனோ, அதைப்போலத்தான் , கண்களை மூடிக்கொண்டும் பார்க்கிறேன். (மனக்கண்ணின் மூலமாக)

நீங்கள் பார்ப்பவை அனைத்தும் ' வெளியில் தான் இருக்கின்றன . பார்ப்பவன் , வெளியேயும் இல்லை, உள்ளேயும் இல்லை.

ஆகவே, சாரஹா, " இந்த மக்கள் , வெளித்தன்மையில் உள்ள அனுபவங்களை முதலில் பேசிக்கொண்டே இருக்கிறார்கள் . பிறகு, உள்ளே உள்ள அனுபவங்களைப் பேச ஆரம்பிக்கிறார்கள் ' என்று சொல்கிறார்.

நீங்கள் ஒரு பெண்ணை விரும்புகிறீர்கள் , அவளோடு உடலுறவு இன்பம் காண நினைக்கிறீர்கள் . அவளோ, வெளியில் இருக்கிறாள் . இப்பொழுது, உங்களுடைய சக்தி, பாலுணர்வு சக்தி, மேலே எழும்பி, உங்கள் தொண்டையை ( விஷுதாவை ) வந்து அடைகிறது. அதாவது விஷுதா சக்கரத்தில் நிலைகொள்கிறது. பிறகு, நீங்கள் அந்த இடத்தை, உங்களுடைய நாக்கை மடித்துக்கொண்டு, தடவி சுய இன்பம் காண்கிறீர்கள் . இதை நீங்கள் உள்ளேயுள்ள நிகழ்வு என்றா கூறுவீர்கள் ? அது வெளி நிகழ்வுதான் . நீங்கள் எப்படி வெளியே உள்ள பெண்ணோடு உடலுறவு கொள்கிறீர்களோ, அதற்கும் , இதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

தந்த்ராவின் அறிவிப்பு மிக நுணுக்கமானது, மிக ஆழமானது. ஆகவே தான் , அது, ஒருவன் வெளி மற்றும் உள்தன்மைகளையும் விட்டுவிட வேண்டும் என்று மிக ஆழமாக, மிக வித்தியாசமாகக் கூறுகிறது. " நான் உள்ளேயும் இல்லை, வெளியேயும் இல்லை' என்று கூறும் நிலையில், ஒருவர் இருக்க வேண்டும் . உள்ளே நோக்கியோ அல்லது வெளியே நோக்கியோ, அல்லது ஒரு ஆணாகவோ - பெண்ணாகவோ, உடலாகவோ - மனமாகவோ, நான் இல்லை என்று உணர்ந்து கூறவேண்டும் . அதைப்போல , " நான்

சம்சாராவிலும் இல்லை, துறவிலும் இல்லை என்று கூறவேண்டும். இப்படி ஒருவர் சரியான நடுநிலையில் இருப்பதுதான் , எல்லா வேற்றுமைகளையும் கடந்து செல்வதற்கான கதவு.

''விடுதலை என்றழைப்பர், தங்கள் விலங்குகளை

இப்பொழுது இது ஒரு புதிய விலங்கு ஆனால் , இது வெளி விலங்குகளைவிட, கொஞ்சம் அழகானது. அந்த விலங்குகள் , இரும்பால் செய்யப்பட்டு இருக்கலாம் ; ஆனால் இது தங்கத்தால் செய்தது என்று வைத்துக்கொள்ளலாம் . ஆனால் , விலங்கு, விலங்குதான் . நீங்கள் இன்னும் விலங்கால்தான் பூட்டப்பட்டிருக்கிறீர்கள்.

இப்பொழுது, இந்தப் புதிய விலங்குகள் , உங்களைக் கட்டுப்படுத்துகிறது. உங்களுடைய குண்டலினி சக்தி ஏறுதல் , தோற்றங்கள் , ஆன்மீகத் தோற்றங்கள் , பிரபஞ்சத் தோற்றங்கள் ... இவைகளெல்லாம் , இப்பொழுது தங்கத்தால் செய்த விலங்குகளாக விளங்குகின்றன . இப்பொழுது நீங்கள் , இவைகளில் தொங்கிக்கொண்டு இருக்கிறீர்கள். அவைகளின் மேல் ஆசை மிக கொள்கிறீர்கள். முதலில், பணத்தின் மேல், அதிகாரம் மற்றும் பலவெளி உலக விஷயங்களில் ஆசைகொண்டு அலைந்தீர்கள் . இப்பொழுது, நீங்கள் சித்திகளில் ( ஆன்மீக சக்தி ) ஆசைவைக்கிறீர்கள் - ஆனால் , ஆசைகள் அப்படியேதான் இருக்கிறது! இந்த ஆசைகள்தான் உங்களுடைய விலங்கு. எதற்கும் ஆசைப்படாமல் , ஏன் ஞானநிலைக்குக்கூட ஆசைப்படாமல் இருப்பதே உண்மையான விடுதலை.

பச்சை நிறக் கண்ணாடிக் கல் ஒன்றை அவர்கள் ( விலை உயர்ந்த ) மரகதக் கல் என்று கொண்டாடுவார்கள் நவரத்தினம் எப்படி இருக்க வேண்டும் என்று அப்படி இல்லை இது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை.

நீங்கள் மிகவும் பிரக்ஞைத் தன்மையில் , உஷாராக

இல்லாவிட்டால் , நீங்கள் ஏமாற்றப்படுவீர்கள் . " விலைக்கு அப்பால் தோன்றுமாம் ' பச்சை' (EMEROLD) என்றுவெறும் கண்ணாடி பச்சைக்கல்லை" நீங்கள் மிகச் சாதாரண பச்சை வர்ண கண்ணாடிக்கல்லை, விலையுயர்ந்த பச்சைக்கல் , ( மரகதம் ) என்று நினைத்து ஏமாறுவீர்கள் . ஆமாம் , அவைகளுடைய நிறம் , அமைப்பு எல்லாம் ஒன்றாகத்தான் இருக்கும் . ஏன் , எடைகூட ஒன்றாக இருக்கலாம் . ஆனால் , அவைகளுடைய மதிப்பு, மிகவும் வித்தியாசமானது. இங்கே, மதிப்புதான் முக்கியம்.

ஆமாம் , ஒரு ஜனதிபதிக்கு, வெளியில் ( இந்த உலகத்தில் ) மிகுந்த அதிகாரம் இருக்கலாம் . அதைப்போல ஒரு பிரதம மந்திரிக்கும் இருக்கலாம் . அதைப்போல , ஒரு யோகிக்கும் , ஞானிக்கும் அதே அளவு சக்தி, ஏன் அதற்கு மேலே என்றுகூட சொல்லலாம் , தங்களுடைய உள் ஆன்மீக உலகத்தில் இருக்கும் . ஆனால் , எதுவும் உண்மையான பச்சைநிற மரகதத்துக்கு ஈடாகாது. இந்த வெளி உலகம் , வெறும் பச்சைநிறக் கண்ணாடி. அதைப்போலவே, உங்களுடைய உள் ஆன்மீக உலகமும், அதே நிறத்தில், அதே அமைப்பில், அதே எடையில் உள்ள ஒரு வெறும் கண்ணாடிக்கல்தான் - ஆனால், இதை 'ஆன்மிகக்கல்' என்று அழைக்கலாம் . ஆனால் , உண்மை அப்படி இல்லை.

உண்மையான ஆன்மீக நிலை என்பது, மேகமற்ற சுத்தமான வெற்று ஆகாயம் போலத்தான் . ஆகவே, ஒரு உண்மையான ஆன்மீக மனிதன் , தன்னிடம் எந்த ஆன்மீக அனுபவமும் இருப்பதாக ஒத்துக்கொள்ள மாட்டான் . ஏனென்றால் , எல்லா ஆன்மீக அனுபவங்களும் , வெறும் பச்சைநிறக் கண்ணாடிகல்தான் என்று அவனுக்கு மிக நன்றாகத் தெரியும்.

ஆகவேதான் , புத்தர் அமைதியாக உட்கார்ந்துவிட்டார் . யாராவது அவரை, ' எப்படி அந்தப் பேரியிக்க 'உண்மை'யை அறிந்து கொண்டீர்கள்'' என்று கேட்டால், அவர் வெறுமனேதான் , அமைதியாக உட்கார்ந்திருப்பார். "நீங்கள் எப்படிக் கடவுளை அறிந்து கொண்டீர்கள் '' என்று கேட்டால் , அவர் புன்முறுவல்

பூத்து அல்லது பலமாகச் சிரித்து, அந்தக் கேள்வியைத் தவிர்த்துவிடுவார்! ஏன்? ஏன், அவர் அதைத் தவிர்க்க வேண்டும்? ஆனால், முட்டாள் ஜனங்கள், அவருக்குத் தெரியாது என்றுதான் நினைத்துக் கொள்வார்கள். உண்மையில், அந்த அனுபவங்களை பெற்றிருந்ததாலேதான் அதை அவர் தவிர்த்திருக்கிறார். அதைப்பற்றி வார்த்தைகளால் பேசுவது என்பது. எந்த நன்மையும் கொடுக்கப்போவதில்லை; அது வீண்வேலை என்று புத்தருக்கு மிக நன்றாகத் தெரியும்.

' உண்மை'யை ஒருக்காலும் வார்த்தைகளால் வெளியிட முடியாது. அதை அடையக்கூடிய வழிகளைப்பற்றி பேசலாம். ஆனால், அதைப்பற்றி மட்டும் பேச

முடியாது. அதை எப்படி அடைவது என்பது பற்றி பேசலாம்; ஆனால், அது என்ன, அதை எப்பொழுது அடைவது என்பது பற்றி ஒருபோதும் சொல்ல முடியாது.

ஆகவேதான், சாரஹா, ' யார் ஒருவன், தான் அந்தத் தெய்வீக அனுபவங்களை அடைந்துவிட்டேன் என்று கூறினால், அது பொய் என்றும் அவனே, ஒரு மயக்கத்தில் தன்னையே ஏமாற்றிக்கொள்கிறான் என்றும் புரிந்துகொள்ளுங்கள்'' என்று சொல்கிறார்.

பச்சை நிறக் கண்ணாடிக் கல் ஒன்றை அவர்கள் (விலை உயர்ந்த) மரகதக் கல் என்று கொண்டாடுவார்கள். நவரத்தினம் எப்படி இருக்க வேண்டும் என்று அப்படி இல்லை இது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. தாமிரத்தை தங்கம் என்று கொண்டாடுவார்கள். அவர்கள் இந்த எண்ணங்களே முடிவான உண்மை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். கனவில் அனுபவிக்கும் சுகங்களைப் பெற விரும்புகிறார்கள். அவர்கள் அழிந்துவிடும் இந்த உடலையும் பணத்தையும் பேரின்பம் என்கிறார்கள்.

. அவர்கள், செம்பைத், தங்கம் என்று கருதுவார்கள். அவர்கள் முன்னிலையை (OBJECTIVE),

தன்னிலையாக (SUBJECTIVE) க் கருதுவார்கள் . அறிந்தவனை' இன்னும் அவர்கள் அறியவில்லை. அவர்கள் ஏதோ ஒன்றை அறிந்திருக்கிறார்கள் . அதாவது தவாறகப் புரிந்திருக்கிறார்கள் . அறிந்தவனை, அறிந்துவிட்டேன் என்று அவர்கள் நினைக்கிறார்கள் . அவர்கள் , குண்டலினியை அறிந்திருக்கலாம் ; அதைப்போல பல ஆன்மீக அனுபவங்களை, உதாரணமாக பல ஆன்மீகத் தோற்றங்களை மிக மேலான கவித்தன்மையை, மிக அழகான, அபூர்வமான நறுமணமிக்க தோற்றங்களைக் கண்டிருக்கலாம் - இப்படி பல வித்தியாசமான அனுபவங்களை அடைந்திருக்கலாம். ஆனால்

தாமிரத்தை தங்கம் என்று கொண்டாடுவார்கள் . அவர்கள் இந்த எண்ணங்களே முடிவான உண்மை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

கனவில் அனுபவிக்கும் சுகங்களைப் பெற விரும்புகிறார்கள் . அவர்கள் அழிந்துவிடும் இந்த உடலையும் பணத்தையும் பேரின்பம் என்கிறார்கள்.

நீங்கள் கருதும் சந்நியாசிகளும் , மகாத்மாக்களும் , தர்க்கரீதியான எண்ணத்தில் இருக்கிறார்கள் . அவர்கள் எப்பொழுதும் சர்ச்சையில் தான் இருப்பார்கள்.

அவர்கள் , கடவுள் இருக்கிறார் என்று நிரூபிக்கவே விரும்புவார்கள் . கிருஸ்துவ மதத்தில் , கடவுள் இருக்கிறார் என்று, நிரூபிக்க , சுமார் 2000 வருடங்களை வீணடித்திருக்கிறார்கள் ! கடவுள் இருக்கிறார் என்பதை நீங்கள் எப்படி நிரூபிக்க முடியும் ? நீங்கள் அதை நிரூபித்தால் , அது மறுக்கக்கூடிய தன்மையிலும் இருக்கும் . தர்க்கம் என்பது இரண்டு பக்கமும் கூரான ஒரு கத்தி.

தர்க்கம் என்பது ஒரு விபச்சாரியைப் போல . அது, கடவுள் இருக்கிறார் என்று நிரூபித்தால், அதுவே, மறுபடி கடவுள் இல்லை என்றும் நிரூபிக்கும் , அதனுடைய வித்தியாசமான அழகு என்னவென்றால் ஒரே சர்ச்சை, கடவுள் இல்லை என்றும் நிரூபிக்கும் , கடவுள் உண்டு என்றும்

நிரூபிக்கும்!

இப்பொழுது, உங்களால் கருதப்படும் அந்த சந்நியாசிகளும் , குரு மார்களும் இந்த உலகத்துக்கு அளித்துக்கொண்டு இருக்கும் , மிகப்பெரிய சர்ச்சை என்னவென்றால் , இந்த உலகத்திற்கு உண்டாக்கிய ஒருவர் வேண்டும் , ஏனென்றால் இவ்வளவு பெரிய உலகம், ஒரு ஸ்தாபகர் இல்லாமல் எப்படி உண்டாகும்? ஆமாம் . இந்த வாதத்தால் , குழந்தைத்தனமாகவும் , முதிர்ச்சியடையாத நிலையிலும் உள்ள மனங்கள் திருப்திப்படத்தான் செய்யும் இவ்வளவு பரந்த உலகம், எப்படி ஒருவரால் உண்டாக்கப்படாமல் இருக்கும் ? ஆகவே, அந்த ஒருவர் மிகவும் சக்திபடைத்தவராக இருக்கவேண்டும் சரிதான் . ஆனால் , இந்தத் தர்க்க ரீதியான வாதத்தை ஒரு சிறு குண்டூசியால் குத்தினால் , அந்தத் தர்க்கம் மறைந்துவிடும் , அந்தப் பலூன் வெடித்துவிடும் ! இப்பொழுது, யாராவது, அவர்களிடம் , அந்த உண்டாக்கியவரை உண்டாக்கியவர் யார் ? என்று கேட்டால் ! இது அதே தர்க்த்தைச் சேர்ந்ததுதான் ! இந்தக் கேள்வி போய் கொண்டே இருக்கும் ! இதற்கு முடிவே இருக்காது. இவைகளை ஒரு தொல்பொருள் காட்சியில்தான் வைக்கவேண்டும்!

நீங்கள் , நம்பர் 1 " இந்த உலகத்தை உண்டாக்கினார் . நம்பர் 2, நம்பர் 1ஐ உண்டாக்கினார். நம்பர் 2ஐ. நம்பர் 3 உண்டாக்கினார் . இப்படி சொல்லிக்கொண்டே போகலாம் . ஆனால் , அந்தக் கேள்விக்கு, முடிவான விடை என்று எதுவும் கிடைக்காது. நம்பர் 1ஐ முதலில் உண்டாக்கியது யார்? இவர்தான் அசலாக (ORIGINAL) இந்த உலகத்தை உண்டாக்கியவர் . இந்த அசலை, யாருமே உண்டாக்கவில்லை என்றால் , மேற்கொண்டு சொல்லிக்கொண்டு போவதால் என்ன பயன் ? பிறகு, ஏன் நீங்கள் இந்த உலகத்தை யாரும் உண்டாக்கவில்லை என்று கூறக்கூடாது? கடவுளை யாரும் உண்டாக்கவில்லை என்று சொன்னால் , இந்த உலகம் கூட , யாராலேயும் உண்டாக்கப்படவில்லை, அது அப்படியே இருக்கிறது என்று ஏன் கருதக் கூடாது? மேற்கண்ட முட்டாள் தனமான தர்க்கத்தில் இறங்காமல் - இதை ஒத்துக்கொள்வது சரியானதே. இது மிகவும் அறிவுப்பூர்வமானது. உங்களை எங்கேயும் அழைத்துச் செல்லாத , அந்த முட்டாள்தனமான தர்க்கத்தைவிட

இது மிகவும் மேலானது.

கடவுளைப்பற்றி, அவர்களின் சர்ச்சைகளின் கருத்துக்களை இப்பொழுது பார்க்கலாம் . அவர்கள் எவ்வளவு முட்டாள்தனமாகவும் , மூடத்தனமாகவும் இருக்கிறார்கள் என்று பாருங்கள் . அதனால் தான் , கடவுளைப்பற்றி, ஒரு நாத்திகனைக் கூட , உங்களால் திருப்திப்படுத்த முடியவில்லை. ஆனால் , ஏற்கனவே திருப்திப்பட்டவர்களைப் பற்றி இங்கு குறிப்பிடவில்லை. அது இப்பொழுது முக்கியம் இல்லை. ஆனால் , எப்பொழுதும் கேள்விகளையே கேட்கும் , ஒரு மனத்தைக் கூட , உங்களால் திருப்திப்படுத்த முடியாது. உங்களுடைய வாதம் எந்த உதவியையும் உங்களுக்கு செய்யப்போவது இல்லை. மாறாக , உங்களுடைய வாதமே, உங்களைச் சங்கடத்தில் மாட்டிவிடும்.

உள் . சாரஹா, ' ஒருவன் தன்னுடைய உண்மை நிலையை அறிந்துகொண்டால் , அதை அனுபவித்ததைத் தவிர , வேறு எந்த அத்தாட்சியும் தேவை இல்லை. " என்று சொல்கிறார் . அவர்கள் , அலைபாயும் எண்ணங்களை நம்புவது இல்லை அதற்கு எந்த தர்க்க விளக்கமும் , அவர்கள் கொடுக்க விரும்பவில்லை. அது தர்க்கத்துக்கு அப்பாற்பட்டது; தர்க்கத்துக்கு மாறானது மற்றும் அது பகுத்தறிவுக்கு உட்படாதது. ஆமாம் . அது அப்படித்தான் இருக்கிறது. நீங்கள் அதை உணரலாம் , அனுபவப்படலாம் அல்லது அதைவிட்டு அகலலாம் ஆனால், அதை நிரூபிக்கவோ அல்லது மறுக்கவோ எந்த வழியும் கிடையாது. ஆன்மீகமும், நாத்தீகமும் இரண்டுமே அர்த்தமில்லாதது. மதத்திற்கும் , அதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. மதம் என்பது அதை ' அனுபவித்தல் (EXPERIENCING) தான் நீங்கள் அந்தத் தெய்வீக அனுபவ நிலையை, உங்கள் இஷ்டப்படி, கடவுள் என்றும் , கடவுள் தன்மை என்றும் நிர்வாணா என்றும் XYZ என்றும் அழைத்துக்கொள்ளலாம் . அது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை ஆனால் அதை அனுபவித்தல் தான் முக்கியம் . இதை நன்றாக

ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்.

அனுபவித்தலைத்தான் , தந்த்ரா நம்புகிறது. தந்த்ரா மேலோட்டமாக இல்லை. அது மிகவும் உயிரோட்டமுள்ளதாக இருக்கிறது.

"தங்கமென்று கருதுவர் செம்பை....

தங்களுடைய தர்க்க வாதத்தினால் , நிரூபித்த கடவுளை, தங்களுடைய உண்மையான கடவுள் என்று அவர்கள் நினைத்துக்கொள்கிறார்கள் . பிறகு, கடவுளுக்கு, உருவங்களைக் கொடுக்கிறார்கள்; பிறகு அதை வணங்குகிறார்கள் . அவர்கள் , தங்களுடைய அறிவுப்பூர்வமான கற்பனையையே (SYLLOGISM) வணங்குகிறார்கள் . உங்களுடைய சர்ச்சுகளிலும் , கோவில்களிலும் , மசூதிகளிலும் இருப்பது என்ன ? உங்களுடைய அறிவுப்பூர்வமான , தர்க்கரீதியான கற்பனையே! இந்த உலகத்துக்கு, ஒரு உண்டாக்கியவர் தேவைப்படுகிறார் . ஆகவே, அந்தப் படைத்தவரை ( அதாவது நீங்கள் உண்டாக்கிய ) நம்புகிறீர்கள். இது வெறும் நம்பிக்கைதான். ஆனால், எல்லா நம்பிக்கைகளும் பொய்யே. நம்பிக்கை என்பது வீட்டில் செய்த பணியாரம். ஆமாம், அது உங்களுக்கு ஒருவித ஆறுதலையும் , பாதுகாப்பையும் மற்றும் சௌகரியத்தையும் அளிக்கிறது. இந்த உலகத்தை ஒருவர் படைத்து, நிர்வகிக்கிறார் என்று நினைப்பது, மிகவும் சௌகரியமாக இருக்கிறது, ஆறுதலாக இருக்கிறது இல்லாவிட்டால் , ஒருவர் பயத்திலேயே வாழநேரிடும் . தங்களை யாரும் பாதுகாக்கவில்லை, உதவிசெய்யவில்லை, எந்த நேரத்திலும் , எந்தத் தவறும் நடக்கலாம் . ஆகவே, அந்தக் கற்பனை உருவங்கள் , உங்களுக்கு நம்பிக்கையைக் கொடுக்கிறது.

இது எப்படி இருக்கிறது என்றால் , நீங்கள் வானஊர்தியில் செல்லும் பொழுது, அதன் ஓட்டுனர் (PILOT) எல்லாப்பொறுப்புகளையும் தானே எடுத்துக்கொள்கிறார் என்று நீங்கள் அறிந்து, ஆறுதல் கொள்வது போல, ஆனால், திடீரென்று , நீங்கள் ஏதோ நினைத்துக்கொண்டு, அந்த ஓட்டுனர் அறைக்குச்

சென்று பார்க்க , அங்கே யாருமே இல்லை! இப்பொழுது என்ன நேரிடும்?

இதற்கு, சில நிமிடங்கள் முன்பு, நீங்கள் தேனீரைக் குடித்துக்கொண்டு, மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டு இருந்தீர்கள் . உங்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண்ணிடம் ஆர்வம் காட்டி, அவளுடைய உடலைத் தொட முயற்சி செய்கிறீர்கள்... இப்பொழுது எல்லாம் போய்விட்டது. எல்லா நம்பிக்கையும் போய்விட்டது. ஏனென்றால் , அங்கு ஓட்டுனர் இல்லை. அந்த நிமிடம் வரை, நீங்கள் மிகுந்த பாதுகாப்பில் இருந்ததாக எண்ணிக்கொண்டு இருந்தீர்கள் . இப்பொழுது, குழம்பிப் போய் நடுங்கிக் கொண்டு இருக்கிறீர்கள் . நீங்கள் , ஆண் , பெண் , உணவு, அருந்துதல் போன்ற விஷயங்களில் , இப்பொழுது சுத்தமாக உங்களுடைய ஆர்வத்தை இழந்து விட்டீர்கள் எல்லாம் முடிந்துவிட்டது. இல்லை முடியப்போகிறது!

இப்பொழுது, உங்களுடைய மூச்சு அடைக்கிறது. உங்களுடைய இரத்த அழுத்தம் தாறுமாறாக இருக்கிறது, உங்களுடைய இதயம் , படபடவென்று அடிக்கிறது. நீங்கள் பயந்து வியர்வையால் நனைகிறீர்கள் அதாவது குளிர்ந்த (AIR CONDIONED) வானஊர்தியில்!

ஆகவே, அந்த வானஊர்தியில், ஓட்டுனர் இருக்கிறார் என்ற நம்பிக்கையில் , நீங்கள் பாதுகாப்பாக இருக்கிறதாய் , எண்ணிக் கொண்டு இருந்தீர்கள் அதைப் போலத்தான் கடவுளையும் எண்ணிக்கொண்டு இருக்கிறீர்கள் . நீங்கள் எப்படி இருக்க ஆசைப்படுகிறீர்களோ, அப்படியே இருக்கலாம். நீங்கள் நம்பிக்கொண்டிருக்கும் , அந்தகடவுள்தான் , உங்களுடைய உண்மையான தகப்பனார் , அவருக்கு எல்லாம் தெரியும் . அவருடைய அனுமதி இல்லாமல் , ஒரு இலைகூட கீழே விழாது. எல்லாமே நன்மைக்குத்தான் - இப்படிக் கருதிக்கொண்டு இருப்பது, மிகவும் சௌகரியமானது.

இந்த மனம், எவ்வளவு தந்திரமானது! இந்தக் கடவுள்' உங்களுடைய தந்திரமான மனத்தின் வேலைதான் ! சாரஹா , ' நம்பிக்கை என்பது உண்மை இல்லை; உண்மை நம்பிக்கையாகாது; ' உண்மை' என்பது நீங்களே ''அனுபவித்தல்தான்' என்கிறார்.

கனவில் அனுபவிக்கும் சுகங்களைப் பெற

விரும்புகிறார்கள் . இந்த இன்பங்களெல்லாம் , உங்களுடைய கனவுகளில் காணும் அனுபவங்களே.

அவர்கள் அழிந்துவிடும் இந்த உடலையும் பணத்தையும் பேரின்பம் என்கிறார்கள்.

சில சமயம் , நீங்கள் உங்கள் உடலால் ஏமாற்றப்படுகிறீர்கள் . எப்படியோ முயற்சி செய்து, உங்கள் உடலைவிட்டு நீங்கள் தாண்டிச்சென்றால் , நீங்கள் மனத்தால் மயக்கப்படுகிறீர்கள் . இது மிகவும் தந்திரமானது, மிக மோசமாக ஏமாற்றக்கூடியது.

முதல் மூன்று சக்கரங்கள் , உங்களுடைய உடலைச் சார்ந்தது. அடுத்த மூன்று சக்கரங்கள் , உங்களுடைய மனத்தை சார்ந்தது. அடுத்து உள்ள ஏழாவது சக்கரம் இரண்டையும் கடந்து நிற்கிறது.

சாதாரணமாக , உலக இன்பங்களில் தீவிரமாக ஈடுபாடு உடையவர்கள் , இந்த மூன்று சக்கராவில் இருக்கிறார்கள் அவர்கள் அதைப் பிடித்து. தொங்கிக்கொண்டே இருக்கிறார்கள் . அதாவது முதல் மூன்று சக்கராவில் மூலதார் , சுவாதிஸ்தான் , மணிப்பூரா சக்கரங்கள் , இவைகள் இந்த உலகம் சம்மந்தமானது; இந்த பூமியைச் சார்ந்தது. அவைகள் , புவிஈர்ப்பு சக்தியால் (GRAVITATION) கீழே இழுக்கப்படுகின்றன . அடுத்த மூன்று சக்கராவாகிய , அனாஹதா, விஷுதா மற்றும் ஆக்னாக்களும் , ஆகாயம் சம்மந்தமானது. இந்த சக்கராக்களை, புவிஈர்ப்பு சக்தி ஒன்றும் செய்யாது. அவர்கள் இப்பொழுது, வேறு ஒரு விதியின் கீழ் இயங்குகிறார்கள். அதை, 'மிதந்து செல்லுதல் (LAVITA TION) என்று கூறலாம் . அவைகள் மேலே இழுக்கப்படுகின்றன. முதல் மூன்று சக்கரங்கள் உடல் சம்மந்தப்பட்டு இருப்பதால் , அவைகள் கீழே இழுக்கப்படுகின்றன . அடுத்து உள்ள மூன்று சக்கரங்கள் ஆகாயம் சம்மந்தப்பட்டு இருப்பதால் , அவைகள் மேலே இழுக்கப்படுகின்றன.

ஆனால் , நீங்கள் இரண்டுமாக இருக்கவில்லை. நீங்கள் ஏழாவதுநிலையில் இருக்கும்போது. அது மனமாகவோ மற்றும் உடலாகவோ இல்லை.

ஆகவே, இந்த உலக இன்பங்களில் மிகவும் ஈடுபாடுடையவர்கள் , முதல் மூன்று சக்கராவில் வாழ்கிறார்கள் . இந்த மூன்று சக்கராவைக் கடந்தவர்கள் , அடுத்த மூன்று சக்கராவில் வாழ ஆரம்பிக்கிறார்கள் . ஆனால் , அவர்கள் அதில் தங்களுக்கே உரித்தான , ஒரு கனவு உலகத்தை ஏற்படுத்திக் கொள்கிறார்கள்.

அது எப்படி இருக்கிறது என்றால் ஒரு நாள் நீங்கள் பட்டினிவிரதம் இருக்கிறீர்கள் . அன்று இரவு, இங்கிலாந்து அரசி, ஒரு மிகச்சிறந்த விருந்துக்கு , உங்களைக் கூப்பிட்டது போல , உங்கள் கனவில் நீங்கள் காண்கிறீர்கள் ! உங்களுடைய டாக்டர் அனுமதிக்காத பலவகையான உணவுகளை நீங்கள் ஆனந்தமாகச் சாப்பிடுகிறீர்கள் . உங்களுடைய பட்டினிதான், இந்தக் கனவை உண்டாக்கியது. ஆனால், இந்தக் கனவுகளினால் , உங்கள் உடல் ஒருபோதும் தேறப்போவது இல்லை. அடுத்த நாள் காலையில் , நீங்கள் முன்பு போல அல்லது அதற்கு மேலும், மிகவும் பசியோடு இருப்பீர்கள் . ஆனால் , இந்தக் கனவு உங்களுக்கு ஓரளவு உதவி செய்யும் . எப்படி அது. உதவி செய்கிறது? இந்தக் கனவுகளினால் , நீங்கள் தொடர்ந்து தூங்குகிறீர்கள் . இல்லாவிட்டால் , உங்களுடைய பசியே, உங்களை மீண்டும் மீண்டும் எழுப்பிவிடும் . நீங்கள் அடிக்கடி விழித்துக்கொண்டே இருப்பீர்கள் . இந்தக் கனவுகள் , உங்களுடைய மனம் செய்யும் தந்திரம்தான்! உங்கள் மனம், "நீ விழிப்பதற்கு, எந்த அவசியமும் இல்லை. இந்த இருட்டில் , நீ உன் குளிர் சாதனப் பெட்டியைத் தேடி, ஓட வேண்டாம் . நீ, கவலையில்லாமல் தூங்கு. இதோபார் , அந்த அரசி, உன்னை விருந்திற்குக் கூப்பிட்டு இருக்கிறாள் . அந்த அழகிய மேஜையில் நிறைய

விதவிதமான உணவுகள் , உனக்காக இருக்கின்றன . ஏன் , அவைகளை நீ சாப்பிடக்கூடாது? ' என்று உங்களைத் தூண்டும் . நீங்களும் கனவில் சாப்பிட ஆரம்பித்துவிடுகிறீர்கள் . இது உங்களுடைய மனத்தின் தந்திரமான செயல்தான்.

இதைப்போல, அனேக தடவைகள் நடந்திருக்கின்றன. உங்களுடைய சிறுநீரகப்பை நிறைந்திருக்கும் பொழுது, நீங்கள் கழிப்பறையில் இருப்பதாகக் கனவு காண்பீர்கள் . இது உங்களுக்கு உதவி செய்கிறது. இதனால் , உங்களுடைய சிறுநீரகப்பை காலியாகவில்லை. ஆனால் , நீங்கள் ஏமாற்றப்பட்டு, உங்களுடைய தூக்கம் தொடர்ந்து நடைபெறுகிறது.

உங்களுடைய நம்பிக்கைகள் , உங்களுடைய கற்பனைகள் , கனவுகள் கோவில்கள் , சர்ச்சுகள் மற்றும் உங்களுடைய குருத்துவார்கள் அனைத்தும் நீங்கள் தொடர்ந்து தூங்கவே உதவிசெய்யும் . அவைகள் மயக்க மருந்துகள்தான்.

அவர்கள் அழிந்துவிடும் இந்த உடலையும் பணத்தையும் பேரின்பம் என்கிறார்கள்.

அவர்கள் , சிலசமயம் , தங்களுடைய உடலில் தான் , அந்த மேலான பேரின்பம் இருக்கிறது என்றும் மற்றும் சில சமயம் , குண்டலினி எழும்பி மேலே செல்வது போல, மனம் கற்பனை பண்ணிக்கொள்கிறது என்றும், வெளிச்சம் போல், ஆயிரக்கணக்கான தோற்றங்களும், அனுபவங்களும் ஏற்படுகின்றன . இந்தத் தோற்றங்களில் ஜாக்கிரதையாக இருக்கவும் . ஒரு உண்மையான ஆன்மீகத்தன்மை நிரம்பியவன் , இதைப்போன்ற பிரக்ஞைநிலையில் தோன்றும் வித்தியாசமான தோற்றங்களில் , எந்த விருப்பமும் கொள்வதில்லை. அவன் அந்த வெறும் பிரக்ஞைநிலையில் மாத்திரம்தான் , ஆர்வமாக இருப்பான்.

அடுத்து, 'ஓம்' என்ற ஒலியைக் கொண்டு......

சுயத் தெளிவு அடையப் பெற்றதாக அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் . வெவ்வேறு சூழ்நிலைகளில் அதற்கு ஒரு முத்திரை வேண்டும் என்று அடம் பிடிப்பார்கள் . தன்னிச்சைத் தன்மை அடைந்துவிட்டதாகவும் அவர்கள் சொல்லிக் கொள்வார்கள் . இது எல்லாம் கண்ணாடியில் பிம்பங்களைப் பார்ப்பது போன்றதுதான்.

மந்திரங்களின் மூலமாகவும் , ஒருவித தொடர்ந்த ஒலிகளின் மூலமாகவும், நீங்கள் ஒருமாதிரியான மன மயக்க நிலையை அடையலாம் . ஆமாம் . டி.எம் . (TM)

மூலமாக , ஒருவித மாறுபட்ட நிலையை, நீங்கள் அடையலாம்.

நீங்கள் , தொடர்ந்து ஒருவித ஒலியைத் திரும்பத் திரும்பச் சொன்னால் , அது உங்களை அமைதிப்படுத்துகிறது. உங்களுடைய மனத்தில், அது ஒரு லயத்தை உண்டுபண்ணுகிறது. நீங்கள் ஒன்றையே திரும்பத் திரும்பக் கூறுவதில் , ஒருவித லயம் இருக்கிறது. நீங்கள் , ' ஓம் , ஓம் , ஓம் ' என்றோ அல்லது 'இவாம், இவாம்,

இவாம் ' என்றோ அல்லது எந்த மந்திரத்தையாவது. உதாரணமாக, கொக்கோ கோலா (COCA-COLA) என்று திரும்பத் திரும்பக் கூறினாலும் , அந்த உதவியை செய்யும் நீங்கள் கொக்கோ - கோலா, கொக்கோ - கோலா, கொக்கோ - கோலா என்று திரும்பத் திரும்ப மிகவும் லயித்து, அன்புடனும் , மரியாதையுடனும் சொல்லிக்கொண்டே இருந்தால் , அதுவும் உதவி செய்யும் . நீங்கள் ஒரு கொக்கோ கோலா பாட்டிலை, உங்கள் முன்னால் வைத்து, மலரையும், பழங்களையும், அதற்கு முன்பு வைத்து, ஒருவிதமான சூழ்நிலையை உண்டு பண்ணலாம் . அந்த கொக்கோ - கோலா பாட்டிலுக்கு முன்பு, ஊதுபத்திகளைக் கொளுத்திவைத்து, அந்த மந்திரத்தை திரும்பத்திரும்பக் கூறலாம் . இதை நீங்கள் நீண்ட நேரம் செய்தால், நீங்கள் உங்களை நல்ல நிலையில் உணர, எல்லா சாத்யமும் உண்டு. இப்பொழுது, நீங்கள் உங்களையே வசியம் செய்துகொள்கிறீர்கள் நீங்கள் , உங்களிடமே, ஒன்றையே திரும்பத் திரும்பக் கூறுவதினால் - உதாரணமாக " இப்பொழுது தூக்கம் வந்துகொண்டு இருக்கிறது. அமைதி வந்துகொண்டு இருக்கிறது, மகிழ்ச்சி வந்துகொண்டு இருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே இருந்தால் , அது உங்களையே, நீங்கள் வசியம் செய்து கொள்கிறீர்கள் என்று அர்த்தம். இது ஒரு மறைமுகமான தன்னையே வசியப்படுத்திக்கொள்தலாகும் . ( INDIRECT AUTO SUGGESTION)

எமில் கூ'(EMILE COVE'), நேரடியான வசிய முறையை (DIRECT SUGGESTIONS) அறிமுகப்படுத்துகிறார் .

நீங்கள் , " நான் மேலும் , மேலும் சந்தோஷமாக இருக்கிறேன் ' என்று திரும்பத் திரும்ப நினைத்தால் அது நேரடியான வசியமாகும் (DIRECT SUGGESTIONS) எமில் கூ ஒரு மேற்கத்திய மனிதன் - மிகவும் நேர்மையான , உண்மையான , எதையும் நேரடியாகச் சொல்லும் , நல்ல மனிதன் . மகரிஷி மகேஷ் யோகி சொல்வது என்னவென்றால் , நீங்கள் ' ஓம் ஓம் , ஓம் அல்லது ' ராம் , ராம் என்று சொல்லிக்கொண்டு இருங்கள் என்பதாகும் - இது " மறைமுகமாக தன்னையே வசியப்படுத்திக் கொள்தலாகும் (INDIRECT SUGGESTIONS) இது கிழக்கத்திய முறையைத் தழுவியது. ஆனால் , இரண்டுமே சொல்வது என்னவென்றால் , நீங்கள் , இந்த மந்திரத்தை தினசரி காலை, மாலை இரண்டு வேளை, சுமார் 20 நிமிடம் சொல்லிவந்தால் , நீங்கள் மேலும் ஆரோக்கியமாகவும், மேலும் அமைதியாகவும், மேலும் ஆனந்தமாகவும் ... இப்படி அப்படி என்று ஆசைகாட்டுவதுதான் - ஏன் , இதனால் உங்களுடைய சம்பளம் கூட கூடுமாம் ! உங்களுக்கு உத்தியோக உயர்வு (PROMOTION) சீக்கிரம் கிடைக்குமாம் ...! இவைகளையெல்லாம் , அவர் சத்தியம் செய்கிறார் ! ஏன் , இந்த முழு உலகமே, உங்களுடைய விருப்பப்படி, உங்களுக்கு ஒத்துழைக்குமாம் ! - இது என்ன தந்திரமான பித்தலாட்டம்?

இது மறைமுகமாகச் சொல்லப்படுகிறது. இப்பொழுது, நீங்கள் அந்த மந்திரத்தில் ஈடுபடமாட்டீர்கள் அது உங்களுக்கு முக்கியமில்லை உங்களுடைய விருப்பம் மற்றும் எண்ணமெல்லாம் , ஆரோக்கியம் , பணம் , அந்தஸ்த்து, அதிகாரம் , அமைதி, மகிழ்ச்சி என்பவற்றில் தான் இருக்கும்

இப்பொழுது இவைகள்தான் உஙகளை ஆட்டிப்படைக்கிறது, உங்களுக்கு முன்பு நின்று கொண்டு உங்களை இழுக்கிறது. ' மந்திரம் யாருக்கு வேண்டும் ? அதனால் பயன் ஏதும் இல்லை என்றால் ! ஒவ்வொரு தடவையும் நீங்கள் 'ஓம்' என்று சொல்வதால், நீங்கள் அவைகளை நோக்கி, முன்னேறுகிறீர்கள் என்று கற்பனை செய்துகொள்கிறீர்கள் . இந்த நம்பிக்கைதான்

இப்பொழுது உங்களிடம் வேலை செய்ய ஆரம்பிக்கிறது - மந்திரம் அல்ல . நீங்கள் எந்த அளவுக்கு நம்புகிறீர்களோ, அந்த அளவுக்கு அதை நீங்கள் அடைவீர்கள் . அதில் நம்பிக்கை தளர்ந்தால் , அது வேலை செய்யாது. அப்பொழுது மகேஷ் யோகி, "அது எப்படி வேலைசெய்யும்? அந்த மந்திரம், வேலை செய்யும் என்று நீங்கள் நம்பவேண்டும் '' என்று கூறுவார்.

நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . உங்களுடைய நம்பிக்கை இல்லாமலேயே, ' உண்மை வேலை செய்யும் . அதற்கு உங்களுடைய நம்பிக்கை எதுவும் தேவை இல்லை. நம்பிக்கையின் மூலமாக , ' பொய்தான் (UNTRUTH) வேலை செய்யும் ! இந்த பொய்மைக்கு, உங்களுடைய நம்பிக்கை தேவைப்படுகிறது. ஏன்னறால் , உங்களுடைய விருப்பப்படி நீங்கள் நம்பினால் , அது உங்களுடைய மனத்தை தகுந்த மாதிரி மாற்றி, அது, அப்படி வேலைசெய்யக்கூடிய சூழ்நிலையை உருவாக்குகிறது.

சுயத் தெளிவு அடையப் பெற்றதாக அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் . வெவ்வேறு சூழ்நிலைகளில் அதற்கு ஒரு முத்திரை வேண்டும் என்று அடம் பிடிப்பார்கள்.

இப்படி நினைப்பது, முட்டாள்தனம் என்று சாரஹா கூறுகிறார் . நீங்கள் ஒரே சொல்லை, மந்திரம் என்று திரும்பத் திரும்பக் கூறினால் , நீங்கள் தெளிவான நிலையை அடைய முடியாது. மாறாக , நீங்கள் மேலும் அதிகமாக மேகம் மூட்டம் போல் மறைக்கப்படுவீர்கள் . மாறாக , நீங்கள் அதிக தூக்கத்தில் இருப்பீர்கள் . இதனால் , நீங்கள் நிச்சயமாக நல்ல தூக்கத்தைப் பெறுவீர்கள் . இதிலுள்ள நல்ல அம்சம் இதுதான் . அமெரிக்காவில் , மகேஷ் யோகி பிரபல்யம் ஆனது, ஏதோ தற்செயலாக நடந்தது இல்லை. அவருடைய ' டி.எம் . '(T.M; TRANSCENDAL MEDITATION) முறை அமெரிக்காவை, மிக நன்றாக ஆக்ரமித்திருக்கிறது. ஏனென்றால் , அமெரிக்க மக்கள் , தூக்கமின்மையால் மிகவும் அவதிப்படுபவர்கள் . அவர்களால் சரியாகத் தூங்க முடியவில்லை. அவர்கள் தூங்குவதற்கு, ஏதோ தந்திரம் தேவையாக இருக்கிறது. இதற்கு ' டி.எம் ' மிகவும் உதவி செய்கிறது. அந்த முறையை, நன்றாகத்

தூங்குவதற்கு மாத்திரம் உபயோகப்படுத்தினால் , நான் மகேஷ் யோகிக்கு, எதிராகப் பேசமாட்டேன் . எல்லோரும் நன்றாக ஆழ்ந்து தூங்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன் . ஆனால் , நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . இது, உங்களை எங்கேயும் அழைத்துச் செல்லாது. அது ஒருக்காலும் , ஆன்மீக யாத்திரையாக இருக்க முடியாது. அதுவெறும் ஆறுதல்தான்.

"வெவ்வேறு சூழ்நிலைகளில் அதற்கு ஒரு முத்திரை

இந்த நான்கு முத்திரைகளைப்பற்றி (SEALS) நீங்கள் நன்றாகத் தெரிந்து கொள்ளவேண்டும். இந்த நான்கு முத்திரைகளைப்பற்றி (MUDRAS) தந்த்ரா எடுத்துச் சொல்கிறது. ஒருவன் , அந்த முடிவான மேலான நிலையை அடையவேண்டும் என்றால் , அவன் இந்த வேறான நான்கு கதவுகளைத் திறந்து தாண்டிச்செல்ல வேண்டும் . அவன் நான்கு பூட்டுகளைத் திறக்க வேண்டும். இந்த நான்கு பூட்டுகளைத்தான் , சாரஹா, நான்கு முத்திரைகளாக (SEALS) சொல்கிறார் . இவைகள் மிகவும் முக்யத்வம் வாய்ந்தவை.

முதல் முத்திராவுக்கு , 'கர்ம முத்திரா'(KARMA MUDRA) என்று பெயர். உங்களுடைய இருத்தலில் (BEING) இது மிகவும் வெளியே (OUTER MUST) இருக்கிறது. உங்களுடைய வெளி உலகத்து செயல்களைப்போல இது வெளித்தன்மையாக இருக்கிறது. நீங்கள், பிறரை அன்புடன் நேசிக்கிறீர்கள் அல்லது வெறுக்கிறீர்கள் அல்லது கொல்கிறீர்கள் அல்லது காப்பாற்றுகிறீர்கள். இவைகளெல்லாம் , மிகவும் மேலோட்டமானது, வெளித்தன்மையைச் சார்ந்தது.

நீங்கள் , உங்களுடைய செயலில் முழுமையாக இருந்தால் , பிரக்ஞையாக இருந்தால் , இந்த முதல் முத்திரை அல்லது பூட்டு உடைக்கப்படுகிறது. நீங்கள் எந்தச் செயலை செய்தாலும் , அதில் முழுமையாக இருங்கள். அது உங்களுக்குப் பெருத்த மகிழ்ச்சியைக் கொடுக்கும் அதை மந்திரங்களைத் திருப்பித் திருப்பிச் சொல்வதால், அடைய முடியாது. ஆனால், முழுமையாக, ஈடுபாட்டுடன் , பிரக்ஞையாக செயல்படுவதன் மூலம் , நீங்கள் அதை அடையலாம் . நீங்கள் கோபப்பட்டால் ,

அதில் முழுமையாக இருங்கள் . இந்த முழுமையான கோபத்திலிருந்து, நீங்கள் நிறையக் கற்றுக்கொள்ளலாம் . மற்றும் , அந்த நிலையில் , உங்களுடைய கோபம் , ஒரு நாள் முற்றிலும் மறைந்துவிடும் . மேலும் கோபப்படுவதற்கு எதுவும் இல்லை. நீங்கள் அதைச் சரியாகப் புரிந்து கொண்டீர்கள். அப்பொழுது, அது தானே விலகிவிடும்.

எதுவாக இருந்தாலும் , சரியாகப் புரிந்துகொண்டால் , அதைச் சுலபமாக விட்டுவிடலாம் . நீங்கள் முற்றிலும் புரிந்துகொள்ளாதவைகள்தான் உங்களை சுற்றிக்கொண்டு இருக்கும் . ஆகவே, எதைச்செய்தாலும் , அதில் முழுமையாக இருங்கள் , பிரக்ஞையாக இருங்கள் , ஜாக்கிரதை உணர்வுடன் இருங்கள் . நீங்கள் திறக்க வேண்டிய , முதல் கதவு இதுதான்.

எப்பொழுதும் நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . தந்த்ரா மிகவும் விஞ்ஞானப்பூர்வமானது. அது ஒருபோதும் , ஒரே மந்திரத்தை திரும்பத் திரும்பக் கூறவும் என்று சொல்லாது. அது, ''நீங்கள் உங்களுடைய செயல்களில் ஜாக்கிரதையாக இருக்கவும்'' என்றுதான் சொல்லும்.

இரண்டாவது முத்திரை, ஞான முத்ரா (GYANA MUDRA) என்று அழைக்கப்படும் . இது, முதல் முத்திரையைவிட சிறிது ஆழமானது. சிறிது உள்ளே உள்ளது. - அதாவது விஷய ஞானம் போல . செயல் என்பது மிகவும் மேலானது.

விஷயஞானம் என்பது சிறிது ஆழமானது. நான செய்வதை நீங்கள் பார்க்கலாம் . ஆனால் , நான் அறிந்ததை, உங்களால் பார்க்க முடியாது. அறிந்தவை என்பது சற்று உள்ளே உள்ளது. செயல்களை நீங்கள் பார்க்கலாம் . ஒருவருடைய விஷயஞானத்தை, உங்களால் பார்க்க முடியாது. இரண்டாவது முத்திரையான ஞான முத்திரை, இந்த அறிந்தவைகள்தான் , விஷயஞானம்தான்.

இப்பொழுது, நீங்கள் எதை உண்மையாக

அறிந்தீர்களோ, அதை ஆழமாக அறிந்து கொள்ள ஆரம்பியுங்கள் . நீங்கள் உண்மையிலேயே அறிந்து கொள்ளாததை, நம்புவது என்பதை நிறுத்திக் கொள்ளுங்கள். உங்களிடம் யாராவது, "கடவுள் என்று யாராவது இருக்கிறார்களா?' என்று கேட்டால், நீங்கள், " ஆமாம். கடவுள் இருக்கிறார் " என்று சொல்வீர்கள். நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . உங்களுக்கு உண்மையிலேயே தெரியுமா? நீங்கள் அறியவில்லை என்றால் , தயவுசெய்து அப்படி சொல்லாதீர்கள் . " எனக்குத் தெரியாது" என்று சொல்லுங்கள் . நீங்கள் நேர்மை உள்ளவராக இருந்தால், நீங்கள் எவைகளை அறிந்திருக்கிறீர்களோ, அவைகளை மட்டும் சொல்லுங்கள் அதைப் போல , நீங்கள் அறிந்ததை மட்டும் நம்புங்கள். இப்பொழுது, இரண்டாவது முத்திரை உடைக்கப்பட்டு விடுகிறது. நீங்கள் உண்மையாக அறிந்து கொண்டும் , அறியாததை நம்பிக் கொண்டும் இருந்தால் , அந்த இரண்டாவது முத்திரை ஒருக்காலும் உடைக்கப்படமாட்டாது. உண்மையான விஷய ஞானத்துக்கு எதிரி, இந்த பொய்யான விஷயஞானம்தான் . நீங்கள் அதை வெறுமனே நம்புகிறீர்கள் . நீங்கள் ஞானிகள் என்று கருதிக்கொண் டிருக்கும் அவர்கள் , " முதலில் நம்புங்கள், பிறகு உங்களுக்குத் தெரியும்' என்றுதான் கூறுவார்கள்.

ஆனால் தந்த்ரா, " முதலில் அறிந்துகொள்ளுங்கள் . நம்பிக்கை தானே வரும் என்று சொல்கிறது. இந்த நம்பிக்கை வேறு விதமானது. இது ஆதாரப்பூர்வமான நம்பிக்கை. (TRUST) நீங்கள் கடவுளை நம்புகிறீர்கள் . ஆனால் , சூரியனைப் பார்க்கிறீர்கள் . சூரியன் உதயமாவதை, கண்ணால் பார்க்கிறீர்கள் . அதை நீங்கள் நம்ப வேண்டியது இல்லை. அது உங்கள் கண்களுக்கு எதிரே இருக்கிறது. ஆனால் , கடவுள் என்று ஒருவரை, நீங்கள் நம்புகிறீர்கள் . கடவுள் என்பது பொய் . அதாவது உங்களுடைய கடவுள் , பொய்தான்.

வேறு ஒரு கடவுள் உண்டு. அறிந்துகொள்ளுதல் மூலமாக , உண்டாகும் கடவுள்தான் அது. ஆனால் , முதலில் , நீங்கள் அறியாதவைகளை விட்டுவிட்டு, அறிந்தவைகளை மட்டும் நம்பவேண்டும் . நீங்கள்

எவ்வளவோ விஷயங்களை எப்பொழுதும் நம்பிக்கொண்டு இருந்தீர்கள் . அந்தச் சுமையைத் தூக்கிக் கொண்டுதான் அலைந்தீர்கள் - முதலில் , அவைகளைத் தூக்கி எறியுங்கள். இப்படிச் செய்தால், 100 விஷயங்களில் , கிட்டத்தட்ட 98 விஷயங்கள் உங்களைவிட்டு அகன்று, உங்களுடைய சுமை மிகவும் குறைந்துவிடும் . நீங்கள் உண்மையிலேயே அறிந்தவைகள் தான் , மிகச் சிறிய அளவில் உங்களிடம் இருக்கும் . இப்பொழுது, நீங்கள் மிகுந்த விடுதலை உணர்வைப் பெறுவீர்கள். .

ஓஷோ

உங்களுடைய தலையில் அவ்வளவு கனம் இருக்காது. அந்த சுதந்திரத் தன்மையில் , மிகவும் இலேசான நிலையில் நீங்கள் அந்த இரண்டாவது முத்திராவுக்குள் நுழைகிறீர்கள் . இப்பொழுது இரண்டாவது பூட்டும் உடைக்கப்பட்டுவிடுகிறது.

அடுத்து, மூன்றாவது முத்திராவின் பெயர் , சமய முத்திரா' (SAMAYA MUDRA) ' இப்பொழுது இங்கே' இருங்கள் என்று அர்த்தம் ஏன்? 'சமய என்பதை காலம் (TIME) என்று அழைக்கலாமா? சாதாரணமாக, நீங்கள் காலத்தை, இறந்தகாலம் , நிகழ்காலம் , எதிர்காலம் என்று மூன்று வகையாகப் பிரிக்கிறீர்கள் - ஆனால் , தந்த்ராவின் முறை வேறு. தந்திரா, " இப்பொழுது' ' உள்ள நிகழ்காலம் தான் , உண்மையான காலம் . இறந்தகாலம் என்பது முடிந்து விட்டது. எதிர்காலம் என்பது இன்னும் நிகழவே இல்லை'' என்று கூறுகிறது.

நீங்கள் நிகழ்காலத்தில் இருப்பதுதான், உண்மையான காலம் இல்லாவிட்டால், நீங்கள் ஒன்று உங்களுடைய ஞாபகங்களில் இருக்கவேண்டும் அல்லது உங்களுடைய கனவுகளில் இருக்கவேண்டும் . இரண்டுமே பொய்தான் , ஏமாற்றுதல் தான் . ஆகவே, நீங்கள் ' இப்பொழுது, இங்கே' இருந்தால் , அந்த மூன்றாவது முத்திரையும் உடைக்கப்பட்டு விடுகிறது.

ஆகவே, முதலில், உங்கள் செயல்களில் முழுமையாக இருங்கள் - முதல் முத்திரை உடைக்கப்படுகிறது. இரண்டாவதாக , நீங்கள் , அறிந்ததில் நேர்மையாக இருங்கள் இரண்டாவது முத்திரை உடைக்கப்படுகிறது. மூன்றாவதாக இப்பொழுது இங்கே இருங்கள்.

இப்பொழுது நான்காவது முத்திரை - இதன்பெயர் ' மஹா முத்திரா' (MAHA MUDRA) என்பதாகும் . அதாவது மிகவும் உள்ளடங்கிய மிகப்பெரிய பரந்தவெளி. இப்பொழுது, இந்த பரந்த மிக சுத்தமான பரவெளிதான் மீதம் இருக்கிறது.

அதாவது, செயல் , அறிதல் , காலம் , பரவெளி (SPACE இதை இடம் என்றும் அழைத்துக்கொள்ளலாம் ) - இவைகள்தான் அந்த நான்கு முத்திரைகள் , பரவெளி என்பது, உங்களுடைய மிக உள்ளடங்கிய மையம், ஒரு சக்கரத்துக்கு அச்சாணிபோல , புயலின் நடுமையம் போல . ஆகவே, உங்களுடைய மிக உள்ளடங்கிய மையத்தில் தான் , ஒன்று மற்ற (EMPTINESS) , பரந்த ஆகாயம் இருக்கிறது. இந்த நான்காவது முத்திரையையும் உடைக்க வேண்டும் . ஒரு மந்திரத்தை திரும்பத் திரும்ப கூறுவதினால் அவைகள் ( அடைப்புகள் , முத்திரைகள் ) உடைக்கப்படமாட்டாது. ஆகவே, உங்களையே முட்டாளாக்கிக் கொள்ளாதீர்கள். .

ஆகவே, உங்களுடைய உள்ளடங்கிய ' உண்மை நிலையை அறிந்துகொள்ள , நீங்கள் மிகப்பெரிய வேலைகளைச் செய்ய வேண்டும்.

சங்கிலிகளால் பிணைப்புண்டு அதில் இன்பம் கண்டு அதையே முடிவான உண்மை

அந்த நான்கு முத்திரைகளும் உடைக்கப்படாமல் , உங்களிடம் ஒரு தெளிவு ஏற்படாது. நீங்கள் அந்த சுத்த பரவெளியை அடையாமல், உங்களிடம் எந்தத் தெளிவும் ஏற்படாது.

கானல் நீரை நீரெனக் கண்டு தாகம் தணிக்க ஓடுவதுபோல்

ஆமாம் . மந்திரங்களைச் சொல்வதால் , நீங்கள் ஒரு கண்ணாடியைத் தான் உண்டுபண்ண முடியும். அந்தக் கண்ணாடியின் மூலமாக , பல பொருள்களைப் பார்க்கலாம் . அது தோற்றம்தான் (IMAGE), உண்மையில்லை. அதற்கு மதிப்பு மிகக் குறைவு.

அதாவது, சந்திரனின் பிம்பத்தை, ஒரு நிலையான ஏரி நீரில் பார்த்து, அதுதான் உண்மையான சந்திரன் என்று நினைப்பது போலத்தான் நீங்கள் உங்களை ஒரு கண்ணாடியில் பார்த்துக்கொண்டு, அதுதான் நீங்கள் என்று கருதுவது போலத்தான் , அது. நீங்கள் அங்கே இல்லை. சிறுபிள்ளைத்தனமாக நினைத்துக்கொள்ளாதீர்கள். சிறிய குழந்தைகள்தான், அப்படி எண்ணும்

. நீங்கள் . முதன் முதலாக , ஒரு குழந்தையை, ஒரு கண்ணாடிக்கு முன்பு கொண்டு சென்றால் , அது செய்வதை கவனித்திருக்கிறீர்களா? அது, அந்தக் கண்ணாடிக்குள் நுழைய ஆசைப்படும் . அந்தக் கண்ணாடியைப் பிடித்துக்கொண்டு, அதன் உள்ளே செல்ல , மிகவும் முயற்சி செய்யும் . அடுத்து, பின்பக்கமாக முயற்சி செய்யும் . இதைத்தான் , நாம் செய்துகொண்டு இருக்கிறோம்.

மனம் என்பது ஒரு கண்ணாடிதான் . ஆமாம் . டி.எம் . மந்திரத்தைத் திருப்பித் திருப்பி சொன்னால் , அந்தக் கண்ணாடி மிக, மிக சுத்தமாகிவிடும். ஆனால், இந்தக் கண்ணாடியைப் பார்த்து, நீங்கள் எதையும் அடைமுடியாது. இந்தக் கண்ணாடியை, நீங்கள் முழுமையாகத் தூக்கி எரிய வேண்டும் . நீங்கள் உங்களுக்குள்ளே ஆழ்ந்து செல்ல வேண்டும் . இதுதான் நடைமுறைக்கு மிகவும் ஏற்றது. முதலில் செயல் அடுத்து அறிதல் , அடுத்தது காலம் , அடுத்தது இடம் (பரவெளி)

அறியாமையால் மான் கூட்டம் கானல் நீரை நீரெனக் கண்டு தாகம் தணிக்க ஓடுவதுபோல் சங்கிலிகளால் பிணைப்புண்டு அதில் இன்பம் கண்டு அதையே முடிவான உண்மை என்று அவர்கள் எல்லாம் சொல்லிக் கொள்வார்கள்.

கடைசி சூத்திரம் :

சாரஹா சொல்கிறார் , " கண்ணாடியில் காணும் உங்கள் உருவம் ஒரு பொய்த் தோற்றம். நீங்கள் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள் . உங்களைச் சுற்றி ஒரு பொய்த்தோற்றம் உருவாக நீங்கள் உதவிக் கொண்டிருக்கிறீர்கள் . நீங்கள் ஒரு கனவுக்கு ஒத்தாசை செய்கிறீர்கள்.

நம் மனதில் நிகழ்பவைகளின் பிரதிபலிப்பில் நாம் ஏமாந்துவிடுகிறோம். .

ஒரு அழகான கதையைக் கேளுங்கள்

ஒருவன் , வெல்ஸ் (WELSH) மலைகளில் , ஓய்வாக நடக்க எண்ணி, அதன் பக்கத்தில் உள்ள சிறிய கிராமத்தில் , ஒரு பொது இடத்தில் தங்கினான் . அவனுக்கு அந்த மாலைப்பொழுது, மிவும் அலுப்பாக இருந்தது. அங்கிருந்த , அந்தப் பொது இடத்தின் உரிமையாளரிடம், "இங்கு, பொழுதுபோக்க, யாராவது பெண்கள் கிடைப்பார்களா?" என்று கேட்டான். இதைக் கேட்டதும் , அந்த ஆள் , மிகவும் அதிர்ச்சி அடைந்து, "நன்றாகக் கவனித்துக்கொள். இது வெல்ஸ். இங்கே எந்த விலைமாதும் கிடையாது. கிருஸ்துவ மடாலயம் அவர்களை, இங்கு ஒருபோதும் அனுமதிக்காது. ஆனால் , நாம் எல்லோரும் மனிதர்கள்தானே. நாம் எங்கே இருந்தாலும் , அந்த எண்ணம் நம்மை விட்டு அகலாதுதான் . ஆனால் , நீ சொல்லிய விஷயம் , மறைமுகமாக நடக்கிறது. இந்த மலைக்குப்பின்னால் , சில குகைகள் இருக்கின்றன . அவைகளில் , எல்லா வசதிகளோடும் , நீ , கேட்டது கிடைக்கும் . ஆனால் , உன்னைப்போன்று, புதிதாக வரும் ஆள் , முதலில் இந்த மலையில் ஏறி, "யூ - ஹூ' (YOO-HOO! ) என்று பலமாகக் கத்த வேண்டும். பதிலுக்கு, ஒருவன் அப்படி கத்தினால் , அவள் தனியாக இருக்கிறாள் என்று அர்த்தம் . நீ அங்கே சென்று அவளுக்குத் தேவையானதைக் கொடுத்து, உன்னுடைய தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளலாம். ஆனால் , பதில் ஒலி வரவில்லையென்றால் , அவள் வியாபாரத்தில் இருக்கிறாள் என்று அர்த்தம் !" என்று விளக்கினான்.

அன்று மாலையே, அந்த ஆங்கிலேயன் , அந்த மலையில் ஏறி " யூ - ஹூ' ' என்று பலமுறை கத்திப்பார்த்தான். எந்தப் பதில் ஒலியும் எங்கிருந்தும் வரவில்லை. சரி, நமக்கு அதிர்ஷ்டம் அவ்வளவுதான் என்று நினைத்து, திரும்பிச் சென்றான் . அந்த மலையடிவாரத்தின் அருகில் , ஒரு புதிய குகை

இருப்பதைக்கண்டு, ' யூ - ஹூ' ' என்று கத்தினான் . ஆச்சரியமாக, ''யூ - ஹூ" என்று பதில் சப்தம் வந்தது. அவன் மிகவும் மகிழ்ச்சியோடு, அதை நோக்கி ஓடினான் . ஆனால் , ஒரு புகைவண்டியில் அடிபட்டு இறந்தான்!

கானல்(MIRAGE) என்பது இதுதான்! நீங்கள் ஒன்றைக் கற்பனை செய்து, அதைக்காண முயல்கிறீர்கள் . ஒருவன் , ஒரு பாலைவனத்தில் செல்லும்பொழுது. மிகவும் தாகம் எடுத்து, தொண்டை வறண்டு, வயிற்றில் எரிச்சல் ஏற்பட்டு, மயக்க நிலைக்கு வருகிறான் . அப்பொழுது, தண்ணீர் எங்கேயாவது கிடைக்கும் என்ற கற்பனை எண்ணத்தில் , அங்கும் இங்கும் பார்க்கிறான் . அதாவது, தன் எண்ணத்தை வெளியே செலுத்துகிறான் . அப்பொழுது அவன் ஒரு மாயத்தோற்றம் உள்ள ஏரியைக் காண்கிறான் . அங்கிருந்து குளிர்ச்சியான காற்று வருவதாக உணர்கிறான் . அங்கே, சில பறவைகள் பறந்து கொண்டு இருப்பதாகவும் , சில பச்சை மரங்கள் இருப்பதாகவும் நினைத்துகொள்கிறான் . அந்த மரத்தின் நிழல் கூட , அந்தத் தண்ணீரில் பட்டு, பிரதிபலிப்பதாக எண்ணுகிறான் . ஆகவே, அதை நோக்கி ஓடுகிறான். .

இப்படித்தான் , நாம் பல லட்சம் பிறவிகளாக ஓடிக்கொண்டு இருக்கிறோம் . '' யூ - ஹூ' ' என்று கத்திக்கொண்டு, ஒவ்வொரு குகையிலும் நுழைந்து வருகிறோம் . ஆனால் , ஒவ்வொரு சமயமும் , நீங்கள் சென்று, அங்கே நீர் இல்லாததைப் பார்த்து ஏமாறுகிறீர்கள் . உங்கள் தாகம் இன்னும் தணியவில்லை. ஆனால் , இந்த அனுபவத்தால் , நீங்கள் எதையும் கற்றுக்கொள்ளவில்லை.

மனிதனிடம் உள்ள மிகப்பெரிய பிரச்சினை என்னவென்றால் , அவன் எதையும் ஊன்றிக் கவனித்து உண்மையைக் கற்றுக்கொள்வது இல்லை. நீங்கள் ஒரு ஆணையோ, பெண்ணையோ காதலிக்கிறீர்கள் . உங்களுடைய பாலுணர்வு தாகம் , அதனால் தணிந்துவிடும் என்று நீங்கள் எதையும்

கற்றுக்கொள்ளவில்லை. நீங்கள் மீண்டும் , மீண்டும் ஒரு குகையிலிருந்து. வேறு குகைகளுக்கு சென்றுகொண்டே இருக்கிறீர்கள் . உங்களிடம் பணம் ஏதும் இல்லை. ஆனால் , உங்களிடம் 10,000 ரூபாய் இருந்தால் , எவ்வளவு சந்தோஷமாக வாழலாம் என்று கருதுவீர்கள் . பிறகு, அந்தத் தொகை, ஏதோ ஒரு வழியில் கிடைக்கலாம் . ஆனால் , இதனால் நீங்கள் எதையும் கற்றுக்கொள்ளவில்லை. பிறகு, நீங்கள் , " ஒரு லட்சம் ரூபாய் இல்லாமல் , நான் எப்படி சந்தோஷமாக இருக்க முடியும்?" என்று எண்ணுவீர்கள். பிறகு, ஒரு லட்சம் கிடைத்ததும் , நீங்கள் எதையும் கற்றுக்கொள்ளவில்லை. பிறகு 10 லட்சம் தேவை என்று எதிர்பார்க்கிறீர்கள் . இப்படியே உங்களுடைய ஆசைகள் , கற்பனைகள் வளர்ந்து கொண்டே போகின்றன . அதாவது ஒரு குகையிலிருந்து அடுத்த குகைக்கு ஒரு பிறவியிலிருந்து, அடுத்தடுத்த பிறவிக்கு! ஆனால் , மனிதனால் எதையும் கற்றுக்கொள்ள முடியவில்லை என்பதுதான் உண்மை. ஆகவே, முதலில் கற்றுக்கொள்ள ஆரம்பியுங்கள் . கொஞ்சம் பிரக்ஞையாக, ஜாக்கிரதையாக வாழுங்கள். ஒவ்வொரு அனுபவமும் , ஒவ்வொரு பாடத்தை, உங்களுக்குக் கற்றுக்கொடுக்கட்டும்.

நீங்கள் பல பிறவிகளாக , பல சமயங்களில் , பல பொருள்களைக் கேட்டிருக்கிறீர்கள் . இப்பொழுது கேட்பதை நிறுத்துங்கள் . நீங்கள் பலவற்றில் ஆசைப்பட்டு அடைந்தீர்கள் ஆனால், அந்த ஆசைகள், உங்களை எங்கும் அழைத்துச் செல்லவில்லை. அவைகள் அப்படியேதான் இருக்கின்றன . ஒவ்வொரு ஆசையும் , உங்களை ஏமாற்றத்தில்தான் கொண்டு போய்விடுகிறது. இருந்தும் , நீங்கள் ஆசைப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறீர்கள் . நேற்றைக்கும் ஆசைப்பட்டிருக்கிறீர்கள் . நேற்று முன் தினமும் ஆசைப்பட்டிருக்கிறீர்கள் . ஆனால் , அதிலிருந்து எதையும் நீங்கள் அடையவில்லை. நீங்கள் அதே வழியைத்தான் இப்பொழுதும் பின்பற்றி, அதே காரியத்தை மீண்டும் மீண்டும் செய்கிறீர்கள்.

கற்றுக்கொள்வதுதான் , மதத்தன்மையாக மாறும் . சீடன் ' (DISCIPLE) என்ற வார்த்தை அல்லது ஆங்கிலத்தில் ' டிசைபில் என்ற வார்த்தை மிகவும் அழகானது. இதன் அர்த்தம் கற்றுக்கொள்ளும்

தன்மையுள்ள ஒருவன் " என்பதுதான் . இது கற்றுக்கொள்ளல் (LEARING) என்ற வார்த்தையிலிருந்து வந்தது.

முதலில் , கற்றுக்கொள்பவனாக ஆகுங்கள் அதாவது உங்கள் வாழ்க்கையிடமிருந்து கற்றுக்கொள் பவனாக ஆகுங்கள் . வாழ்க்கைதான் உங்களுடைய குரு, ஆசிரியர் எல்லாம். நீங்கள், வாழ்க்கையிலிருந்து ஏதும் கற்றுக்கொள்ளாவிட்டால் , வேறு எங்கே சென்று கற்றுக்கொள்வீர்கள்? மிகச் சிறந்த குருவாகிய, இந்த வாழ்க்கையை நீங்கள் தோற்கடித்தால், அதாவது அது

உங்களுக்குக் கற்றுக் கொடுக்காவிட்டால், வேறு யார் உங்களுக்கு கற்றுத்தர முடியும்?

இந்த பிரபஞ்சம்தான், உங்களுடைய பல்கலைக்கழகம். ஒவ்வொரு கணமும், ஒரு பாடம்தான். ஒவ்வொரு ஏமாறுதலும், அலுப்படைதலும் ஒரு பாடம்தான். ஒவ்வொரு சமயமும், நீங்கள் தோல்வியடையும் பொழுது, ஏதாவது கற்றுக்கொள்ளுங்கள்! கொஞ்சம் கொஞ்சமாக, அங்குலம் அங்குலமாக, கற்றுக்கொள்ளல் ஒளிக்கீற்று உங்களுக்குள் செல்லட்டும். நீங்கள் மேலும் மேலும் உஷாராக இருங்கள். அப்பொழுது அதே தவறை நீங்கள் மீண்டும் செய்ய மாட்டீர்கள். எப்பொழுது ஒன்றின் உண்மை நிலையை நீங்கள் கற்றுக்கொள்ள ஆரம்பிக்கிறீர்களோ, அப்பொழுது, நீங்கள் கடவுளுக்கு அருகில் வருகிறீர்கள்.

சிறிய அளவில் அறிந்து கொள்வதில், நம்பிக்கை வைக்க வேண்டாம். நீங்கள் ' அதை' அடைந்துவிட்டீர்கள் என்று எண்ணிக்கொள்ள வேண்டாம். அந்த சிறிய அளவில் அறிந்து கொள்தல், சிலசமயம் உங்களுக்கு மிகுந்த திருப்தியைக் கொடுக்கலாம். பின்பு அது நின்று விடும். அது நகருவது முடிந்துவிடும்.

அது ஒரு மிகப் பெரிய, மிக நீண்ட யாத்திரை ஏன், அதற்கு முடிவே கிடையாது. நீங்கள் எவ்வளவு அதிகமாக கற்றுக்கொள்கிறீர்களோ, அந்த அளவுக்கு மேலும், மேலும் கற்றுக்கொண்டே செல்வீர்கள். மேலும், மேலும் உங்களுடைய பிரக்ஞைநிலை வளரும். நீங்கள் அதிகமாக அறிய, அறிய, இந்த பிரபஞ்சத்தின் இரகசியமும் அதிகமாகிக்கொண்டே செல்லும்.

நீங்கள் அதிகமாக கற்கக் கற்க, நீங்கள் குறைவாக அறிந்துகொண்டதாக உணருவீர்கள். ஒன்றை அறிந்து கொண்ட பின், அடுத்த புதிய கதவு திறக்க ஆரம்பிக்கிறது! ஆகவே, நீங்கள் அறிந்துகொள்ள அறிந்துகொள்ள, இந்தப் பிரபஞ்சத்தின் இரகசியமும், அதிகரித்துக்கொண்டே போகும்!

ஆகவே, சிறிய அளவில் அறிந்துகொண்டதோடு, திருப்தியடையாதீர்கள். கடவுள், தன்னை முழுமையாக

வெளிப்படுத்திக் கொள்ளாதவரையில் , நீங்கள் திருப்தியடையாதீர்கள் . உங்களிடம் , மிகப்பெரிய , ஆன்மீக நிறைவற்ற தன்மை எப்பொழுதும் இருந்துகொண்டே இருக்கட்டும் . யார் ஒருவனிடம் , இந்த ஆன்மீக நிறைவற்ற தன்மை இருக்கும் அளவுக்கு, அதிர்ஷ்டம் செய்திருக்கிறானோ அதற்குக் குறைவான நிலையில் , கடவுள் உங்களைத் திருப்திப்படுத்தமாட்டார் - அவன்தான், 'அதை' அடைய முடியும். மற்றவர்களால் அடைய முடியாது.

## 4. உண்மையில் நம்பிக்கை ஒருநாளும் வீண்போகாது (TRUST CANNOT BE BETRAYED)

கேள்வி 1:

அன்புள்ள குருவே,

"ஏன் நான் திருமணமான

பெண்களையே விரும்புகிறேன்?"

. இது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. இது, மிகவும் சாதாரணமாக பரவிக்கொண்டிருக்கும் ஒரு தொத்து வியாதிதான் . மிகவும் தீவிரமாகப் பரவிக்கொண்டிருக்கும் பலவற்றில் , இதுவும் ஒன்றுதான். ஆனால், அதற்கு காரணங்கள் உண்டு

பல லட்சம் மக்கள் , ஆண்களும் - பெண்களும் , திருமணமானவர்களிடம் ஆர்வம் கொள்கிறார்கள் . முதலில் , திருமணமாகாதவர்கள் . யாருமே தன்னை விரும்பவில்லை என்று நினைக்கிறார்கள் . திருமணமானவர்கள் , யாரோ தன்னை விரும்புவதாக நினைத்துக் கொள்கிறார்கள் . ஆனால் நீங்கள் உங்களையே விரும்பாத அளவுக்கு, பிறரைப் பார்த்து நடிக்கிறீர்கள் யாராவது, யாரையாவது காதலிப்பதைப் பார்த்ததால்தான் , நீங்களும் , அதைப் பின்பற்ற நினைக்கிறீர்கள் . அந்த அளவுக்கு நீங்கள் அடிமைத்தனமாக இருக்கிறீர்கள் , யாராவது தனித்து இருந்தால் , யாரும் அவர்களை விரும்புவது இல்லை. அந்த அளவுக்கு, சந்தேகத்தில் இருக்கிறார்கள் . ஒருக்கால் , அவர்கள் காதலிப்பதற்கு தகுதியில்லாமல் இருக்கலாம். இல்லாவிட்டால், எதற்காக அவள் / அவன்,

உங்களுக்காகக் காத்துக்கொண்டு இருக்க வேண்டும்?

அடுத்தவர்களைப் பார்த்து, இயங்குபவர்களுக்கு, திருமணமான ஆண்களும் , பெண்களும் கவர்ச்சி நிறைந்தவர்களாக காணப்படுகிறார்கள்.

இரண்டாவது, மக்கள் , உண்மையாக அன்பு செலுத்துவது அல்லது காதலிப்பது என்பது குறைவுதான் - உண்மையில் , மக்களுக்கு உண்மையான அன்பு என்றால் என்னவென்றே தெரியவில்லை - அவர்கள் போட்டிபோடுவதில்தான் ஆர்வமாக இருக்கிறீர்கள். திருமணமான ஆண்களிடம் நீங்கள் ( பெண்கள் ) ஆர்வமாக இருக்கிறீர்கள் . அதைப்போல திருமணமான பெண்களிடம் , நீங்கள் ( ஆண்கள் ) ஆர்வமாக இருக்கிறீர்கள் ஏனென்றால் , இங்கு போட்டி போடுவதற்கு சந்தர்ப்பங்கள் உண்டு, அதாவது முக்கோணச் சண்டை! அப்படிப்பட்ட பெண்கள் சாதாரணமாகக் கிடைப்பது இல்லை. அதனால்தான், இந்தப் போராட்டம்.

உண்மையில் , நீங்கள் அந்தப் பெண்ணிடம் ஆர்வம் காட்டவில்லை. நீங்கள் அந்த போராட்டத்தில்தான் ஆர்வமாக இருக்கிறீர்கள். இப்பொழுது அந்தப் பெண், கிட்டத்தட்ட ஒரு வியாபாரப் பொருளாகிவிடுகிறாள் இப்பொழுது, அவளுக்காக நீங்கள் சண்டைபோட்டு, உங்களுடைய ஆர்வத்தை அல்லது வீரத்தை வெளிப்படுத்த ஒரு சந்தர்ப்பம் ஏற்படுகிறது. நீங்கள் , அந்தப் பெண்ணின் கணவனை அப்புறப்படுத்திவிட்டு, நீங்கள் மகிழ்ச்சியடைவதாக உணருகிறீர்கள் - இது, உங்களுடைய அகங்காரத்தின் அல்லது தன்முனைப்பின் வெளிப்பாடு. இது, ஒன்றும் உங்களுடைய அன்பினால் , காதலினால் உண்டாகவில்லை. நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . நீங்கள் அவளுடைய கணவனை அகற்றிவிட்டால் , அதன் பிறகு, நீங்கள் அந்தப் பெண்ணின் மேல் , எந்தவித விருப்பமும் கொள்வது இல்லை. நீங்கள் அந்த மனிதனுக்கு எதிராக செயல்படுகிறீர்கள் என்பதைக் காட்டுவதே உங்களுடைய முக்கிய நோக்கம் . " நன்றாகக் கவனியுங்கள் . நான் இந்த ஆண் துணையற்ற

பெண்ணை இப்பொழுது விரும்புகிறேன் ' என்பதை அறிவிப்பதே உங்களுடைய முக்கிய நோக்கம். அடுத்து, நீங்கள் இதைப்போன்ற சண்டையை, வேறு இடத்தில் தொடர முயற்சி செய்கிறீர்கள். நீங்கள் எப்பொழுதுமே இப்படிப்பட்ட ' முக்கோணத்தை தைத்தான் ஏற்படுத்திக்கொண்டு இருப்பீர்கள் . இது ஒன்றும் காதலல்ல.

அன்பு மற்றும் காதல் என்ற பெயரில் , நீங்கள் பொறாமையில் , போட்டி போடுதலில் , ஆக்ரமித்தலில் மற்றும் வன்முறையில் தான் இருக்கிறீர்கள் . உங்களுடைய நோக்கம் , அந்த மனிதனுக்கு எதிராகச் செயல்படுவதுதான். " இதோ பார் , நான் உன்னுடைய மனைவியை, உன்னிடமிருந்து பிரித்து விட்டேன் " என்று அவனுக்குக் காட்டுவதே உங்களுடைய குறிக்கோள் . பிறகு . நீங்கள் அவள் மேல் , எந்த ஆர்வமும் காட்டுவதில்லை. ஏனென்றால் , நீங்கள் உண்மையில் ஆசைப்பட்டது, அந்த வெற்றியைத்தான் - அந்த பெண்ணை அல்ல! உ

ஒரு நிகழ்ச்சி.

ஒரு ஊரில் வசித்த , செல்வாக்குள்ள ஒரு வியாபாரியின் மனைவி இறந்து விட , அந்த ஊரே திரண்டு, அவளுடைய கடைசி ஊர்வலத்தில் கலந்து கொள்ள பெரிய மனிதர்களெல்லாம் வந்திருந்தார்கள். கிட்டத்தட்ட எல்லோருக்குமே, அந்தப் பணக்கார விய பாரியை நன்றாகத் தெரியும். அதில்

ஒரு புதிய ஆள். மற்றவர்களைவிட , மிகவும் கவலைப்பட்டவனாகக் காணப்பட்டான். அந்த கூட்டம், முடிவடைதற்கு முன்பே, அவன் துக்கத்தில் , முழுமையாகி, கதறி அழ ஆரம்பித்துவிட்டான்.

இதைப்பார்த்த அந்த இறந்த பெண்ணின் கணவன் , 'இந்த அழுது கொண்டிருக்கும் இந்த மனிதன் யார்?" என்று கேட்டான், அவனுக்கு பக்கத்தில் உள்ள ஒருவன், " ஹோ, இவனை உனக்குத் தெரியவில்லையா? இவன்தான் உன்னுடைய இறந்த மனைவியின் காதலன் " என்று மெதுவாகச் சொன்னான் . அந்த

வியாபாரி, அவனை நோக்கிச்சென்று, அவனை மெதுவாகத் தூக்கி நிறுத்தி, " மகிழ்ச்சியாக இரு, நண்பனே, மகிழ்ச்சியாக இரு. நான் கூடிய சீக்கிரம் இதைப்போன்ற வேறொரு பெண்ணை, மணந்துகொள்வேன்!" என்றான்.

ஜாக்கிரதையாக இருங்கள் . ஒரு திருமணமான பெண்ணோடு / ஆணோடு காதலில் விழுவது, ஒரு வியாதியை போல . அதனுடைய உண்மையான காரணத்தை அறிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள் . அது காதல் கிடையாது. உங்களுடைய பிரக்ஞையற்ற மனதில், ஏற்பட்ட வேறு ஒரு காரணத்தால் உண்டான, ஒருவித மனவியாதி என்றே அதைக் கூறலாம்.

அடுத்த காரணம். சாதாரணமாக, ஒரு திருமணமான பெண் , காதலிப்பதற்கு, அவ்வளவு சுலபமாகக் கிடைக்கமாட்டாள் . அதுவும் , உங்களிடம் ஆசையைத் தூண்டிவிடுகிறது. சுலபமாகக் கிடைக்கும் எதுவும் , உங்களுடைய ஆசையை கொல்கிறது. அவள் , கிடைக்காத நிலையில் , நீங்கள் அவளைப்பற்றி இன்பக் கனவுகளைக் காணலாம் . உங்களுடைய காதல் நிறைவேறாத நிலை ஏற்பட, எல்லா சாத்யமும் உண்டு. இப்படிப் பல காரணங்களினால் , திருமணமான பெண்ணை விரும்புகிறீர்கள் . நீங்கள், இப்பொழுது உங்களுடைய கற்பனைகளில் விளையாடுகிறீர்கள் . நீங்கள் , கல்யாணமாகாத பெண்களின் மேல் , அதிகமாக விருப்பம் கொள்ளாததற்குக் காரணம் , நீங்கள் காதல் போராட்டத்தில் ஈடுபடாமலேயே, அவர்கள் உங்களுக்கு சுலமாகக் கிடைப்பதுதான் . உங்கள் போராட்டத்துக்கு, அவர்கள் எதையும் விட்டுவைப்பதில்லை. நீங்கள் சற்று ஆர்வம் காட்டினால் போதும் . அவர்கள் தயாராகிவிடுகிறார்கள் . நீங்கள் அவளுக்கா, நீண்டகாலம் காத்திருந்து, கனவுகளில் மிதக்க வேண்டிய அவசியம் இல்லை.

மனிதன், காதலைவிட, காத்திருப்பதில் தான் ஆர்வம் கொள்கிறான் . அவர்கள் , காதலிப்பதைவிட , காத்திருப்பது மிகவும் ரம்மியமாக இருக்கிறது என்றே கூறுவார்கள் . அதுவும் ஒரு வகையில் சரிதான் . ஏனென்றால் , நீங்கள் அப்பொழுது உங்களுடைய கனவுகளுக்குத் தீனி போடுகிறீர்கள் ;

உங்களுக்குள்ளே உள்ளதை, வெளியே காண முயல்கிறீர்கள் . ஆனால் உங்களுடைய கனவுகள் எல்லாம் உங்களுடையதே; அதை நீங்கள் எப்படி வேண்டுமானாலும் அழகுபடுத்திக் கொள்ளலாம்.

பெண் , உங்களுடைய கனவுகளையெல்லாம் தகர்த்தெறிவாள் பொதுவான , ஆண்கள் , உண்மையான பெண்களைக் கண்டு

பயப்படுகிறார்கள். அடுத்து, ஒரு திருமணமான பெண், கைக்கு எட்டாத நிலையில் இருக்கிறாள்.

இதைப் போலத்தான் , திருமணமான ஆண்களின் நிலையும் . அவன் வெகுதூரத்தில் இருப்பதாகக் காணப்படுகிறான் . அவன் , உங்களோடு காதல் கொள்ள , எந்தவித சந்தர்ப்பமும் இல்லாதது போல் தோன்றுகிறான். அதுவே, உங்களிடம் ஒரு ஆர்வத்தை ஏற்படுத்துகிறது.

ஒரு நிகழ்ச்சி

ஒரு வாலிபன் , ஒரு வயதான புத்திசாலி மனிதனிடம் சென்று, " நான் காதல் வியாதியால் பீடிக்கப்பட்டிருக்கிறேன் . நீங்கள் எனக்கு உதவ முடியுமா?" என்று கேட்டான்.

அந்த வயதான கிழவன் , சற்று யோசித்துவிட்டு, காதலுக்கு ஒரே ஒரு மருந்துதான் இருக்கிறது. அதுதான் திருமணம் . திருமணம் , அதைக் குணப்படுத்தாவிட்டால் , வேறு எதனாலேயும் , அதைக் குணப்படுத்த முடியாது. ஆகவே, முதலில் திருமணம் செய்துகொள்" என்று அறிவுரை கூறினார்.

ஆமாம் , நிச்சயமாக , திருமணம் , அந்த வியாதியை குணப்படுத்தும் கல்யாணம் , காதலை குணப்படுத்தாவிட்டால் , வேறு எதுவும் அதைக் குணப்படுத்த முடியாது. அது, குணப்படுத்தப்படாமலேயே இருக்கும் . ஒரு திருமணமான பெண்ணோடு காதல் கொள்வது நல்லதுதான் . ஏனென்றால் , அந்த வியாதியை குணப்படுத்த எந்தச் சாத்யமும் இல்லை. நீங்கள் அந்த

வியாதியால் எப்பொழுதும் கஷ்டப்பட்டுக்கொண்டேதான் இருப்பீர்கள் !

சிலர் , தாங்கள் தனியாக இருப்பதிலேயே மிகுந்த மகிழ்ச்சியடைவார்கள் . அவர்கள் தனியாகச் செருமிக் கொண்டும் , அழுது கொண்டும் , கதறிக் கொண்டும் , காத்திருந்தும் , கற்பனையில் மிதந்துகொண்டும் , கவிதை, ஓவியம் , சங்கீதம் போன்றவற்றில் மிக்க ஈடுபாடு கொண்டும், இப்படியே காலம் தள்ளுவார்கள் - இவைகள் எல்லாம் மாற்றுதான் . (SUBSTITUTES) ஏனென்றால், உண்மையான பெண்கள், அவர்களுக்கு ஆபத்தாகத் தெரிகிறார்கள் . அவர்களை வெகுதூரத்திலிருந்து ரசித்து, கவிதையாக்கவும் , சங்கீதமாக்கவும் முயல்கிறார்கள் . அவர்களுக்கு அருகில் வந்தால் , அவர்கள் உண்மையான பெண் என்று உணர்ந்து, அவர்களை எதிர்கொள்ளத் தைரியமில்லாமல் இருக்கிறார்கள் . அப்பொழுது உங்களுடைய மனக்கோட்டைகள் , கற்பனைகள் அனைத்தும் இடிந்து பூமியில் விழுந்துவிடுகிறது.

இந்த உலகத்தில் உள்ள எல்லா பாரம்பரிய கொள்கைகளிலும் (CULTURES) பெண்களை பூமியோடு சம்மந்தப்படுத்தியும் ( பூமாதேவி ). ஆண்களை ஆகாயத்தோடு சம்மந்தப்படுத்தியும் கருதி வந்திருக்கிறார்கள் . பொதுவாக பெண்கள் , இந்த உலக ஞான விஷயங்களிலும் , பொருள்களிலும் மிகுந்த ஈடுபாடு உடையவர்களாகவே இருக்கிறார்கள். அவர்களை, பூமி வெகுவாக தன்வசம் இழுத்துக்கொள்கிறது. ஒரு ஆணைவிட , ஒரு பெண் உலக விஷயங்களில் மிகவும்

அக்கறைகொண்டு, பலவற்றை சிறப்பாக நடைமுறைப் படுத்துகிறார்கள் (PRACTICAL) ஆகவேதான் , உலகத்தில் மிகச்சிறந்த கவிதைகளை, பெண்களால் உண்டாக்க முடியவில்லை; அதைப்போல மிகச் சிறந்த ஓவியங்கள், மிகச் சிறந்த சங்கீத விற்பன்னர்கள் ஆமாம் அவர்களால் முடியாது. ஏனென்றால் , ஆண்களைப்போல , அவர்களால் ஆகாயத்தில் பறக்க முடியவில்லை. அவர்கள், இந்தப் பூமியைப் பிடித்துக்கொண்டும் , பூமிக்குள் மிகவும்

ஆழமாகச் சென்றுகொண்டும் , தங்களுடைய வேர்களை மிகவும் வலுவாகப் பரவச்செய்தும் , ஒரு மரம்போல உறுதியாக நிற்கிறார்கள்.

ஆண்கள் , பெண்களைவிட , ஆகாயத்தில் ஒரு பறவையைப்போல மேலே பறக்கிறார்கள் . ஆனால் , அவனுடைய திருமணத்துக்கு பின்பு, அந்தப்பெண் அவனையும் சேர்த்து பூமிக்கு இழுக்கிறாள் . அவனையும் இந்த பூமியோடு மிகவும் சம்மந்தப்படுத்த முனைகிறாள் . ஆகவேதான் , கவிஞர்கள் , பெரும்பாலும் திருமணம் செய்துகொள்ள விரும்புவது இல்லை. அவர்கள் , எப்பொழுதும் காதலிலேயே இருக்க விரும்புவார்கள் . அந்த காதல் வியாதியை குணப்படுத்திக் கொள்ள , அவர்கள் விரும்புவதே இல்லை.

ஆண்கள் , திருமணமான பெண்களிடம் காதல் கொள்வது என்பது - அது கட்டி முடிக்காத வீடு போலத்தான் , அது ஒரு தந்திரம்தான் . அவர்கள் , அந்தப் பெண்களின் மேல் காதல் கொண்டிருப்பதாக நினைத்துக்கொள்ளலாம் . பிறகு, அவர்கள் அதை சுலபமாகத் தவிர்க்கவும் செய்யலாம்.

காதல் என்பது பயத்தை உண்டாக்குகிறது. அது ஒரு சவால் மிகப்பெரிய சவால் அதில் நீங்கள் வளரவேண்டும் . அதில் , எப்பொழுதும் நீங்கள் முதிர்ச்சியடையாத நிலையில் இருக்க மாட்டீர்கள் . நீங்கள் வாழ்வின் உண்மைநிலையை எதிர்கொள்ளத்தான் வேண்டும். நீங்கள் கருதும் அந்தச் சிறந்த கவிஞர்கள் , குழந்தைத்தனமாக , முதிர்ச்சியடையாத நிலையில் , எப்பொழுதும் ஒரு குழந்தையைப் போல கனவுலகில் சஞ்சரிக்கிறார்கள் . அவர்களுக்கு, வாழ்வின் உண்மை நிலை தெரியாது. அவர்கள் , தங்கள் கனவுகளில் உண்மைநிலையை ஊடுருவச்செய்ய, அனுமதிப்பதே இல்லை.

கனவுகளை, நிச்சயமாக அழிப்பதில் , பெண் முதலில் நிற்கிறாள் . ஏனென்றால் , அவள் , உங்களுடைய கற்பனைப் பெண்ணல்ல - உண்மையான உயிரோடு உள்ள பெண் . ஆகவேதான் , நீங்கள் காதலில் இருப்பதாகவும் கருதிக்கொண்டு, அடுத்து அந்த காதலை மறுப்பதற்கும் ஏதுவாக , நீங்கள் திருமணமான ஆண்களையோ / பெண்களையோ

விரும்புகிறீர்கள். இது ஒரு முன்னேற்பாடான தந்திரம் மற்றும் ஏமாற்றுதல்தான்.

அதைப்போல , பெண்களும் , ஒரு சுதந்திரமான ஆணிடம் காதல்கொள்ளப் பயப்படுகிறார்கள் . ஏனென்றால் , ஒரு தனித்த ஆணையோ, பெண்ணையோ காதலித்தால் , அது 24 மணி நேர , ஈடுபாடுகொண்ட வேலையாகிவிடும் . ஆனால் , ஒரு திருமணமான பெண்ணோடு இருப்பது என்பது அவ்வளவு பெரிய ஈடுபாடு கொண்டதில்லை (INVOLVEMENT) நீங்கள் அவளை எங்கேயாவது

இருட்டு மூலையில் சந்தித்து, முத்தம் கொடுத்து ரசிக்கலாம் அவளுடைய கணவன் பார்த்துவிடுவானோ அல்லது வேறு யாருக்காவது தெரிந்துவிடுமோ என்ற ஒரு பயத்தில், கிளுகிளுப்பில்! அது, இதயப்பூர்வமான காதலல்ல . அது எப்பொழுதும் அவசரத்திலேயே இருக்கும் . அவளோடு நீங்கள் 24 மணி நேரமும் வாழ்ந்து, அவளை உண்மையாக அறிந்துகொள்ள , நீங்கள் விரும்பவில்லை. நீங்கள் . அவளுடைய முகமூடி அணிந்த முகத்தையும் , அப்போதைய ஈடுபாட்டையும்தான் விரும்புகிறீர்கள் - அவளுடைய உண்மையான நிலையை அல்ல.

+ ஒருபெண் , கடைக்குச் செல்ல , தன் வீட்டைவிட்டு வெளியே கிளம்பும்பொழுது, அவள் , அந்த வீட்டில் இருந்த அதே பெண் அல்ல . அவள் , கிட்டத்தட்ட வேறு ஆள் தான் . இப்பொழுது அவள் , தன்னை மிகவும் அலங்கரித்துக்கொண்டு, மிகவும் வித்தியாசமாகத் தெரிவாள் . பொதுவாக , பெண்கள் மிகச் சிறந்த நடிகைகள்தான் ! நீங்கள் , அவளை, அவளுடைய வீட்டில் பார்த்தால் , அந்த அளவுக்கு அழகாக இருக்கமாட்டாள் . ஆனால் , வீட்டுக்கு வெளியே , அவர்கள் திடீரென்று மிக அழகாக, மிகக் கவர்ச்சியாக, ஆனந்தமும் , மகிழ்ச்சியும் நிறைந்தவர்களாகக் காணப்படுவார்கள் . அவர்கள் , மீண்டும் ஒரு உற்சாகமான , சிரிப்பும் , கும்மாளமும் கொண்ட , வாழ்க்கையை மிகவும் விரும்பும் , ஒரு சிறிய ,

பெண்ணாக மாறுகிறார்கள் . அவர்களுடைய அலங்காரத்தால் , அவர்களுடைய முகம் , மற்றும் கண்கள் மிகவும் வித்தியாசமாகவும் , ஒளி பொருந்தியதாகவும் கவர்ச்சி நிறைந்ததாகவும் காணப்படும்.

நீங்கள் ஒருபெண்ணை, கடற்கரையிலோ, அல்லது கடைகள் நிறைந்த இடத்திலோ (SHOPPING CENTER) காணும்போது அவள் , தன் உண்மை நிலைக்கு, முற்றிலும் மாறாகவே காணப்படுவாள் - அவள் இப்பொழுது ஒரு புதிய பெண். ஒரு பெண்ணோடு 24 மணி நேரமும் இருப்பது என்பது மிகவும் அலுப்புதரக்கூடியது - அது அப்படித்தான் இருக்கும் . நீங்கள் உண்மையிலேயே ஒரு பெண்ணை காதலித்தால் , நீங்கள் அவளுடைய உண்மை நிலையைக் காணவே முயல்வீர்கள் , ஏனென்றால் , காதல், உண்மையில்தான் வாழும். அது, உண்மையை அறிந்து கொள்ளும் சக்திபடைத்தது; மற்றும் அவளுடைய குற்றங்குறைகளை ஏற்றுக்கொண்டு, அவளோடு வாழவே அது நினைக்கும் . காதல் அந்த அளவுக்கு சக்தி படைத்தது.

நீங்கள் ஒரு ஆணோடு / பெண்ணோடு, 24 மணி நேரமும் இருந்தால், நீங்கள் அவளுடைய / அவனுடைய நல்ல குணங்களையும் , கெட்ட குணங்களையும் முழுமையாக அறிந்து கொள் கிறீர்கள் . அழகையும் , அழகின்மையையும் புரிந்துகொள்கிறீர்கள் . எல்லாம் தெரிந்திருந்தும் , அந்தக் காதல் ஒரு போதும் விட்டு விலகாது - அது அவ்வளவு உறுதியானது. ஏன் . இறப்பதற்குக்கூட , அது தயாராகிவிடும் . மனிதகுலம் அப்படித்தான் இயங்க வேண்டும் . இது இயற்கையின் நியதி.

ஆனால் , இந்தப் பொய்யான காதலுக்கு, அவ்வளவு வலுகிடையாது. இது சினிமாப் படத்தில் தோன்றும் பெண்ணைக் காதலிப்பது போலத்தான் , ஒரு கதையில் வரும் பெண்ணை, ஒரு கவிதையில் வரும் பெண்ணை, உங்களுடைய கற்பனையில் வரும் பெண்ணைக்

காதலிப்பதற்குச் சமம்தான். அவர்கள் வெகுதூரத்தில் உள்ள நட்சத்திரங்கள் போலத்தான் உண்மையில் இல்லாத பெண்ணையே காதலிப்பது போன்றது.

காதல் என்பது முற்றிலும் வித்தியாசமான தன்மை கொண்டது. காதல் என்பது உண்மைநிலையுடன் காதல் கொள்வது. உண்மைநிலை என்பது சில குறைபாடுகள் கொண்டது தான் . ஆனாலும் அந்தக் குறைபாடுகள் வளர்ச்சிக்கு ஒரு சவாலாகவே அமையும். உண்மையிலேயே காதலில் உள்ள இருவர், அது வளர்வதற்கு ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்கிறார்கள். ஒரு கண்ணாடி போல, ஒருவருக்குள் ஒருவரைக் கண்டு, ஒருவரை ஒருவர் பிரதிபலிக்கிறார்கள் . ஒருவருக்கொருவர் பிடிப்புக் கொள்கிறார்கள் . நல்ல தருணத்திலும் , கெட்ட தருணத்திலும் , சந்தோஷத்திலும் , துக்கத்திலும் ஈடுபாடு கொள்கிறார்கள்

இதுவே எல்லாவற்றிற்குமான, உண்மையான ஈடுபாடு என்று சொல்கிறேன்

நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும் பொழுது மட்டும், நான் உங்களோடு இருந்தால் , நான் உண்மையிலேயே உங்களோடு இல்லை. நீங்கள் துன்பத்தில் இருக்கும் பொழுது, இப்படி விலகி ஓடுவது, உண்மையான ஈடுபாடு இல்லை நீங்கள் அடுத்தவரிடமிருந்து பயனைமட்டும் எதிர்ப்பார்க்கிறீர்கள் . அடுத்தவரை, வெறுமனே உபயோகித்துக் கொள்ள விரும்புகிறீர்கள். இப்படிச் செய்தால் , நான் உங்களோடு, உண்மையில் காதலில் இல்லை என்று அர்த்தம் . நான் என்னை மட்டுமே, என்னுடைய மகிழ்ச்சியை மட்டுமே விரும்புகிறேன் . அடுத்தவர் மகிழ்ச்சியாகவும் , உங்களுக்கு உபயோகம் உள்ளவரை, நீங்கள் நல்லது என்று உணருகிறீர்கள் . அடுத்தவர் , துன்பத்திலும் , நோயிலும் இருந்தால் , நீங்கள் அவளை / அவனை தூக்கி எறியவும் தயங்கமாட்டீர்கள் . இது உண்மையான காதல் இல்லை, உண்மையான ஈடுபாடு இல்லை மற்றும் அடுத்தவரை மதித்த நடப்பதில்லை. ஆகவே, நீங்கள் அடுத்தவரது மனைவியை காதலித்து. உங்களுடைய கற்பனையில் மிதக்கலாம் . ஆனால் , உண்மையிலேயே கஷ்டப்படுவது, அவளுடைய கணவன்தான் . ஆனால் , இது மனிதத்தன்மை

இல்லாதது. மனித இனத்தின் காதல், எதையும் எதிர் கொள்ளும் தன்மை படைத்ததாகவே இருக்கும் . காதலில் வளர்ச்சி ஏற்படாவிட்டால் , முதிர்ச்சி ஏற்படாவிட்டால், அது என்ன காதல்? .

காதலர்கள், எல்லா நிலைகளிலும் ஒருவருக்கொருவர் அனுசரித்து. விட்டுக்கொடுத்துப்போக வேண்டும். தன் நலத்தைவிட , அடுத்தவர் நலத்தில் அக்கறை கொள்ளவேண்டும் . அவர்கள் ஒன்றாக இருக்கும் பொழுது. மகிழ்ச்சியின் உச்சத்துக்கும் போகலாம் அல்லது படுபாதாளத்தில் துக்கமான நிலையிலும் இருக்கலாம். அவர்களுடைய மகிழ்ச்சியும், துக்கமும் மிகப்பரந்தது அதுதான் உண்மையான காதல் மற்றும் அன்பு நீங்கள் தனியாக இருந்து,

அழுதுகொண்டும், கதறிக்கொண்டும் இருந்தால், உங்களுடைய கண்ணீரில் எந்த ஆழமும் இல்லை, அர்த்தமும் இல்லை. நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? தனிமையில், அவர்கள் மிகவும் விருத்தி நிலையில் தான் (SHALLOW) இருப்பார்கள். ஆனால், காதலர்கள் இருவரும் துக்கத்தில் சேர்ந்து அழுதால், அதில் ஆழம் உண்டு மற்றும் உங்களுடைய கண்ணீர், ஒரு புதிய பரிமாணத்தில் வழிகிறது. நீங்கள் தனியாக சிரித்துக்கொள்ளலாம் . ஆனால் , அதில் ஆழம் இருக்காது, மகிழ்ச்சி இருக்காது. ஏன் , அது உங்களுடைய பைத்தியத் தன்மையை வெளிப்படுத்துவதாகக்கூட இருக்கலாம் - மனநிலை சரியில்லாதவர்கள்தான் , தனிமையில் சிரித்துக்கொண்டு இருப்பார்கள் . நீங்கள் பிறரோடு சேர்ந்து சிரிக்கும் பொழுது, அதில் ஆழம் இருக்கும், உண்மையான மகிழ்ச்சி இருக்கும் . அதில் உங்களுடைய சீரான மனநிலை இருக்கும் , இருவருமாக , சேர்ந்து சிரிக்கும்பொழுது, நீங்கள் உங்களுடைய உயிர்மைய நிலைக்கே செல்கிறீர்கள்.

இரண்டு பேர்களும், எல்லாப் பருவங்களிலும், இரவு - பகல், வசந்தகாலம் இலையுதிர் காலம் மற்றும் எல்லா பருவங்களிலும் ஒன்று சேர்ந்து, வளரவேண்டும். ஒரு மரத்துக்கு, எல்லா தட்ப வெட்பநிலைகளும், அதாவது சுட்டெரிக்கும் கோடையும் உறை பனிக்காலமும்

தேவையாகத்தான் இருக்கிறது. அதற்கு பகலில் சூரிய வெளிச்சமும் , மற்றும் நன்றாகத் தூங்குவதற்கு அமைதியான இருட்டும் , தேவையாக இருக்கிறது. அதற்கு அமைதியும் , மகிழ்ச்சியும் , இன்பமான நாட்களும் தேவையாக இருக்கிறது. அதைப் போல , மேகமூட்டத்தோடு கூடிய நாட்களும் தேவையாகத்தான் இருக்கிறது. அது, இந்த மாறுபட்ட சூழ்நிலையில்தான் வளரவேண்டும்.

அன்பு என்பதே ஒரு மாறுபட்ட வளரும் நிலைதான் . நீங்கள் தனியாக ஒரு போதும் வளர முடியாது. நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . நீங்கள் காதல் கொள்ளும்போது உட்படுதலைத் தவிக்க முடியாது. ஈடபாட்டைத் தவிர்க்க முடியாது. முழுமையாக அதனுள் ஈடுபாட்டுடன் செல்லுங்கள் . அப்போதுதான் மேலோட்டமாக நின்று கொண்டு, துன்பம் வரும்போது ஓட மாட்டீர்கள்.

மேலும் , உண்மையான அன்பு என்பது ஒரு தியாகம்தான் . நீங்கள் நிறைய தியாகம் செய்ய வேண்டும் . நீங்கள் உங்களுடைய அகங்காரத்தை, விருப்பங்களை, எதிர்ப்பார்ப்புகளை, உங்களுடைய தனிப்பட்ட நிலையை மற்றும் ரகசியங்களை தியாகம் செய்யத்தான் வேண்டும் . ஆனால் , வெறும் மகிழ்ச்சிக்காக மட்டும் , மேலோட்டமாக காதலிப்பதில் , நீங்கள் எதையும் தியாகம் செய்யத் தேவையில்லை. ஆனால் , தியாகம் இல்லாமல் , காதல் மற்றும் அன்பு ஒருக்காலும் வளராது.

காதல் உங்களை அடியோடு மாற்றிவிடும் . நீங்கள் அப்பொழுது ஒரு புதிய பிறவியை எடுக்கிறீர்கள் . நீங்கள் ஒருபோதும் , முன்பு இருந்த நிலையில் இருக்கமாட்டீர்கள் . நீங்கள் , நெருப்பின் ஊடே சென்று வருகிறீர்கள் . நீங்கள் சுத்தப்படுத்தப்படுகிறீர்கள் . ஆனால், அதற்குத் தைரியம் தேவை.

நீங்கள் , ' நான் , ஏன் எப்பொழுதும் கலியாணமான பெண்களையே விரும்புகிறேன் '' என்று கேட்கிறீர்கள் .

ஏனென்றால் ,

உங்களுக்கு தைரியம் போதவில்லை. நீங்கள் ஆழ்ந்த காதலை மற்றும் அதில் உள்ள ஈடுபாட்டைத் தவிர்க்கிறீர்கள் . நீங்கள் அதை, குறைந்த விலையில் கேட்கிறீர்கள். அதற்கு, அதிக விலை கொடுக்க நீங்கள் விரும்பவே இல்லை.

கேள்வி 2:

'' அன்புள்ள குருவே, என்னால் மேலும் காதலிக்க முடியவில்லை. நான் எப்பொழுதும் உங்களோடு ஒரு கோவிலில் இருப்பதாகவே உணர்கிறேன் . உங்களைச் சந்திப்பதற்கு முன் எப்போதும் இப்படி இருந்ததில்லை என உணர்கிறேன் . எனக்கும் , என் உள்ளே உள்ள ஒருபாதியான பெண்ணிற்கும் ஒவ்வொன்றும் ஒவ் வொரு நேரத்திலும் வித்தியாசமாகவே இருக்கிறது. இப்பொழுது, உங்க ளுக்கு வார்த்தைகளால் நன்றி சொல்வதுகூட , சரியாக இருக்காது. இருந்தும் , நான் முன்பு உள்ள நிலைக்கு மீண்டும் வழுக்கி விடுகிறேன். அதிலிருந்து நான் எப்படி மீளுவது? எப்படி அதைத்தவிர்ப்பது? என் உள்ளே உள்ள பெண்ணோடு பொருந்துமாறு வெளியே உள்ள பெண்ணிடம் எப்படி அவளுடைய உதவியை நாடுவது?"

இந்த கேள்வி, ஆனந்த் குல் புஸானிடமிருந்து (ANAND KUL BHUSHAH)வந்திருக்கிறது.

முதலில் , நீங்கள் பெண்களை ஒருபோதும் ' உங்களுடைய பாதி' (THE OTHER HALF) என்று நினைக்காதீர்கள். நீங்களும் அப்படி இல்லை; அவளும் அப்படி இல்லை. நீங்களும் , அவளும் தனித்த முழுமையில் இருக்கிறீர்கள் . நீங்கள் இருவரும் உங்களுடைய தனித்தன்மையில் முற்றுப்பெற்று இருக்கிறீர்கள்.

பெண் என்பவள், உங்களுடைய சரிபாதிப் பகுதி என்ற பழைய கொள்கை, மிகுந்த அழிவைக் கொடுத்திருக்கிறது என்று நிரூபிக்கப் பட்டிருக்கிறது. எப்பொழுது, நீங்கள் உங்கள் காதலியை, மனைவியை உங்களுடைய சொந்தமான ஒரு பொருளாகக் கருதுகிறீர்களோ, - எப்பொழுது அடுத்தவருடைய தனித்தன்மையை அழிக்கிறீர்களோ அப்பொழுது நீங்கள் விலைமதிப்புமிக்க ஒன்றை அழிக்கிறீர்கள் என்பது ஞாபகம் இருக்கட்டும் . அதை உங்களால்

மீண்டும் உண்டாக்க முடியாது. ஆகவே, அவளை உங்களில் பாதி என்று ஒருபோதும் நினைக்காதீர்கள். அது சரியில்லை.

கோவிலில் இருக்கும் இரண்டு தூண்களைப் போல, இரண்டு காதலர்கள் இருக்க வேண்டும். இப்படித்தான் கலீல் கிப்ரான் (KAHLIL GIBRAN) கூறுகிறார் . அவர்கள் இருவரும் ஒரே கூரையைத்தான் தாங்குகிறார்கள் . ஆனால் , தனித்தனியாகவே இருக்கிறார்கள் . அவர்கள் ஒருமையில் இல்லை. கோவிலில் உள்ள இரண்டு தூண்கள் , ஒன்று சேருமானால் , அந்தக் கோவில் இடிந்து கீழே விழுந்துவிடும் . அந்தக் கூரைக்கு எந்தத்தாங்கலும் கிடைக்காது. இதோ, இந்த சாங்க்சூ அரங்கத்தில் உள்ள தூன்களைப் பாருங்கள். அவைகள்

தனித்தனியாகவே இருக்கின்றன - ஆனால் , இரண்டும் ஒரே கூரையைத்தான் தாங்குகின்றன . இதைப் போலத்தான் காதலர்களும் இருக்கவேண்டும் தனித்தனியாக , தனித்தன்மையுடன் மற்றும் பொதுவான விஷயங்களில் , இருவருமே ஈடுபட்டு, அவைகளை நிறைவேற்ற வேண்டும்.

ஆகவே, மனைவி என்பவள் , கணவனின் பாதியோ, கணவன் என்பவன் , மனைவியின் பாதியோ அல்ல . ஒரு மனைவியும் , தன் கணவனுக்கு அடிபணியக் கூடாது. அதைப்போல ஒரு கணவனும் , தன் மனைவிக்கு அடிபணியக் கூடாது. இருவருமே, அன்பு என்ற கடவுளிடம் அடிபணிய வேண்டும் . நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . அப்படியில்லாவிட்டால் , அவர்கள் முடக்கப்பட்டு விடுகிறார்கள் . ஆனால் , ஆண் இதனால் அதிகம் பாதிக்கப்படவில்லை ஏனென்றால் , அவன் பெண்ணை தன்னுடைய அடுத்தபாதி என்று எண்ணிக்கொள்கிறான் . ஆனால் , அவன் தன்னை, அந்த பெண்ணின் அடுத்தபாதி என்று எண்ணுவதில்லை. அவன் , தான் முழுமையாக இருப்பதாகவும் , பெண்தான் , தன்னில் பாதியாக இருக்கிறாள் என்றும் கருதிக்கொள்கிறான்.

. ஆகவேதான் , திருமணத்திற்குப் பிறகு, பெண் , தன்

பெயரோடு தன் கணவனின் பெயரையும் சேர்த்துக் கொள்கிறாள் . ஆனால் , கணவன் அப்படி செய்வது இல்லை. திருமணமானபின்பு, அவள் மறைந்துவிடுகிறாள் , அல்ல அழிக்கப்படுகிறாள் . அவன் பெண்ணாக இப்பொழுது இல்லை; ஒருவனின் மனைவியாக இருக்கிறாள் . அவள் இப்பொழுது ஒருவனின் உடமையாகி விடுகிறாள் , ஒரு பொருளாகிவிடுகிறாள் . ஆனால் , ஆணிடம் மாத்திரம் எந்த மாறுதலும் இல்லை. அவனிடம் ஏதோ ஒன்று சேருகிறது. ஆனால், பெண்ணிடமிருந்து ஏதோ ஒன்று எடுக்கப்படுகிறது இது எவ்வளவு அசிங்கமானது, அருவருப்பானது, காட்டுமிராண்டித்தனமானது. எ

பெண்ணைப்பற்றிய ஒரு அழகான கவிதையைப் படித்தேன் . ' உன் காதலைப் பற்றி சொல்லாதே என்னிடம் ' என்று ஆரம்பிக்கிறது. இதோ:

" உன் காதலைப்பற்றி, சொல்லாதே என்னிடம் அறிவேன் நான் அதை மிக நன்றாக உன்கடைக்கண் பார்வையில் உணர்கிறேன் அதை உணர்கிறேன் உன்னை, சுற்றியுள்ள காற்றிலும் சொல்லாதே உன்வாயால் அதை - மோசம்' பொசுக்குதே என்னைத் தீயைப்போல - அது விட்ட இடம் எதுவென்று முடியாது சொல்ல உன்காதலெனும் தீ , எரித்ததே என்னை, தவிர்த்தே மூளையை உன் காதலெனும் பெட்டகத்தில் இழந்தேன் தகப்பனை உன் காதலெனும் பரிசு, கீழாக்கியது என்னை

சொல்லாதே உன்காதலை என்னிடம்

அது, மூழ்கடித்தது என்னை

உன் காதலெனும் சிறையில் கைதியானேன் உன் காதலெனும் கீதத்தில் மறந்தேன் என் பேச்சை மறந்தேன் என் பாடலை மறந்தேன் என்னையே, உண்டாக்கவே மறதியை, காதலித்தாய் என்னை நீ"

திரும்பவும் சொல்கிறேன் உண்டாக்கவே மறதியை காதலித்தாய் என்னை அப்போது, தன்னை அதிகமாக

வெளிப்படுத்தாது காதல் அது மெல்ல அதிகாரம் செலுத்த ஆரம்பிக்கிறது. அதிகாரம் முழுமையாகும் பொழுது, காதல் மறைந்து விடுகிறது. நீங்கள் அதை உங்களுடைய உடமையாக்கும் பொழுது, காதல் முற்றிலும் மறைந்துவிடுகிறது.

தயவுசெய்து. பெண்களையோ, ஆண்களையோ தன்னுடைய உடமையாகக் கருதாதீர்கள் உடமையாக்குதலும், உரிமை கொண்டாடுவதும் காதல் அல்ல நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். ஒரு பெண் , தன்னுடைய தனித்தன்மையை ஒரு நாளும் இழக்கக்கூடாது. அவளுடைய சுதந்திரத்தை அழிக்கக் கூடாது. அவளுடைய சுதந்திரத்தை மதிக்க வேண்டும் எந்த வழியிலேயாவது. இதுதான் தந்த்ராவின் நோக்கம் . நிபந்தனை ஏதும் இல்லாமல் , எப்படியும் அவளுடைய சுதந்திரத்தை, நீங்கள் எடுத்துக்கொள்ளக் கூடாது. நீங்கள் அவளை உண்மையிலேயே காதலித்தால் நீங்கள் அவளுடைய சுதந்திரத்தையும் மதிக்க வேண்டும் . அப்பொழுது, அவளும் உங்களுடைய சுதந்திரத்தை மதிப்பாள்.

நீங்கள் ஒரு ஆணையோ, பெண்ணையோ காதலித்தால் , எப்படி உங்களால் அவளுடைய அவனுடைய சுதந்திரத்தை அழிக்க முடியும் ? நீங்கள் உண்மையிலேயே ஒரு ஆணிடம் / பெண்ணிடம் நம்பிக்கை வைத்தால் , நீங்கள் அவளுடைய / அவனுடைய சுதந்திரத்திலும் நம்பிக்கை வைக்க வேண்டும்.

உண்மையிலேயே மிகவும் குழப்பத்திலும் , துன்பத்திலும் இருந்த ஒருவன் , என்னை ஒருநாள் சந்திக்க வந்தான் . அவன் , " நான் தற்கொலை செய்துகொள்ளப் போகிறேன்" என்றான்.

நான், "ஏன்?" என்றேன்.

அவன் , " நான் என்னுடைய மனைவிமேலே, மிகவும் நம்பிக்கை வைத்திருந்தேன். ஆனால், அவள் என்னை ஏமாற்றிவிட்டாள் . அவள் வேறு ஒருவனைக் காதலிக்கிறாள் . இப்பொழுதுதான் , அந்த விஷயம் எனக்குத் தெரிந்தது. அவன் எழுதிய சில கடிதங்கள் , எனக்குக் கிடைத்தன. அவளை வற்புறுத்தி, விசாரிக்க, அவள் , " ஆமாம் . அவனைக் காதலிக்கிறேன் என்று

ஒப்புக்கொண்டாள் , இனிமேல் என்ன ? நான் சாகத் துணிந்துவிட்டேன் என்றான்.

நான், "நீ அவளை மிகவும் நம்பியதாகச் சொன்னாய்?"

அவள், "ஆமாம். நான் அவளை நம்பினேன். ஆனால், அவள் என்னை ஏமாற்றிவிட்டாள்.

நான் , " உனக்கு துரோகம் செய்யாத அளவுக்கு, நீ அவள் மேல் உண்மையான நம்பிக்கை வைக்கவில்லை. உன்னுடைய நம்பிக்கை ஒரு தந்திரம்தான் . இப்பொழுது, அவள் , தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று நீ நினைக்கிறாய் . உன்னுடைய நம்பிக்கை உண்மையானது இல்லை."

அவள் மிகவும் குழப்பமடைந்து, " உண்மையான நம்பிக்கை என்றால் என்ன ? அவளிடம் எந்தவித நிபந்தினையும் இல்லாமல் , நான் நம்பிக்கை கொண்டிருந்தேன்'

நான், "நான் உன்னுடைய இடத்தில் இருந்திருந்தால், அவளுடைய சுதந்திரத்தின் மேல் அவளுடைய அறிவுக் கூர்மையின் மேல் , அவளுடைய காதலின் மேல் உண்மையான நம்பிக்கை வைத்திருப்பேன் அவன் இன்னொருவனிடம் காதல் கொண்டிருந்தால் , அதையும் நான் நம்பிக்கொண்டு இருப்பேன் . அவள் புத்திசாலி; அவளால் தகுந்த ஆளைத் தேர்ந்து எடுத்துக் கொள்ள முடியும். அவள் சுதந்திரமாக யாரை வேண்டுமானாலும் காதலிக்கலாம் . அவளுடைய புரிந்து கொள்ளுதலையும் , நான் உண்மையாக மதிப்பேன் என்றேன்.

உண்மையான நம்பிக்கை என்றால் என்ன ? இதைப்பற்றி, தவறான அபிப்ராயம்தான் நிலவுகிறது. அது அரசியல்தனமாகவே செயல்படுகிறது. நீங்கள் அவளுடைய அறிவுக் கூர் மையையும் புத்திசாலித்தனத்தையும் , புரிந்துகொள்தலையும் , அவளுடைய பிரக்ஞை உணர்வையும், நீங்கள் மதிக்க வேண்டும் . அவள் தான் வேறு ஒருவனோடு இருக்க விரும்பினால் , வேறு ஒருவனைக் காதலித்தால் அதுவும் மிகவும் சரிதான் . நீ . அதனால் துன்பமடைந்தால், அது உன்னுடைய பிரச்சினை. அது

அவளுடைய பிரச்சினை இல்லை. நீ , அதனால் துன்பமடைந்தால் , அது உன்னுடைய அன்பினால் அல்ல. அதற்கு உன்னுடைய பொறாமைதான் காரணம்.

நான் அறிந்தவரையில், உண்மையான நம்பிக்கையை, ஒரு நாளும் ஏமாற்ற முடியாது. அதனுடைய இயல்பான தன்மையில், அதனுடைய உண்மையான அர்த்தத்தில், அதை எதனாலும் ஏமாற்ற முடியாது. ஒரு உண்மையான நம்பிக்கை ஏமாற்றப்பட்டால் , அது உண்மையான நம்பிக்கையாக இருக்க முடியாது. இதை ஆழ்ந்து சிந்தியுங்கள்

நான் ஒரு பெண்ணை விரும்பினால் , எந்த நிபந்தனையும் இல்லாமல் நான் அவளுடைய அறிவுக்கூர்மையிலும் நம்பிக்கை வைக்க வேண்டும். ஆகவே, சிலசமயம் அவள் பிறரைக் காதலிக்க விரும்பினால், அதுவும் சரிதான். அவள், அந்தச் சமயம் அப்படி நினைத்திருக்கக்கூடும் . அவள் சுதந்திரத்தன்மையில் இருக்கிறாள் . அவள் , என்னுடைய பாதியாக இல்லை. இரண்டு பேர்கள் தங்களுடைய சுதந்திரமான தனித்தன்மையில் இயங்கினால் மட்டுமே,

உயர்நிலைக் காட்டும் " உண்மையான அன்பு அங்கே நிலவும். இரண்டு சுதந்திரத் தனித்தன்மையில்தான் , அன்பு மற்றும் காதல் நிகழ்ந்துகொண்டு இருக்கும் . அதுதான் உண்மையான அன்பு.

நான் , குல் புஸானின் கேள்வியைப் புரிந்து கொண்டேன். அவர் தேவையில்லாமல், தன்னில் பாதி' என்ற வார்த்தையை உபயோகித்திருக்கிறார் . அவருடைய மனைவிமேல் அவருக்கு உள்ள அன்பையும், அவருடைய மனைவி, அவர்மேல் வைத்த அன்பையும் கவனிக்கிறேன் . அவர்கள் இருவரும் , 'தன்னில் பாதியாக இருக்கவில்லை. அது ஒருக்காலும் நடக்காது. இந்த வார்த்தையை, பிரக்ஞையில்லாமல் மக்கள் உபயோகித்துக் கொண்டிருக் கிறார்கள் . ஆனால் , இப்பொழுது நான் இதைத் தெளிவுபடுத்த

விரும்புகிறேன்.

அவளை இரண்டாவதாக: மேலும் காதலிப்பதில் அர்த்த மில்லை' என்று கூறுகிறீர்கள் . காதல் மிக ஆழமாக வளர்ந்தால் , அது வேறு ஒன்றாகிவிடுகிறது. அதைப் போல , அது வளராத நிலையிலும் , அது வேறு ஒன்றாகிவிடுகிறது. அன்பு என்பது மிகவும் நுட்பமானது. அது வளரவில்லை என்றால் , அது கசப்பாகவும் , வெறுப்பாகவும் ஏன் வெறுப்பைவிட கீழான நிலைக்கும் செல்லும் - , கருத்து வேற்றுமைக்கு - இது அன்புக்கு அப்பால் வெகுதூரத்தில் இருக்கிறது - மாறிவிடும்.

அன்பு என்பது ஒரு வெப்பமான சக்தி. அதைப்போலத்தான் வெறுப்பும் , வெப்பமான சக்தி. ஆனால் , கருத்து வேற்றுமை என்பது உறைந்த பனிக்கட்டி போல. நீங்கள் அன்பையும், வெறுப்பையும் மற்றும் கருத்து வேற்றுமையையும் ஒரே நிலையில் பார்க்கிறீர்கள் . அன்புக்கும் , வெறுப்புக்கும் சரியான நடுமையத்தில் , ஒரு பூஜ்ய நிலை (ZERO POINT) இருக்கிறது - ஒரு தர்மாமீட்டரில் இருப்பது போல அந்த பூஜ்ய நிலைக்குக்கீழே, குளிர்ச்சியாகவும் , அதற்கு மேலே கதகதப்பாகவும் இருக்கும் . அன்பு என்பது கதகதப்பானது. வெறுப்பு என்பது அந்த பூஜ்ய நிலை. இதற்கு கீழே சென்றால், குளிர் அதிகமாகிக்கொண்டே போகும் . நீங்கள் பனிக்கட்டி நிலைக்கு வந்துவிடுவீர்கள் - இதுதான் கருத்து வேற்றுமை. அன்பு வளரவில்லையென்றால் , அது மிகவும் கீழே இறங்கிவிடும் . அது மேலே மேலே சென்றுகொண்டிருக்க வேண்டும் . அது, சக்திதான் . சக்தி எப்பொழுதும் நகர்ந்துகொண்டேதான் இருக்கவேண்டும்.

அது நகரும்பொழுது, அது காதலாகவே இருப்பதில்லை என்பதைக் கூடிய சீக்கிரம் அறிவீர்கள். அது தியானமாகவும் , அடுத்து பிரார்த்தனையாகவும் மாறிவிடும் . இதுதான் தந்த்ராவின் அணுகுமுறை. அன்பு சரியாக வளர்ந்தால் , மற்றும் அதை ஜாக்கிரதையாகக் கையாண்டால் , அது முடிவில் , முடிவான கடவுளின் அனுபவமாக மாறிவிடும்.

அன்பு என்பது கடவுளின் கோவில் . ஆகவே, கருத்துவேறுபாட்டில் வாழும் மக்கள் , கடவுளை

அறிந்துகொள்ள முடியாது. கருத்துவேறுபாடு என்பதுதான் உண்மையான நாத்திகம் . குளிர்ந்த நிலையில் வாழும் மக்கள் .....( ஏன் நீதி மன்றங்களுக்குக் கூட இது மிக நன்றாகத் தெரியும் ) யாரையாவது

சூடானநிலையில் ( உணர்ச்சி வேகத்தில் ) கொலை செய்தால் , நீதி மன்றம் அதை கடுமையாக எடுத்துக்கொள்ளாது. கருணையின் அடிப்படையில் , யாராவது கொலை செய்தால் , அதையும் நீதிமன்றம் பெரிதாக எடுத்துக்கொள்ளாது. அதற்கு கடுமையான தண்டனை விதிக்காது.

ஆனால் , குளிர்ந்த நிலையில் ( திட்டமிட்டு ஒரு கொலை நடந்தால் , நீதிமன்றம் அதை கடுமையாக எடுத்துக்கொள்ளும் அப்படி திட்டமிட்டு கொலை செய்பவன் , மிகவும் ஆபத்தானவன் . அவன் ஒவ்வொன்றையும் கணக்குப் போட்டுத்தான் , கொலையை நோக்கி நகர்ந்துசெலகிறான் . ஒவ்வொன்றையும் சந்திக்கத் தயாராக இருக்கிறான் . அவன் , ஒவ்வொரு அடியையும் , மிகவும் திறமையாகவும், நுட்பமாகவும் எண்ணி வைக்கிறான். அவனிடம் இதயமே இல்லை. அவன், பனிக்கட்டிபோல உறைந்தநிலையில் இருக்கிறான்.

இந்தக் குளிர்ந்த இதயமும் , பாலைவன இதயம் போலத்தான் . அது இறந்த , உலர்ந்த பாசிபிடித்த இதயம்தான். அன்பு மேலே செல்லாவிட்டால், அது கீழே சென்று விடும் . நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . அது ஒரே இடத்தில் நிலையாக இருக்காது - இதை நீங்கள் சரியாகப் புரிந்துகொள்ளவேண்டும் . நீங்கள் கதகதப்பான வாழ்க்கையை வாழ விரும்பினால் , உங்களுடைய காதல் வளர்வதற்கு உதவி செய்யுங்கள்.

இரண்டு பேர், காதலிக்க ஆரம்பித்தால் அவர்களுடைய காதல் , உடனே நட்பாக மாற ஆரம்பிக்காவிட்டால் , இப்பொழுதோ அல்லது எப்பொழுதோ, அது விவாகரத்தில் தான் போய் முடியும் . காதலிலிருந்து

நட்பு வளரவேண்டும் . இல்லாவிட்டால் , பகைதான் வளரும் - ஏதோ ஒன்று, அதிலிருந்து கிளம்பித்தான் ஆகவேண்டும் . காதல் என்பது, அன்பு என்பது ஒரு திறப்பாக (OPNEING) உள்ளது. அதிலிருந்து வேறு ஒன்று முளைக்கத்தான் வேண்டும்.

அன்பு என்பது உரம் போட்ட மண் போன்றது. நீங்கள், அதில் அழகிய மலர்களின் விதைகளை விதைக்காவிட்டால் , பிறகு கோரைகள்தான் அல்லது புற்கள் தான் அதில் முளைக்கும் - ஏதோ ஒன்று அதிலிருந்து கிளம்பியாக வேண்டும் . அதே அன்பு, மிகவும் ஆழமாகச் சென்றால், அது பிரார்த்தனையாக மாறுகிறது. அப்பொழுது, அதனுடைய தன்மையில் , எந்தப் பாலுணர்வும் இருக்காது. (NON-SEXUAL) . அப்பொழுது, அது புலன்களுக்கு அப்பால் இயங்கும் . அப்பொழுது, பாலுணர்வு கலக்காத கருணையாக மாறி, பிறரிடம் அன்புகாட்ட ஆரம்பிப்பீர்கள். அவர்கள், இப்பொழுது புனிதமாக , தெய்வீகமாக உங்களுக்குத் தெரியும் . அந்த நிலையில் , உங்களுடைய காதலி, மனைவிகூட, கடவுளாகத் (GODDESS)தெரியும்.

"என்னால் அவளை மேலும் காதலிக்க முடியவில்லை..... .. நான் எப்பொழுதும் உங்களோடு ஒரு கோவிலில் இருப்பதாக உணருகிறேன் . " அது சரிதான் . நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறீர்கள்.

" இப்பொழுது நான் பிரக்ஞையாக புரிந்துகொண்டிருக்கிறேன் . உங்களை சந்திப்பதற்கு முன்பு, நான் அப்படி இருந்ததில்லை" என்று கூறுகிறீர்கள். எந்த

அளவுக்கு, உங்களுடைய அன்பு, பிரார்த்தனையாக மாறுகிறதோ, அந்த அளவுக்கு, உங்களுடைய பிரக்ஞைத் தன்மை, ஒரு நிழல் போல , அதைத் தொடர்ந்து வரும்.

இதைத்தான் நான் வற்புறுத்துகிறேன். பிரக்ஞைநிலை ஏற்பட்டால் அதனுடைய நிழலில் , அன்பும் சேர்ந்தே வரும் . ஒன்று, நீங்கள் அன்பில் வளரவேண்டும் அல்லது தியானத்தில் வளரவேண்டும் . ஆனால் , இரண்டுக்கும் முடிவு ஒன்றுதான் . எப்பொழுதும்

இரண்டும் சேர்ந்தே வரும். நீங்கள் ஒன்றை முயற்சி செய்தால் , மற்றொன்று தானே சேர்ந்துவர ஆரம்பிக்கும். அது உங்களைப் பொருத்து இருக்கிறது. நீங்கள் அன்போடு , மிகவும் இயைந்து சென்றால் , அந்த அன்பு உங்களுடைய பாதையாகி, தெய்வீகத்தின் பக்தனாக்கிவிடுகிறது. அடுத்து, நீங்கள் பிரக்ஞைத்தன்மையோடு இயைந்து சென்றால், அது தியானத்தின் , வழியாக மாறுகிறது (DHYANA) இந்த இரண்டு வழிகளில்தான் , அந்த முடிவான நிலையை, நீங்கள் அடைய முடியும் . மற்ற வழிகளெல்லாம் , இந்த இரண்டின் சேர்க்கையின் விளைவுதான் . அன்பு வளர்ந்தால் , ஒவ்வொரு கணத்தையும் , நீங்கள் பிரக்ஞையாக உணர்வீர்கள் . அது எந்த அளவுக்கு, வளர்ந்து மேலே செல்கிறதோ, அந்த அளவுக்கு, உங்களுடைய புரிந்து கொள்தல் மிகவும் அதிகமாக இருக்கும்.

இப்பொழுது. உங்களைப்பற்றி நினைப்பது மட்டும் போத வில்லை ''ஆமாம். அது போதாதுதான். அதற்கு அவசியமும் இல்லை உண்மையில் நீங்கள் பிறருக்கு நன்றி சொல்லும் பொழுது, நீங்கள் அதை புரிந்து கொண்டு, பிரக்ஞையாகச் சொல்வது இல்லை. யாராவது, உங்களுடைய சாப்பாட்டு மேஜைமீது, உப்பை வைத்தால் , உடனே நீங்கள் ' நன்றி' என்று கூறுகிறீர்கள் . நீங்கள் அதை உணர்ந்துதான் சொல்கிறீர்களா? கிடையாது. அது, ஏதோ ஒரு நடைமுறைப்பழக்கம். ஒரு குருவுக்கும், ஒரு சீடனுக்கும் இடையில் எந்த நடைமுறைப்பழக்கமும் தேவையில்லை. நான் உங்களுடைய சாப்பாட்டு மேஜைமீது உப்பு எதையும் வைக்கவில்லை!

' உங்களுக்கு நன்றி என்று கூறுதல் , மேற்கத்திய கலாச்சாரம் . கீழைநாட்டில் , பெரும்பாலும் இது கிடையாது. நான் , என் தகப்பனாருக்கு நன்றி சொன்னதே இல்லை - அது என்னால் முடியாது. என் தகப்பனாருக்கு, நான் எப்படி நன்றி சொல்வேன் ? அதைப் போல , என் தாயாருக்கும் நன்றி என்று சொன்னதே இல்லை. நான் எல்லா வகையிலும் , அவளுக்குக் கடமைப்பட்டிருக்கிறேன் . ஆனால் , ஒரு நாளும் அவளுக்கு நன்றி சொன்னது இல்லை. அது என்னால் எப்படி முடியும் ? அப்படிச் சொல்வது ஒருக்காலும் அவளுடைய செயலுக்கு ஈடாகாது. ஏன் ,

உங்களுக்கேகூட , நன்றி சொல்வது என்பது தர்ம சங்கடமான நிலைதான் . அது மிகவும் இயந்திரத்தனமானது, பிரக்ஞையற்ற பழக்கம்தான் . அதில் எந்த அன்பும் கிடையாது. நீங்கள் அமைதியாக இருந்தாலே போதும். அவள் புரிந்துகொண்டுவிடுவாள்.

ஆகவே, ஒரு குருவுக்கும் , சீடனுக்கும் இடையில் எந்த நடைமுறைப் பழக்கமும் இருக்க வாய்ப்பில்லை. எல்லா நடைமுறைப்பழக்கமும், ஒருக்காலும்

போதாது. அதற்கு நான் உங்களைப் புரிந்துகொண்டேன் . நான் , உங்களுடைய இதயம் முழுவதும் நன்றியால் நிரப்பப்பட்டிருப்பதை காண்கிறேன் . அதை மௌனத்தால்தான் வெளிப்படுத்த முடியும் . அதை வார்த்தைகள் இல்லாமல் , வெளியிட முடியும் . நீங்கள் அதை வார்த்தைகளால் சொல்லாமல் வெளியிட முடியும் . நீங்கள் அதை வார்த்தையால் சொல்ல நினைத்தால் , அது ஒருபோதும் சரியாக இருக்காது. அமைதிதான் அதை முழுமையாக வெளிப்படுத்தும்

. " இப்பொழுது, உங்களுக்கு வார்த்தைகளால் நன்றி சொல்வதுகூட சரியாக இருக்காது. இருந்தும், நாங்கள் முன்பு உள்ள நிலைக்கு மீண்டும் வழுக்கிவிழுகிறோம். அதிலிருந்து நாங்கள் எப்படி மீள்வது? எப்படி அதைத் தவிர்ப்பது? என் உள்ளே உள்ள பெண்ணோடு, வெளியே உள்ள பெண் பொருந்துமாறு, எப்படி அவளுடைய உதவியை நாடுவது? என்று கேட்கிறீர்கள்.

நீங்கள், மீண்டும் பின்னுக்குச் செல்வது இயற்கைதான். ஏனென்றால் , உங்களுடைய இறந்தகாலம் , மிகப்பெரியது. ஆனால் , உங்களுடைய நிகழ்காலம் மிகச் சிறியது. அந்த இறந்தகாலத்தின் இழுக்கும் சக்தி, மிகவும் வலியுடையது. இப்பொழுது எழும் பிரக்ஞைநிலையானது, ஒரு புதிய இலை, ஒரு மரத்தில் தோன்றுவதுபோலத்தான் . அது புதிதாக , இளமையாக , மென்மையாக சுலபமாக சிதையக்கூடிய தன்மையில்தான் இருக்கும் . இறந்தகாலம் என்பது மிகப்பெரிய இமாலய

மலையைப்போல - பாறைகள், பாறைகள், பாறைகள் இந்த மிகச்சிறிய மென்மையான புதிய இலைக்கும், அந்தக் கடினமான பாறைக்கும் ? பல ஆயிரக்கணக்கான பிறவிகளில் , இயந்திரத்தனமாகவும் , பிரக்ஞையற்ற நிலையிலும் உண்டான அந்த இமயமலையை, அந்த சின்னஞ்சிறு இலை எதிர்கொள்ளவேண்டும் ; அதனோடு சண்டை போட வேண்டும். இருந்தும், அந்தப் பாறைகள் அடர்ந்த இமயமலையைவிட , தான் மிகவும் வலிமையுடையது. என்று அந்த மிகச் சிறிய இலை, நிரூபிக்கும் ஏன் ? அந்த சின்னஞ்சிறிய இலையில் உயிரோட்டம் இருக்கிறது. அது அன்புடன் வாழ்கிறது, மகிழ்ச்சியாக வாழ்கிறது. இந்த இலைதான் , ' பிரக்ஞைத்தன்மை' என்ற இலையாகும். அது நிச்சயமாக வெற்றிபெறும்

ஆனால் , நீங்கள் மீண்டும் , மீண்டும் அதில் வழுக்கி விழுவதாகத்தான் உணர்வீர்கள் - இது இயல்புதான் . அது குறித்துக் கவலைப்படவேண்டாம் . அது குறித்து, குற்ற உணர்வு கொள்ள வேண்டாம் . எப்பொழுது, உங்களுக்கு ஞாபகம் வருகிறதோ, அப்பொழுது பிரக்ஞைநிலைக்கு மீண்டும் வாருங்கள் ; அதில் வளர ஆரம்பியுங்கள் . எப்பொழுதுமே, அந்தப் புதிய இலையை, உங்களுடைய பிரக்ஞைநிலையிலேயே வைத்திருங்கள் . ஆரம்பத்தில் , அந்தக் கணங்கள் உங்களிடமிருந்து வெகு தூரத்தில் இருப்பதாகவும் , மிகக் குறைவாக இருப்பதாகவும் காணப்படும்.

அது விட்டு விட்டு வந்தாலும் , அப்பொழுது அன் மறைந்து, அது பிரார்த்தனையாக மாறினால் , நீங்கள் தந்த்ரா தருணத்தில் இருக்கிறீர்கள்

இருட்டான இரவுகளை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டாம் . அதற்காக , வருத்தப்பட்டு, பிரயோஜனம் இல்லை, தேவையும் இல்லை நாளுக்குநாள் தொடர்ந்து செல்லுங்கள் . ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் நாளுக்கு நாள்

அங்கே இருட்டும் இருக்கத்தான் செய்யும் - அது மிக நீண்டதாகக்கூட காணப்படும் . அந்த இரவுகளை, ஒரு

நீண்ட கருமை நிறைந்த ஒரு குழாயாகக் (PIPE) கருதுங்கள் . அதன் இரண்டு முனைகளில் வெளிச்சமாக இருப்பதாகக் கருதுங்கள் . அதுவும் நல்லதற்குத்தான் . ஏனெனில் , அந்த இருட்டு வெளிச்சத்தை தெளிவாகப் பார்க்க , உங்கள் கண்களைத் தயார்படுத்துகிறது. அது உங்களுடைய கண்களுக்கு ஓய்வு கொடுக்கிறது. ஒரு இரவுக்கும் , அடுத்த இரவுக்கும் நடுவில், பகல் இருக்கிறது என்று கருத வேண்டாம் , அந்த கணங்கள் கூட மிகத் தொலைவில் , அகண்ட இடைவெளியில் , மிகச்சிறியதாகவே இருக்கும் . ஆனால் அவைகள் விலைமதிக்க முடியாதவைகள் ஜொலிக்கும் தன்மைபடைத்தது. ஆகவே, அந்தக் கணங்களை மாத்திரம் நினைவு கொள்ளுங்கள் . அந்த விலைமதிக்கமுடியாத நேரம் , இன்றைக்கு நிகழலாம் அடுத்தது ஒரு வருடம் சென்று நிகழலாம் . இந்த ஒரு வருட இடைவெளியைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் - இது தேவையில்லாதது. இந்த கணத்திலும் , ஒரு வருடம் கழித்து வந்த அந்த கணத்திலும் மாத்திரம் உங்களுடைய கண்கள் பதியட்டும் . இப்படி ஒரு நாளுக்கும் , மறுநாளுக்கும் , ஒரு கணத்திற்கும் , அடுத்த கணத்துக்கும் , ஒரு பிரக்ஞைநிலைக்கும் , அடுத்த பிரக்ஞைநிலைக்கும் உள்ள இடைவெளி, அந்த வருடம் முழுவதும் , ஒரு இருண்ட குழாய் போல இருக்கட்டும் . விரைவில், அந்த வழுக்கி விழுதல் குறைய ஆரம்பிக்கும் ; பிறகு அது மறைய ஆரம்பிக்கும் . ஆகவே, அது குறித்து குற்ற உணர் கொள்ள வேண்டாம் , அதற்காக வருத்தப்படவேண்டாம் . அது இயற்கையானது. அதை ஏற்றுக் கொள்ளுங்கள்.

" என் உள்ளே உள்ள பெண்ணோடு, வெளியே உள்ள பெண் பொருந்துமாறு, எப்படி அவளுடைய உதவியை நாடுவது"

என்று கேட்கிறீர்கள். 'எப்படி' என்று நினைக்காதீர்கள். அன்பு, அங்கு இருந்தால், அது நிகழத்தான் வேண்டும். அன்பு, ' எப்படி' என்பதல்ல . அன்பு என்பது, எப்படி அறிந்துகொள்வது என்பதல்ல . எந்தக் காரணமும் இல்லாமல் , வெறுமனே அன்பு செலுத்துங்கள் . கருணையோடு, ஆவலுடன் அன்பு செலுத்துங்கள் . அடுத்தவர்களது, ஆன்மாவையும் , மனமற்ற நிலையும்

பாருங்கள். அவர்களது உடலையும் மற்றும் மனதையும் பார்க்காதீர்கள். நீங்கள் வெளியே உள்ள பெண்களை உங்களுடைய மனமற்ற நிலையில் பார்த்தால், உங்களுக்குள்ளே உள்ள பெண்ணை வெகுசுலபமாக அறிந்துகொள்ள முடியும். பிறகு, வெளியே உள்ள பெண் வெறும் கருவிதான். அந்த வெளியே உள்ள பெண்ணின் மூலமாக, நீங்கள் உங்கள் உள்ளே பெண்ணிடம் தூக்கி எறியப்படுகிறீர்கள்.

ஆனால், வெளியே உள்ள பெண்ணை, நீங்கள் உடலளவில் நேசித்தால், நீங்கள் தடைப்பட்டுப் போவீர்கள். மாறாக, அவளை ஒரு ஆன்மாவாக, வெறுமையாக (EMPTINESS) பூஜ்யமாகக் கருதினால், ஒரு பாதை என்று எண்ணினால், எதுவும் உங்களுக்குத் தடையாக இருக்க முடியாது. உங்களுடைய சக்தி, மீண்டும் உள்ளே சென்று, உங்களுடைய சொந்தப் பெண்ணை கண்டுகொள்ளும்.

வெளியில் உள்ள ஒவ்வொரு பெண்ணும், ஆணும், தங்களுக்குள்ளே உள்ள ஆணையும், பெண்ணையும் கண்டுபிடிக்க உதவியாக இருக்கிறார்கள். ஆனால், அங்கு 'எப்படி' என்ற நிலை இருக்காது. கருணையும், அன்பும் அங்கு தேவை. அடுத்தவர்களது தெய்வீக நிலையில், புனிதத்தன்மையில் மட்டும் கவனம் வைத்து, தியானம் செய்யுங்கள். அடுத்தவர்களைப் புனிதமாகக் கருதுங்கள். இதுமட்டும்தான் அங்கே நிலவவேண்டும். அந்த ஒரு புனிதமான சூழ்நிலை, உங்களைச் சூழட்டும். அது நிச்சயமாக நிகழத்தான் வேண்டும். அது அந்த வழியில்தான், இப்பொழுது சென்றுகொண்டு இருக்கிறது.

கேள்வி 3:

" அன்புள்ள பகவான், ஏன் மக்கள் உங்களைத் தவறவிட்டுக்கொண்டே இருக்கிறார்கள். நான், இங்கு சந்நியாசம் பெற்ற, அந்த நாளிலிருந்து, அவர்களுடைய முட்டாள்தனத்தை, நான் மிகவும் தெளிவாகக் காண்கிறேன். ஏன், அதை அவர்கள் பார்க்கக்கூடாது? புரிந்துகொள்ளக்கூடாது?"

கூட பிறரிடம் இவ்வளவு கடுமையாக இருக்கவேண்டாம். மேலும் , அது உங்களுடைய வேலை இல்லை. அதை அவர்கள் பார்க்கவில்லையென்றால் , புரிந்துகொள்ளவில்லை யென்றால் , அது அவர்களுடைய தீர்மானம் மற்றும் சுதந்திரம் . அதை முட்டாள்தனம் என்றுகூடக் கூறுகிறீர்கள். ஏனென்றால், நீங்கள் அதை முட்டாள் தனம் என்று கருதினால் , உங்களிடம் மிகவும் ஆழமான அகங்காரம் உண்டாகும். இதை நீங்கள் பார்க்க முடிகிறது. ஆனால், அவர்களால் பார்க்க முடியாவில்லை. நீங்கள் புத்திசாலியாகவும் , அவர்கள் முட்டாள் களாகவும் உங்களுக்குத் தெரிகிறது. இது நல்லதில்லை.

ஒரு நிகழ்ச்சி.

முகமது, ஒரு நாள் விடிகாலை, பிரார்த்தனை செய்ய மசூதிக்குச் சென்றார். அவரோடு ஒரு வாலிபனையும் அழைத்துச் சென்றார் . அவன் , இதுவரை மசூதிக்குச் சென்றதே இல்லை. அது வசந்தகால விடிகாலை. அவர்கள் , மசூதியிலிருந்து திரும்பிவரும் பொழுது, பலர் இன்னும் தூங்கிக்கொண்டு இருப்பதைப் பார்த்தார்கள் . அப்பொழுது அந்த இளைஞன் , முகமதுவிடம் , " ஹஸ்ரத் , இந்தப் பாபிகளைப் பாருங்கள் . இவர்கள் இன்னும் தூங்கிக்கொண்டு இருக்கிறார்கள் . இது தூங்குவதற்கான நேரமா? இது பிரார்த்தனை நேரமில்லையா? " என்று கேட்டான் . அவன் , மசூதிக்குச் சென்று பிரார்த்தனை செய்வது, இதுவே முதல்தடவை!

இதற்கு முகமது என்ன சொன்னார தெரியுமா? அவர் , ஆகாயத்தை நோக்கியவாறு, "மிகவும் வருத்தப்படுகிறேன்' என்றார்.

அந்த இளைஞன் , " நீங்கள் யாரிடம் வருத்தம் தெரிவித்தீர்கள்?'

ஞானி அதற்கு ஹஸ்ரத் , " கடவுளிடம் . இப்பொழுது நான் மீண்டும் மசூதிக்குச் செல்ல வேண்டும் .

இந்தத்தடவை, தயவுசெய்து என்னோடு வராதே. நீ இதுவரை மசூதிக்குச் செல்லாதது. மிகவும் நல்லது. இப்பொழுது உன்னை அழைத்துச் சென்றதன் மூலம், நான் தவறு செய்து விட்டேன் நீயும் அவர்களைப்போல தூங்கிக்கொண்டு இருந்தால் , மிகவும் நன்றாக இருக்கும் - குறைந்தபட்சம் , இப்பொழுது ஏற்பட்ட அகங்காரத்தையாவது, நீ தவிர்த்திருக்கலாம் இப்பொழுது, நீ ஒரு தடவை பிரார்த்தனை பண்ணியதால் , நீ உன்னையே ஒரு போலவும் , மற்றவர்களெல்லாம் , பாபிகள் போலவும் கருதிக்கொண்டு விட்டாய் . உன்னை, என்னோடு அழைத்துச் சென்றதால் , என்னுடைய பிரார்த்தனை அசுத்தமாகிவிட்டது. ஆகவே, நான் மீண்டும் மசூதிக்குச் செல்ல வேண்டும். தயவுசெய்து, மறுபடியும் என்னோடு வராதே." என்றார்.

அவர் , திரும்பச் சென்று கடவுளிடம் பிரார்த்தனை பண்ணி, தன்னை மன்னிக்கும்படி வேண்டினார். அவர் கண்களிலிருந்து கண்ணீர் தாரையாக வழிந்து கொண்டிருக்க , அவர் தன்னை மன்னிக்கும்படி கதறிக்கொண்டிருந்தார்.

நீங்கள் சிலநாட்களுக்கு முன்பு - அல்லது சிலவாரங்களுக்கு முன்பு - சந்நியாசம் பெற்றுக் கொண்டீர்கள் . இப்பொழுது, நீங்கள் அடுத்தவர்களை முட்டாள்கள் என்று கருத ஆரம்பித்துவிட்டீர்கள் . இது ஒருபோதும் சரியில்லை. உண்மையில், யார் ஒருவன், அடுத்தவர்களது வாழ்க்கையில் குறுக்கிடாமல் இருக்கிறனோ, அவன்தான் உண்மையான சந்நியாசி. உங்களுடைய நோக்கம், அடுத்வர்களது வாழ்க்கையில் குறுக்கிடுவதுதானா? . ஏன் ? அவர்கள் என்னைப் பார்க்க விரும்பாவிட்டால் , என்னைக் கேட்க விரும்பாவிட்டால் , இங்கே என்ன நடக்கிறது என்பதைப் புரிந்துகொள்ள விரும்பாவிட்டால் , அது அவர்களுடைய தனிப்பட்ட சுதந்திரம் . அவர்கள் முட்டாள்கள் அல்ல . அவர்கள் தங்கள் சுதந்திரத்தை அனுபவித்துக்கொண்டு இருக்கிறார்கள் . அவர்கள் , அவர்களாக இருக்கிறார்கள்.

நீங்கள் , இதைப் போன்ற தன்மைகளைச் சேகரித்துக்கொண்டால் , இப்படித்தான் மதத் தீவிரவாதம் ஏற்படுகிறது நீங்களும் ஒரு மத

தீவிரவாதியாகிவிடுவீர்கள் . பின்பு, நீங்கள் அவர்களைக் கட்டாயப்படுத்தி, உங்களோடு வரச்சொல்வீர்கள் . நீங்கள் கருணையின் பாற்பட்டு அவர்களைக் கட்டாயப்படுத்தலாம் . இதைத்தான் பல நூற்றாண்டுகளாக , பல மதங்கள் செய்து வந்திருக்கின்றன . முகமதியர்கள் , ஹிந்துக்களைக் கொன்றார்கள் ; ஹிந்துக்கள் முகமதியர் களைக் கொன்றார்கள் . அதைப் போல , கிருஸ்துவர்கள் , முகமதியர்களைக் கொன்றார்கள் முகமதியர்கள் , கிருஸ்துவர்களைக் கொன்றார்கள் . எதற்காக ? கருணையின் அடிப்படையில்! ''நாங்கள், உங்களை

சரியான பாதைக்கு அழைத்துச் செல்லுகிறோம் . நீங்கள் திக்குத் தெரியாமல் செல்கிறீர்கள் . நீங்கள் இப்படி செல்வதை, நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கமாட்டோம் என்றுதான் ஒவ்வொரு மத நம்பிக்கை உள்ளவர்களும் சொல்லுவார்கள்.

சுதந்திரம் என்றால் , முழுமையான சுதந்திரம் என்று அர்த்தம் . சுதந்திரம் என்றால் , உங்கள் இஷ்டப்படி எங்குவேண்டுமானாலும் செல்லலாம் . அவர்களது இஷ்டப்படி செல்ல, நீங்கள் அனுமதிக்காவிட்டால், அது என்ன சுதந்திரம் ? நீங்கள் ஒரு குழந்தையிடம் , " எங்களுக்குச் சரி என்றுபட்டதை மட்டும்தான் , நீ செய்ய அனுமதிப்போம் . நாங்கள் சரியில்லை என்று கருதுவதை, நீ செய்ய அனுமதிக்கமாட்டோம் ' என்று சொன்னால் , அது என்ன சுதந்திரம் ? சரி என்று தீர்மானிக்க , நீங்கள் யார் ? ஒவ்வொருவரும் சரி என்பதைத் தீர்மானித்துக்கொள்ள , அவர்களையே அனுமதிக்க வேண்டும்.

இதைப்போல , வேண்டாத கருத்துக்களைச் சேகரிப்பது என்பது மிகவும் சுலபம் . ஆகவேதான் , பல நூற்றாண்டுகாலமாக , இப்படிப்பட்ட முட்டாள்தனம் நடந்திருக்கிறது. கடவுளின் பெயரால் , அன்பின் பெயரால் பல லட்சம் மக்களைக்கொன்று குவித்திருக்கிறார்கள் . இது எப்படி நிகழ்ந்தது? தாங்கள் சிறந்த சேவையை செய்வதாக , கிருஸ்துவர்கள் கருதுகிறார்கள் . ஏனென்றால் , அவர்கள் , " நீங்கள் ஜீசஸின் மூலமாகச்

செல்லாவிட்டால் , உங்களால் கடவுளை அடைய முடியாது' என்று எண்ணிக்கொண்டு இருக்கிறார்கள். நீங்கள் அவர்களது தர்க்கத்தைக் கேட்டால் , அது மிகமிக கருணையுடையது போல இருக்கும். அவர்கள் சொல்வது போல இருந்தால் - அதாவது ஜீசஸின் மூலமாகத்தான் , கடவுளை அடைய முடியும் என்று - அப்படி மக்களை எரித்தவர்களும் , கொன்றவர்களும் , தண்டித்தவர்களும் , நிச்சயம் சிறந்த ஞானிகளாகி விடுவார்கள்.

ஆனால் , இதுதான் பிரச்சினையே. முகமதியர்கள் , முகமது மூலமாகத்தான் கடவுளை அடையவேண்டும் என்று நினைக்கிறார்கள். முகமதுதான் கடைசி கடவுள் தூதுவன் என்று அவர்கள் நம்புகிறார்கள் . ஜீசஸ் எப்பொழுதோ காலாவதியாகிவிட்டார். கடவுள். முகமது மூலமாக , மிகவும் சிறந்த , புதிய பதிப்பாக , வேறு செய்திகளை மக்களுக்கு அனுப்பியிருக்கிறார் ! ஆகவே, முகமது வந்தபிறகு, ஜீசஸைப் பற்றி எதற்காகக் கவலைப்படவேண்டும் ? நிச்சயமாக , இப்பொழுது, வந்தவர்கள் தான் மிகவும் சிறந்தவராக இருக்கவேண்டும் . ஆகவே, நீங்கள் முகமது மூலமாகத்தான் , கடவுளை அடைய வேண்டும் . இப்பொழுது ஒரே ஒரு கடவுள் தான் இருக்கிறார் ஒரே ஒரு கடவுள் தூதுவர் தான் இருக்கிறார் - அவர்தான் முகமது. நீங்கள் அவர்கள் சொல்வதை கேட்காவிட்டால், அவர்கள் உங்களைக் கொல்லவும் தயங்கமாட்டார்கள் - அதாவது அன்பின் பெயரில் உங்களுடைய நன்மைக்காக!

ஹிந்துக்கள் என்ன சொல்கிறார்கள் ? அவர்கள் , இதுவெல்லாம் முட்டாள்தனம் . முதல் பதிப்புதான் - அதாவது வேதங்கள் - சிறந்தது என்பார்கள்.

ஏன் ? ஏனென்றால் , கடவுள் தவறே செய்யமாட்டார் . அப்படி இருக்கும்பொழுது. அதைச் சரிசெய்ய வேண்டிய அவசியம் என்ன ? முதலில் தோன்றியதுதான் சிறந்தது; மற்றும் முடிவானது -

அதாவது ஆல்பா மற்றும் ஓமேகா (ALPHA AND OMEGA) கடவுள் எல்லாவற்றையும் ஏற்கனவே கொடுத்து விட்டார். அப்படியிருக்கும் பொழுது, புதிய பதிப்புக்கு வேலை என்ன ? ஆரம்ப , முதலாவது (ORIGINAL) பதிப்பைப் புரிந்துகொள்ளாத முட்டாள்கள் இவர்கள் நீங்கள் வேதத்தைச் சரியாகப் புரிந்துகொண்டால் , பைபிளையோ, குரானையோ புரிந்துகொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அது அர்த்தமற்றசெயல் . ஆகவே, முதல் பதிப்புதான் சிறந்தது. மனிதர்கள் இதைப் புரிந்துகொள்வார்கள் என்று கடவுள் நம்பினார். ஆனால், மக்கள் இவ்வளவு முட்டாள்களாக இருப்பார்கள் என்று அவர் கருதவில்லை. வேதத்தை, ஒரு சிலரால் மட்டுமே புரிந்துகொள்ள முடிந்தது. ஆகவேதான், அவர், பிறகு குறைத்து வெளியிட்டார் . அது ஒன்றும் மேன்மையாக்கவில்லை. மனிதன் புரிந்துகொள்ளும் அளவுக்கு, அதன் தரத்தை குறைத்து விட்டார் . அதுதான் பைபிள் . அதையும் மக்கள் சரியாகப் புரிந்து கொள்ளாததால் , அவர் கடைசியாக குரானை அனுப்பினார் . அதையும் மக்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஆகவே, குருகிரந்த்தாவை (GURU GRANTHA) அனுப்பினார். இப்படித்தான் மனிதன் கீழே இறங்கிக்கொண்டு இருக்கிறான் , ஹிந்துகொள்கை பிரகாரம், சரியானது என்பது ஆரம்பத்திலேயே முடிந்து விட்டது. அதிலிருந்து, மனிதன் கீழே இறங்க ஆரம்பித்துவிட்டான் . இப்பொழுது நடப்பது மிகவும் முட்டாள்தனமான காலம். மனிதன், கடவுளை நோக்கி முன்னேறவில்லை; மாறாக கீழே விழுந்துகொண்டு இருக்கிறான் . மனிதன் மேன்மை அடையவில்லை (EVOLUTION) மாறாக , கீழ்நிலையை அடைந்து கொண்டிருக்கிறான் ஆகவேதான் , கடைசியாக வந்த புத்தகம் , மிகவும் சாதாரண நிலையில் இருக்கிறது. அது அப்படித்தான் இருக்கவேண்டும் . ஏனென்றால் , அது மிகச் சாதாரண மனிதர்களுக்குரியது. சிறந்த ஆத்திகர்கள், வேதகாலத்தில்தான் இருந்தார்கள்.

இப்பொழுது, இந்தப் பூமியில் , 300 மதங்கள் இருக்கின்றன ஒவ்வொன்றும் தான்தான் உண்மையானது என்றும் , அடுத்த மதத்தவர்களைக் கொல்லத் தயாராக இருக்கிறது. அவர்கள் தொடர்ந்து அடுத்தவர் களது தொண்டையை

பிடித்துக்கொண்டுதான் இருக்கிறார்கள் . ஏதோ உண்மையான அடிப்படைத் தன்மை, தவறாகப் போய்க்கொண்டிருக்கிறது.

இதுதான் அந்தத் தவறு: அதாவது, நீங்கள், உங்களை ஒரு தீவிரவாதியாக மாற்றிக்கொள்ள , என் அனுமதியை கேட்கிறீர்கள் . முடியாது. என்னோடு சேர்ந்து, இது ஒருக்காலும் நடக்காது. இது குறைந்தது நான் உயிரோடு இருக்கும் வரையிலாவது. இங்கு, அவர்கள் விரும்பியவாறு, சுதந்திரமாக செய்து கொள்ளலாம் , சுதந்திரமாக நடந்து கொள்ளலாம் , அவர்கள் விரும்பியவாறு எதையும் செய்துகொள்ளலாம் . அவர்களெல்லாம் , முட்டாள்கள் என்று நீங்கள் கருதத் தேவை இல்லை. அவர்கள் , அவர்களது மனநிலையில் இருக்கிறார்கள் ; அது அழகானதுதான்.

ஒரு நீக்ரோ பையன் , வெள்ளை நிறத்தில் சாயம் பூசிக்கொண்டு, வீட்டுக்கு வந்தான் . அவன் தன் தாயாரிடம் , " பள்ளியில் உள்ள சிறுவர்கள் , இப்படி சாயம் பூசிவிட்டார்கள் " என்றான் . அவள் கோபமடைந்து, அவனை அடித்தாள்.

அடுத்து, அவனுடைய தகப்பனார் வந்து, " என்ன இதெல்லாம் ?" என்று கேட்க , அவருடைய மனைவி, ' தன் பையன் சாமுக்கு (SAM) பள்ளிப்பையன்கள் , வெள்ளைச் சாயம் பூசிவிட்டிருக்கிறார்கள் " என்றாள் . அவனுடைய கோழைத்தனத்தைக் கண்டு, அவனுடைய தகப்பனார், அவனை மீண்டும் அடித்தார்.

சிறிது நேரம் கழித்து, வெளியிலிருந்து ஒரு சின்னக் குரல் , "நான் இரண்டு மணிநேரம் தான் , வெள்ளைப் பையனாக இருந்தேன் . ஆனால் , நான் உங்களை ஏற்கனவே வெறுத்துக்கொண்டுதான் இருக்கிறேன் , நீங்கள் கருப்புப் பிச்சைக்காரர்கள்!" என்று கேட்டது.

நீங்கள் , ஒரு சில வாரங்களுக்கு முன்புதான் , ஆரஞ்சுநிற உடையை அணிந்தீர்கள் .... ஆகவே, தயவு செய்து பொறுமையாக இருங்கள் , புத்திசாலித்தனமாக இருங்கள் . மற்றும் அடுத்தவர்களுடைய சுதந்திரத்தை மதிக்கக்

கற்றுக்கொள்ளுங்கள். அவர்கள், அவர்களது வழியில் செல்லட்டும். கேள்வி 4

'' அன்புள்ள பகவான் , பழங்காலந்தொட்டே, எல்லாச் சமூகத்திலும் , ஏன் , புனிதம் என்ற பெயரில் , பாலுணர்வு தடுக்கப்பட்டிருக்கிறது?''

இது மிகவும் சிக்கலான கேள்வி. ஆனால் மிகவும் முக்யத்வம் வாய்ந்தது. இதனுள் சற்று ஆழமாகச் சென்று பார்ப்போம்.

மனிதனிடம் உள்ள உணர்வுகளில் , மிகவும் சக்தி வாய்ந்த உணர்வு பாலுணர்வுதான் . மனிதனை இயக்கக் கூடிய , மிகவும் சக்திபடைத்த அந்தப் பாலுணர்வை, அரசியல்வாதிகளும், பாதிரிமார்களும், ஆரம்ப முதல் சரியாகப் புரிந்துவைத்திருந்தார்கள் . அதற்குத் திரையிட வேண்டும் மற்றும் தடுக்க வேண்டும் என்று அவர்கள் மிகவும் தீர்மானமாக இருந்தார்கள் . மனிதனுக்கு , பாலுணர்வில் முழு சுதந்திரம் கொடுத்தால், அவர்களை எந்த விதத்திலும் அதிகாரம் செய்ய , அடிமையாக்கி அடக்கி ஆள முடியாது என்று அவர்கள் நன்றாகப் புரிந்து வைத்திருந்தார்கள்.

இதைப்போல செய்திருப்பதை, நீங்கள் கவனித்தது இல்லையா? ஒரு காளையை (BULL) வண்டியை இழுக்கப் பழக்கப்படுத்த வேண்டுமென்றால் , நீங்கள் என்ன செய்கிறீர்கள்? நீங்கள் அதைக் காயடிக்கிறீர்கள். நீங்கள் அதனுடைய பாலுணர்வு சக்தியை அழிக்கிறீர்கள் . நீங்கள் இயல்பான காளையை, காயடிக்கப்பட்ட காளையைப் (OX) பார்த்திருக்கிறீர்களா? இரண்டுக்கும் எவ்வளவு வித்தியாசம் ? காயடிக்கப்பட்ட காளை, ஒரு கீழ்படியும் அடிமையைப் போல இயங்கும். ஒரு இயல்பான காளை எவ்வளவு அழகாக, எவ்வளவு கம்பீரமாக இருக்கிறது? அது நடந்து செல்வதை சற்று கவனியுங்கள் ! அது ஒரு

அரசனைப் போல நடந்து செல்லும் . ஆனால் , ஒரு

காயடிக்கப்பட்ட காளை, வண்டியை இழுக்கும்பொழுது, அதனுடைய நடையையும் பாருங்கள்

இதைத்தான் மனிதர்களிடமும் செய்திருக்கிறார்கள் . அவனுடைய பாலுணர்வை மறைத்திருக்கிறார்கள் , வெட்டியும் மற்றும் முடமாகவும் ஆக்கியிருக்கிறார்கள். இப்பொழுது மனிதன் ஒரு இயல்பான காளையாக இல்லை அவன் ஒரு காயடிக்கப்பட்ட காளைதான் . ஒவ்வொரு மனிதனும் , ஆயிரக்கணக்கான வண்டிகளை இழுத்துக்கொண்டு இருக்கிறான் . நன்றாகக் கவனியுங்கள் . உங்களுக்குப் பின்னால் , ஆயிரக்கணக்கான வண்டிகளை, அவர்கள் இழுத்துக்கொண்டு செல்வதை காண்பீர்கள். அவர்கள் எல்லாம் காயடிக்கப்பட்ட காளைகள் தான். அவர்களை காயடித்தது நீங்கள் தான் ஏன் நீங்கள் ஒரு இயல்பான காளையைப் பழக்கப்படுத்த முடியவில்லை. இயல்பான காளை மிகவும் சக்தி வாய்ந்தது. அது, ஒரு பசுவைப்பார்த்தால் , உங்களையும் , உங்கள் வண்டியையும் உதறிவிட்டு, அதன்பின்னால் ஓடும் . அப்பொழுது நீங்கள் யார் என்றே அது நினைப்பது இல்லை, உங்களுடைய கட்டளையையும் அது மதிப்பதில்லை. ஒரு இயல்பான காளையை, உங்கள் இஷ்டப்படி ஆட்டி வைக்க முடியாது.

பாலுணர்வு சக்தி என்பது வாழ்வு சக்தி. அதை அடக்கி ஆள முடியாது, அரசியல்வாதிகளும் , பாதரிமார்களும் உங்கள் மேல் அக்கரை கொள்ளவில்லை. அவர்களுடைய அக்கரையெல்லாம் , எப்படி உங்களுடைய பாலுணர்வு சக்தியை திசை திருப்புவது என்பதில்தான் . ஆகவே, இந்தக் காரியத்துக்காக , அவர்கள் மிகவும் புத்திசாலித்தனமாக சில காரியங்களைச் செய்துவைத்திருக்கிறார்கள் - இதை நீங்கள் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

மனிதன் அடிமைநிலையில் இருப்பதற்கு, இந்த பாலுணர்வு அடக்குதலும் , முடமாக்குதலும் தான் அடிப்படைக் காரணம் , பாலுணர்வை சுதந்திர மாக்கினால்தான் , மனிதனும் உண்மையான சுதந்திரத்தையடைவான் . அவனை இயற்கையாக வளர அனுமதிக்காத வரையில், அவன் உண்மையான சுதந்திரத்தில் செயல்படமாட்டான்.

மனிதனை, அடிமையாக்க , அவனை அருவறுப்பான

தன்மையில் இயங்க வைக்க , முடமாக்க , தந்திரங்களைக் கையாண்டிருக்கிறார்கள்.

முதலாவது: நீங்கள் அவனை அதிகாரம் செய்ய வேண்டுமானால் , அவனை, எவ்வளவு தூரம் வலுவிழக்கச் செய்ய முடியுமோ, அவ்வளவு தூரம் வலுவிழக்கச் செய்ய வேண்டும் . பாதிரியார்களும் , அரசியல்வாதிகளும் உங்களை ஆதிக்கம் செய்ய விரும்பினால், நீங்கள் சக்தியற்று இருக்க வேண்டும், வலுவிழந்து இருக்க வேண்டும். ஆமாம், சில பேர்களை அப்படியே விட்டு வைக்கிறார்கள் . ஏனென்றால் , அப்பொழுதுதான் , தன் நாட்டு எதிரியை வெல்ல முடியும். இவர்கள் போர் வீரர்கள். மற்ற வேலைகளுக்கு, இவர்கள் தேவையில்லை. படைவீரர்கள் , பல சலுகைகளைப் பெறுவதற்குக் காரணம் , அவர்கள் , தங்கள் உயிரைப் பணயம் வைத்து, வாழ்கிறார்கள் . ஆகவே, அவர்கள்

மிகவும் சக்திபடைத்தவர்களாக இருக்க வேண்டும் . அப்பொழுதுதான், எதிரியை வெற்றி கொள்ள முடியும்.

ஆனால், மற்றவர்கள் அழிக்கப்படுகிறார்கள். அவர்கள், ஆயிரக்கணக்கான வழிகளில் , பலவீனமாக்கப்படுகிறார்கள் . ஒருவனை சக்தியற்ற நிலையில் வைக்க வேண்டுமானால், அவன் காதலிக்க முழுமையான சுதந்திரத்தை அளிக்காமல் இருந்தாலே போதும். அன்பும், காதலும்தான் அவனுடைய சக்தியை வளர்க்கிறது. இப்பொழுது, மனநலவைத்தியர்கள் இதைக் கண்டுபிடித்திருக்கி றார்கள் . அதாவது, ஒரு குழந்தையிடம் அன்புகாட்டா விட்டால் , அது மெல்ல சுருங்கி, சக்தியற்றதாகிவிடுகிறது. நீங்கள் அதற்கு பால் கொடுக்கலாம் மருந்து கொடுக்கலாம் - இப்படி எல்லாவற்றையும் கொடுக்கலாம் . ஆனால் , அதை அன்போடு கொஞ்சாவிட்டால் , அதைக் கட்டி அணைக்காவிட்டால் , அதற்கு முத்தம் கொடுக்காவிட்டால் , அது உங்கள் உடல் கதகதப்பை உணரச் செய்யாவிட்டால் , அந்த குழந்தை மெல்ல , மெல்ல மெல்ல இளைத்துப் போய்விடும் . அது, வாழ்வதற்குப் பதில் , இறப்பதற்குத் தயாராகிவிடுகிறது. என்ன நடக்கிறது? ஏன் ? அதை

அன்போடு கொஞ்சி, முத்தம் கொடுத்து, உங்களுடைய உடல் கதகதப்பை, அது உணரும்படி செய்தால், அந்தக் குழந்தை, தான் மிகவும் அன்பும் , போஷாக்கும் , அரவணைப்பும் பெற்று, மிகுந்த பாதுகாப்பில் இருப்பதாக உணர்கிறது. தன்னுடைய வாழ்க்கைக்கு ஒரு அர்த்தம் இருப்பதாக உணர்கிறது.

இப்பொழுது, அந்தக் குழந்தையை, அதனுடைய குழந்தைப் பருவத்தில் இருந்தே அதை பட்டினி போடுகிறோம் . அதற்குத் தேவையான அன்பைக் கொடுப்பது இல்லை. பிறகு, ஆண்களையும் , பெண்களையும் , அவர்களது பருவத்தில் காதலிக்கவிடாமல் செய்து, திருமணம் செய்த பிறகுதான் காதலிக்க வேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறார்கள் . 14 வயதிலேயே, அவர்களுடைய உடலும் , மனமும் உடலுறவுக்குத் தயராகிவிடுகிறது. ஆனால் , அவர்களது படிப்பு, அதைத் தள்ளிப் போடச்செய்கிறது - 10 வருடம் , 20 வருடம் , 25 வருடம் என்று ; பிறகு அவர்கள் M.A. என்றும் , Ph.D என்றும் M.D. என்று பட்டம் பெறுகிறார்கள் . இப்படியாக , அவர்களைக் காதலிக்கவிடாமல், நாம் கட்டாயப்படுத்துகிறோம். எ

கிட்டத்தட்ட 18 வயதில்தான் , பாலுணர்வு அதன் உச்சத்தில் இருக்கிறது. அதன்பிறகு, ஆண் அந்த அளவுக்கு உணர்ச்சியுள்ளவனாக இருப்பதில்லை. அதைப் போல ஒருபெண், அந்த வயதில், மிகுந்த உச்ச இன்பத்தை (ORGASM) அடைகிறாள் . அதைப் போல உணர்வை, அவள் மறுபடியும் அடைவதில்லை. ஆனால் , நாம் அவர்களை அந்த வயதில் காதலிக்கக்கூடாது என்று கட்டாயப்படுத்துகிறோம் . பெண்களையும் , ஆண்களையும் தனித்தனியே பிரித்துவைக்கிறோம் , தங்க வைக்கிறோம் . இப்பொழுது இந்த இரண்டு பேர்களுக்கும் இடையில் , போலீஸ் , நீதிபதிகள் , கல்விமேலாளர்கள் , தலைமை ஆசிரியர்கள் மற்றும் கல்லூரித் தலைவர்கள் என்று பல பேர்கள் இருக்கிறார்கள் . இவர்களெல்லாம் , இரண்டு பேர்களுக்கு இடையே நின்றுகொண்டு, பையன்கள்,

பெண்களின் பக்கம் போகாமலும் , பெண்கள் , பையன்கள் பக்கம் போகாமலும் கண்காணித்துக்கொண்டு இருக்கிறார்கள் . ஏன் ? எதற்காக, இவர்களெல்லாம் அந்த அளவுக்கு அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும் ? அவர்கள் காளையை காயடித்து - அதாவது பாலுணர்வைக் கொன்று - எருதாக மாற்ற முயல்கிறார்கள்.

அந்த 18 வயதில் , நீங்கள் பாலுணர்வில் , காதலுணர்வில் மிகுந்த உச்சத்தன்மையில் இருக்கிறீர்கள் ஆனால், உங்களுக்குத் திருமணமாகும் பொழுது, 25,26,27... என்று வயதுகூடிக்கொண்டே போகிறது. எந்த அளவுக்கு ஒரு நாடு, நாகரீகம் மிக்கதாக இருக்கிறதோ, அந்த அளவுக்கு, நீங்கள் காத்திருக்க வேண்டும் . ஏனென்றால் , நீங்கள் அதிகமாகக் கற்றுக்கொள்ள வேண்டும் அப்பொழுதுதான் வேலை கிடைக்கும். ஆகவே, நீங்கள் திருமணம் செய்து கொள்ளும் பொழுது, உங்களுடைய பாலுணர்வு சக்தி, இறங்கும் பாதையில் இருக்கிறது.

நீங்கள் அப்பொழுது காதல் செய்யலாம். அந்தக் காதல் ஒருபோதும் உணர்ச்சிகரமாக ( கதகதப்பாக ) இருக்காது. அது மிகவும் முடக்கப்பட்ட நிலையில்தான் இருக்கும் . நீங்கள் முழுமையாக காதலுணர்வில் இல்லாவிட்டால் , நீங்கள் உங்களுடைய குழந்தைகளின் மேல் முழுமையாக அன்பு செலுத்த முடியாது. ஏனென்றால் , அது எப்படி என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் அதனுடைய உச்சத்தன்மையை அறிந்திராபொழுது, நீங்கள் எப்படி உங்களுடைய குழந்தைகளுக்கு அதை போதிக்க முடியும் ? எப்படி, உங்களுடைய குழந்தைகள் அன்பின் உச்சநிலையை உணர்ந்துகொள்ள , நீங்கள் உதவி செய்ய முடியும்?

ஆகவே, பழங்காலந்தொட்டே, அவனுக்கு, காதல் மறுக்கப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தால்தான், அவன் இளைத்து, வலுவிழந்து வாழ்க்கையை நடத்துவான்.

இரண்டாவதாக , அவனை எந்த அளவுக்கு

அறியாமையிலும் , மயக்க நிலையிலும் வைக்க முடியுமோ, அந்த அளவுக்கு அவனைத் தயார்ப்படுத்துகிறார்கள் . அப்பொழுதுதான் , அவர்களைச் சுலபமாக ஏமாற்ற முடியும் . நீங்கள் ஒருவிதமான கொள்கையை உண்டாக்கி, மக்களிடம் திணிக்க வேண்டுமானால் - இது அரசியல்வாதிகளுக்கும் மற்றும் பாதிரிமார்களுக்கும் , தங்களுடைய சதித் திட்டத்தை அமுல்படுத்தத் தேவை - அவர்களை முழுமையாக காதலில் ஈடுபடாதவாறு தடுக்க வேண்டும் . காதல் இல்லையெனில் ஒருவனுடைய அறிவுக்கூர்மை, கீழே இறங்கிவிடும் . இதை நீங்கள் கவனித்தது இல்லையா? காதலித்தால் விழுந்தால் , திடீரென்று உங்களுடைய திறமைகளெல்லாம் அதன் உச்சத்துக்குச் சென்றுவிடும் . சிலநேரங்களுக்கு முன்பு. சோர்வாக இருந்த நீங்கள் ... உங்களுடைய காதலியைக்கண்ட பிறகு. .. மிகவும் உற்சாகமடைந்து, மகிழ்ச்சியில் திளைப்பீர்கள் . நீங்கள் அப்பொழுது ஒரு உயிரோட்டமுள்ள சுடர் போல் ஒளிவிடுவீர்கள். நீங்கள் காதலில் இருந்தால் உங்களுடைய செயல்பாடுகள் அனைத்தும், அதன் உச்சத்தில் இருக்கும். காதல்

மறைந்து விட்டால் , உங்களுடைய செயல்பாடுகள் அனைத்தும்,

காதாரணநிலைக்கு வந்துவிடும்.

மிகவும் திறமையான , மிகவும் அறிவு மிகுந்தவர்கள் எல்லாம் , மிகவும் பாலுணர்வு உள்ளவர்களாகவே இருப்பார்கள் . இதை நீங்கள் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும் . ஏனெனில் , காதல் சக்தி அல்லது பாலுணர்வுசக்தி அடிப்படையில் , அறிவுக்கூர்மையாகவே இருக்கிறது. உங்களால் காதலிக்க முடியவில்லையென்றால் , நீங்கள் குளிர்ந்து மூடப்பட்டு விடுகிறீர்கள் உங்களுடைய உயிர்த்தன்மை, நீர்போல் ஓடாது. நீங்கள் முழுமையாக காதலில் இருக்கும் பொழுது, நீங்கள் இந்த நட்சத்திரங்களைத் தொட முடியும் என்று தைரியமாக நினைக்கிறீர்கள் . அந்த அளவுக்கு உங்களிடம் தன்னம்பிக்கை ஏற்படுகிறது. ஆகவேதான் , ஒரு ஆணோ, பெண்ணோ

மிகப்பெரிய 'சக்தித் தூண்டுதலாக' இருக்கிறார்கள். ஒரு பெண் காதலில் இருந்தால், உடனே, அவள் எவ்வளவு அழகாக மாறுகிறாள்! சில நொடிகளுக்கு முன்பு. அவள் சாதாரணநிலையில் இருந்தாள். இவள் இப்பொழுது காதலில் மூழ்கியிருக்கிறாள் அவள் இப்பொழுது, ஒரு புதிய சக்தியில் குளிக்கிறாள்; அவளைச் சுற்றி ஒரு புதிய சக்திவட்டம் தோன்றுகிறது. அவளுடைய நடையில் ஒரு அழகும், ஏன் அது ஒரு நாட்டியம் போலவே தோன்றும்! அவளுடைய கண்கள் எவ்வளவு அழகாக ஜொலிக்கும். அவளுடைய முகத்தில் ஒரு ஒளி ஏற்பட்டு எவ்வளவு கவர்ச்சிமிக்கதாக இருக்கும்? இதைப்போலவே, ஒரு ஆணிடமும் ஏற்படும்.

ஆகவே, பருவத்தில் ஆண்களும், பெண்களும் காதலில் இருக்கும் பொழுது அவர்களுடைய செயல்கள் அனைத்தும் உச்சத்தில் இருக்கும். நீங்கள், அதை அனுமதிக்காவிட்டால், அவைகள் மிகவும் கீழான நிலைக்கு இறங்கிவிடும். அந்த நிலையில், அவர்கள் முட்டாளாகவும், அறியாமையிலும்தான் இருப்பார்கள். அவர்களிடம், எதையும் அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருப்பதில்லை. இப்படி, அவர்கள் ஒருவித மயக்கநிலையில் இருக்கும் பொழுது, அவர்களை மிகச் சுலபமாக ஏமாற்றலாம். எப்பொழுது மக்கள், பாலுணர்வில் அடக்கப்படுகிறார்களோ, காதல் உறவில் அடக்கப்படுகிறார்களோ, அப்பொழுது அவர்கள் வேறு வாழ்க்கையப் பற்றிக் கனவுகாண்கிறார்கள். அவர்கள், சொர்க்கத்தையும், மறுவாழ்க்கையைப் பற்றியும் நினைத்து ஏங்குகிறார்கள். அவர்கள் சொர்க்கத்தை, இங்கே இப்பொழுது உண்டாக்க நினைப்பது இல்லை.

நீங்கள் காதல் உணர்வில் இருக்கும்பொழுது, சொர்க்கம் ' இப்பொழுது இங்கே இருக்கிறது. பின்பு எதற்காக நீங்கள் பாதிரியாரிடம் செல்லவேண்டும்? அதற்கு என்ன அவசியம்? நீங்கள் இங்கேயே அதை அடைந்திருக்கிறீர்கள்! ஆனால், உங்களுடைய பாலுணர்வு சக்தி அடக்கப்பட்டால், நீங்கள், "இங்கே எதுவுமே இல்லை. இங்கே இருப்பது வெறும் பாலைவனம் தான். இங்கே அடைவதற்கு எதுவுமே இல்லை'' என்றுதான் நினைப்பீர்கள்.... பிறகு, நீங்கள் பாதிரியாரிடம் சென்று, சொர்க்கம் எங்கே என்றுதான்

கேட்பீர்கள் . அவரும் அழகிய சொர்க்கத்தை, ஓவியமாகத் தீட்டி உங்களிடம் கொடுப்பார்! எப்பொழுது

மக்கள் அடுத்த வாழ்க்கையைப் பற்றி அக்கரை கொள்கிறார்களோ, அப்பொழுதே இந்த வாழ்க்கையில் உள்ள ஆர்வம் குறைய ஆரம்பிக்கிறது.

தந்தரா. இந்த வாழ்க்கைதான், ஒரே வாழ்க்கை அடுத்த வாழ்க்கை என்பது இந்த வாழ்க்கையில்தான் மறைந்திருக்கிறது. இது. அந்த வாழ்க்கைக்கு எதிராக இல்லை. மேலும் , அதைவிட்டு அகன்று விடவும் இல்லை. இந்த வாழ்க்கையிலேதான் , அதுவும் இருக்கிறது. அதற்குள் செல்லுங்கள் . அது இதுதான் ! நீங்கள் இதில் ஆழமாகச் சென்றால் , நீங்கள் அடுத்த வாழ்க்கையும் காண்பீர்கள் . கடவுள் இந்த உலகத்தில் மறைந்திருக்கிறார் . என்று சொல்கிறது. இது மிகச் சிறந்த , ஈடு இணையற்ற, மிகவும் மேலான அறிவிப்பு. கடவுள் இந்த உலகத்தில் , இங்கே இப்பொழுது மறைந்திருக்கிறார். நீங்கள் அன்பில் மற்றும் காதலில், அவரை உணரலாம்.

மூன்றாவது ரகசியம் : மனிதனை எவ்வளவு பயத்தில் வைத்திருக்க முடியுமோ, அவ்வளவு பயத்திலேயே வைத்திருப்பது. அதற்கு நிச்சயமான வழி அவர்களின் காதலைத்தடுப்பதுதான் . ஏனெனில் , காதல் பயத்தை அழிக்கிறது. .. காதல் , பயத்தைக் காயடிக்கிறது! நீங்கள் காதலில் இருக்கும்பொழுது, இந்த முழு உலகத்தையே, எதிர்க்க ஆரம்பிப்பீர்கள்; ஏன், எதையும் செய்ய முடியும் என்று உணர்வீர்கள் . ஆனால் , நீங்கள் காதலில் இல்லாதபொழுது, சிறிய விஷயங்களுக்கெல்லாம் பயப்படுவீர்கள் மற்றும் உங்களுடைய பாதுகாப்பில் , மிகவும் அக்கரை கொள்வீர்கள் . மாறாக , நீங்கள் காதலில் முழுமையாக இருக்கும்பொழுது, நீங்கள் தீரச்செயலிலும் , புதிதாகக் கண்டுபிடித்தலிலும் மிகவும் ஆர்வமுள்ளவர்களாக இருப்பீர்கள்.

ஆகவே, மக்களைப் பயத்தில் வைத்திருக்க ஒரே வழி, அவர்களை காதலிக்கவிடாமல் தடுப்பதுதான் . அவர்கள் பயந்து நடுங்கிக் கொண்டு இருக்கும்

பொழுது, அவர்கள் எப்பொழுதும் மண்டியிட்டவாறுதான் இருப்பார்கள் - பாதிரியார்களின் முன்னிலையில் , அரசியல் வாதிகளின் முன்னிலையில் . மனித குலத்துக்கு எதிராகச் செயல்படுத்தப்படும் மிகப்பெரிய சதி இதுதான் . ஏன் , உங்களுக்கு எதிராகச் செயல்படும் பெரிய சதி இதுதான்! உங்களுடைய பாதிரியார்களும், உங்களுடைய அரசியல் வாதிகளும் , உங்களுடைய முதல் எதிரி என்று கருதுங்கள் . ஆனால் , அவர்கள் பொது நலத்தில் , மிகவும் அக்கரைக்கொண்டவர்கள் போல் நடிப்பார்கள் . அவர்கள் , " நாங்கள் இங்கே உங்களைக் காப்பாற்றவே இருக்கிறோம் . நீங்கள் மேன்மையான வாழ்க்கையை அடைய, நாங்கள் உதவி செய்கிறோம் . அந்தச் சூழ்நிலையை இங்கே உண்டாக்கித் தருகிறோம் . " என்று ஆசை வார்த்தைகள் கூறுவார்கள் . ஆனால் , அவர்கள் உங்கள் வாழ்க்கைய அழிப்பவர்கள் என்று தீர்மானமாக அறிந்து கொள்ளுங்கள்.

நான்காவது - மனிதனை எவ்வளவு தூரம், துன்பத்தில் வைத்திருக்க முடியுமோ, அவ்வளவுதூரம், துன்பத்தில் வைத்திருப்பது - ஏனென்றால் துன்பத்தில் உள்ள ஒருவன், குழப்பமிக்கவானகவும், தன்னம்பிக்கையற்ற வனாகவும் , தன்னையே குற்றம் காண்பவனாகவும் மற்றும் எப்பொழுதும்

தவறான செயல்களையே செய்வதாகவும் உணர்ந்துகொண்டு இருப்பான் . அவன் ஒருக்காலும் தைரியமுடையவனாக இருக்கமாட்டான் . அவனை, நீங்கள் அங்கும் இங்கும் அலைக்கழிக்கலாம் . பிறருடைய அதிகாரத்திற்கும் , உத்திரவிற்கும் , எப்பொழுதும் அடிபணிய அவன் தயாராராக இருப்பான். அவனை சுலபமாக ஒழுங்குபடுத்தலாம். ஏனென்றால், " நான் என்னுடைய தன்மையில் கோழையாகவே, துன்பத்தில் இருக்கிறேன் . வேறுயாராவது என்னுடைய வாழ்க்கையைச் சீர்படுத்த முடியும் என்று அவன் கருதுகிறான். அதாவது, தன்னை பலிகொடுக்க, அவன் தயாராக இருக்கிறான்.

ஐந்தாவது: எந்த அளவுக்கு முடியுமோ, அந்த அளவுக்கு,

மக்களைப் பிரித்தே வைப்பது. அவர்கள் கைகளைச் சேர்த்துக்கொண்டு, செல்வதை, ஏதோ காரணத்திற்காக , பாதிரியார்களும் , அரசியல்வாதிகளும் அனுமதிப்பதில்லை.

மக்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாக இருக்க வேண்டும். அவர்கள் நெருங்கி வர அனுமதிப்பதில்லை. அவர்கள் விலகி இருக்க , ஆயிரத்தொரு காரணங்கள் சொல்லப்படுகின்றன.

உதாரணமாக : இரண்டு ஆண்கள் , நெருக்கமாக கைகளைக் கோர்த்துக்கொண்டு வீதியில் சென்றால் , அவர்கள் குற்ற உணர்வு கொள்வார்கள், ஏனென்றால், உங்களை அவர்கள் ஓரினச் சேர்க்கை (HOMUSEXUAL) யைச் சேர்ந்தவர்கள் என்று கருதக் கூடும் . இரண்டு மனிதர்கள் ஒன்று சேர்ந்து மகிழ்ச்சியாக இருக்க முடியாது. அப்படி இருந்தால் , அவர்களை ஓரினச் சேர்க்கையாளர் என்று முத்திரை குத்திவிடுவார்கள் . ஆகவே, நீங்கள் பயந்துதான் வாழவேண்டும்.

நீங்கள் பாலுணர்வில் முதிர்ச்சியடைந்தபிறகு, அதாவது வாலிபனான பிறகு, உங்களுடைய தாயாரோ அல்லது தகப்பனாரோ, உங்களுடைய கழுத்தைப் பிடித்துக்கொண்டு முத்தம் கொடுப்பார்களா? கொடுக்கமாட்டார்கள் . ஏன் ? அங்கு பயம் உண்டாக்கப்படுகிறது. ஒரு வாலிபனும் , அவனுடைய தாயாரும் கட்டித்தழுவினால் , அவர்களுடைய பாலுணர்வு தூண்டப்படலாம் . அவர்கள் ஏதாவது உடலுறவுக் கற்பனையில் மூழ்கலாம் , அங்கும் பயம் உண்டாக்கப் படுகிறது. தகப்பனாரும் - மகளும் , முடியாது; சகோதரனும் , சகோதரியும் முடியாது; ஏன் , சகோதரர்களுக்கும்கூட அனுமதி இல்லை.

மக்களைத் தனித்தனியாகப் பிரித்து ஒரு பெட்டியில் அடைத்து. அவர்களைச் சுற்றி, பெரிய சுவர்களை எழுப்பிவிட்டார்கள் . ஒவ்வொருவரையும் பாகுபடுத்திவிட்டார்கள் . அவர்களுக்கிடையே, ஆயிரத்தொரு தடுப்புகள் இருக்கின்றன . ஆமாம் . இதைப் போல நீங்கள் கற்பிக்கப்பட்டு, 25, வருடங்களுக்குப் பின்பு, ஒரு நாள் , நீங்கள் உங்களுடைய மனைவியோடு காதல் உறவுகொள்ள அனுமதிக்கப்படுகிறீர்கள் . ஆனால் , அப்பொழுது

உங்களுக்குக் கற்பிக்கப்பட்டவைகள் அனைத்தும், மிக ஆழமாக உங்களுக்குள்ளே சென்று இருக்கிறது. இப்பொழுது திடீரென்று, என்ன செய்வது என்று உங்களுக்குத் தெரியவில்லை. எப்படி காதல் செய்வது? நீங்கள் அந்த மொழியைக் கற்றதில்லை!

இது எப்படி இருக்கிறது என்றால் , ஒருவருக்கு, 25 வருடங்காலமாக பேசுவதற்கு அனுமதிகிடைக்காமல் இருப்பதற்கு சமம்தான் உங்களை ஒரு வார்த்தைகூட பேசுவதற்கு அனுமதிக்காமல் , திடீரென்று ஒருநாள் , உங்களை ஒரு மேடையில் ஏற்றி, " ஒரு சிறப்பான பேச்சை பேசு" என்று உங்களை முழுமையாக அனுமதிப்பது போலத்தான் . அப்பொழுது என்ன நடக்கும் ? நீங்கள் அப்படியே மூர்ச்சையாகி கீழே விழுந்துவிடுவீர்கள். ஏன், இறக்கவும் நேரிடலாம்

இதுதான் அப்பொழுது நடக்கும் . 25 வருடகாலமாக , நீங்கள் காதலுக்கு எதிரான பயத்தில் இருந்துவிட்டு, திடீரென்று உங்களை சமூகச்சட்டப்பிரகாரம் அதற்கு அனுமதித்தால் உங்களுக்கு முழு உரிமையைக் கொடுத்து. '' இப்பொழுது, நீ இந்தப் பெண்ணைக் காதலிக்கலாம் . இவள் உன்னுடைய மனைவி, நீ அவளுடைய கணவன்; நீங்கள் இருவரும் இப்பொழுது காதலுணர்வு கொள்ளலாம் '' என்று சொல்லப்பட்டால், அந்த 25 வருடப் பயிற்சி என்ன ஆவது? அது இப்பொழுது பொய்யா அல்லது தவறா?

ஆமாம் . இப்பொழுது, நீங்கள் காதல் செய்யலாம் . நீங்கள் சந்தித்துக் கொள்ளலாம் . அது ஒன்றும் , உங்களுக்குள் எந்தப் பாதிப்பையும் , மற்றும் அது உங்களுக்கு எந்த உச்ச உணர்வையும் ஏற்படுத்தாது. அது கொடுக்கும் இன்பம் , மிகவும் மெல்லியதாகவே இருக்கும் . ஆகவேதான் , நீங்கள் ஒரு பெண்ணோடு உடலுறவு கொண்ட பின்பு, அலுப்படைகிறீர்கள் , ஏமாற்றமடைகிறீர்கள் . இது 99 சதம் மக்களிடம் ஏற்படுகிறது. இப்பொழுது அவர்கள் முன்பு இருந்ததைவிட , மேலும் ஏமாற்றமடைகிறார்கள் . அப்பொழுது அவர்கள் , '' என்ன ? இதில் ஒன்றுமே இல்லையே! இது உண்மையாக இருக்க முடியாது! ''

என்று அதிர்ச்சியோடு ஏமாற்றமடைகிறார்கள்.

முதலில் , உங்களால் காதல் செய்ய முடியாது என்று உங்களுடைய பாதிரிமார்களும் , அரசியல்வாதிகளும் , உங்களை நம்பச் செய்கிறார்கள் . பிறகு அவர்கள் உங்களிடம் வந்து, காதலில் எதுவும் இல்லை என்று பிரசங்கம் பண்ணுகிறார்கள் . நிச்சயமாக , அவர்கள் சொல்வதெல்லாம் சரியாகவும் , உங்களுடைய நேரடி அனுபவத்துடன் ஒத்துப் போவதாகவும் காணப்படும் . முதலில் அவர்கள் ஏமாற்றம் மற்றும் அலுப்புத்தரக் கூடிய அனுபவத்தை உங்கள் மனத்தில் பதிக்கிறார்கள் .... பிறகு பிரசங்கம் பண்ண ஆரம்பித்து விடுகிறார்கள்.

இது மிகவும் தந்திரமான செயல் . மனிதனிடம் இதுவரை செலுத்தாத , மிகப்பெரிய தந்திரம் இதுதான். இந்த ஐந்து வகைகளையும் , ஒரே செயலில் செய்ய முடியும் . அதுதான் பாலுணர்வை அடக்குதல் ! எப்படியாவது ஒருவரை ஒருவர் காதலிப்பதைத் தடுப்பதன் மூலம் , இந்த ஐந்து குறிக்கோள்களையும் அடைந்துவிடலாம் . அந்த அடக்குதலை, இப்படி ஒரு விஞ்ஞானப்பூர்வமான செயலாகச் செய்கிறார்கள் . இப்படிப் பாலுணர்வை அடக்குதலை, ஒரு கலையாகவே ஆக்கியிருக்கிறார்கள் ! - இதில் மிகுந்த நுட்பமான அணுகுமுறையும் , மிகச் சிறந்த தந்திரமும் அடங்கியிருக்கின்றன.

உண்மையிலேயே, இது சிறந்த கலைதான் . இந்த அடக்குதலை, நீங்கள் இப்பொழுது சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

முதலில் : அது நேரடியாக இல்லாமல் , மறைந்து இருக்கிறது. அது, தெளிவாகத் தெரிவதில்லை. ஏனென்றால் , அடக்குதல் என்பது மிகவும் தெளிவாக விளங்கிவிட்டால் , அது வேலை செய்யாது. அந்த அடக்குதல் ' அடங்கி, மிகவும் மறைந்து இருக்கவேண்டும் . அப்பொழுதுதான் , அது எப்படி வேலைசெய்கிறது என்று உங்களால் புரிந்துகொள்ள முடியாது. 'அடக்குதல் என்பது உணர்வற்ற நிலைக்குள்

தான் சாத்தியம். உணர்வு நிலைக்குள் சாத்தியமில்லை. எப்படி அதை, இவ்வளவு ஆழத்தில் , நேரடியாக இல்லாமல், மாற்று முறையில் ஆழப்புதைக்க முடியும்?

அந்தத் தந்திரம் முதலில் காதல் என்பது மிகவும் போற்றத்தகுந்தது என்று அவர்கள் உங்களுக்குப் போதிப்பார்கள் . அப்பொழுதுதான் , பாதிரியார்களும் , அரசியல்வாதிகளும் , அதற்கு எதிராகச் செயல்படமாட்டார்கள் என்று நீங்கள் நம்புவீர்கள் . இப்படி அவர்கள் , காதல் என்பது மிகச் சிறந்தது என்றும் , மிகவும் சரியானது என்றும் போதித்துவிட்டு, பிறகு மெல்ல , காதல் ஏற்படாத வகையில் , ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துவார்கள் . அதற்கு எந்தச் சந்தர்ப்பத்தையும் கொடுக்கமாட்டார்கள் . பிறகு, உணவு மிகச் சிறந்தது என்றும் , உணவு உண்பது மிகவும் மகிழ்ச்சியானது என்றும் போதிப்பார்கள் . "உங்களால் எவ்வளவு அதிகமாகச் சாப்பிட முடியுமோ, அவ்வளவு அதிகமாகச் சாப்பிடவும் " என்று போதிப்பார்கள் . ஆனால் , நன்றாகச் சாப்பிடுவதற்கு எதுவும் கொடுக்கமாட்டார்கள் . அவர்கள் பசியோடு இருக்கும்பொழுது, காதலைப்பற்றிப் போதிப்பார்கள்.

ஆகவே, எல்லாப் பாதிரியார்களும், அன்பைப்பற்றியும், காதலைப்பற்றியும்தான் முதலில் பேசுவார்கள் . அதை அவ்வளவு பிரமாதமாகப் புகழ்வார்கள் - அதாவது கடவுளுக்கு அடுத்ததாக - ஆனால் , அது நிகழ்வதற்கான சூழ்நிலையை மறுப்பார்கள். அதாவது, நேரடியாக அதை மறுப்பார்கள் , மறை முகமாக அதனுடைய வேர்களை வெட்டிவிடுவார்கள் . இதுதான் அவர்களுடைய திறமையான திட்டங்கள்.

எப்படி, இப்படிப்பட்ட வேலையைச் செய்துகொண்டு வருகிறோம் என்று எந்த பாதிரியாரும் வெளிப்படையாகச் சொல்வது இல்லை. இது, எப்படி இருக்கிறது என்றால் , ஒரு மரத்திடம் சென்று, " நீ நன்றாக செழிப்பாக வளர்ந்து, மகிழ்ச்சியாக இரு' ' என்று நீங்கள் சொல்லிக்கொண்டே, அதனுடைய வேர்களை வெட்டுவது போல . பிறகு, அந்த மரம் செழித்து வளராதபொழுது, நீங்கள் அந்த மரத்திடம் கோபம் கொண்டு, "கவனி! நீ, நாங்கள் சொல்வதைக் கேட்பதில்லை. எங்களைப் பின்பற்றுவது இல்லை. " நீ நன்றாக செழித்து வளர்ந்து, ஆனந்தமாக இரு என்று

சொல்கிறோம் , ஆனால் "... இதற்கிடையில் , அதனுடைய மீதி வேர்களையும் மெல்ல வெட்ட ஆரம்பிக்குவிடுகிறார்கள்!

உயர்நிலைக் காட்டும் '' தந்த்ரா' ' அன்பு, காதல் , முற்றிலும் மறுக்கப்படுகிறது. ஆனால் , இந்த உலகத்திலேயே, மிகவும் மதிப்பு வாய்ந்தது அவைகள் தான் - அது ஒருபோதும் மறுக்கப்படக்கூடாது. ஒரு மனிதனால் , 5 பேர்களிடம் அல்லது 50 பேர்களிடம் அல்லது 500 பேர்களிடம் அன்பு செலுத்த முடிந்தால் , அவனை அப்படியே அனுமதிக்கவேண்டும் . அன்பு என்பது கிடைத்தற்கரிய ஒன்று. அதை எவ்வளவு பரவலாக்க முடியுமோ, அவ்வளவு பரவலாக்குங்கள்.

ஆனால், நுணக்கமான தந்திரங்களை, இதற்கு மாறாக செய்துகொண்டு வருகிறார்கள். உங்களை, ஒரு மிகக் குறுகிய மூலைக்கு வற்புறுத்தித் தள்ளுகிறார்கள் . அப்பொழுது நீங்கள் உங்களுடைய கணவனிடமும் மனைவியிடமும் , மற்றும் சிலவற்றின் மேல் தான் அன்பு செலுத்த முடியும் அவர்களுடைய நிபந்தனைகள் அப்படி. அதாவது, உங்கள் கணவனோடு மனைவியோடு இருக்கும்போதுதான் , நீங்கள் மூச்சுவிடவேண்டும் என்று சட்டம் இயற்றினால் எப்படியோ, அப்படித்தான் இதுவும் ! பிறகு, எப்படி உங்களால் எப்பொழுதும் இயல்பாக மூச்சுவிட முடியும்? நீங்கள் இறக்கத்தான் வேண்டும் . நீங்கள் உங்கள் கணவனுடனோ, மனைவியுடனோ இல்லாவிட்டால் மூச்சு விடுவதற்கான சாத்தியமே இல்லை. நீங்கள் காதலிக்கும் போது, அன்பை விரிவுப்படுத்தும்போது 24 மணி நேரமும் நீங்கள் சுவாசிக்கமுடியும்.

அடுத்த தந்திரம் என்னவென்றால், அவர்கள், "மேலான அன்பைப் பற்றிப் பேசுவார்கள் . ஆனால் கீழான அன்பை அழிப்பார்கள் . கீழான அன்பு, அழிக்கப்பட வேண்டிய ஒன்று என்று போதிப்பார்கள் . அதாவது உடலைச் சார்ந்த அன்பு தவறானது என்றும், உள்ளத்து அன்புதான் சரியானது என்றும் கூறுவார்கள். நீங்கள், உடலில்லாமல் , வெறும் உயிர்த்தன்மையை மட்டும் பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் அஸ்திவாரம் இல்லாமல், ஒரு வீட்டைப் பார்த்திருக்கிறீர்களா? கீழான

நிலைதான், மேலானநிலைக்கு ஆதாரம்.

இந்த உடல் தான், அதற்குத் தங்குமிடம். இந்த உடலில் தான், உயிர் வாழ்ந்து கொண்டு இருக்கிறது, உடலுடன் வாழ்ந்து கொண்டு இருக்கிறது. ஆத்மாவை, உயிரை உள் அடக்கிக் கொண்டு இருப்பது இந்த உடல்தான் இரண்டும் எப்பொழுதும் சேர்ந்தேதான் இருக்கவேண்டும் . அந்த கீழான நிலையும் , மேலானநிலையும் , ஒரு ஏணியின் கீழ்படியைப் போலவும் , மேல் படியைப் போலவும் , ஒன்று சேர்ந்துதான் இருக்க வேண்டும் . அந்த கீழானபடி, தவறானது அல்ல . ஆனால் , அந்தக் கீழான படியில் மாத்திரம் நின்றுவிட்டால் , நீங்கள் மேலே செல்வது தடைப்படும் . ஆகவே, நகர்ந்து கொண்டும் , மேலே சென்றுகொண்டும் இருங்கள். .

பாலுணர்வு தவறானது அல்ல . நீங்கள் அதன் கீழானநிலையிலேயே நின்றுவிட்டால் தான் , தவறு. மேலே செல்லுங்கள் . நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . மேலான நிலை, கீழான நிலைக்கு எதிரானது இல்லை. மேலான நிலை இருப்பதற்குக் காரணம் அந்த கீழான நிலைதான்.

ஆகவே, இந்த தந்திரமான ஏற்பாடுகள் , பல பிரச்சினைகளை உண்டாக்கிவிட்டது. ஒவ்வொரு சமயமும் , நீங்கள் காதல் செய்யும் பொழுது, உங்களிடம் ஒரு குற்ற உணர்வு ஏற்படுகிறது. நீங்கள் குற்ற உணர்வோடு, காதலில் முழுமையாக ஈடுபட முடியாது. அந்தக் குற்ற உணர்வு, அதைத் தடுக்கும் , அதைப்பிடித்து பின்னுக்கு இழுக்கும் . நீங்கள் உங்களுடைய கணவனோடு மனைவியோடு காதல் செய்யும் பொழுதுகூட, நீங்கள் குற்ற உணர்வில் தான் இருப்பீர்கள் . நீங்கள் அதை பாபம் என்று கருதுகிறீர்கள் நீங்கள் , ஏதோ தவறான காரியத்தைச் செய்வதுபோல உணர்கிறீர்கள் . கடவுளைச் சார்ந்தவர்கள் இப்படிச் செய்வதில்லை என்று எண்ணுகிறீர்கள். நீங்கள் பாபிகள். ஆகவே, உங்களை முழுமையாக அனுமதித்தாலும் , நீங்கள் மேலோட்டமாகவே, உங்களுடைய மனைவியை,

கணவனை காதலிக்க முடியும் . உங்களுடைய குற்ற உணர்வுக்குப் பின்னால் , அந்த பாதிரியார்களும் , குருமார்களும் தான் இருக்கிறார்கள் அவர்கள் , உங்களுடைய கயிற்றை இழுத்துக்கொண்டுதான் இருக்கிறார்கள்.

அடுத்த பிரச்சினை என்னவென்றால் : நீங்கள் குற்ற உணர்வில் இருக்கும் பொழுது, நடிக்க ஆரம்பித்துவிடுகிறீர்கள் . பெற்றோர்கள் , தாங்கள் காதல் செய்வதை, தங்களுடைய பிள்ளைகள் பார்க்க அனுமதிப்பதில்லை. அவர்கள் , குழந்தைகளுக்கு முன்னால் , நடிக்கிறார்கள் அவர்களிடம் எந்த காதல் உறவும் இல்லை என்று காட்டிக்கொள்கிறார்கள் . ஆனால் , சிறிது காலத்துக்குப் பின்பு, அவர்களுடைய நடிப்பை, அந்தக் குழந்தைகள் புரிந்து கொண்டு விடுவார்கள். அவர்கள், தங்கள் பெற்றோரிடம் வைத்த நம்பிக்கையை இழந்து விடுவார்கள் . தாங்கள் ஏமாற்றப்பட்டதை, அவர்கள் உணர்வார்கள் . ஆனால் , பின்பு பெற்றோர்கள் , தங்கள் பிள்ளைகள் , தங்களை மதிப்பதில்லை என்று குறை கூறுவார்கள் . அதற்குக் காரணம் நீங்கள்தான் . எப்படி அவர்கள் ஏமாற்றிக்கொண்டு வருகிறீர்கள் . அவர்களிடம் நேர்மையாக நடப்பதில்லை; மிகவும் அற்பத்தனமாக நடக்கிறீர்கள் . நீங்கள் அவர்களிடம் , '' காதலில் ஈடுபடாதீர்கள் , ஜாக்கிரதை' ' என்று அறிவுரை கூறுகிறீர்கள் . ஆனால் , நீங்கள் எப்பொழுதும் காதல் செய்து கொண்டுதான் இருக்கிறீர்கள் ! அவர்கள் வளர்ந்தபிறகு, தங்களுடைய பெற்றோர்கள் , தங்களிடம் உண்மையாக நடந்துகொள்ளவில்லை என்று தெரிந்து, வருத்தப்படுகிறார்கள் . பின்பு, எப்படி அவர்கள் உங்களை மதிப்பார்கள்?

ஆகவே, முதலில் குற்ற உணர்வு, நடிப்பை ஏற்படுத்துகிறது. பிறகு நடிப்பு, மக்களிடம் பிளவை ஏற்படுத்துகிறது! உங்களுடைய குழந்தைகளே உங்களுடைய இயல்புக்கு ஏதுவாக நடக்கமாட்டார்கள். உங்களுக்கும் , அவர்களுக்கும் இடையில் , ஒரு திரை அல்லது சுவர் நின்றுகொண்டு இருக்கிறது. இப்படி எல்லோரும் நடித்துக்கொண்டு இருக்கும் பொழுது, ஒருநாள் , நீங்களும் நடிக்க ஆரம்பித்துவிடுவீர்கள் . இதுதான் நாகரீகம் என்று பெருமையாகவும் பேச ஆரம்பித்துவிடு வீர்கள் . எல்லோரும் நடித்துக்

கொண்டு, பொய்யாக இயங்கும்பொழுது, நீங்கள் எப்படி அவர்களோடு உண்மையாகப் பழக முடியும்?

எப்படி அவர்களோடு உண்மையான நட்போடு இருக்க முடியும் ? நீங்கள் உண்மையைக் கண்டு வெறுப்பீர்கள் . அது உங்களுக்குக் கசப்பாகவவேத் தோன்றும் நீங்கள் , அதை, சாத்தானின் கடவுள் என்றுதான் எண்ணுவீர்கள்.

ஒவ்வொருவரும் , பொய்முகத்துடன் தான் காணப்படுகிறார்கள் . யாரும் , தன்னுடைய உண்மையான முகத்தை வெளியே காட்டுவதில்லை. நீங்கள் குற்ற உணர்வில் இருக்கிறீர்கள் . நீங்கள் நடிப்பது உங்களுக்கே மிக நன்றாகத் தெரியும் ! அவர்களும் , உங்களைப் போலவே, குற்ற உணர்வில் தான் இருக்கிறார்கள் ! ஒவ்வொருவரும் , நாற்றம் எடுத்த புண்ணோடுதான் வாழ்கிறார்கள் இப்பொழுது, இப்படிப்பட்டவர்களை, அடிமையாக்குவது என்பது சுலபம் அதாவது அவர்களை குமாஸ்தாவாகவும் , புகைவண்டி நிலைய அதிகாரியாகவும் , பள்ளித் தலைமை ஆசிரியராகவும் , மாவட்ட மேலாளராகவும் , மந்திரியாகவும் , கவர்னராகவும் ஜனாதிபதியாகவும் ஆக்க முடியும் . இப்படி இவர்களை சமூகத்துக்கு ஏற்றவாறு, மாற்ற முடியும். ஆனால், இவர்களெல்லாம், சமூகத்தின் அடிமைகள் தான் ! இதனால் , ஒருவன் தன்னை உண்மையாக சுதந்திரமாக அறிந்துகொள்ளும் வாய்ப்பை இழக்கிறான் . இப்படி, அவர்களை வேறுடன் பிடுங்கி, வேறுபாதையில் செலுத்துகிறீர்கள் . அந்த வேர் என்பது பாலுணர்வு சக்திதான் ! ஆகவே, ' மூலதார் ' என்பது இந்த பாலுணர்வு சக்தியின் வேர்தான். இவைகளை ஆழ்ந்து புரிந்துகொள்ளுங்கள்.

ஆனால் , நீங்கள் இந்த சாதாரண மக்களுக்கு விஷமிட்டால் , நீங்களும் அதனால் பாதிக்கப்படுகிறீர்கள் . நீங்கள் , இந்த சாதாரண மக்களின் சுவாசிக்கும் காற்றில் நஞ்சைக்கலந்தால் ,

அதே காற்றைத்தான், அரசனும் சுவாசிக்க வேண்டும். அவன் , தனியாக எந்தக் காற்றையும் சுவாசிக்க முடியாது.

நீங்கள், மேலே உள்ள பிரக்ஞையான எண்ணங்களை, மிக ஆழமாக, உங்களுடைய பிரக்ஞையற்ற நிலைக்கு செலுத்தினால் , அது அடி ஆழத்தில் மறைந்தேதான் இருக்கும் . அது ஒருக்காலும் வெளியே செல்லாது. அந்த பாலுணர்வை அழிக்க முடியாது - அதிர்ஷ்டவசமாக ! அதற்கு விஷமிடலாம் . ஆனால் , அதை அழிக்க முடியாது. ஏனெனில் , உங்களுடைய வாழ்வின் ஆதாரமான சக்தி இதுதான். இதை, நீங்கள் மாசுபடுத்தலாம் அல்லது சுத்தப்படுத்தலாம்.

தந்த்ராவின் இயக்கம் இதுதான். அதாவது, பாலுணர்வு சக்தியை சிறந்த வகையில் சுத்தப்படுத்தும் முறைகளைக் கொண்டது. உங்களுடைய வாழ்க்கைப் பிரச்சினைகளை, உங்களுடைய பாலுணர்வு பிரச்சினையாக அடிப்படையில் குறைக்க முடியும் . நீங்கள் அந்தப் பிரச்சினைகளை, தீர்த்துக்கொண்டே செல்லாம் . ஆனால் , அவைகளை ஒருக்காலும் உங்களால் முழுமையாகத் தீர்த்து வைக்க முடியாது. ஏனென்றால் , அது உண்மையான பிரச்சினையல்ல . நீங்கள் உங்களுடைய பாலுணர்வைத் தீர்த்துக்கொண்டால் , எல்லாப் பிரச்சினைகளும் , தானே மறைந்துவிடும் . ஏனென்றால் , நீங்கள் அடிப்படையான பிரச்சினையைத் தீர்த்துவிட்டீர்கள். உ

ஆனால் , நீங்கள் அதை நேரடியாகப் பார்க்கப் பயப்படுகிறீர்கள் . அது மிகவும் எளிதான விஷயம்தான் . உங்களுக்குள்ளே உள்ள நெறிப்படுத்துதலை (CONDITONING) ஒதுக்கி வைத்தாலே போதும். எல்லாம் சுலபமாக முடிந்துவிடும். இந்தக் கதையைப் போல :

ஒரு விரக்தியடைந்த கன்னிப்பெண் , காவல் நிலையத்துக்குச் சென்று, தன்னுடைய படுக்கையின் கீழ் ஒரு ஆள் எப்பொழுதும் இருக்கிறான் என்று திரும்பத் திரும்பக் கூறி, புகார் கொடுத்தாள் . கடைசியாக , அவளை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றார்கள் . அங்கே

உள்ள டாக்டரிடமும் , அப்படியே திரும்பத் திரும்பச் சொன்னாள் . அவளுக்கு, புதிதாகக் கண்டுபிடித்த மருந்து ஒன்றை கொடுத்தார்கள் . பிறகு, அவள் திடீரென்று, தான் குணமடைந்துவிட்டதாகக் கூறினாள்.

" மிஸ் , ருஷ்டிபேன் (MISS RUSTIFAN) நீங்கள் உண்மையாகவே சொல்கிறீர்களா? நீங்கள் அந்த ஆளை, உங்களுடைய படுக்கையின் கீழே இப்பொழுது பார்க்கவில்லையா?"

இல்லை. ஆனால் இப்பொழுது இரண்டு ஆட்கள் தென்படுகிறார்கள்!" என்றாள்.

அப்பொழுது ஒரு டாக்டர் , மற்றவரிடம் , இந்த வியாதிக்குப் பெயர் விபரீதமான கன்னித்தன்மை (MALIGNANT VIRGINITY) என்று பெயர். இதற்கு ஒரே ஒரு ஊசிமருந்துதான் இருக்கிறது. ஏன் , இவளையும், ஆஸ்பத்திரியில் உள்ள தச்சுவேலை செய்பவனையும், அவளுடைய அறையில் தனியாக விடக்கூடாது என்று கூடிப் பேசி, ' பிக்டேன் (BIG DAN) என்ற தச்சுவேலை செய்பவனை அழைத்து வரச்செய்து, அவளிடம், அந்த வியாதியைப் பற்றி விளக்கினார்கள் . அவளும் , அவனும் , அவளுடைய அறையில் 1 மணி நேரம் தனியாக இருக்க வேண்டும் என்று சொன்னார்கள் . அதற்கு அவன், "அது ஒன்றும் அவ்வளவு நேரமாகாது" என்று சொல்லி, ஒத்துக்கொண்டான் . அவர்கள் இருவரையும் அவளுடைய படுக்கை அறையில் தள்ளி, தாழ்ப்பாள் போட்டுவிட்டு, என்ன நடக்கிறது என்று பார்க்க வெளியில் ஆவலாகக் கூடியிருந்தார்கள் . அப்பொழுது. உள்ளே இருந்து, இல்லை. முடியாது. நிறுத்து, டேன் . என் தாயார் என்னை ஒருக்காலும் மன்னிக்கமாட்டாள் " என்று சப்தம் கேட்டது.

" கத்துவதை முதலில் நிறுத்து. இதை முன்பே செய்திருக்க வேண்டும் !" " இப்படித்தான் மூர்க்கத்தனமாகச் செய்வதா, நீ ஒரு காட்டுமிராண்டி!" இதை உன்னுடைய கணவன் செய்ய வேண்டும் ; அப்படி ஒருவன் இருந்தால்."

வெளியே இருந்தவர்கள் , தங்களுடைய ஆவலை அடக்க முடியாமல், கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே சென்றார்கள்.

அவளை நான் அப்பொழுது அந்த தச்சு வேலைக்காரன், '' நான் குணப்படுத்திவிட்டேன் '' என்றான் . அவளும் அப்படியே , '' ஆமாம் . இப்பொழுது குணமடைந்துவிட்டேன்'' என்றாள்.

அப்பொழுது, அவன் அந்தக் கட்டிலின் கால்களைக் காட்டினான் . அதன் நான்கு கால்களும் அகற்றப்பட்டிருந்தன.

சிலசமயம் , குணப்படுத்துதல் மிகவும் எளிதானது. நீங்கள ஆயிரத்தொரு வழிமுறைகளைக் கையாளலாம் . ஆனால் , அந்த தச்சுத் தொழிலாளி நல்ல வேலை செய்தான் !... அந்தக் கட்டிலின் நான்கு கால்களை அகற்றிவிட்டான் வேலை முடிந்து விட்டது. இப்பொழுது கட்டிலுக்கு அடியில் யார் மறைந்துகொள்வார்கள்?

ஆகவே, கிட்டத்தட்ட உங்களுடைய சகல பிரச்சினைக னகளுக்கும் , பாலுணர்வு சக்திதான் . ஆதாரம் . அந்த பிரச்சினைகளை அவ்வளவு சுலபமாக தீர்க்க முடியாது. ஏனெனில் பல ஆயிரக்கணக்கான வருடங்களாக , அதில் நஞ்சு கலக்கப்பட்டுள்ளது. அதற்கு திறமையான, நுட்பமான சுத்தப்படுத்தும் முறை தேவையாக உள்ளது.

தந்த்ரா அதைச் சுத்தப்படுத்த முடியும் . அதனால் மட்டுமே, அந்தப் பாலுணர்வு சக்தியை சுத்தப்படுத்த முடியும் . இதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முயலுங்கள் . இது ஒரு மிகவும் புரட்சிகரமான அறிக்கை. இது எல்லாப் பாதிரியார்களுக்கும் , அரசியல்வாதிகளுக்கும் எதிரானது. மற்றும் இந்த பூமியில் உள்ள மகிழ்ச்சிகள் அனைத்திற்கும் விஷமிட்டு, மனிதர்களை, விலங்கினும் கேடாக அடிமைப்படுத்திய அந்தக் கொடுமைக்காரர்களுக்கும் எதிரானது. எ

உங்களுடைய சுதந்திரத்தை மீண்டும் அடையுங்கள் . நீங்கள் சுதந்திரமாகக் காதலிக்க விரும்புங்கள் . எப்படியாவது அந்த இழந்த சுதந்திரத்தை மீண்டும் அடையுங்கள் . அப்பொழுதுான் , உங்களுடைய

வாழ்க்கையை, பிரச்சினையின்றி, மகிழ்ச்சியாகக் கொண்டாடு வீர்கள். இது ஒரு புரியாத புதிர்தான், இது ஒரு பேரின்பம்தான் , இது ஒரு ஆசீர்வாதம் தான் . நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள். ய

5. வெறுமையிலிருந்து, வெறுமைக்கு (FROM NOTHING TO NOTHING)

ஞாபகமின்மை என்பதே மரபு சொல்லும் உண்மை மனம் மனமற்றதாவதே உண்மை இதுதான் நிறைவு. இதுதான் உயர்வான பொருள் நண்பர்களே.

இந்த உயர்வான பொருளை அறிந்துகொள்வீர்,

ஞாபகமின்மையில் மனமானது உள்ளிழுத்துக்கொள்ளப்படும் . இது உணர்ச்சிகளால் முழுமையானதும் தூய்மையானதும் ஆகும் . உலகின் நல்லதாலோ கெட்டதாலோ இது மாசுபடுத்தப்பட மாட்டாது. சேற்றிலிருந்து வளரும் தாமரை சேற்றால் பாதிக்கப்படாமல் இருப்பது போல.

இருந்தபோதிலும் சில விஷயங்களை நிச்சயமாக கண்கட்டு வித்தையை அணுகுவதுபோல் பார்க்க வேண்டும். இலக்கு ஏதும் இல்லாமல் சம்சாராவையோ நிர்வாணாவையோ நீ ஒத்துக்கொள்ளவோ மறுக்கவோ செய்யலாம் மனத்தின் இருப்பைப் போக்கி - மனதில் உறுதியுடன் . நீ நீயாக இருப்பாய் . எண்ணங்களுக்கு அப்பால் . தன்னைப் பற்றிய பிணைப்புக்கு அப்பால்

பார்வைக்குத் தெரியும் இந்த உலகம் அதன் ஆரம்பப்பிரகாசத்தைக் காட்டவே இல்லை முறையற்று அது முறைகளை உடைத்துவிட்டது. அப்படித்தான் அது தொடரும் .. விசேட தியானம் . அதுதான் மனமற்றது; அழுக்கற்றது; அதுதான் ஆழ்ந்த தியானம் - அதுதான் மனம் அற்றது.

உயர்நிலைக் காட்டும் ' தந்த்ரா' இதைப்போன்ற ஒரு இளங்காலை காலை வெயிலில் , மரங்களெல்லாம் நாட்டியம் ஆடுகின்றன . பறவைகளெல்லாம் பாட்டுப் பாடிக் கொண்டு இருக்கின்றன . ' உதலாக்கா (UDALLAKA) என்ற ஒரு சிறந்த ஞானியின் மகனான ' சுவத் கேது (SWETKETU) நீண்ட நாட்களுக்குப் பிறகு,

திரும்பி வருவதை யொட்டி, அந்த மகிழ்ச்சியைக் கொண்டாட, அவரது பெரிய பங்களா, மிகவும் அழகாக, அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவன் , ஒரு சிறந்த குருவிடம், குருகுலவாசம் முடிந்து, வீட்டுக்குத் திரும்பி வந்துகொண்டு இருந்தான்.

அவனை, வாசலிலே, உதலாக்கா மிகவும் மகிழ்ச்சியோடு வரவேற்றார் . அப்பொழுது, அவனிடம் ஏதோ ஒன்று தொலைந்து இருப்பதைக் கண்டார் ஆமாம் , ஏதோ ஒன்று அவனிடமிருந்து அகன்றிருக்கிறது. மாறாக, அடையக் கூடாத ஆழமான தற்பெருமையும் , அகங்காரமும் அவன் அடைந்திருப்பதையும், அவர் உணர்ந்தார். அவருடைய விருப்பங்களில் , மிகவும் கடைசியாக இருப்பது, ஏன் விரும்பாமலே இருப்பது இந்த குணங்களைத்தான்

அந்த காலத்தில், கல்வி முறை என்பது அடிப்படையில், அகங்காரத்தை முற்றிலும் ஒழிப்பதற்காகவே அமைந்திருந்தது. ஒரு மாணவனை, காட்டிலுள்ள பல்கலைக்கழகத்துக்கு (FOREST UNIVERSITY) அனுப்பி ஒரு சிறந்த குருவோடு தங்கி, அவன் தன்னையே இந்தப் பேரியக்க உயிர்த்தன்மையோடு, நண்பனாக்கிக்கொண்டு, அதனுடைய தெய்வீக உணர்வை ருசிக்க வேண்டும் என்பதற்காக அனுப்பினார்கள் சுவத்கேது, மிகவும் நன்றாகப் படித்துவிட்டு, வீடு திரும்பிக்கொண்டிருக்கிறான் என்று அந்த நகரத்தில் பேசப்பட்டுக் கொண்டிருந்தது. அவன் சிறந்த பதக்கங்களையெல்லாம் பெற்றுக்கொண்டு வருவதாகவும் , வதந்தி பரவிக்கொண்டு இருந்தது. அவன் இப்பொழுது, தன் வீட்டுக்கு வந்துவிட்டான் . ஆனால் , உதலாக்கா மகிழ்ச்சியற்று காணப்பட்டார்.

ஆமாம் , அவன் , மிகச் சிறந்த பரிசோடுதான் வந்திருக்கிறான் ; சிறப்பாகப் படித்திருக்கிறான் , உயர்ந்த படிப்பை முடித்திருக்கிறான் . அவனுடைய முகத்தில் , அந்தக்களை தெரிந்தது. ஆனால் , அவனிடமிருந்து, ஏதோ ஒன்று, மிகவும் போற்றக்கூடிய ஒன்று, தவறவிடப்பட்டதை, அவனுடைய தகப்பனார் உணர்ந்து, அவர் கண்களில் நீர் நிரம்பியது.

சுவத்கேதுவுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் , தன் தகப்பனாரிடம் , என்னிடம் என்ன தவறு இருக்கிறது?

எதற்காக நீங்கள் துக்கமாக இருக்கிறீர்கள் ?'' என்று கேட்டான்.

அதற்கு உதலாக்கா, '' உன்னிடம் ஒரு கேள்வியைக் கேட்க ஆசைப்படுகிறேன் . நீ அதை'க் கற்றுக்கொண்டுதான் வந்திருக்கிறாயா? அதைக் கற்றுக்கொண்டால் , எல்லாவற்றையும் கற்றுக்கொண்டதாக அர்த்தம் . ஆனால் , அதை மறந்துவிட்டு வந்திருந்தால் , அதைத் தவறவிட்டு வந்திருந்தால் , நீ கற்று அறிந்தவைகள் எல்லாம் வீண்தான்; அர்த்தமற்றதுதான் - அது ஒரு சுமைதான். அதனால் உனக்கு எந்த உதவியும் கிடைக்காது. மாறாக அது துன்பத்தையே கொடுக்கும் '' என்று வருத்தமாகக் கேட்டார்.

அதற்கு சுவத் கேது. '' நான் , கற்கக் கூடிய அனைத்தையும் கற்றுவந்திருக்கிறேன் . நான் , அங்கு சரித்திரம் , தத்துவம் , கணக்கு, வேதம் , கலைகள் , பலமொழிகள் போன்ற அனைத்தையும் கற்று வந்திருக்கிறேன்.''

என்றான் . அவனுடைய தகப்பானாரிடம் காணப்பட்ட , அந்த வருத்தம் மறையவே இல்லை. அவர் மீண்டும் அவனிடம் , " நீ எதைக் கற்றால் , எல்லாவற்றையும் கற்றதாகிவிடுமோ, அதைக் கற்றுக்கொண்டு வந்திருக்கிறாயா?" என்று கேட்டார்.

அவன் , சற்று கோபம் கொண்டு. ' என்னுடைய குரு. என்ன சொல்லிக்கொடுத்தாரோ, அவற்றையெல்லாம் தெளிவாகக் கற்று வந்திருக்கிறேன் . புத்தகங்களிலெல்லாம் , என்ன சொல்லப்பட்டிருக்கிறதோ, அவைகளையெல்லாம் அறிந்து வந்திருக்கிறேன் . நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் என்பது, எனக்குப் புரியவில்லை. அந்த ' ஒன்று. ....? கொஞ்சம் புரியும்படியாகச் சொல்லுங்கள். அந்த 'ஒன்று' என்றால் என்ன?'' என்று கேட்டான். .

ஆமாம், தான் எல்லாவற்றையும் கற்று விட்டோம் என்ற செருக்கு , அவனிடம் இருந்தது. ஒரு சாதாரண மாணவன், எப்படி நினைத்துக்கொண்டு இருப்பானோ,

அப்படியேதான் , இவனும் நினைத்துக்கொண்டு இருக்கிறான். அதாவது தன்தகப்பனாருக்கு அவ்வளவு கல்வி அறிவு போதாது என்று! ஆனால் , அவர் தன்னையே, மிகவும் தெரிந்தவர் போல் காட்டிக்கொள்கிறார் . அவர் ஏதோ புரியாத ஒன்றைப்பற்றி பேசுகிறார் . அனாவசியாமாக துக்கப்பட்டுக்கொண்டு இருக்கிறார் என்றுதான் அவன் நினைத்தான்.

அவனுடைய தகப்பனார் , '' அதோ, அங்கே இருக்கும் மரத்தைப் பார்த்தாயா? அங்கே சென்று, அதனுடைய விதை ஒன்றைக் கொண்டுவா? ' அதைப் போலவே, அவன் கொண்டு வந்து கொடுக்க, அவர், அந்த மரம் எதிலிருந்து வந்தது " என்று அவனிடம் கேட்டார்.

மகன், "இந்த சிறிய விதையிலிருந்துதான்' என்றான்.

தந்தை அவ்வளவு பெரிய மரம் . அந்த சிறிய விதையிலிருந்தா?. என்றார் அந்த விதையை உடைத்து. அவ்வளவு பெரிய மரம், அதில் எங்கே இருந்து வந்தது என்பதைப் பார்'' என்றார்.

அப்படியே, அந்த விதை உடைக்கப்பட்டது. அதற்குள்ளே எந்த மரமும் இல்லை. ஏன் , அதற்குள் எதுவுமே இல்லை, வெறுமைதான் (EMPTINESS)

எதிலிருந்து அந்தப் பெரிய மரம் வந்ததோ அந்த வெறுமையை உன்னால் பார்க்க முடிகிறதா? என்றார் தந்தை

மகன் , ' அதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், பார்க்க முடியவில்லை. எப்படி வெறுமையைப் பார்க்க முடியும்?''

தந்தை, " அந்த அதைப்பற்றித்தான் , நான் பேசிக்கொண்டு இருக்கிறேன் . அந்த வெறுமையிலிருந்து, கண்ணுக்குப் புலப்படாத ஒன்றிலிருந்துதான் எல்லாமே வந்திருக்கின்றன . அந்தப் புதுமையைப்படைக்கும் , புரிந்துகொள்ள முடியாத வெறுமையிலிருந்துதான் , எல்லாம் வந்திருக்கின்றன . ஒருநாள் , எல்லாம் மறைந்து, அங்கேயே செல்லவேண் டியதுதான். ஆகவே, நீ

திரும்பிச்சென்று, சன்னியாவைப் பற்றி கற்றுக்கொண்டுவா. திரும்பிச் சென்று அந்த வெறுமையை கற்றுக் கொண்டு வா. ஏனென்றால் , எல்லாற்றையும் அதிலிருந்துதான் ஒருவன் கற்க வேண்டும் . எது ஆரம்பமோ, அதுவே முடிவும் ஆகும் . ஆகவே, திரும்பிச் சென்று, அந்த ஆதார நிலையைப் பற்றி அறிந்துகொண்டுவா, கற்றுக்கொண்டு வா. நீ இப்பொழுது கற்றவை அனைத்தும் , வெறும் குப்பைகள் தான் ! இவைகளையெல்லாம் மறந்துவிடு இவைகளெல்லாம், உன்னுடைய ஞாபகத்தின் விளைவுகள் . இது உன்னுடைய மனத்தின் வேலைகள் . மனமற்ற நிலையைக் கற்கவும் மறதியைக் கற்கவும் நீ இப்பொழுது கற்றுக்கொண்டு வந்தவை அனைத்தும் இந்த உலக சம்மந்தப்பட்ட, வெறும் விஷயஞானம்தான். ' அறிதலை (KNOWING) கற்றுவா; பிரக்ஞைத் தன்மையைக் கற்றுவா ' புரிந்துகொள்ளுதலை கற்றுவா. நீ கற்றவை அனைத்தும் , இந்த வெளி உலகத்தைப் பற்றித்தான் . நீ , உன்னுடைய உள்மையத்தைப் பற்றி எதுவுமே கற்றுக்கொண்டு வரவில்லை. '' என்றார்.

இந்த உலகம் என்பது, ஒரு பெரிய மரம் போலத்தான். தந்த்ராவில் நான்கு படிகள் இருக்கின்றன . அந்த வெறுமையைக் கற்பது என்பது முதல்படி - அதாவது அந்த விதையில் உள்ள வெறுமையை. ஆனால் , அது ஒரு புதுமையை உண்டாக்கும் உயிருள்ள வெறுமை! அந்த விதை, பூமிக்குள் வெடிக்கும்பொழுது. அந்த வெறுமை, மரமாக முளைவிட ஆரம்பிக்கிறது.

இந்த வெறுமைநிலையில் (NOTHINGNESS)- பௌதீகத்தின்படி, எந்தப் பொருளும் இல்லை - எல்லாவற்றிற்கும் ஆதாரம் இதுதான். இதிலிருந்தான் அந்த மரம் வந்தது; பிறகு, மலர்கள் , பழங்கள் என்று பலவித பொருள்கள் உண்டாயின . ஆனால் , ஒவ்வொன்றும் , மறுபடியும் விதையாகிறது. அந்த விதை முற்றி, பூமியில் விழுகிறது. அதாவது அந்த மரம், மறுபடியும் வெறுமை நிலையை அடைகிறது.

இதுதான் உயிர்த்தன்மையின் வட்டம் . அதாவது, வெறுமையிலிருந்து, வெறுமைக்கு ; இடமற்ற

நிலையிலிருந்து, இடமற்ற நிலைக்கு, இந்த இரண்டு வெறுமை நிலைகளுக்கு நடுவில்தான், 'சம்சார்' என்ற கனவு ஏற்படுகிறது. ஏன் , அதற்கு இடையில்தான் , எல்லாப் பொருள்களும் இருக்கின்றன. ஆகவேதான், அவைகள் " கனவுப்பொருள்கள் " (DREAM STUF) என்று அழைக்கப்படுகிறது. அவைகள் ' மாயை' (MAYA) என்று அழைக்கப்படுகிறது. ஆகவேதான் அவைகளை வெறும் எண்ணங்கள் மற்றும் கற்பனைகளைத் தவிர வேறு எதுவும் இல்லை'' என்று ஞானிகள் கருதுகிறார்கள் . இதற்கு பெயர்தான் , 'தந்த்ரா மரம்' (THANTRA TREE)

மனமற்றநிலைதான் (NO MIND) எல்லாவற்றிற்கும் , ஆரம்பமும், முடிவும் ஆகும். அந்த மனமற்ற நிலையில் இருந்துதான், 'ஆரம்பமற்ற நிலை (UNORIGINATION) - தந்த்ராவின் கூற்றுப்படி - உருவாகிறது. இந்த ஆரம்பமற்ற நிலையிலிருந்துதான், 'ஞாபகமற்ற நிலை (NOMEMORY) ஏற்படுகிறது. இந்த ஞாபகமற்ற நிலையிலிருந்துதான் ' ஞாபகம் ' ஏற்படுகிறது. இதுதான் தந்த்ரா மரம் என்பது.

மனமற்ற நிலை. வெறுமைநிலை என்பது ஆன்மீகத்தைப் பொருத்தவரையில் , எல்லாம் உள்ளடங்கிய நிலை (POTENTIAL) என்று அர்த்தம் . எதுவுமே, இன்னும் உண்மையாகப் பரிணமிக்கவில்லை. எல்லாம் , அதன் ஆரம்பநிலையிலே இருக்கின்றன . அதிலிருந்து எதுவும் இன்னும் நிகழவில்லை. உயிர்த்தன்மை, அந்த விதையில், ஓய்வாகத் தூங்கிக்கொண்டு இருக்கிறது. அது இன்னும் தன்னை முழுமையாக வெளிக்காட்டவில்லை. அதை நன்றாகப் புரிந்து கொண்டு, ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும் . இல்லாவிட்டால் , உங்களால் , இந்த சூத்திரங்களைப் புரிந்துகொள்ள முடியாது. இந்த சூத்திரங்கள், மிகவும் முக்யத்வம் வாய்ந்தவை. ஏனென்றால், இதை நீங்கள் சரியாகப் புரிந்து கொண்டால் தான், நீங்கள் உங்கள் மனதுக்குள் ஆழமாகச் சென்று, உங்களுடைய மனமற்ற நிலையை அடையமுடியும்.

ஆகவே, முதல் நிலை என்பது மனமற்ற நிலை,

எல்லாம் உள்ளடங்கிய நிலை.

அடுத்த இரண்டாவது நிலை என்பது ஆரம்பமற்ற நிலை (UNORIGINATION) அதாவது, இன்னும் அந்த விதை, தன்னை வெளிப்படுத்திக் காட்டவில்லை. ஆனால் , அது, தன்னை வெளிப்படுத்தத் தயாராக இருக்கிறது. ஒருவகையில் , இது முதல் நிலை போலத்தான் . ஆனால் , இரண்டுக்கும் சிறிது வித்தியாசம் இருக்கிறது. அந்த முதல் நிலையில் , எல்லாம் முழு ஓய்வில், முழுத்தூக்கத்தில் இருக்கிறது. பல லட்சம் வருடங்களாக , அப்படியே இருக்கிறது. இரண்டாவது நிலையில் , இன்னும் எதுவும் அதில் நிகழவில்லை. ஆனால் , நிகழுவதற்குத் தயாராக இருக்கிறது. எந்த நேரத்திலும் அது நிகழலாம் . அதாவது, அந்த விதை, வெடிக்கத் தயராக இருக்கிறது. அதாவது, ஓட்டப்பந்தயத்தில் , ஓட ஒருவன் தயாராக இருப்பதுபோல , கருவிலுள்ள , குழந்தை முழுமை அடைந்து, வெளியே வரத் தயாராக இருப்பது போல உள்ள நிலைதான், இந்த இரண்டாவது நிலை.

மூன்றாவது நிலை என்பது ஞாபகமற்றநிலை (NONMEMORY) அதாவது குழந்தை பிறந்துவிட்டது. விதை வெடித்துள்ளது. அதற்குள் இந்த உலகம் , வந்துவிட்டது. ஆனால், அதைப்பற்றிய அறிவு அதற்கு, இன்னும் ஏற்படவில்லை.

பிறந்த குழந்தையின் , முதல்நாளை, நினைத்துப்பாருங்கள். அது, மெல்ல தன் கண்களைத் திறந்து, இந்தப் பச்சைநிற மரங்களைப் பார்க்கலாம் . ஆனால், அது பச்சை நிறத்தில் இருக்கிறது என்பதை, அதனால் புரிந்து கொள்ள முடியாது. அது எப்படி, அதனால் முடியும் ? அந்தப் பச்சை நிற மரத்தை, அது, அதற்கு முன்னால் பார்த்தது இல்லை. அதனுடைய பார்வை, ஞாபகங்கள் ஏதும் இல்லாமல், ஞாபகத்தால் அசுத்தப்படுத்தாமல் , சுத்தமாக , தெளிவாக இருக்கிறது. ஏனென்றால் இந்த நிலை அப்பொழுதுதான் தோன்றி இருக்கிறது.

இந்த நிலையைத்தான் , கிருஸ்துவர்கள் , ஈடன் தோட்டத்தில் ஆதாம் (ADAM) இருந்ததாகக் கருதுகிறார்கள் . அப்பொழுது, அவனிடம் எந்த விஷயஞானமும் ஏற்படவில்லை. அவன் , இன்னும் விஷயஞானம் என்ற அந்த

மரத்தின் பழத்தை ருசி பார்க்கவில்லை. இந்த நிலையில் தான், எல்லா குழந்தைகளும் ஆரம்பத்தில் இருக்கும். சில மாதம் வரை, அந்தக் குழந்தை பார்க்கும், கேட்கும், உடலில் தொடுவதை உணரும், ருசிக்கும். ஆனால், அதைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், அதற்கு இன்னும் ஞாபகமே ஏற்படவில்லை. ஆகவேதான், உங்களால் உங்களுடைய ஆரம்ப வாழ்க்கையை, நினைவுக்குக்கொண்டு வர முடியவில்லை. அப்படி ஞாபகப்படுத்திக்கொள்ள விரும்பினால், நீங்கள், உங்களுடைய 5 வயது வரை செல்லலாம். இன்னும் கொஞ்சம் முயன்றால், 4 வயதுவரை இன்னும் கஷ்டப்பட்டு முயன்றால், 3 வயது வரை செல்லமுடியும். அதற்கு அப்புறம் உங்களால் எதையும் ஞாபகப்படுத்திக்கொள்ள முடியாது. ஏன் அப்படி? அப்பொழுது, நீங்கள் வாழ்வின் புதியதன்மையில் இருக்கிறீர்கள். அதற்கு முன்பு, அந்த நிலையில் இருந்ததே கிடையாது. அந்த முதல் மூன்று வயதில் தான், நீங்கள், உங்கள் வாழ்வில் முழுமையான நிலையில் இருக் கிறீர்கள். ஏன், அந்த ஞாபகம் உங்களிடம் ஏற்படவில்லை? ஏன், அதில் உங்களால் உள்ளே செல்ல முடியவில்லை? ஏனென்றால், அறிந்து கொள்ளுதல் என்பது அப்பொழுது அங்கே இல்லை. பதிவுகள் மட்டும், உங்கள் மூளையில் இருக்கிறது. ஆனால், அதை அறிந்துகொள்ளுதல், அங்கே நிகழவில்லை.

ஆகவே, தந்த்ரா இந்த நிலையை, ஞாபகமற்ற நிலை என்று கூறுகிறது. நீங்கள் பார்க்கிறீர்கள். அதனால் உங்களிடம் எந்த விஷய ஞானமும் ஏற்படவில்லை. நீங்கள் எதையும் சேகரிக்கவில்லை. நீங்கள், அப்பொழுது. கணத்துக்குக்கணம், வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள். நீங்கள் ஒரு கணத்திலிருந்து, அடுத்த கணத்துக்கு, அந்த முதல் கணத்தின் ஞாபகம் ஏதும் இல்லாமல், செல்கிறீர்கள். உங்களிடம் எந்த இறந்த காலமும் கிடையாது.

ஒவ்வொருகணமும் , மிகவும் புதிய நிலையில் எழும்புகிறது. ஆகவேதான் , குழந்தைகள் , ஒவ்வொரு கணமும் , மிகுந்த உயிர்தன்மையில் , அப்பொழுது மலர்ந்த மலர்போல , புத்தம் புதிய தன்மையில் இருக்கின்றன . அதனுடைய அந்த வாழ்க்கை, மகிழ்ச்சியும் , ஆனந்தமும் , அதிசயமும் நிறைந்ததாக இருக்கிறது. சிறிய பொருள்கள் கூட , அவைகளை மிகவும் மகிழ்ச்சியாக இருக்க உதவி செய்கின்றன . சிறிய நிகழ்ச்சிகள் கூட , அவைகளைப் பேரானந்த நிலைக்குக் கொண்டு செல்கின்றன . அவைகள் தொடர்ந்து ஆச்சரியத்தில் இருக்கின்றன . ஒரு நாய் சென்றாலும், அதைப்பார்த்து, அது அதிசயப்படுகிறது. ஒரு பூனை அதன் அறைக்கு வந்தாலும், ஒரு மலரின் நிறம் கூட, அதை அதிசயத்தில் ஆழ்த்துகின்றது. அது, அதனுடைய உள் உலகத்தில் வாழ்கிறது. அப்பொழுது, வெளியில் உள்ள அனைத்தும் , பிரகாசமாகத் தென்படுகிறது. அதனுடைய கண்கள் , மிகவும் தெளிவாக இருக்கின்றன . அதில் எந்த தூசியும் சேரவில்லை. அதனுடைய கண்ணாடி, மிகவும் தெளிவாக இருக்கிறது. ஆகவே, அதனுடைய பிரதிபலிப்பும், மிகவும் சரியாக இருக்கிறது. இதுதான், ஞாபகமற்ற நிலை என்பது - மூன்றாவது நிலை:

அடுத்து உள்ள நான்காவது நிலை, 'ஞாபகம்' அல்லது மனத்தின் நிலையாகும் . இப்பொழுது ஆடம் , விஷயஞானம் என்ற பழத்தை

சாப்பிட்டு விட்டான் . அதனால் அவன் கீழே விழுந்து, இந்த உலகத்தை அடைகிறான் . மனமற்ற நிலை என்பது ' நிர்வாணா; மனம் என்பது ' சம்சாரா' நீங்கள் மறுபடியும் அந்த ஆரம்ப சுத்தமான குழந்தைப் பருவத்துக்குச் செல்ல வேண்டும் என்றால் , அந்த ஆரம்ப கள்ளங்கபடமற்ற மற்றும் சுத்தமான பிரக்ஞை நிலைக்குச் செல்ல வேண்டும் என்றால் , நீங்கள் மறுபடியும் பின்னால் செல்லவேண்டும்.

எப்படி நீங்கள் ஒவ்வொரு படியாக ஏறி, இந்த நான்காவது படியை அடைந்தீர்களோ, அதைப்போல , ஒவ்வொருபடியாக கீழே இறங்கி அந்த முதல்படியை அடைய வேண்டும் . ஞாபகநிலையை,

ஞாபமற்றநிலைக்கு மாற்ற வேண்டும் - இதற்காகவே, இத்தனை தியான முறைகளும் , மனத்தையும் , எண்ணங்களையும் அழிப்பதற்காகவே - ஆகவே, ஞாபகநிலையிலிருந்து ஞாபகமற்ற நிலைக்கு, கீழே இறங்கி வரவும் . இப்படி மனமற்ற நிலைக்கு வந்து சேரவும் . இப்பொழுது, சிறுதுளி, கடலில் கலந்துவிடுகிறது. நீங்கள் மறுபடியும் , எல்லையில்லாத சாசுவதமான பேரியக்கப் பிரபஞ்ச மகாசக்தி என்னும் கடலாகிவிடுகிறீர்கள் . மனமற்றநிலை என்பது தெய்வீகமானது மற்றும் காலத்திற்கு கட்டுப்படாதது. ஆனால் , மனநிலை என்பது மாறக்கூடியது மற்றும் காலத்திற்கு கட்டுப்பட்டது.

சென்ற முறை நான் நான்கு முத்திரைகளைப்பற்றிக் கூறினேன் . ஒன்று கர்ம முத்திரை - செயல் நிலை. இரண்டாவது - ஞானமுத்திரா - விஷயஞானநிலை. மூன்றாவது சமயநிலை - சுத்தமான காலம் என்ற நிலை. அடுத்த நான்காவது நிலை, மஹா முத்திரா எனப்படும் - மிகப்பெரியநிலை, அதாவது பரவெளிநிலை (SPACE) இவைகள் ஒவ்வொன்றும் ஒன்றுக்கு ஒன்று சம்மந்தமுடையது.

முதல் , கர்ம முத்திரா என்பது ஞாபகம்தான் . நீங்கள் ஒரு செயலைச் செய்ய வேண்டும் என்று நினைத்தால், அது ஞாபகத்தைத் தவிர வேறல்ல . உண்மையில் செயல் என்று எதுவும் நிகழவில்லை. அது ஒரு கனவுதான் . அதன் மூலமாக , உங்களையே அதில் செலுத்திப் (PROJECTION) பார்க்கிறீர்கள் . செயல் என்று எதுவும் நிகழவில்லை. ஒரு பொருளின் இயல்பான தன்மை, செயல் அல்ல . செயல் என்பது மனம் காணும் கனவுதான்.

ஆகவே, கர்ம முத்திரா என்பது வெறும் ஞாபகம்தான் நீங்கள் எப்பொழுது உங்களுடைய ஞாபகத்தை விடுகிறீர்களோ, அப்பொழுது நீங்கள் செயலுக்கு அப்பால் செல்கிறீர்கள் . பிறகு, செயல்கள் உங்கள் மூலமாக நடக்கின்றன . நீங்கள் ஒருபோதும் செயல் செய்பவனாக இல்லை. உங்களுடைய அகங்காரம் மறைகிறது. செயல்கள் உங்கள் வழியாக நடக்கின்றன. ஆனால், அவைகளைச் செய்பவர், நீங்கள் அல்ல.

மரங்கள் , தான் வளர்வதற்கு முயற்சி செய்வது

இல்லை. வளர்தல் அதன்மூலமாக நடக்கிறது. அதற்காக , அது எந்த முயற்சியும் செய்வதில்லை. மலர்கள் தானே மலர்கின்றன. ஆறு தானே ஓடுகிறது. நட்சத்திரங்கள் தானே

உயர்நிலைக் நகர்கின்றன . எந்த முயற்சியும் இவைகளில் இல்லை. செயல் தானே நடக்கிறது; அங்கு செய்பவன் என்று யாரும் கிடையாது.

இரண்டாவது நிலை, ஞான முத்திரா, அதாவது அறிந்துகொள்ளும் நிலை. நீங்கள் வெறுமனே கவனிக்கிறீர்கள் . நீங்கள் வெறுமனே அறிந்துகொள்கிறீர்கள் , ஆனால் , நீங்கள் எதையும் செய்வது இல்லை. அந்த அறிந்தவைகளோடு ஐக்கியமாகாமல் , உங்களுடைய மனத்தாலும் , உடலாலும் எதுவும் செய்யாமல் , வெறுமனே கவனிக்கிறீர்கள், வெறுமனே அறிந்துகொள்கிறீர்கள்.

மூன்றாவது நிலை, சமய முத்திரா. கொஞ்சம் கொஞ்சமாக, அறிபவனும் மறைகிறான். ஏனென்றால், அங்கு அறிந்து கொள்வதற்கு ஒன்றுமில்லை. முதலில் செயல் மறைகிறது. அடுத்தது விஷயஞானம் மறைகிறது. பிறகு, சுத்தமான ' இங்கே, இப்பொழுது மட்டும் இருக்கிறது. அதாவது, காலம் தன் சுத்தமான தன்மையில் இயங்குகிறது. இப்பொழுது செய்வதற்கு ஒன்றும் இல்லை. அறிந்து கொள்வதற்கு ஒன்றும் இல்லை. நீங்கள் மட்டும் ஒரு சாதாரண நிலையில் இருக்கிறீர்கள் . காலம் உங்கள் அருகில் சென்று கொண்டிருக்கிறது. அது உங்களைத் தொல்லைப் படுத்துவதில்லை. செய்வதற்கான , மற்றும் அறிந்து கொள்வதற்கான எல்லாமே மறைந்து விட்டன.

இப்பொழுது, இரண்டும் அகன்றுவிட்டன. இப்பொழுது, நீங்கள் மட்டும் இருக்கிறீர்கள் . செயல்கள்தானே நடக்கின்றன . காலம் தானே சென்றுகொண்டு இருக்கிறது. ஏன் எல்லாமே தானே நிகழ்கின்றன . நீங்கள் செய்பவனாகவும் ல்லை, அறிந்துகொள்பவனாகவும் இல்லை.

அடுத்த நான்காவது நிலை மஹாமுத்திரா - அதாவது

எல்லையில்லாத பரவெளி. அப்பொழுது, நீங்களும் மறைந்துவிடுகிறீர்கள் . ஆகவே, முறையாக , செயல் , அறிதல் மற்றும் காலம் எல்லாம் வரிசையாக மறைகிறது. அடுத்தது. நீங்களே மறைந்து விடுகிறீர்கள் ( இங்கு, நீங்கள் என்றால் உங்களுடைய மனம்தான் ) பிறகு ஒரே அமைதிதான் , ஒரே நிசப்தம்தான் . நீங்கள் அமைதி என்று நினைப்பது அமைதிநிலை இல்லை. நீங்கள் கருதிக்கொண்டிருக்கும் அமைதிநிலை, அந்த வெகுதூரத்தில் உள்ள உண்மையான அமைதிநிலையின் எதிரொலிதான் . அது மிகவும் கீழான நிலையில் உள்ள அமைதி நிலை. சிலசமயம், நீங்கள் சிறிது ஓய்வுநிலையை உணரலாம் . அப்பொழுது, உங்களுடைய மனம் , சாதாரண நிலையில் வேகமாகச் சுற்றுவதைவிட , சற்று மெதுவாகச் சுற்றலாம். அப்பொழுது மனம் சற்று ஓய்வு நிலையில் இருக்கிறது அந்த நிலையில், ஒருவிதமான அமைதியை அடைகிறீர்கள் . அது ஒன்றும் இல்லை. உண்மையான

எப்பொழுது செயலும் , அறிதலும் , மற்றும் காலமும் மறை கிறதோ. அடுத்து நீங்களும் மறைகிறீர்களோ அந்த அமைதிநிலைதான் உண்மையானது. ஒருநாள் எல்லாம் மறைந்துவிடும். எதுவுமே உங்களிடம்

இருக்காது. அந்த வெறுமை நிலையில் - அந்த மாபெரும் பரவெளியில் , நீங்கள் எல்லையற்று இருக்கிறீர்கள் ; இல்லை சென்றுகொண்டே இருக்கிறீர்கள்.

முதல் நிலையாகிய , கர்ம முத்ராவில் , எண்ணங்கள் அடங்கியிருக்கின்றன . எண்ணங்கள் என்பது, இறந்த காலத்தையும் , எதிர்காலத்தையும் தான் சேர்ந்தது. அந்த எண்ணங்களோடு, இறுக்கம் , எதிர்பார்ப்பு, துக்கம் என்று எல்லாம் வந்து சேரும்.

இரண்டாவது. ஞான முத்திராவில் , ஞாபகம் கரைந்து, ஞாபகமற்ற தன்மை ஏற்படும். அங்கு இறந்தகாலமோ,

எதிர்காலமோ கிடையாது. ' இப்பொழுது' (NOW) மாத்திரம் இருக்கும் . இந்த நிலையில் , மனம் தூக்கத்தில் இருக்கிறது. அது இன்னும் இறக்கவில்லை. அது மீண்டும் விழித்து எழலாம் . ஆகவேதான் ஞான முத்திரா ஏற்பட்டாலும் , அது அடிக்கடி மறைந்துவிடும் . இதனால்தான் , தியானம் உங்களிடம் நேர்ந்தாலும், அது அடிக்கடி மறைகிறது.

இந்த இரண்டாவது நிலையில் , மனம் இறக்காததால் , அது தூக்கத்திலிருந்து அடிக்கடி விழித்துக்கொள்கிறது. அப்பொழுது, அது சில நேரம் மிகுந்த சக்தியோடு - ஏனென்றால் அது மிகுந்த ஓய்வில் இருக்கிறது - பழிவாங்கும் தன்மையில் மேலே எழும்புகிறது. ஆகவேதான் , ஆழ்ந்த தியானத்திற்குப் பிறகு, சில சமயம் உங்களுடைய எண்ணங்கள் அதிக வேகத்தில் சுழல் வதை உணர்வீர்கள் . இப்பொழுது அது உறக்கத்தில் இருக்கிறது. ஆகவே, எண்ணங்கள் மறுபடி அதிக சக்தியோடு வீறுகொண்டு எழுகிறது. ஏனென்றால் , அது இன்னும் மறையவில்லை. ஆனால் , மனமற்ற நிலையை சில கணம் , சிறிதளவு உணரலாம் . ஒரு விநாடி நேரம், அதை நீங்கள் உணரலாம். அப்பொழுது அந்த கதிர்கள் , உங்களைத் திடீரென்று அடையும் . அதனால் , நீங்கள் திடீரென்று இன்ப அதிர்ச்சியடைவீர்கள் . அந்த இன்ப ருசிதான் , உங்களிடம் ஆழ்ந்த நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. இப்படித்தான் உங்களிடம் நம்பிக்கை (TRUST) ஏற்படுகிறது. நம்பிக்கை ஆதாரத்துடன் இருந்தால் , அது ஆழ்ந்த நம்பிக்கையாகிறது. அதுவே ஆதாரமற்று இருந்தால் , அது வெறும் மூடநம்பிக்கை (BELIEVE)யாகிறது.

ஆகவே, ஆழ்ந்த நம்பிக்கை என்பது மூடநம்பிக்கை இல்லை. அது ஒரு இன்பமான ருசி, இன்பமயமான உணர்வு. நீங்கள் அந்த மனமற்ற நிலை என்ற கதிரை, ஒளியை ஒரு விநாடி நேரம் உணர்ந்தாலும் , நீங்கள் முன்பு இருந்த அதே மனிதனாக , இப்பொழுது இருக்கமாட்டீர்கள் . நீங்கள் அதை இழந்துகொண்டே இருந்தாலும் , அது உங்களையேதான் சுற்றிச் சுற்றி வரும் . அதை உங்களாலும் மறக்க முடியாது. அதுவும் உங்களை மறக்காது. உங்களிடம் நேரமும் , சக்தியும் இருக்கும்பொழுது, அது உங்களுடைய கதவை வந்து

தட்டும்.

இதுதான் , நீங்கள் ஒரு குருவின் முன்னால் இருக்கும் பொழுது, வெகுசுலபமாக நிகழ்கிறது. இது ஒரு குருவுக்கும் , ஒரு சீடனுக்கும் உள்ள தொடர்பை காட்டுகிறது. இந்த இரண்டாவது நிலையான ஞான முத்திரா, அந்த நான்காவது நிலையை அடைந்த மனிதனின் முன்னால் (மனமற்ற உண்மையான

நிலை அடைந்த உண்மையான ஞானி) நீங்கள் திறந்த மனதுடன் , எதையும் வாங்கும் தன்மையில் (RECEPTIVE) இருந்தால், அது வெகுசுலபமாக நிகழும்

ஆகவேதான் , அந்த காலம் தொட்டே, தேடுபவர்கள் , உண்மையான குருவுக்காகத் தேடிக்கொண்டே இருப்பார்கள். அந்த ருசியை எங்கே இருந்து அடைவது? நீங்கள் அதை மதப் புத்தகங்களிலிருந்து அடைய முடியாது. அது வெறும் நம்பிக்கையைத் தான் உங்களிடம் ஏற்படுத்தும் எந்த அனுபவத்தையும் உங்களிடம் ஏற்படுத்தாது. அந்த உயிரோட்டமுள்ள அனுபவத்தை நீங்கள் எங்கே இருந்து அடைய முடியும் ? ஏனென்றால் , அதைப்பற்றி உங்களுக்கு எதுவுமே தெரியாது. அது என்ன, எதை நோக்கி நகருகிறது, அது என்ன செய்கிறது என்ற கேள்விகளுக்கெல்லாம் , உங்களிடம் விடைகிடையாது. அது உண்மையிலேயே உங்களிடம் நிகழ்ந்ததா என்ற சந்தேகம் உங்களிடம் இருந்துகொண்டேதான் இருக்கும் . அது உங்களுடைய மனக்கோளாறினால் ஏற்பட்ட ஒரு கனவு மயக்கம் என்று பிறர் நினைக்கக்கூடும் ஏனென்றால் , நீங்களே அதில் இன்னும் உறுதியாக இருக்கவில்லை. மேலும் அப்படிப்பட்ட முழுமையான மனமற்ற நிலையை அடைந்தவர்கள் இந்த உலகத்தில்மிகக் குறைவாகவே இருப்பார்கள் புத்தர் , இயேசு, சாரஹா. .. என்று ஒரு சிலர் தான் இருக்கிறார்கள் . இந்த உலகத்தில் மிகுந்த அளவில் இதைப் போன்ற அனுபவங்கள் அடையாத மக்கள் தான் அதிகமாக இருக்கிறார்கள் . யாருக்குத் தெரியும் ? அந்த ஒரு சிலர் , பைத்தியமாகக்கூட இருக்கலாம் !! இவர்கள் , ஏதோ ஒரு வித்தியாசமான , மாறுபட்ட எண்ணத்தில் இருக்கலாம் . யாருக்குத்

தெரியும் ? இவர்கள் ஒரு ஏமாற்றுக்காரர்களாக , பொய்யர்களாக இருக்கலாம் . அல்லது, அவர்கள் நேர்மையுள்ளவர்களாக இருக்கலாம் . ஆனால் , தங்களையே அவர்கள் ஏமாற்றிக் கொண்டும் இருக்கலாம் . அவர்கள் தங்களையே வசியம் செய்து கொண்டு இருக்கலாம். அவர்கள் தங்களிடமே ஒருவித மயக்க உணர்வோடு (HULLUCINATION) கனவுலகில் இருக்கலாம். அவர்கள் நல்ல கனவு காண்பவர்களாக இருக்கலாம்.

இந்த உலகத்தில் நல்ல கனவு காண்பவர்களும் இருக்கிறார்கள் , கெட்ட கனவு காண்பவர்களும் இருக்கிறார்கள் . கெட்ட கனவு காண்பவர்களின் கனவுகள் எப்பொழுதும் கருப்பு, வெள்ளையில் இரு பரிமாணத்தில் (TWO DIMENSIONAL) மட்டும் தான் , தட்டையாக , நீளம் அகலத்தோடு இருக்கும் . நல்ல கனவு காண்பவர்களின், கனவுகள் முப்பரிமாணத்தில் ( நீளம் , அகலம் , உயரம் ) எப்பொழுதும் வண்ணங்களோடு இருக்கும் . இப்படிக் கனவு காண்பவர்கள் , கவிஞர்களாக மாற முடியும். நீங்கள் இப்படி வண்ணமயமான கனவுகள் கண்டிருப்பதை, உங்களால் ஞாபகப்படுத்த முடிகிறதா? மிகவும் அரிதாக , ஒரு சிலர்தான் இப்படிப்பட்ட கனவுகளைக் காணமுடியும் . நீங்கள் இப்படிப்பட்ட கனவுகளை கண்டிருந்தால் , நீங்கள் ஒரு கவிஞனாகவோ, ஒரு ஓவியனாகவோ ஆகக்கூடும்.

யாருக்குத் தெரியும் ? இந்தப் புரிந்து கொள்ள முடியாதவர்கள் (MYSTICS) சிறந்த கனவு காண்பவர்களாக இருக்கக் கூடும் . அவர்கள் , முப்பரிமாணத்தில் , வண்ணமயமாக , நிஜ உருவத்தைப் போலவே கனவு கண்டிருக்கலாம் . அவர்கள் , அந்தக் கனவுக்காகவே, தங்களுடைய நேரத்தையும் , சக்தியையும் செலவிட்டு, அந்தக் கனவுகளையே நினைத்துக் கொண்டு இருக்கலாம் . அப்பொழுது, அவர்களுக்கு உண்மை உருவத்தைவிட , கனவு உருவம் கூட நிஜமாகத் தெரியலாம். ஒவ்வொரு தேடுபவர்களிடத்திலும் , ஆரம்பத்தில் இந்த சந்தேகம்

இருக்கத்தான் செய்யும் . இது இயற்கைதான் . இதற்காக எந்தக் கவலையும் படத்தேவையில்லை. இந்தச் சந்தேகத்தை எப்படி போக்கிக் கொள்வது? மத ஏடுகள் சொல்வது என்னவென்றால் , " இதையெல்லாம் அகற்றிவிடுங்கள் . சந்தேகப்படாதீர்கள் வெறுமனே நம்புங்கள் " (BELIEVE) என்பதுதான் . ஆனால் , எப்படி அதை அகற்றுவது? எப்படி அதை விடுவது? நீங்கள் வெறுமனே நம்பலாம் . ஆனால் , உங்களுடைய மன ஆழத்தில் , அந்த சந்தேகம் இருந்துகொண்டேதான் இருக்கும்.

செயிண்ட் அகஸ்ட்டின் (ST.AUGUSTINE) ஒவ்வொரு நாளும் , " கடவுளே, நான் உன்னை முழுமையாக நம்புகிறேன் . என்னைக் காப்பாற்றவும் என்மேல் இரக்கம் கொள்ளவும் . உங்கள் மேல் உள்ள சந்தேகம் மறுபடியும் எழும்பக்கூடாது?" என்றுதான் பிரார்த்தனை பண்ணுவார். ஆனால், ஏன் இப்படி அவர் பிரார்த்தனை பண்ணுகிறார் ? அவருடைய நம்பிக்கை முழுமையா இருந்தால் , இந்த பயம் எங்கே இருந்து வந்தது? இது அவரிடம் , அந்த நம்பிக்கை, முழுமையாக இல்லை என்பதையே காட்டுகிறது. அது, அவருடைய மன ஆழத்தில் இருந்துகொண்டேதான் இருக்கும் . கடவுளிடம் ஏற்பட்ட அந்தப் பேராசையை, அடுத்த உலகத்தில் உள்ள , உங்கள் ஆசையை நீங்கள் புதைத்து வைத்திருக்கலாம் . ஆகவே, அந்த ஆசை, உங்களிடமிருந்து அகலவில்லை. அது. உங்களுடைய இதயத்தை நோக்கி, வளர்ந்து கொண்டேதான் இருக்கிறது. ஏதாவது அனுபவம் உங்களிடம் ஏற்படாத நிலையில், உங்களால் அதை விடமுடியாது.

ஆனால் , அந்த அனுபவம் எப்படி ஏற்படும் ? உங்களுடைய மத ஏடுகள் , ' நீங்கள் நம்பாவிட்டால் , அந்த அனுபவம் ஏற்படாது' என்று சொல்கின்றன. இது ஒரு சிக்கலான, நிலைதான். ஆனால், அனுபவம்தான், எந்தவிதச் சந்தேகமும் இல்லாமல் , அந்த நம்பிக்கையை ஊட்டும். }

நீங்கள் , அந்த அனுபவம் நிகழ்ந்த ஒருவருக்கு முன்னால் இருந்தால்தான், அது சுலபமாக உங்களிடம் நிகழும் . ஏதோ ஒரு நாளில் , நீங்கள் அமைதியாக உட்கார்ந்து கொண்டு, எதுவும் தெரியாத நிலையில் , அப்படித் தெரிந்து கொள்வதற்கு முயலாமல் ,

ஆசைப்படாமல் இருந்தாலே, அது நிகழ்வதற்கு வாய்ப்பு உண்டு. அது, ஒரு மின்னல் போல் உங்களிடம் திடீரென்று நிகழும் . அதன் பிறகு, உங்களுடைய வாழ்க்கையில் பெருத்த மாற்றம் ஏற்படும். இப்பொழுது, நீங்கள் மாறியிருக்கிறீர்கள் . அல்லது மாற்றப்பட்டு இருக்கிறீர்கள். இப்பொழுது, நீங்கள் வேறு ஒரு புதிய நிலையில் செல்கிறீர்கள்.

உங்களைவிட , மேலான நிலையில் உள்ளவரகளின் முன்னால் , நீங்கள் இருக்கும்பொழுது, நீங்களும் அந்த மேலான நிலையை நோக்கிச் செல்கிறீர்கள் . உங்களையறியாமலே, நீங்கள் அதை நோக்கி இழுக்கப்படுகிறீர்கள் . அதைத் தடுக்க உங்களால் முடியாது. இப்படி நீங்கள் அதை ரசித்துவிட்டால் , உங்களுக்கு நிச்சயம் ஆழமான நம்பிக்கை ஏற்படும் . அந்த ஆழமான நம்பிக்கை ஏற்பட்டுவிட்டால் , நீங்கள் மூன்றாவது மற்றும் நான்காவது நிலைக்குச் செல்ல முடியும் . ஒரு உண்மையான குருவின் முன்னால் , நீங்கள் இரண்டாவது நிலைவரைதான், செல்ல முடியும் - ஞான முத்திரா. ஆமாம் , அவர் உங்களிடம் சிறிது ருசியையும் மற்றும் சிறிது அறிதலையும்தான் ஏற்படுத்த முடியும்.

ஜீசஸ் , எல்லோரையும் விட்டுச் செல்லும் பொழுது, ஒரு ரொட்டியை உடைத்து, தன் சீடர்களிடம் , " இதைச் சாப்பிடுங்கள் இது நான்தான் ' என்றும் அடுத்து 'ஒயின்' என்ற மதுவை ஒரு குப்பியில் ஊற்றி, "இதைக் குடியுங்கள் , இது என்னுடைய இரத்தம்தான் " என்று சொன்னார் . இது ஒரு சிறந்த , முக்கியமான உருவம் . இது ஹான முத்திராவைக் குறிப்பிடுகிறது. ஜீசஸ் என்ன சொல்கிறார் என்றால், நீங்கள் என்னைச் சிறிது ருசிபார்க்க முடியும் : என்னை உறிஞ்ச முடியும் . என்னைச் சாப்பிட முடியும்.

ஒவ்வொரு சீடரும் ருசி பார்க்கிறார்கள் . தங்கள் குருவைச் சாப்பிடுகிறார்கள் . உறிஞ்சுகிறார்கள் . நீங்கள் ஒன்றைச் சாப்பிட்டால் என்ன ஆகிறது. ஜீரணிக்கப்படுகிறது. உறிஞ்சப்படுகிறது. பின் உங்கள் ரத்தமாக மாறுகிறது. எலும்பாக மாறுகிறது. உங்கள் தசையாகிறது. உங்கள் பிரக்ஞையாகவும் மாறுகிறது. இதைத்தான், ஜீசஸ் குறிப்பிடுகிறார் . குரு

என்பவர் மூலமாக , அந்த ருசியை சீடர்கள் ருசிக்க வேண்டும் என்று அவர் ஆசைப்படுகிறார்.

நீங்கள், ஒரு குருவோடு என்ன செய்கிறீர்கள்? நீங்கள் அவருடைய முன்னிலையை (PRESENCE) அவருடைய சக்தித் துடிப்பை அருந்தி, அதை ஜீரணம் பண்ணுகிறீர்கள் . பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாக உங்களுடைய பிரக்ஞை தன்மையாகிவிடுகிறது. எப்பொழுது, அது உங்களுடைய பிரக்ஞைத் தன்மையாகிறதோ, அப்பொழுதுதான் , நீங்கள் ஒரு உண்மையான சந்நியாசி; அதற்கு முன்பு இல்லை. அதற்கு முன்பு நடப்பது, வெறும் சடங்குதான் மற்றும் அது, அந்தத் தெய்வீகப்பாதையை நோக்கி வைக்கும் முதல் அடிதான் . நீங்கள் சந்நியாசியாகாமல் , அது நிகழ்வது மிகவும் கஷ்டம் . ஏனென்றால் , சந்நியாசம் அடைந்தபிறகு, நீங்கள் மெல்ல , திறந்த மனதுடன் , எதையும் ஏற்கும் தன்மையை அடைகிறீர்கள் . அந்த நிலையில் , ஒரு நாள் , ஒரு நேரத்தில் , அது நிகழும் . அந்த நேரத்தில் , அந்த குருவின் சக்தி, உங்களுடைய சக்தியை, இழுக்கக்கூடிய வகையில் இருக்கும் நீங்கள் அன்பு நிலையில் இருக்கும் தருணத்தில் மகிழ்ச்சியும், கொண்டாட்டமும் நிறைந்து இருக்கும் தருணத்தில் , நீங்கள் உங்களுடைய குருவுக்கு அருகில் நெருங்கி வருகிறீர்கள். அப்பொழுது அவருடைய அன்பு என்னும் சக்தி வளையத்துக்குள் தள்ளப்பட்டு அந்தச் சிறு

ஒளிக்கீற்று, அந்தப் பேரின்ப சிறு தேன்துளி உங்களுடைய தொண்டையில் வந்து இறங்கும் . அப்பொழுது, நீங்கள் மாற்றப்படுகிறீர்கள்.

இப்பொழுது நீங்கள் உண்மையாக உங்களையே அறிந்து கொள்கிறீர்கள். இனிமேல் வெறும் நம்பிக்கை தேவையில்லை. இப்பொழுது, இந்த உலகமே ' கடவுள் இல்லை' என்று கூவினாலும் , அதைப் பற்றி, நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள் . இப்பொழுது, நீங்களே அதை உணர்ந்து கொண்டு விட்டதால் , நீங்கள் இந்த முழு உலகத்தையே, எதிர்க்க முடியும் . உங்களுடைய அறிந்துகொள் தலை, உங்களுடைய உண்மையான அனுபவத்தை உங்களால் எப்படி மறுக்க முடியும்? இந்த

உலகத்தைவிட , அந்த சிறு தேன்துளி, மிகவும் சக்தி வாய்ந்தது. உங்களுடைய இறந்தகாலத்தை இந்த சிறு தெய்வீகத் தேன்துளியோடு ஒப்பிடும் பொழுது, உங்களுடைய சென்ற பல லட்சம் பிறவிகள் ஒன்றுமே இல்லை.

ஆனால் , நீங்கள் , குருவோடு நெருங்கி இருக்கும் பொழுதுதான், இது நிகழும். சில பேர், என்னிடம் வந்து, " எதற்காக இந்த சந்நியாச சடங்கு' ? இங்கே சந்நியாசியாகாமல் , இருக்க முடியாதா? என்று கேட்கிறார்கள். இருக்கலாம்; நீங்கள் எவ்வளவு காலம் வேண்டுமானாலும் , இருக்கலாம் . ஆனால் நீங்கள் என்னை நெருங்கிவரமாட்டீர்கள் . நீங்கள் என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கலாம். நான் உங்களுடைய கையைப் பிடித்துக்கொண்டு இருக்கலாம் . அதனால் எந்தப் பிரயோஜனம் இல்லை. நீங்கள் எதையும் வாங்கும் தன்மையில் , உங்களுடைய இதயம் திறந்தநிலையில் இருக்க வேண்டும். இது உங்களைப் பொருத்தது.

சில நாட்களுக்கு முன்பு, என்னிடம் ஒரு இளைஞன் வந்து, " இந்த ஆரஞ்சு நிற அங்கிக்கும் , இந்த மாலைக்கும் , இந்தப் பதக்கத்துக்கும் , அறிவுப்பூர்வமாக என்ன அர்த்தம்?" என்று கேட்டான்.

நான் அவனிடம் , " எதுவுமில்லை. இது ஒரு முட்டாள் தனமான செய்கைதான் !" என்றேன்.

இதைக்கேட்டு, அவன் குழம்பிப்போய் , " அப்படி அது முட்டாள்தனமான வேலையென்றால் , எதற்காக , எங்கள் மேல் அதைத் திணிக்கிறீர்கள்.

நான் , சொன்னால் , நீங்கள் கேட்பதற்காகவே! " என்றேன். ''உண்மையாகச் 'ஏன் என்று

நான் , இதற்கு அறிவுப்பூர்வமாகப் பதில் அளித்தால் , நீங்கள் அதை ஏற்றுக்கொள்வீர்கள். ஆனால் , நீங்கள் என்னிடம் சரணாகதியடையமாட்டீர்கள் . அது என்னுடைய நோக்கம் இல்லை. அது உங்களுடைய பகுத்தறிவுக்கு ஏற்றவாறு இருந்து அதை நீங்கள் பின்பற்றினால் , நீங்கள் அதன் பின்னேதான் , ஓடிக்கொண்டு இருப்பீர்கள் . என்னைப் பின்பற்றமாட்டீர்கள் . ஒன்றை, அறிவுப்பூர்வமாக , விஞ்ஞானமுறைப்படி செய்யப்பட்டிருந்தால் , நீங்கள்

அதைத்தான் பின்பற்றுவீர்கள் , என்னை அல்ல . நீங்கள், எனக்கு ஏதுவாக இருக்கமாட்டீர்கள். அதனால், உங்களுக்கு எந்த பிரயோஜனமும் இல்லை. நீங்கள்

முன்பு இருந்தது போல, அதே பகுத்தறிவில்தான இயங்குவீர்கள், அதைத்தான் பின்பற்றுவீர்கள் . ஆகவேதான் , பலகாலமாக , பல குருமார்கள் , இதைப் போன்ற முட்டாள்தனமாக சடங்குகளை உண்டாக்கியிருக்கிறார்கள் !

இது ஒரு உருவகம்தான் . இதனுடைய அர்த்தம் என்னவென்றால் , நீங்கள் பகுத்தறிவோடு இனிமேல் செயல்படாமல் , நீங்கள் அதை ' வெறுமனே ஏற்றுக்கொள்ளத் தயாராகிறீர்கள் என்பதுதான் . நீங்கள் என்னோடு ' ஏன் ' என்று கேட்காமல் , வரத்தயாராக இருக்கிறீர்கள் என்று அர்த்தம் என்னுடைய கருத்துக்கள் , உங்களுக்கு முட்டாள் தனமாகப்பட்டாலும் , அதையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறீர்கள் என்று அர்த்தம் . இது உங்களுடைய தலையை , சற்று துவழச்செய்யும் , மற்றும் உங்களுடைய இதயத்தை சற்று திறக்கச் செய்யும்.

ஞானம் , எந்த நிறத்தில் வேண்டுமானாலும் , நிகழலாம். அதற்கு ஆரஞ்சு நிறம்தான் தேவை என்று எதுவும் இல்லை. அதற்கும், உங்களுடைய உடையின் நிறத்திற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அதற்கு இந்த மாலையோ அல்லது பதக்கமோ தேவையில்லை. பின்பு ஏன் ? அந்த ஏன் ' என்ற கேள்விதான் , அதில் உள்ள முட்டாள் தனம் . இதன் அடிப்படை காரணம் என்னவென்றால் , ' இது அர்த்தமற்றது என்பதுதான் ! உங்களுடைய அணுகுமுறையை, அது, சற்று எடுத்துக்காட்டுகிறது. அது முட்டாள் தன மாகப்பட்டாலும் , நீங்கள் அதற்கு தயாராக இருக்கிறீர்கள் நீங்கள் உங்களுடைய பகுத்தறிவுக்கு அப்பால் செல்லத் தொடங்குகிறீர்கள் - இதுதான் அதனுடைய முட்டாள்தனமான அர்த்தம்!

இது ஒரு மிகச் சிறிய ஆரம்பம்தான் . ஆனால் சிறிய

ஆரம்பம்தான் , பெரிய ஒன்றில் முடியும் . இமயமலையிலிருந்து, கங்கைநதி உண்டாகும்பொழுது, சிறு சிறு துளிகளாகவே இருந்தது. அவைகளை, உங்களுடைய உள்ளங்கையில் , ஏந்திக் கொள்ளலாம். ஆனால், அது கடலை அடையும் பொழுது, எவ்வளவு பெரிதாக , எவ்வளவு பரந்ததாக மாறிவிடுகிறது? இப்பொழுது, நீங்கள் அதை உங்களுடைய கைகளால் ஏந்த முடியாது. மாறாக , நீங்களே அதில் மூழ்கிவிடக் கூடும்! ஆகவே, இந்த அங்கியும், மாலையும், பதக்கமும், உங்களுடைய சிறிய ஆரம்பத்தை, சிறிய நோக்கத்தை எடுத்துக்காட்டுகிறது. அவ்வளவுதான் - இது ஒரு முட்டாள்தனமான சடங்குதான் . நீங்கள் மிகவும் விரும்பும் மனிதனுக்காக , இந்த முட்டாள்தனமான காரியத்தையும் செய்யத் தயாராக இருக்கிறீர்கள் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே. - அவ்வளவுதான் . இது, நான் உங்களை அடைய உதவிசெய்யும் . அது, சில அற்புதங்களை சுலபமாக உங்களிடம் ஏற்படுத்தும்

' உண்மை' என்பது பிறரைத் தொற்றிக்கொள்ளக்கூடியது. ஆனால், அதற்கு நீங்கள் தயாராக இருக்கவேண்டும் சந்தேகம் என்பது தடுப்பு ஊசியை போலத்தான். சந்தேகமும், பகுத்தறிவும் அந்த ' உண்மை' என்ற தொத்துவியாதியிலிருந்து, உங்களைக் காப்பாற்றும் . நீங்கள் மிகவும் பாதுகாப்பில் இருப்பீர்கள் . உங்களிடம் இப்பொழுது எதையும் சந்திக்கும் தைரியம் இருக்காது. உங்களால், எங்கேயும் தைரியமாகச் செல்ல முடியாது. நீங்கள் , மிகுந்த பாதுகாப்பில் , உங்களுடைய கல்லறையில்தான் இருப்பீர்கள். உங்களிடம் எந்த

உயிரோட்டமும் இருக்காது. ஆனால் , பாதுகாப்பற்ற நிலையில், திறந்த நிலையில், நீங்கள் இருந்தால்தான், நீங்கள் கடவுளை அடையத் தயாராக இருக்கிறீர்கள் என்று அர்த்தம்.

நீங்கள் , ஒரு குருவோடு அன்பு மயமாகத் திறந்த உள்ளத்தோடு இருந்தால் உடலளவில் அல்ல ), அந்த

நிகழ்ச்சி' ஒருநாள் நிகழும் - அப்பொழுது நீங்கள் ஆகாயத்திற்கு தூக்கப்படுகிறீர்கள். திடீரென்று, அந்த ருசியை நீங்கள் உணர்ந்து, சிறகு முளைத்துச் சுதந்திரமாக ஆகாயத்தில் பறப்பீர்கள் . அதன்பிறகு, நீங்களே உங்களுடைய சொந்தப் பாதையில் மேலே செல்லலாம்.

லாவகமான பிறகு அடுத்தநிலையாகிய '' சமய முத்திரா' நிகழும். உங்களுக்குள்ளே நிகழும் திறப்பின் வழியாக , நீங்கள் பார்க்க ஆரம்பித்து, அதன் வழியாகச் செல்ல ஆரம்பிப்பீர்கள் . இப்பொழுது, நீங்கள் எங்கே செல்ல முடியும் என்பது புரியும் . இப்பொழுது அதை எப்படி லாவகமாக (KNACK) சென்று அடைவது என்பது விளங்கும். மதம் என்பது விஞ்ஞானமோ அல்லது கலையோ அல்ல. அது, ஒரு புத்திசாலிமிக்க அணுகுமுறை அது, உங்களுடைய அனுபவத்தையும் , ருசித்த தன்மையும் பொருத்தே அமையும்.

சமய முத்திரா என்ற ஆரம்பமற்ற நிலையும் , அனுபன்னா (ANUTPANNA) என்பதும் , கிட்டத்தட்ட ஒன்றுதான் . இப்பொழுது மனம் தூங்கவில்லை; அதுதானே விலகிவிட்டது. ஆனால் , இரண்டாவது நிலையில் , மனம் தூக்கத்தில் இருக்கிறது. அது மீண்டும் விழித்துக்கொள்ளக் கூடிய சாத்யம் உண்டு மூன்றாவதுநிலையில் , மனம் அவ்வளவு சுலபமாக திரும்பி வரமுடியாது; ஆனாலும் உங்கள் முயற்சியால் திரும்பக் கொண்டுவரலாம். இரண்டாவது நிலையான ஞான முத்ராவில் மனம் தானே திரும்பிவரும் மூன்றாவது நிலையில் மனம் திரும்பிவர உங்கள் முயற்சி தேவையாக இருக்கிறது.

நான்காவது நிலையான " மகா முத்ராவில் ' நீங்கள் முயற்சி செய்தாலும் மனம் திரும்ப முடியாது. ஏனெனில் மனதைக் கடந்து அதற்கு அப்பால் நீங்கள் சென்று விட்டீர்கள். நீங்கள், அதைக் கடந்து விட்டீர்கள். இந்த நான்காவது நிலைதான் , உயிர்த்தன்மையின் ஆரம்பநிலை என்று கூறலாம். இதுதான் தந்த்ராவின் நோக்கம், இலக்கு எல்லாம்.

இன்னும் மூன்று விஷயங்கள் இருக்கின்றன . அதன்பிறகு, சூத்திராவுக்குள் செல்லலாம்.

நீங்கள் ஞாபக நிலையிலிருந்து, ஞாபகமற்றநிலைக்குச் செல்ல , உங்களுக்கு ' பிரக்ஞை' (AWARENESS) உணர்வு தேவை. நீங்கள் உங்களுடைய எண்ணங்களைப்பற்றியும் , கனவுகளைப் பற்றியும் , உங்களை எப்பொழுதும் சூழ்ந்துகொண்டு இருக்கும், ஞாபகங்களைப் பற்றியும், மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். உங்கள், எண்ணங்களை, வெறுமனே கவனிக்க வேண்டும் . எண்ணங்கள் என்பது முன்னிலைதான் , பொருள்கள்தான் (OBJECT) இதில் , நீங்கள் கனவமாகவும், ஜாக்கிரதையாகவும் இருக்க வேண்டும். இதை பிரக்ஞைநிலை ஒன்று (AWARENESS ONE) என்று அழைக்கலாம்.

கிருஷ்ணமூர்த்தி இதை, தேர்ந்து எடுக்காத பிரக்ஞைநிலை' (CHOICELESS AWARENESS) என்று அழைக்கிறார் . எதையும் தேர்ந்து எடுக்காமல் , அப்படியே வரும் எண்ணங்களைப் பார்க்க வேண்டும். அதை, நல்லது, கெட்டது என்று தீர்மானிக்காதீர்கள் . அவைகள் நகர்ந்து செல்வதை, வெறுமனே கவனியுங்கள் இப்படியே அவைகளைப் பார்த்துக் கொண்டு இருந்தால் , வெறுமனே கவனித்துக்கொண்டு இருந்தால் , ஒருநாள் , எண்ணங்கள் முன்னைப்போல , அவ்வளவு வேகமாக நகர்ந்து செல்லாது. அதனுடைய நகரும் வேகம் மெல்ல, மெல்ல குறைவதை உணர்வீர்கள். பிறகு சில நாளில், அவைகளில் இடைவெளி உண்டாவதைக் கவனிப்பீர்கள் . ஒரு எண்ணம் மறைந்தபிறகு, அடுத்த எண்ணம் அவ்வளவு விரைவாக வராது. பிறகு, அந்த இடைவெளியின் நேரம் கூடிக்கொண்டே சென்று, ஒரு கட்டத்தில், ஒரு எண்ணம் தோன்றி, அடுத்த எண்ணம் வருவதற்கு, ஒரு மணி நேரம் கூட ஆகலாம் . பிறகு, எண்ணங்கள் தோன்றுவதற்கு சிலமணி நேரம் கூட ஆகலாம் . இப்படியே, வீதியில் எந்த போக்குவரத்தும் இல்லாமல், அது வெறுமையாக இருக்கிறது !

சாதாரணமாக , நீங்கள் எப்பொழுதும் அவசரமான ஓட்டத்தில் தான் இருப்பீர்கள் . எண்ணங்கள் குதித்து,

குதித்து ஓடிவரும் . ஏன் , ஒரு எண்ணத்தின் மேல் , இன்னொரு எண்ணம் சேர்ந்து, சேர்ந்து கூட்டாக வரும். ஒரு பாதையில் ஓடும் எண்ணங்கள் , அடுத்த பாதைக்கு திடீர் திடீர் என்று மாறும் . இப்படி பல வழிகளில் , பல எண்ணங்கள் மீண்டும் , மீண்டும் உங்களைத் தாக்கிக்கொண்டே இருக்கும் ஒரு சிந்தனையாளன் என்று நீங்கள் பெருமையாகப் பேசிக் கொள்ளும் ஒருவன் , எப்பொழுதும் பல வழிகளில் , மிகுந்த வேகத்தில் சென்று கொண்டிருப்பவன் என்பதை புரிந்து கொள்ளவும் . உங்களுக்கு செஸ் " விளையாடத் தெரியும் என்றால், அதற்கு 5 வழிகளில், உங்களுடைய மனம் யோசிக்க வேண்டும் என்பது உங்களுக்கு விளங்கும் . உங்களுடைய மனம் குறைந்தது 5 வழிகளில் , முன்னமே செயல்படவேண்டும் . நீங்கள் 5 வழிகளை, முன்பே யோசிக்க வேண்டும் . நீங்கள் இப்படி காயை நகர்த்தினால் , அடுத்தவன் என்ன செய்வான் என்று நீங்கள் முன்கூட்டியே யோசனை பண்ணவேண்டும் , தெரிந்திருக்க வேண்டும். அப்படி, நீங்கள் 5 வழிகளை முன்பே தெரிந்து வைத்திருக்காவிட்டால் , உங்களால் ஆட்டத்தில் ஜெயிக்க முடியாது.

' சிந்தனையாளர்கள் ' என்று அழைக்கப்படுபவர்கள் , பல வழிகளில் யோசனை பண்ண வேண்டும் . அவர்களுடைய மனம் , மிகவும் சிக்கலானது (COMPLEX) எல்லா வழிகளும் , எண்ணங்களால் நிறைந்திருக்கும் . எல்லா வழிகளிலும் , எண்ண ஓட்டம்தான் ; இரவில்கூட எண்ண ஓட்டம்தான். நீங்கள் தூங்கும் பொழுதுகூட , உங்களுடைய மனம் வேலை செய்துகொண்டுதான் இருக்கும் . உங்களுடைய இதயம் போல , அதற்கும் 24 மணி நேர வேலைதான் . அது ஒருக்காலும் விடுமுறையை, வேண்டாது. ஆனால், கடவுளுக்குக்கூட 6 நாள் வேலை செய்து, ஞாயிறு ஒரு நாள் ஓய்வு தேவையாக இருக்கிறது! ஆனால் மனம் உங்களோடு 70, 80 வருடமும் வேலை செய்துகொண்டுதான் இருக்கும். அது ஓய்வே இல்லாத ஒரு பைத்தியமாகவேதான் இருக்கும்.

நீங்கள் , ரோடின் (RODIN) சிலையின் , புகைப்படத்தைப் பார்த்திருக்கலாம். இவர் ஒரு சிறந்த

சிந்தனையாளன் என்று கருதப்பட்டவர் . ஆனால் , கீழைநாட்டவர்கள் அந்தச் சிலையைப்பார்த்து சிரிக்கக் கூடும். அவர் முகம் அவ்வளவு இறுக்கமாக இருக்கும். அவருடைய பளிங்கு சிலையின் தலையை தொட்டால் கூட , அந்த பரபரப்பு உணர்வை, நீங்கள் புரிந்து கொள்ளலாம் . இதைப்பார்த்து, நீங்கள் அரிஸ்டாட்டில் எப்படி இருந்திருப்பார் , நீட்ஷே, பெட்ரண்ட் ரஸ்ஸல் போன்றவர்கள் எப்படி இருந்திருப்பார்கள் என்று யூகித்துக்கொள்ளலாம் . நீட்ஷே, கடைசியில் பைத்திய நிலையை அடைந்தது ஒன்றும் ஆச்சரியமில்லை. அந்த ரோபின் சிலையைப் பார்த்தாலே, உங்களுக்குப் புரியும் - எப்பொழுதும் எண்ணங்கள் , எண்ணங்கள் , எண்ணங்கள்தான்.

ஞாபகநிலைக்கும் , ஞாபகமற்ற நிலைக்கும் உள்ள பாலம் , இந்த பிரக்ஞை நிலை ஒன்று தான் . குருட் ஜீவின் (GURDIFE ) முழு ஆன்மீக நிலை, " பிரக்ஞைநிலை இரண்டை' அடிப்படையாகக் கொண்டது. பிரக்ஞைநிலை ஒன்றில் இருக்கும் பொழுது, நீங்கள் முன்னிலைப் பொருள்களையும் , உங்களுடைய எண்ணங்களையும் பிரக்ஞையாகக் கவனிக்கிறீர்கள் . இது பொருள்களைப் பற்றிய பிரக்ஞைநிலையை உணர்த்துகிறது. ஞாபகமற்ற நிலையிலிருந்து, ஆரம்பமற்ற நிலைக்குச் செல்ல , உங்களுக்கு இரண்டாவது பிரக்ஞைநிலை தேவைப்படுகிறது. இதைத்தான் , " உங்களையே நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளுதல் ' (SELF REMEMBRING) என்று குருட்ஜீவ் கூறுகிறார்.

கீழை நாட்டில் , சிந்தனையாளர்களுக்கு மதிப்பு கிடையாது. அவர்கள் , சிந்தனையற்றவர்களைத்தான் (NON THINKERS) மிகவும் விரும்புவார்கள் . புத்தர் , சாரஹா, மஹாவீரர் போன்றவர்கள் சிந்தனையற்றவர்கள் தான் . அப்படியே, அவர்கள் சிந்தனை செய்தாலும், அந்த சிந்தனை, சிந்தனையற்ற நிலையை நோக்கித்தான் செல்லும்.

கிருஷ்ண மூர்த்தியின் வேலை முழுவதும் , பிரக்ஞைநிலை ஒன்றை அடிப்படையாகக் கொண்டது. மாறாக , குருட் ஜீவின் வேலை அனைத்தும் பிரக்ஞைநிலை இரண்டை அடிப்படையாகக் கொண்டது. பிரக்ஞைநிலை ஒன்றில் , நீங்கள்

பொருள்களையும் , எண்ணங்களையும் உ பாகக் கவனிக்கிறீர்கள் . அவைகளைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்கிறீர்கள். 'பிரக்ஞைநிலை இரண்டில்', நீங்கள் முன்னிலையிலும் , தன்னிலையிலும் பிரக்ஞையாக இருக்கிறீர்கள் (BOTH SUBJECT AND OBJECT) உங்களுடைய பிரக்ஞைத்தன்மை என்ற அம்பு இரண்டு பக்கமும் கூறாக இருக்கிறது. ஒரு பக்கத்தில், நீங்கள் உங்களுடைய எண்ணங்களில் பிரக்ஞையாக இருக்கிறீர்கள் . மறுபக்கத்தில் , நீங்கள் எண்ணுபவரிடமும் ( மனம் ) பிரக்ஞையாக இருக்கிறீர்கள் . அதாவது தன்னிலையும் , முன்னிலையும் பிரக்ஞையில் இருக்கின்றன . கிருஷ்ணமூர்த்தியின் வேலையைவிட , குருட்ஜீவின் வேலை, மிகவும் ஆழமாகச் செல்கிறது. ஆகவேதான் , அவர் , உங்களையே ஞாபகப்படுத்திக் கொள்ளல் என்று அழைக்கிறார்.

ஒரு எண்ணம் , உங்களுடைய மனதில் நகரந்துகொண்டு இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். உதாரணமாக, கோபம் என்ற கருமேக எண்ணம் உங்களுடைய மனதில் நகர்ந்து கொண்டு இருக்கிறது. நீங்கள் யார் கவனிக்கிறார்கள் என்று கவனிக்காமல் அந்தக் கருமேகத்தை மட்டும் கவனிக்க முடியும் இதுதான் பிரக்ஞைநிலை ஒன்று நீங்கள் மேகத்தையும் கவனித்துக்கொண்டு, அதே சமயத்தில், "நான் அதைக் கவனிக்கிறேன் " என்று தொடர்ந்து ஞாபகம் வைத்துக்கொண்டு, உங்களையும் கவனித்துக்கொண்டு இருப்பதுதான் , பிரக்ஞைநிலை இரண்டு என்பதாகும் . இதைத்தான் குருட்ஜீவ் , "தன்னையே ஞாபகப்படுத்திக் கொள்ளல்" என்கிறார்.

ஆகவே, ஞாபகத்திலிருந்து. ஞாபகமற்ற நிலைக்குச் செல்வதற்கு பிரக்ஞைநிலை ஒன்று. உதவியாக இருக்கும் . ஆனால் , ஞாபகமற்ற நிலையிலிருந்து, ஞாபக நிலைக்கு, நீங்கள் வெகு சுலபமாக வந்து அடைய முடியும் . ஏனென்றால் , அப்பொழுது மனம் உறக்கத்தில் இருக்கிறது. பிரக்ஞைநிலை ஒன்றினால், நீங்கள் மனதுக்கு மயக்க மருந்துதான் கொடுக்க முடியும் . அது நல்ல தூக்கத்தில் , மிகுந்த ஓய்வு

நிலையிலும் , மிகவும் துடிப்போடு எழும்பத் தாயாராக இருக்கிறது. ஆனால் , இது முடிவு அல்ல . இந்த ஓய்வுநிலை தேவைதான். ஆனால், இது போதாது.

பிரக்ஞைநிலை இரண்டைக்கொண்டு, மனம் ஆரம்பமற்ற நிலைக்கு - அதாவது ஆரம்பிக்க , முளைக்க தயார்நிலைக்குச் - செல்கிறது. இப்பொழுது, அது மீண்டும் திரும்பி விதை வடிவத்துக்குச் செல்வது, மிகவும் கஷ்டம் நீங்கள் அதை கஷ்டப்பட்டுத் திருப்ப முடியும். ஆனால், அதுவே, தானே திரும்பிவராது.

அடுத்து, பிரக்ஞைநிலை மூன்று' (AWARENESS THREE) இருக்கிறது என்று தந்த்ரா சொல்கிறது. இந்த நிலை என்ன ? நீங்கள் தன்னிலையையும் , முன்னிலையையும் , அல்லது பார்ப்பவனையும் , பார்க்கும் பொருளையும் மறந்த நிலையில் , நீங்கள் வெறும், சுத்தமான பிரக்ஞையில் இருப்பதுதான் அந்த மூன்றாவது பிரக்ஞைநிலை நீங்கள் எதன் மேலும் , உங்களைச் செலுத்தவில்லை. எதையும் கவனிக்காமல், எதிலும் மனதை ஒருமைப்படுத்தாமல் , வெறும் 'கவனித்தலாக' இருக்கிறீர்கள்

அதாவது, பிரக்ஞைநிலை ஒன்றில் , நீங்கள் ஒரு பொருளின் மேல் மனதை செலுத்துகிறீர்கள் ; பிரக்ஞைநிலை இரண்டில் , நீங்கள் உங்களையும் கவனிக்கிறீர்கள் , அந்தப் பொருளையும் கவனிக்கிறீர்கள் . பிரக்ஞைநிலை மூன்றில் , எல்லாக் கவனித் தலையும் விட்டுவிட்டு பிரக்ஞையாக இருக்கிறீர்கள் . இந்த மூன்றாவது நிலைதான் , உங்களை மனமற்ற நிலைக்கு, அழைத்துச் செல்லும். உ

இப்பொழுது, சூத்திராவுக்கு வருவோம் . ஞாபகமின்மை என்பதே மரபு சொல்லும் உண்மை மனம் மனமற்றதாவதே உண்மை இதுதான் நிறைவு. இதுதான் உயர்வானபொருள்

தந்த்ரா, உண்மையை இரண்டு விதமாகப் பிரிக்கிறது. அதாவது அனுமான (HYPOTHETICAL) உண்மை (' வியல்காரிக்கா' ) VYAVHARIKA), அடுத்து ' முடிவான (ULTIMATE) உண்மை' ( பரமார்திகா (PARMARTHIKA) என்றும் இரண்டாகப் பிரிக்கிறது.

' அனுமான உண்மை என்பது பெயர் அளவில் தான், மிகவும் மேலோட்டமாக இருக்கிறது என்று அர்த்தம். அதை ஏன் ' உண்மை என்று அழைக்கிறோம் என்றால், அது உண்மையைப் போல இருக்கிறது. அது உண்மையைப் போல சற்று ஜொலிக்கிறது. எப்படியென்றால் , என்னுடைய புகைப்படத்தை யாராவது, உங்களிடம் காண்பித்தால், நீங்கள், "ஆமாம். இது உண்மையான படம்தான் என்று கூறுகிறீர்கள் . அந்த உண்மையான படம் '' என்றால் என்ன ? அது, எதைக் குறிக்கிறது? அது, உண்மையைப் போல அவ்வளவு தத்ரூபமாக இருக்கிறது என்பதுதான் , நீங்கள் கூறுவதன் அர்த்தம். அந்தப் படமே, பொய்தான் - ஏன் , எல்லாப்படங்களும் பொய்தான் . அது வெறும் தாள்தான் நான் எப்படி ஒருதாளின் மேல் இருக்க முடியும்? நான் எப்படி ஒரு தாளாக முடியும்? நான் எப்படி வெறும் கோடுகளாக மாற முடியும் ? தத்ரூபமான புகைப்படம் கூட, வெறும் புகைப்படம் தான். நீங்கள், உண்மையான படம் அல்லது தத்ரூபமான படம் என்று குறிப்பிடுவது, அது உண்மையான என் உருவத்தைப் போலவே இருக்கிறது என்ற அர்த்தத்தில்தான் சொல்கிறீர்கள் ஆனால் , அந்தப் படம் உண்மை இல்லை.

ஒரு நிகழ்ச்சி.

ஒரு அழகான , வாயாடியான பெண் , புகழ்பெற்ற ஓவியர் , பிக்காஸோவை (PICASSO) சந்தித்து, அவரைப் பற்றியும் , அவருடைய ஓவியங்களைப் பற்றியும் அவரே சலித்துக்கொள்ளும் அளவுக்குப் புகழ்ந்து பேசிக்கொண்டு இருந்தாள் . அவளை வெளியேற்றவும் முடியவில்லை ஏனென்றால், அவள், ஒரு பணக்கார வாடிக்கையாளர் . அவருடைய பல ஓவியங்களை, மிகுந்த விலை கொடுத்து வாங்கிச் செல்வாள் . ஆகவே, அவள் சொல்வதையெல்லாம் கேட்டுக்கொண்டுதான் இருக்க வேண்டும்.

முடிவில் அவள் , ஒரு நாள் , உங்களுடைய புகைப்படத்தை ஒரு நண்பரின் வீட்டில் பார்த்தேன் . அது அவ்வளவு தத்ரூபமாக , உயிரோடு இருப்பது போல இருந்தது. அதை மிகவும் விரும்பி, அதில் முத்தம் கொடுத்துவிட்டேன்' என்றாள்.

பிக்காஸோ, ' கொஞ்சம் பொறுங்கள் . அந்தப் படம் ,

திருப்பி உங்களுக்கு முத்தம் கொடுத்ததா?

அவள், "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? உங்களுக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது? ஒரு படம் எப்படி முத்தம் கொடுக்கும்?"

பிக்காஸோ, அப்படியென்றால் , அது நான் இல்லை. நிச்சயமாக அது நானாக இருக்க முடியாது

ஒரு படம் , அசலைப்போலவே இருப்பதால் , அது உண்மையாகிவிடாது. அது வெறும் தாள்தான் , பொய்தான்.

இதைத்தான், தந்த்ரா, 'வியவ்காரிக்கா உண்மை என்று அழைக்கிறது. இதைத்தான் , அந்தக் காலந்தொட்டே, உண்மையென்றே கூறி வந்திருக்கிறார்கள் . ஞாபகத்தைப் பற்றி, உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் , ஞாபகமற்ற நிலையைப் பற்றி, நீங்கள் ஒரு உண்மையான குருவின் முன்னால் தான் , தெரிந்துகொள்ள முடியும் . அல்லது நீங்கள் தியானத்தில் மற்றும் பிரார்த்தனையில் இருக்கும் பொழுது தெரிந்து கொள்ளலாம் . ஆனால் , இந்த ஞாபகமற்றநிலை என்பதுகூட ஒரு அனுமானம்தான் . அது, ஒரு புகைப்படத்தைப் போல உண்மை இல்லை. அது, மனமற்ற நிலையைப்போல (NO MIND) தோற்றம் அளிக்கும். அது வெறும் தோற்றம்தான். உண்மையான மனமற்றநிலை அல்ல.

அந்த முடிவான நிலையைப் பற்றிய , பிரக்ஞையை ஏற்படுத்த இது முன்னோடியாக உதவுகிறது. இது, உங்களுடைய இலக்கு இல்லை என்று, தந்த்ரா மீண்டும் , மீண்டும் மறுக்கிறது. இது வெறும் ஆரம்பநிலைதான் . ஆனால் , பலர் , இந்த ஞாபகமற்ற நிலையை அடைந்ததும் , மனமற்ற நிலையின் சில ஒளிக்கீற்றுகளை அவர்கள் உணர்வார்கள் . இதனால் , தான் அடைய வேண்டிய அந்த மனமற்ற நிலையை, அடைந்துவிட்டதாக , தவறாகக் கருதி, அங்கேயே நின்று விடுகிறார்கள். மேலும், நீங்கள், உங்களுடைய ஞாபகநிலையை ஒப்பிடும் பொழுது, இந்த ஞாபகமற்ற நிலை, மிகவும் அழகாக, மிகவும் ஆனந்தமாக, மிகவும்

உயிரோட்டமுள்ளதாகவே தோன்றும் . ஆனால் , மனமற்ற நிலையை ஒப்பிடும்பொழுது, இது ஒன்றுமே இல்லை! ஏனென்றால் , இன்னும் ஞாபகம் உங்களிடம் இருந்து கொண்டே இருக்கிறது. ஆனால், அது மிகுந்த உறக்கத்தில் , மிகுந்த ஓய்வு நிலையில் இருக்கிறது. எந்தத் தருணத்திலும் , அது எழுந்திருக்கக் கூடும் . மனம் , தான் மீண்டும் வர , தகுந்த சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறது. ஆமாம் , போக்குவரத்து நெரிசல் , சற்று ஓய்ந்து இருக்கிறது. அது மறுபடியும் ஆரம்பிக்கலாம்.

அந்த ஒளிக்கீற்றினால், நீங்கள் மேற்கொண்டு செல்ல ஊக்கமடைந்தால், அது மிகவும் நல்லதுதான். ஆனால், அது உங்களை அதிலேயே நிறுத்திவிட்டால் , நல்லது அல்ல இதுதான் , எல் எஸ் . டி. (LSD), மரியஜீனா, மெஸ்காலின் (MESCALINE) போன்ற போதை மருந்துகளால் நேரிடுகிறது. - அதாவது இரண்டாவது நிலையாகிய , ஞாபகமறதி. அந்தப் போதை மருந்துகளின் தாக்குதலால் உங்களுடைய ஞாபகம் சற்று மறைகிறது. இது, ரசாயனத்தால் தூண்டப்படும் செயல் என்பதை மறக்க வேண்டாம்.

இதைத்தான் , மின்சார அதிர்ச்சியும் (ELECTRIC SHOCK) ஏற்படுத்துகிறது. தங்களுடைய ஞாபக எண்ணமூட்டைகளை மறக்க முடியாத நிலையில் , அதைவிட்டு வெளியேற முடியாத தன்மையில் , அந்த ஞாபகங்கள் சிறிது நேரம் மறைய , அந்தப் பைத்திய நிலையில் உள்ளவர்களுக்கு, இந்த அதிர்ச்சி வைத்தியம் மின் அதிர்ச்சி வைத்தியத்தால் என்ன நிகழ்கிறது.

என்ன தங்களுடைய எண்ணங்களோ ஞாபகங்களோ ஒரு பெரும் சுமையாக மாறி தாங்களாகவே அதிலிருந்து மீளமுடியாத நிலையில் உள்ள பைத்தியம் பிடித்தவர்களுக்கு இந்த வைத்தியம் அளிக்கப்படுகிறது. இன்சுலின் மூலமாகவும் இதைச் செய்யலாம். இந்த மின்சாரம் அவர்களின் மூளையின் அலைவரிசைகளில் பாய்ந்து அதிர்ச்சி ஏற்படுத்துகிறது. சில விநாடிகள் நிலைகுலைந்து,

குழம்பிப் போய் விடுகிறார்கள் . அந்த நொடியில் அவர்கள் நினைக்கிறார்கள் என்பது அவர்களுக்கு மறந்து போய் விடுகிறது. மீண்டும் சுயநிலைக்கு வரும் போது, அந்த எண்ணங்களை மீண்டும் அவர்கள் அடைவதில்லை. ஆகவே, இந்த அதிர்ச்சி வைத்தியம், ஓரளவு உதவி செய்கிறது என்று கூறலாம். ஆனால், இந்த மின்சார மற்றும் ரசாயன அதிர்ச்சிகள் உண்மையான செயலை செய்வது இல்லை அது ஒரு புகைப்படம் போலத்தான், பொய் தோற்றம்தான்.

ஞாபகமின்மை என்பதே மரபு சொல்லும் உண்மை மனம் மனமற்றதாவதே உண்மை இதுதான் நிறைவு. இதுதான் உயர்வானபொருள்

ஆகவே, இத்துடன் திருப்திப்பட்டுக் கொள்ளாதீர்கள். நீங்கள் உண்மையான மனமற்ற நிலையை அடைவதற்கு, நீங்கள் நான்காவது நிலையை எட்ட வேண்டும்.

அந்த மனமற்ற நிலைதான், மிகவும் நிறைவான, உயர்வான நிலை. ஏனென்றால், நீங்கள் உங்களுடைய ஆரம்பநிலைக்கு அல்லது வாழ்வின் மற்றும் உயிர் இயக்கத்தின் மூல நிலைக்கு வந்து சேர்ந்துவிட்டீர்கள். இந்தக் கட்டத்தை , நீங்கள் அடையாதவரை, உங்களிடம் எந்த நிறைவோ அல்லது திருப்தியோ முழுமையடையாது. இதுதான் உண்மையான ஆன்மீக மலர்ச்சி. இதுதான் ' சகஸ்ரார் ' என்பது. அதாவது, இந்தக் கட்டத்தில் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை மலர் மலர்கிறது. உங்களுடைய உயிர்த்தன்மை முற்றிலும் விடுதலையடைந்து, நறுமணமிக்கதாக , வெளியே மணம் பரப்பி, உங்களை கொண்டாட்டத்திலும், மகிழ்ச்சிப் பெருவெள்ளத்திலும் ஆழ்த்தும்.

இதுதான் கடவுள் என்பது. இது மிகமிக மேலான நிலை. இதற்குமேல் எதுவுமே இல்லை. இதுதான் நிர்வாணா. இதை சுமம் போனம் ' (SUMMAM BONAM) என்றும் அழைக்கலாம். சாரஹா சொல்லுகிறார் :

நண்பர்களே.

இந்த உயர்வான பொருளை அறிந்துகொள்வீர் , நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . மூன்று பிரக்ஞைநிலைகள் இருக்கின்றன . முதலாவது

பிரக்ஞைநிலை, பிற பொருள்கள் சம்மந்தப்பட்டது. இரண்டாவது பிரக்ஞைநிலை பார்க்கப்படும் பொருளையும் , அதைப் பார்ப்பவனையும் பிரக்ஞையாகப் பார்ப்பது. மூன்றாவது பிரக்ஞைநிலை என்பது சுத்தமான பிரக்ஞைநிலை. ஆகவே, இந்த மூன்று பிரக்ஞைநிலைகளையும் கடந்து, அந்த நிர்வாணா நிலையை அடையுங்கள்.

' சாரஹாவின் புகழ்மிக்க பிரசங்கத்தைக் கேட்க , அங்கே குழுமியிருந்த அரசனையும் , மக்களையும் பார்த்து அவர் , ' நண்பா' என்று அழைக்கிறார் . இந்த வார்த்தையை, நீங்கள் ஆழ்ந்து புரிந்துகொள்ள வேண்டும்.

ஒரு உண்மையான குருவைப் பொறுத்த வரையில் சீடனை ஒரு நண்பனாகக் கருதலாம் . ஆனால் சீடனைப் பொறுத்தவரையில் குருவை அப்படிக் கருத முடியாது. இது குறித்து சில சந்நியாசிகள் எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள் ஒரு சந்நியாசி "பகவான் நான் உங்களை ஒரு குருவாகக் கருத முடியவில்லை நண்பனாகவே கருதுகிறேன் . இதில் ஏதும் தவறு இருக்கிறதா?" என்று எழுதி இருக்கிறார்.

எனது தரப்பிலிருந்து, எந்த மறுப்பும் கிடையாது. அது மிகவும் சரிதான் . ஆனால் , உங்கள் பக்கத்திலிருந்து ஏதோ நழுவிக்கொண்டு இருக்கிறது. நீங்கள் முடிவில், இழப்பைத்தான் சந்திக்க நேரிடும். ஏன் அப்படி?

என்னைப் பொருத்த அளவில் , நீங்களெல்லாம் என்னுடைய நண்பர்கள் தான் . ஒரு நாள் , நீங்களெல்லாம் , என்னைப்போல விழிப்புணர்வு பெறுவீர்கள். நீங்கள் எல்லோரும் புத்தர்கள்தான்! ஒரு குருவைப் பொருத்தவரை, இந்த முழு உயிரினங்கள் அனைத்தும் ஏற்கனவே, ஞானம் அடைந்ததுதான் . இந்த பாறைகள் , மரங்கள் , நட்சத்திரங்கள் , விலங்குகள் , பறவைகள் மற்றும் ஆண்களும் - பெண்களும் , ஏன் எல்லாமே ஞானமடைந்ததுதான் . ஆனால் , அவைகளின் ஞானவெளிப்பாடு, காலத்தால்

வேற்றுமைப்படுத்தப்படுகிறது. நீங்களெல்லாம், அந்த நிலையில்தான் இருக்கிறீர்கள் . ஆனால் , இதை நீங்கள் அறிய முடியாது - இதுதான் உண்மை. ஒரு குருவுக்கு இது நன்றாகத் தெரியும்.

என்றைக்கு நான் , என்னுடைய உயிர்த்தன்மையை அறிந்து கொண்டேனோ, அன்றைக்கே இந்த உயிரினங்கள் ( பாறைகள் , உலோகப் பொருள்கள் போன்றவைகள் ) அனைத்திலும் செயல்படும் . அந்த உயிர்த்தன்மையை அறிந்து கொண்டேன் . அன்று முதல் , நான் எதையும் , ஞானமடையாத நிலையில் பார்க்கவே இல்லை. அது முடியாத காரியம் . ஆமாம் , உங்களுடைய உண்மை நிலையை, உங்களால் அடையாளம் கண்டுகொள்ள முடியாது. ஆனால், அதை என்னால் மறுக்கமுடியாது. ஆகவே, என்னைப் பொருத்தவரையில் , நீங்களெல்லாம் என்னுடைய நண்பர்கள் தான் . நான்தான் , நீங்கள் ! ஆனால் , உங்களைப் பொருத்தவரை, நீங்கள் என்னை ஒரு குரு என்று கருதாவிட்டால் , என்னை ஒரு குரு என்று ஒப்புக்கொள்ளா விட்டால் . இதை நீங்கள்தான் தீர்மானித்துக் கொள்ளவேண்டும் . ஆனால் , நீங்கள் எதையோ இழக்க நேரிடும்.

இதில் என்ன வித்தியாசம் ? நீங்கள் ஒருவனை, உங்களுடைய நண்பன் என்று ஏற்றுக் கொண்டால் , நீங்களும் , அவனும் சமம் , சம நிலையில் இருக்கிறீர்கள் என்று அர்த்தம் . ஆமாம் , நீங்களெல்லாம் என்னுடைய நண்பர்கள் தான் ஏனென்றால் , நீங்களும் நானும் ஒரே நிலையில் அதாவது

சமநிலையில் இருப்பதைக் காண்கிறேன் . ஆனால் , நீங்கள் என்னை ஒரு நண்பன் என்று கருதினால் , உங்களுடைய வளர்ச்சி தடைப்படும்.

நான் உங்களை என்னுடன் சமநிலையில் பார்த்தால் , நான் உங்களுடைய உயிர்த்தன்மையை என்னுடைய நிலைக்கு உயர்த்துகிறேன். ஆனால், நீங்கள் என்னை உங்களுடைய நிலையில் பார்த்தால் , நீங்கள் என்னை

உங்களுடைய நிலைக்கு கீழே இழுக்கிறீர்கள் . இந்த வித்தியாசத்தைப் புரிந்துகொள்ளுங்கள் , உங்களுக்கு வேறு எந்த நிலையைப் பற்றியும் தெரியாததால் , நீங்கள் உங்களுடைய நிலைக்குத்தான் , என்னைக் கீழே இழுக்க முடியும்.

ஏன் , உங்களால் வேறு ஒருவரை, உங்களுடைய குருவாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை? அதற்கு முக்கிய காரணம் , உங்களுடைய அகங்காரம்தான் என்னை உங்களுடைய நண்பனாக ஏற்றுக்கொள்ள , உங்களுடைய அகங்காரம் விரும்புகிறது!

ஆகவே, இதை நீங்கள்தான் தீர்மானிக்க வேண்டும் நீங்கள் அப்படியே விரும்பினால் , எனக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. ஆனால் , பிறகு, உங்களிடம் எதுவும் நிகழவில்லை என்றால் , அதற்கு நான் பொறுப்பல்ல. அதற்கு முழுப் பொறுப்பும் நீங்கள் தான். ஏனென்றால் , நீங்கள்தான் அந்தத் தடையை ஏற்படுத்தியிருக்கிறீர்கள் . என்னை நீங்கள் மேல் நோக்கிப் பார்த்தால்தான், நான் உங்களை நோக்கி, நீர் போல கீழே விழமுடியும் . சக்தி எப்பொழுதும் கீழ்நோக்கியே பாயும்.

நீங்கள் என்னை ஒரு நண்பனாகக் கருதினால், நான் எதையும் இழக்கப்போவது இல்லை. நீங்கள் என்னை ஒரு எதிரியாகக் கருதினாலும் , நான் எதையும் இழக்கப்போவது இல்லை. ஆனால் , இரண்டு தன்மையிலும் இழக்கப்போவது நீங்கள் தான் . இருவருமே, என்னைச் சமமாகவே பாவிக்கிறார்கள் . அவர்கள் இருவரும் வெவ்வேறு அல்ல.

சாரஹா, ' இருக்கட்டும் முழு பிரக்ஞை அதிலேயே, நண்பா' என்று கூறுகிறார்.

ஒரு குருவைப் பொருத்தவரையில் , எல்லோரும் நண்பர்கள் தான் . ஏன் . என்னை எதிரி என்று கருதுபவர்களும் எனக்கு நண்பர்கள்தான்.

அடுத்து,

ஞாபகமின்மையில் மனமானது உள்ளிழுத்துக்கொள்ளப்படும் . இது உணர்ச்சிகளால் முழுமையானதும் தூய்மையானதும் ஆகும் . உலகின் நல்லதாலோ கெட்டதாலோ இது மாசுபடுத்தப்பட

மாட்டாது. சேற்றிலிருந்து வளரும் தாமரை சேற்றால் பாதிக்கப்படாமல் இருப்பது போல.

' ஞாபகமின்மையில் மனமானது' ' ஞாபக நிலையை எந்த வித தீர்ப்பும் இன்றி வெறுமனே கவனித்தால் , அது ஞாபகமற்ற நிலையில்

(NONMEMORY)

மறைந்துவிடும் . அப்படி மனம , மறைய ஆரம்பிக்கும் பொழுது, ஒரு புதிய சக்தி உங்களிடம் உண்டாகிறது - அதுதான் இதய சக்தி (HEART ENERGY)

"சரியான சுத்த உணர்வை அடையுமாம் இதயம்"

பிறகு இதயம் சரியாக இயங்கத் தொடங்குகிறது. மனம் , அந்த ஞாபகமற்ற நிலையில் , தன்னையே கரைத்துக் கொள்ளும் பொழுது, அந்த மனத்துக்கு அல்லது எண்ணங்களுக்கு சென்ற சக்தி, இப்பொழுது இதயத்தை அடைந்து, அன்பாக மாறுகிறது. சக்தியை அழிக்க முடியாது. ஆனால் , அதை மாற்றலாம் . அதனுடைய தன்மையை, இயல்பை மாற்றலாம்.

உங்களுடைய சக்தியில் , கிட்டத்தட்ட 80 சதம் , மனத்திற்கு செல்கிறது. ஆனால் , அதற்கு மாறாக , உங்களுக்கு எதையுமே, அது திருப்பிக் கொடுப்பது இல்லை. ஆமாம், ஒன்றுமே உங்களுக்கு அது திருப்பிக் கொடுப்பது இல்லை. அது வெறுமனே உங்களுடைய சக்தியில் , 80 சதம் எடுத்துக்கொள்கிறது. அது ஒரு பாலைவனம் போல இருக்கிறது. ஒரு பாலைவனத்தில், ஒரு ஆறு சென்றால் , ஆற்றின் நீர் , அந்த பாலைவனத்தால் எப்பொழுதும் உறிஞ்சப்பட்டுக்கொண்டே இருக்கும். ஆனால், அந்தப் பாலைவனம் , அதற்கு ஈடாக எதையுமே திருப்பித் தருவது இல்லை. ஏன் , அந்தப் பாலைவனமே கூட செழிப்பாக மாறுவது இல்லை. அதில் எந்த புல்லோ, மரமோ வளர்வது இல்லை. அதில் சிறு குட்டை அல்லது குளம் (POOL OF WATER) கூட இருப்பது இல்லை. அதைப்போல , உங்களுடைய மனம் , சக்தியை உறிஞ்சிக்கொண்டு, வெறுமனே இறந்த பாலைவனம் போல் உலர்ந்து, வரண்டு இருக்கிறது. மனத்தைவிட , ஏமாற்றும் தன்மையுடையது. உங்களுடைய உடலில் வேறு எதுவும் கிடையாது. இந்த வறண்ட பாலைவனத்தை நம்பித்தான் நீங்கள் , உங்களையே

இழக்கிறீர்கள்.

இப்படி நடக்கும்பொழுது, அதாவது ஞாபகநிலை, ஞாபகமற்ற நிலையாக , தன்னையே அழித்துக்கொள்ளும் பொழுது, மாறும் பொழுது - திடீரென்று உங்களுடைய முழுக்குணமே மாறி இருப்பதை உணர்வீர்கள், உங்களிடம் மிகுந்த அன்பும், கருணையும் பொங்கி வழியும் . அந்த வறண்ட பாலைவனத்துக்கு (மனம்) சென்ற சக்தி, இப்பொழுது செழிப்பான நிலத்துக்கு ( இதயம் ) பாய்கிறது என்று சாரஹா கூறுகிறார்.

இது உணர்ச்சிகளால் முழுமையானதும் தூய்மையானதும் ஆகும் . உலகின் நல்லதாலோ கெட்டதாலோ இது மாசுபடுத்தப்பட மாட்டாது.

உங்களுடைய இதயதுக்கு, நல்லது எது, கெட்டது எது என்று தெரியாது. அதனால் , மனம் போல வேற்றுமைப்படுத்திப் பார்க்க முடியாது. எல்லா வேறுபாடுகளும் மனத்தைச் சார்ந்ததே. இதயம் எந்தத் தகுதியையும் பார்க்காமல் அன்பைப் பெறுகிறது. எல்லோரிடமும் அன்பு செலுத்துகிறது. இதயம் மிகவும் வெகுளியானது (INNOCENT)

உலகின் நல்லதாலோ கெட்டதாலோ இது மாசுபடுத்தப்பட மாட்டாது. சேற்றிலிருந்து வளரும் தாமரை சேற்றால் பாதிக்கப்படாமல் இருப்பது போல.

அந்த இதயம் , இப்பொழுது மனதுக்குச் சென்ற சக்தியால் வளர்கிறது. எந்த சக்தி , எண்ணம் , ஆசை, காம இச்சை.,. என்று மாறியதோ, - அது அசுத்தமான சேறுதான் - அதே சேற்றிலிருந்துதான் , கருணை, அன்பு என்ற தாமரைமலர் செழித்து மேலே வளர்கிறது. ஆனால் , இப்பொழுது அந்தத் தாமரை, சேற்றினால் மாசுபடுத்தப்படுவது இல்லை, அசுத்தப்படுத்தப்படுவது இல்லை.

சாரஹா மீண்டும் அந்த அரசனிடம்

ருந்தபோதிலும் சில விஷயங்களை நிச்சயமாக கண்கட்டு வித்தையை அணுகுவதுபோல் பார்க்க

வேண்டும். இலக்கு ஏதும் இல்லாமல் சம்சாராவையோ நிர்வாணாவையோ நீ ஒத்துக்கொள்ளவோ மறுக்கவோ செய்யலாம் மனத்தின் இருப்பைப் போக்கி - மனதில் உறுதியுடன்.

சாரஹா, ஒரு சிறந்த முறையை, அந்த அரசனுக்கு வழங்குகிறார் . அதை, கவனமான நீங்களும் கேளுங்கள். அதை தியானமாக்குங்கள். அதை முயற்சி செய்யுங்கள்.

நீங்கள் உங்கள் வாழ்க்கையில் , பல லட்சம் கனவுகளைக் கண்டிருக்கிறீர்கள். அவைகள் கனவுகள் என்றும் உங்களுக்கு விளங்கும். ஆனால், மீண்டும், மீண்டும் பல கனவுகளை கண்டுகொண்டேதான் இருக்கிறீர்கள். நீங்கள், அவைகள் வெறும் கனவுகள் என்பதை மீண்டும், மீண்டும் மறுக்கிறீர்கள்; மறுபடியும் அதை காணும் பொழுது, அது உண்மையாகத் தோற்றம் அளிக்கிறது. இன்று இரவும் , நீங்கள் கனவுகளை காணத்தான் போகிறீர்கள். இது என்ன மாதிரியான பிரக்ஞையற்ற நிலை? நீங்கள் இரவில் தூங்கும் பொழுது கனவுகளை உண்மையென்று நம்புகிறீர்கள். காலையில் விழித்ததும், அது பொய் என்று உணர்கிறீர்கள். ஆனால், அவைகளை உங்கள் பிரக்ஞையற்ற மனம் மறந்துவிட்டு, மீண்டும் கனவுகளை உங்களிடம் ஏற்படுத்துகிறது. உங்களுக்கு அது வெறும் கற்பனைதான், தோற்றம்தான் என்று தெரிந்தும் , மீண்டும் , மீண்டும் அதற்குப் பலியாகிறீர்கள். ஏன், அந்த கனவுகளிலேயே, அது பொய் என்று உங்களால் உணர முடியவில்லை. அப்படி நீங்கள் பார்ப்பதை, எது தடுத்துக்கொண்டு இருக்கிறது? எவ்வளவு கனவுகள் ! இப்படி அவைகளில் அனுபவப்பட்டாலும் அது உண்மை இல்லை என்று திரும்பத் திரும்ப உணர்ந்து கொண்டாலும், அனுபவப்பட்டாலும், அதை உங்களால் தவிர்க்க முடியவில்லை. ஆனால், ஒன்றை மட்டும் உறுதியாக நம்புகிறீர்கள். அதாவது கனவுகள் பொய் என்று!

தந்த்ரா, ஒரு புதிய முறையை அறிமுகப்படுத்துகிறது. அது என்னவென்றால் , நீங்கள் விழித்துக்கொண்டு இருக்கும்பொழுது, இந்த உலகமே கனவு என்று

எண்ணுங்கள் . உதாரணமாக , இப்பொழுது, நீங்கள் என்னைக் கேட்டுக்கொண்டு இருக்கிறீர்கள். இதையே, ஒரு கனவு என்று எண்ணுங்கள். இப்பொழுது, இப்படி நீங்கள் நினைப்பது, கனவுகளில் அப்படி நினைப்பதைவிட சுலபம்தான் . நீங்கள் , என்னைக் கேட்பது போல, உங்களுடைய கனவுகளில் காணலாம். ஆனால் , அவைகள் பொய் என்று அப்பொழுது நினைப்பது அவ்வளவு சுலபம் இல்லை ஏனென்றால் நீங்கள் தூங்கிக்கொண்டு இருக்கிறீர்கள் . அதாவது உங்களுடைய பிரக்ஞையான மனம் தூங்கிக்கொண்டு இருக்கிறது. ஆனால், இப்பொழுது, நீங்கள் என் பேச்சு கனவுதான் என்று நினைக்க முடியும் . " இந்த பகவானும் கனவுதான் , இவர் பேசுவதும் கனவுதான் , மற்றும் இந்த மரங்கள், பூக்கள், பறவைகள் பாடுவது.... எல்லாமே கனவுதான் , எல்லாமே கண்கட்டு வித்தைதான் (MAGIC) என்று உங்களால் நினைக்க முடியும். இப்படித் தொடர்ந்து, இரண்டு அல்லது மூன்று மாதம் நினைத்துக் கொண்டிருங்கள் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள் . நீங்கள் அப்படித் தொடர்ந்து நினைத்துக் கொண்டிருப்பதால் , திடீரென்று ஒரு நாள் உங்கள் கனவுகளிலேயே, அது கனவுதான் என்று விளங்கிக்கொள்வீர்கள்.

பயிற்சியினால் , ஒரு உண்மையான மரம்கூட , கனவாகத் தெரியும்பொழுது, கனவில் வரும் மரம் மாத்திரம் , எப்படி உண்மையாகத் தெரியும் ? தந்த்ரா என்ன சொல்கிறது என்றால் , நீங்கள் உண்மையாகப் பார்க்கும் மரம் கூட கனவுதான், அது உண்மை இல்லை என்று.

அப்படியென்றால் , எதை உண்மையானது என்று தந்த்ரா கூறுகிறது? எது எப்பொழுதும் நிலையாக இருக்கிறதோ, அதுதான் உண்மை என்று அது கூறுகிறது. எவைகளெல்லாம் வந்து, செல்கின்றனவோ, எவைகளெல்லாம் , தோன்றி மறைகிறதோ, அவைகளெல்லாம் உண்மை இல்லை தந்த்ராவின்படி, பொய் என்பது இதுதான் . எவை, தற்காலிகமாக இருக்கிறதோ, அவைகள் உண்மையானது அல்ல எது எப்பொழுதும் சாசுவதமாக இருக்கிறதோ அதுவே உண்மையான 'உண்மை'.

இந்த மரங்கள், சில நாட்களுக்கு முன்புவரை இருந்தது

இல்லை. இவைகள் , இன்னும் சில வருடங்களுக்குப் பிறகு இருக்கப்போவது இல்லை. ஏன் , நாமேகூட, சில வருடங்களுக்கு முன்பு இருந்ததில்லை. அதைப் போல, இன்னும் சில வருடங்களுக்குப் பிறகு இருக்கப் போவது இல்லை. நீங்களே ஒரு நீண்ட கனவுதான்!

இரவில் , உங்களுடைய கனவு சிலமணி நேரம் நீடிக்கலாம் . ஆனால் , வாழ்க்கை என்ற கனவு, சில வருடங்கள் நீடிக்கலாம் . அதாவது, 60 அல்லது 70 வருடங்கள் என்று. ஆனால் , இந்தக் கால வேற்றுமை அவைகளுடைய அடிப்படைத் தன்மையில் எந்த வேற்றுமையையும் ஏற்படுத்தவில்லை. ஒரு மணி நேர கனவும், 100 வருட கனவும் ஒன்றுதான்.

இந்த பூமியில் , எத்தனை மக்கள் வாழ்ந்து, மடிந்திருக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமா? இப்பொழுது அவர்களெல்லாம் எங்கே? இப்பொழுது அவர்கள் இல்லையென்றால் , அது எந்த விதத்தில் வித்தியாசப்படுகிறது? அவர்கள் உயிரோடு இருப்பதற்கும் , இப்பொழுது உயிரோடு இல்லாமல் இருப்பதற்கும் என்ன பெருத்த வேறுபாடு? - எல்லாம் மறைந்துவிட்டன . எவைகளெல்லாம் தோன்றி, மறைகிறதோ, அவைகள் எல்லாம் கனவுதான்.

இருந்தபோதிலும் சில விஷயங்களை நிச்சயமாக கண்கட்டு வித்தையை அணுகுவதுபோல் பார்க்க வேண்டும்.

சாரஹா வழங்கிய , மிகச் சிறந்தமுறை, இதுதான் . எல்லாவற்றையும் , நீங்கள் ஒரு கண் கட்டும் வித்தை என்று கருதுங்கள் . ஒரு கண்கட்டு வித்தைக்காரன் (MAGICIAN) உங்களை வசியம் செய்து, பொய்யை, மெய்யாகக் காண்பிக்கிறான் . நீங்கள் ஒரு மாயையால்தான் அப்படிப் பார்க்கிறீர்கள்.

இப்பொழுது வாழ்வே கனவு என்றால் , இதில் மறுப்பதற்கோ, ஏற்றுக்கொள்வதற்கோ என்ன இருக்கிறது? எதுவுமே இல்லை. அதைப்பற்றி

கவலைப்படுவதற்கு எதுவுமே இல்லை. நீங்கள், அதை உண்மை என்று நம்புவதால்தான் , நீங்கள் மிகவும் கவலைப்படுகிறீர்கள் , மிகவும் இறுக்கமாக இருக்கிறீர்கள். இதை ஆழ்ந்து புரிந்துகொள்ளுங்கள்.

நீங்கள் ஏழையாகவோ அல்லது பணக்காரனாகவோ இருப்பதினால் , அதில் ( கனவில் ) எந்த வேறுபாடும் இல்லை. அதைப் போல , உங்களுடைய அழகுக்கும் , அவலட்சணத்துக்கும் எந்த வேறுபாடும் இல்லை. நீங்கள் மதிக்கப்டுகிறீர்களோ அல்லது இகழப்படுகிறீர்களோ, அதிலும் எந்த வேற்றுமையும் இல்லை. இந்த உலகமே பொய், வாழ்வே பொய், கனவு, மாயை என்று இருக்கும்பொழுது, நீங்கள் தேர்ந்து எடுப்பதற்கும் , தள்ளுவதற்கும் என்ன இருக்கிறது? ஆகவே, ஏற்றுக் கொள்வதையும் , மறுப்பதையும் விட்டுவிடுங்கள் ஆகவே, ஒருவன் , எதிலும் மிகவும் ஈடுபடாமல் , எதிலும் மன இறுக்கம் கொள்ளாமல் , உங்களுடைய மைய இருப்புநிலையிலிருந்து அகலாமல், வெறும் சுத்த உயிர்த்தன்மையாக இருந்து, தன்னை நிலைப்படுத்திக்கொண்டால் அதுதான் உண்மையான வாழ்க்கை.

இலக்கு ஏதும் இல்லாமல் சம்சாராவையோ நிர்வாணாவையோ நீ ஒத்துக்கொள்ளவோ மறுக்கவோ செய்யலாம் மனத்தின் இருப்பைப் போக்கி - மனதில் உறுதியுடன்.

நீங்கள் சம் சாரா அல்லது நிர்வாணாவை ஏற்றுக்கொண்டாலும் சரி, தள்ளினாலும் சரி, அது உங்களிடம் எந்தவித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. பிறகு, நீங்கள் இந்த உலகத்தை முற்றிலும் துறக்கலாம் அல்லது இந்த உலக வாழ்க்கையில் முழுமையாக வாழலாம் . நீங்கள் , எல்லாம் கனவுகள்தான் என்று தீர்க்கமாக அறிந்து கொண்டால், நீங்கள் இந்தக் கனவுலகில், எந்தவித தொந்திரவோ,

கவலையோ, இறுக்கமோ கொள்ளாமல் , நிம்மதியாக வாழலாம் . இதில்தான் வாழ்க்கைத் தத்துவமே அடங்கியிருக்கிறது!

எதற்காக , சாரஹா முனிவர் , இவைகளை ஒரு அரசனிடம் எடுத்து சொல்ல வேண்டும் ? அவர்

சொல்வது என்னவென்றால் , " ஐயா, நீங்கள் அரண்மனையில் வாழ்கிறீர்கள் . நானோ சுடுகாட்டில் வாழ்கிறேன் . நீங்கள் மிகவும் அழகான மக்களுடன் வாழ்கிறீர்கள் . நானோ சாதாரண , அவலட்சணமானவர்களோடு வாழ்கிறேன் . நீங்கள் பணக்கார சூழ் நிலையில் வாழ்கிறீர்கள் ; நானோ, ஏழ்மையான சூழ்நிலையில் வாழ்கிறேன் , ஆனால் , எல்லாம் ஒன்றுதான் அந்த அரண்மனையும் , ஒரு கனவுதான் , இந்த சுடுகாடும் , ஒரு கனவுதான் . உன்னுடைய அழகிய அரசியும் ஒன்றுதான் , இந்த அம்பு செய்யும் சாதாரணப் பெண்ணும் ஒன்றுதான் . எல்லாம் கனவுகள் தான் ! இதில் என்ன வேற்றுமையைக் காண்கிறீர்கள்?'' என்பதுதான்.

நீங்கள் கனவில் , ஒரு பணக்காரனாகவோ அல்லது ஒரு ஏழையாகவோ வாழ்ந்தால் , அதில் என்ன வேற்றுமை இருக்கிறது? நீங்கள் , உங்களுடைய கனவில், பணக்காரனாக வாழ்ந்திருந்தால், அதனால், நீங்கள் காலையில் விழித்து எழுந்தபிறகு, உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியுமா? அதைப்போல, நீங்கள் கனவில் , ஒரு பிச்சைக்காரனாக இருந்தால் , காலையில் துன்பத்தில் தான் இருப்பீர்களா?

சாரஹா மேலும் சொல்கிறார் , ' ஐயா நான் விழிப்புணர்வில் இருக்கிறேன். மூன்றாவது கட்டத்தில் இருக்கிறேன் . எனக்கு, மூன்றாவது விழிப்புநிலை நிகழ்ந்திருக்கிறது. எனக்கு , எல்லாமே கனவாகத்தான் தெரிகிறது. எனக்குள்ளேயும் கனவு, எனக்கு வெளியிலும் கனவுதான். இப்பொழுது, அந்தக் கனவுகளில் எந்த வித்தியாசமும் எனக்குத் தெரியவில்லை. நான் , அந்த வித்தியாசத்தையெல்லாம் தாண்டிச் சென்று விட்டேன். நான் இப்பொழுது மனமற்றநிலையில் இருக்கிறேன் . இப்பொழுது, மக்கள் என்னை மதித்தாலும் , இகழ்ந்தாலும் , என்னை ஒரு சிறந்த பிராமணன் என்றோ, சிறந்த ஞானி என்றோ, உண்மையை அறிந்தவன் என்றோ கருதினாலும், மாறாக நான் ஒரு கிறுக்கன் , பைத்தியம் , புத்தி பேதலித்தவன் என்று கருதினாலும் சரி, எனக்கு எல்லாம் ஒன்றுதான்."

இதுதான் உண்மையாக அறிந்து கொள்தல் என்பது. இப்படி ஆழ்ந்து புரிந்துகொண்டால் , யாருடைய

தீர்மானமும் உங்களை எதுவும் செய்யாது. வெற்றியோ, தோல்வியோ, போற்றுதலோ, தூற்றுதலோ, வாழ்வோ சாவோ, எல்லாம் ஒன்றுதான் . இதுதான் வேற்றுமையற்ற நிலை என்பது. இப்பொழுது நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டுக்கு வந்துவிட்டீர்கள்.

ஒத்துக்கொள்ளவோ மறுக்கவோ செய்யலாம் மனத்தின் இருப்பைப் போக்கி - மனதில் உறுதியுடன்.

நான் , என்னுடைய சொந்த வீட்டுக்கு வந்துவிட்டேன் . என்னுடைய ஆன்ம நிலை, மேலே கிளம்பிவிட்டது. நான் என்னுடைய உயிர்மைய நிலையில்

இருக்கிறேன் . நான் எல்லாவற்றையும் இழந்துவிட்டேன் . ஒன்றைத்தவிர , அதுதான் என்னுடைய இயல்பான தன்மை, சுயத்தன்மை - இப்பொழுது, நான் என்னுடைய ஆரம்ப நிலையை, ஆதாரநிலையை, உண்மை நிலையை அறிந்து கொண்டேன்.

நீ நீயாக இருப்பாய் . எண்ணங்களுக்கு அப்பால் . தன்னைப் பற்றிய பிணைப்புக்கு அப்பால்

நான் , எண்ணங்களுக்கு அப்பால் சென்று விட்டேன் . இந்த உலகப்பொருள்கள் , என்னை ஒருக்காலும் தங்களிடம் இழுக்காது. எல்லாம் எனக்கு ஒன்றுதான்.

இதுதான் , ஒரு உண்மையான சந்நியாசியின் இயல்பு. எல்லாமே மிகச் சரியாக இருக்கின்றன , அவைகள் அப்படியே இருக்கட்டும்.

அடுத்து, கடைசி சூத்திரா: பார்வைக்குத் தெரியும் இந்த உலகம் அதன் ஆரம்பப்பிரகாசத்தைக் காட்டவே இல்லை முறையற்று அது முறைகளை உடைத்துவிட்டது. அப்படித்தான் அது தொடரும் .. விசேட தியானம். அதுதான் மனமற்றது; அழுக்கற்றது; அதுதான் ஆழ்ந்த தியானம் - அதுதான் மனம் அற்றது.

சாரஹா, " நீங்கள் காணும் இந்த உலகம் , ஒரு காலத்தில் இருந்ததில்லை. ஆனால், அது நிரந்தரமாக இருப்பது போல , உங்களுக்குத் தோற்றம் அளிக்கும் . எப்படி ஒரு கனவு, எங்கிருந்தோ கிளம்பி, எங்கேயோ மறைவது போல , இந்த உலகமும் எங்கிருந்தோதான்

தோன்றியது. அதைப்போல அது எங்கேயோ மறைந்துவிடும்.

பார்வைக்குத் தெரியும் இந்த உலகம் அதன் ஆரம்பப்பிரகாசத்தைக் காட்டவே இல்லை

ஆரம்பநிலைக்குச் சென்றால் , இந்தப் பிரபஞ்சத்தில் எதுவுமே இல்லை. ஒரு அமைதியான ஏரியில் , சில அலைகள் தோன்றி, மறைவதைப்போல இந்த உலகம் தோன்றி, மறைகிறது. உங்களால் அந்த அலையைப்பிடிக்க முடியாது. அது ஒரு அதிர்வு போலத்தான் , (VIBRATION) ஒரு எண்ண அலையைப் போலத்தான்.

முறையற்று அது முறைகளை உடைத்துவிட்டது. அப்படித்தான் அது தொடரும்..

அதில் எந்த ஒழுங்குமுறையும் கிடையாது. அது ஒரு கெட்டியான பொருள் அல்ல . அது நீர் போல , வெறும் திரவம்தான் . அதில் எப்படி ஒழுங்குமுறை இருக்கும் ? அதில் , நல்லது எது கெட்டது எது என்று யாருக்குத் தெரியும் ? அதில் ஞானியார் , பாபியார் என்று யாருக்குத் தெரியும்? அதில் புண்ணியம் என்பது என்ன, பாபம் என்பது என்ன என்று யாருக்குத் தெரியும் ? அகில் எந்த ஒழுங்கு முறையும் இல்லை.

உண்மையின் அடிப்படையான உஊமையை, தந்த்ரா இப்படி விளக்குகிறது. ஆரம்ப கட்டத்தில் எந்த ஒழுங்கு முறையும் இல்லை. இது ஒரு குழப்பமான படைப்புதான் (CREATIVE CHAOS) | ஆகவே, முடிவில், எதையுமே தூற்றுவதோ, போற்றுவதோ கூடாது. அப்படி எதுவும், எந்த வித்தியாசத்திலும் இல்லை.

இது மிகவும் அழகான சூத்திரம் . இந்த நிலையில் , உண்மை எது, உண்மையற்றது எது என்ற பார்க்காதீர்கள் . அதை மறந்துவிடுங்கள் என்று சாரஹா சொல்கிறார்:

முறையற்று அது முறைகளை உடைத்துவிட்டது. அப்படித்தான் அது தொடரும்...

உங்களைச் சுற்றி, அந்தப் பேரிக்க உயிர்த்தன்மை,

மரமாகவும் , பறவையாகவும் - இந்த குயில் ஏன் பைத்தியம் போல் கூவுகிறது? - இதில் நீங்கள் விழிப்புநிலையில் இருந்தால் , அது உங்கள் வீட்டிற்கு வர உதவியாக இருக்கும் அப்படித்தான் அது தொடரும்.. விசேட தியானம்.

நீங்கள் , இதில் உங்களுடைய மனதை கொண்டு வரவேண்டாம் . அதை வெறுமனே கேளுங்கள் , பாருங்கள் , உணருங்கள் . உங்களுடைய மனதை , அதில் கொண்டு வரவேண்டாம்.

அதை எதிர்கொள்ளுங்கள் - ஆனால் எண்ணங்களின் மூலமாக அல்ல . ஒளி ஊடுறுவும் பிலிம் போல (TRANSPARENT FILM) வெறுமனே கவனிக்கவும், பார்க்கவும் - அதில் எந்த ஆராய்ச்சியோ, தர்க்கமோ தேவையில்லை. அதை அமைதியாக , எண்ணமற்று அணுகுங்கள். அதைப்போல அன்பையும், குயிலின் இசையையும், மரங்களையும், சூரியனையும் வெறுமனே அணுகுங்கள் அதைப்பற்றி எதையும் எண்ண வேண்டாம். நீங்கள் ஒரு சிந்தனையாக மாற வேண்டாம்.

விசேட தியானம். அதுதான் மனமற்றது; அழுக்கற்றது; அதுதான் ஆழ்ந்த தியானம் -

அதுதான் மனம் அற்றது. ஆகவே, முதலில் இந்த உலகத்தைக் கனவு என்று கருதவும் கனவு காண்பவரைக்கூட கனவு என்று கருதவும். முதலில், முன்னிலையை (OBJECT) கனவு என்று கருதவும் . பிறகு தன்னிலையை (SUBJECT) கனவு என்று கருதவும் தன்னிலையும் , முன்னிலையும் விடுபட்ட பிறகு அடுத்து கனவும், கனவு காண்பவரும் மறைந்த பிறகு, அங்கு வெறும் மனமற்ற நிலை(NO MIND)தான் இருக்கும்.

இந்த மனமற்ற நிலைதான் , இந்த பிரபஞ்சத்தின் ஆரம்பநிலை. இதைத் தான், உதலாக்கா (UDALLAKA) தன் மகனிடம் எடுத்துச் சொல்கிறார் . அவர் தன் மகனிடம், " நீ அதைப்பற்றி, கற்று வந்திருக்கிறாயா? அதைப்பற்றிக் கற்றிருந்தால் , நீ எல்லாவற்றையும் கற்றவனாகும் . இதைப்பற்றி கற்க மறந்தால் எல்லாவற்றையும் மறந்தவனாகும் . அந்த ஒன்றைப் பார்த்திருக்கிறாயா? அதை அடைந்து

வந்திருக்கிறாயா?" என்று கேட்கிறார்.

மகன் குழப்பம் அடைந்து. ' நான் எல்லாவற்றையும் தெரிந்துதான் வந்திருக்கிறேன் . ஆனால் , நீங்கள் எதைப்பற்றிக் குறிப்பிடுகிறீர்கள் என்பது விளங்கவில்லை. என்னுடைய குரு , அதைப்பற்றி பேசியதே இல்லை

ஆகவே, உதலாக்கா மறுபடியும் தன் மகனிடம் , அப்படியென்றால் , நீ திரும்பிச்செல் , ஏனென்றால் , நீ கற்றுவந்தவை அனைத்தும் , வெறும் குப்பைகள் ஆகவே திரும்பிச்செல் நம்முடைய குடும்பம் , உண்மையான பிராமணர்களைக் கொண்டது. என்கிறார்.

உண்மையான பிராமணன் என்று அவர் சொன்னதன் அர்த்தம் என்னவென்றால் , " நாங்கள் பிரம்மனை (BRAHMA) அறிந்தவர்கள் . நாங்கள் உண்மை'யை அறிந்தவர்கள். நாங்கள், பிறப்பால் மட்டும் பிராமணன் இல்லை என்பதுதான்.

அவனுக்கு ஏற்பாடு செய்திருந்த , வரவேற்பு அலங்காரங்களெல்லாம் நிறுத்தப்பட்டது. கண்ணீரோடுதான் . ஆனால் , உதலாக்கா, தன் மகனைத் திருப்பி அனுப்பிவிட்டார் . அவன் பல வருடங்களுக்குப் பிறகு திரும்பி வந்திருக்கிறான். ஒரு நாள் கூட தங்கவிடாமல் , அவனைத் திருப்பி அனுப்பிவிட்டார், உதலாக்கா!

மிகவும் குழப்பமும், வருத்தமும் அடைந்து, அவன் தன் குருவிடம் திரும்பி வந்து, என்னுடைய தகப்பனார் சொன்ன, அந்த 'அதைப்பற்றி, நீங்கள் ஏன்

எனக்குக் கற்பிக்கவில்லை? இப்படி எல்லா வருடங்களும் வீணாகிவிட்டதே. நான் கற்றவை அனைத்தும் , வெறும் குப்பை என்று என் தகப்பனார் கூறுகிறாரே - ' நான் என்னை அறிந்துகொள்ளவில்லையே? என் தகப்பனார் நீ உன்னையே அறிந்து கொள்ளாவிட்டால் , நீ கற்றுவந்ததினால் என்ன பயன் ? அதற்கு என்ன மதிப்பு இருக்கிறது? நீ வேதங்களைக் கற்று, என்ன செய்யப்போகிறாய் ? நம்முடைய குடும்பத்தில் ,

உண்மையான பிராமணர்கள் தான் இருந்திருக்கிறார்கள் . ஆகவே, திரும்பிச்செல் . நான் இறப்பதற்கு முன்பு, நீ ஒரு உண்மையான பிராமணன் என்பதை நான் பார்க்க வேண்டும் . நீ ஒரு உண்மையான பிராமணனாக மாறாமல் , திரும்பி என்னிடம் வராதே என்று சொல்லிவிட்டார் . ஆகவே, அந்த அதைப்பற்றி எனக்குக் கற்றுத்தரவும் ' என்று கேட்டான்.

அதற்கு, அந்த குரு சிரித்துக்கொண்டே, "அந்த 'அதை', யாரும் கற்றுத்தர முடியாது. ஆமாம் . அதைப் பிடிக்க முடியும். ஆனால், கற்றுத்தர முடியாது. ஏனெனில் நான் அதைக் கற்றுக்கொள்ளவில்லை. ஆனால் , நீ என்னை வற்புறுத்தினால் , அதை நீயே கற்றுக்கொள்ள , ஒரு சரியான சூழ்நிலையை, அமைத்துக்கொடுக்க முடியும்." என்றார்.

இந்த ஆன்மீகக் கூடம்தான், அந்த சூழ்நிலை. என்னால், ' உண்மையை கற்றுத்தர முடியாது. ஆனால் , அதற்கான சூழ்நிலையை என்னால் ஏற்படுத்தித் தரமுடியும். நீங்கள் தான், அந்த ஆன்மீக ஒளிக் கீற்றை பிடித்து கொள்ள முயலவேண்டும் . நான் இங்கே இருப்பது, அந்த சூழ்நிலைக்காகத்தான் . நான் , உங்களிடம் தொடர்ந்து பேசிவருவது, அந்தச் சூழ்நிலைக்காகத்தான் . நான் , உங்களுக்கு உண்மையை கற்றுத் தர முடியும் என்பதற்காக அல்ல . அந்த

வித்தியாசமான ஆன்மீகத் தாக்குதல் , உங்களிடம் சிலசமயம் ஏற்பட , ஒரு சூழ்நிலையை அமைத்துக்கொடுக்கிறேன் . அந்த அதிர்வை நீங்கள் அந்தச் சமயத்தில் பிடித்து கொள்ள முடியும் , உணர முடியும் . அது, உங்களை உற்சாகப்படுத்தி, உங்களுக்குள்ளே செல்லும் நீண்ட பயணத்தில் உங்களைக் கொண்டு சேர்க்கும்.

ஆகவே, அந்த குரு, " நான் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தித் தரமுடியும் . அதுதான் இந்த சூழ்நிலை. அதாவது, நீ இந்த ஆஸ்ரமத்தில் உள்ள சுமார் 400 பசுக்கள் மற்றும் காளைகளையெல்லாம் கூட்டிக்கொண்டு, அந்த அடர்ந்த காட்டுக்குள் , எவ்வளவு தூரம் அதன் உள்ளே செல்ல முடியுமோ,

அவ்வளவு தூரம் செல்லவும். அங்கே எந்த வேறு எந்த மனிதர்களும் இருக்கக்கூடாது. வேறு யாரும் வெளியிலிருந்து சுலபமாக உங்களை அடையக் கூடாது. அந்த 400 மாடுகள் , 1000 காளை மற்றும் பசுக்களாகப் பெருகிய பிறகுதான் , நீ அவைகளை ஓட்டிக்கொண்டு திரும்பிவரவேண்டும் . ஆனால் , இதற்குப் பல வருடங்கள் ஆகலாம் . இப்பொழுது நீ செல்லலாம். நன்றாக ஞாபகம் வைத்துக்கொள். வேறு எந்த மனிதனையும் , அப்பொழுது நீ பார்க்கக்கூடாது. அந்த மாடுகள் தான் , உன்னுடைய குடும்பம் , நண்பர்கள் எல்லாம். நீ, உன் விருப்பப்படி, அதனுடன் பேசலாம் ' என்று சொல்லி, அவனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டார்.

அதைப்போலவே, சுவத்கேது, அந்த 400 மாடுகளை ஓட்டிச்சென்று , வேற்று ஆள் , யாருமே சென்று அடையக் கூடாத, அடையவும் முடியாத அந்தக்காட்டில், தன் பசுக்களுடன் பல ஆண்டுகள் வாழ்ந்திருந்தான்.

இந்தக் கதை மிகவும் அழகானது, அர்த்தமுள்ளது. நீங்கள் மாட்டுடன் எப்படி பேச முடியும்? ஆரம்பத்தில், அவன் களைப்படைந்துவிட்டான் . மேலும் முயற்சி செய்ய , அது அர்த்தமற்றது என்றும் புரிந்துகொண்டான் . அவைகள் அவனை வெறுமனேதான் பார்க்கும் . அதில் வெறுமைதான் இருக்கும் ! எந்த உரையாடலும் , அதனிடம் சாத்யம் இல்லை.

ஆமாம் . பழக்க தோஷத்தில் , ஆரம்பத்தில் அவன் வேதங்களை ஓதியிருக்கலாம் . அந்த மாடுகளுக்கு அதைப்பற்றி என்ன கவலை! அதன் கவலையெல்லாம், புற்களை வயிராற உண்ண வேண்டும் என்பதுதான் . அவன் , வானவியல் பற்றியும் , நட்சத்திரங்களைப் பற்றியும் பேசியிருக்கக் கூடும் . அதற்கும் , மாடுகளுக்கும் என்ன சம்மந்தம் ? இந்த மாடுகளின் கூட்டத்தில் , எதை, எப்படிப் பேசிப் புரியவைப்பீர்கள் ? ஆகவே, அவன் மெல்ல , மெல்ல , தான் பேசுவதைக் குறைத்துக்கொண்டான் . பிறகு, அதை முழுமையாக நிறுத்திவிட்டு, அதை கொஞ்சம் கொஞ்சமாக மறக்கவும் ஆரம்பித்துவிட்டான் . இப்பொழுது, கொஞ்சங் கொஞ்சமாக , அந்த மகத்தானது. அவனுக்குப் புரிய ஆரம்பித்தது.

இப்படிப் பல வருடங்கள் ஆகிவிட்டன . இப்பொழுது அந்த மாடுகளின் எண்ணிக்கை ஆயிரமாகிவிட்டது. ஆனால் , தான் இப்பொழுது திரும்பிச் செல்ல வேண்டும் என்பதையே, அவன் மறந்துவிட்டான் . அப்பொழுது ஒரு பசு மிகவும் தைரியமாக முன்வந்து அவனிடம், "எங்களுடைய எண்ணிக்கை, இப்பொழுது

1000 ஆகிவிட்டது. நாம் திரும்பிச் செல்ல வேண்டும் நம்முடைய குரு, நமக்காக காத்துக்கொண்டு இருப்பார் என்று ஞாபகமூட்டியது. அவனுக்கு இப்பொழுது எண்ணிக்கையே மறந்துவிட்டது! பிறகு, மாடுகள் முன்னே செல்ல , அவன் அவைகளைப் பின்பற்றிச் சென்றான்!

1000 பசுக்களுடன் அவன் வருவதை கேள்விப்பட்ட அந்த குரு, தன் வீட்டுக்கு வெளியே வந்து, அவரது சீடர்களிடம் , " அதோ பாருங்கள் , 1001 மாடுகள் வருகின்றன!'' என்று மகிழ்ச்சியாகச் சொன்னார்!

ஆனால் அவருடைய சீடர்கள் 'இல்லை. 1000 மாடுகள் தர் இருக்கின்றன . சுவத்கேதுவும் அவைகளுடன் வருகிறான் '' என்றார்கள் . அதற்கு குரு அவன் மறைந்துவிட்டான் . இப்பொழுது அவன் இல்லை. அவனும் ஒரு பசுவாகிவிட்டான் அந்த அளவுக்கு அவன் வெகுளியாகிவிட்டான் . அவனுடைய கண்களைப் பாருங்கள். " என்றார்.

இதுதான் மனமற்ற நிலை என்பது. கீழைநாட்டின் இலக்கு இதுதான் - அதாவது நீங்கள் ( மனம் ) இல்லாதநிலை மற்றும் முதன் முதலாக , நீங்கள் நீங்களாக (உயிர்த்தன்மை) இருக்கும் நிலை.

இந்த இறப்பைப்பற்றியும் , வாழ்வைப்பற்றியும் , பொய்யும் , அகங்காரமும் , மறையும் நிலையைப் பற்றியும் , எது நிலையானதோ, அந்த உண்மையை அறிந்து கொள்வதைத்தான் , நாம் " ஞானம் என்றும் , கடவுளை அறிந்துகொள்தல் மற்றும் தன்னையே அறிந்து கொள்தல் அல்லது உணர்ந்துகொள்தல் ' என்றும் அழைக்கிறோம் . இதைத்தான் , சாரஹா, ' தானாக இருத்தல் '' (SELFBEING) என்றும் " எண்ணத்துக்கு, மனதுக்கு அப்பால் இருப்பது' '

என்றும் அழைக்கிறார்.

தந்த்ரா என்றால் விரிவடைதல்' என்று அர்த்தம். அந்த நிலையில், நீங்கள், அந்த முடிவான நிலையை நோக்கி விரிவடைகிறீர்கள். உங்களுடைய எல்லைகளும், அந்த உயிர்த்தன்மையின் எல்லைகளும் வெவ்வேறாக இல்லை. அவைகள் ஒன்றாகி விடுகின்றன . இந்த நிலையைத் தவிர , வேறு எதுவும் உங்களைத் திருப்திப்படுத்தாது. நீங்களும் , இந்த பிரபஞ்சமும் ஒன்றாகிவிட்டால் , நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டை அடைந்திருக்கிறீர்கள் என்று அர்த்தம். நீங்கள் எல்லாமாகிவிட்டபிறகு, நீங்கள் அந்த எல்லாவற்றிலும் கலந்து ஒன்றான பிறகு, நீங்கள் இந்த பிரபஞ்சம்போல, அவ்வளவு பரந்து இருக்கும்பொழுது. அதாவது உங்களிடம் எல்லாம் இருக்கும் பொழுது - இந்த நட்சத்திரங்கள் உங்களுக்குள்ளே நகர்வதும் , இந்த பூமி உங்களுக்குள்ளே தோன்றி, பின் , மறைவதும் ! - நீங்கள் இப்படி பரந்து, விரிவடைந்து இந்த பிரபஞ்சமாகிவிட்டால் நீங்கள் இங்கு வந்த வேலை முடிந்துவிட்டது. நீங்கள், உங்களுடைய சொந்த வீட்டை அடைந்துவிட்டீர்கள். இதுதான் தந்த்ராவின் நோக்கம், இலக்கு எல்லாம்.

## 6. "நான் தனிமையில், நிறைவாகவே இருக்கிறேன்"

## (I AM ENOUGH ALONE)

அன்புள்ள குருவே,

" நீங்கள் என்னுடன் பேசும் பொழுது, என்னுடைய குரலுக்கு என்ன நிகழ்ந்தது? இது என்ன விளையாட்டு?"

இந்தக் கேள்வி சோமந்திரா விடமிருந்து வந்திருக்கிறது.

நீங்கள் என்னோடு கலந்து இருந்தால், உங்களால் பேச முடியாது. நீங்கள் என்னை உண்மையாகக் கேட்டால், நீங்கள் உங்களுடைய பேச்சை இழக்கக் கூடும் . ஏனென்றால் , அந்தச் சமயத்தில் , நான்தான் உங்களுடைய குரலாக இருக்கிறேன் ; உங்களுடைய பேச்சாக இருக்கிறேன் . உங்களுக்கும் , எனக்கும்

ஏற்படும் நெருக்கமான கலத்தல் , இரண்டு நபர்களுக்கிடையே ஏற்படுவது இல்லை. அது ஒரு கலந்துரையாடல் இல்லை, அது ஒரு பேச்சுப் போட்டி அல்ல , அது ஒரு விளங்க வைக்கும் பேச்சு இல்லை, ஏன் , அது ஒரு பேசுதலே இல்லை. நீங்கள் இல்லாதபொழுதுதான் , நீங்கள் உங்களை இழந்தபிறகுதான் , அந்த ஆழ்ந்த கலப்பு நிகழ்கிறது. அந்தக் கலப்பின் உச்ச நிலையில் , "நான் - நீ " என்ற வித்தியாசம் கூட இல்லை. ஏன் , அது ஒரு உறவே இல்லை. நான் இல்லை, அதைப்போல நீங்களும் இல்லாத ஒரு நிலை, சில சமயத்தில் நிகழும் . அந்த நிலையில் , இரண்டு பூஜ்யங்கள் ஒன்றில் ஒன்று கலந்து மறைந்துவிடுகின்றன.

ஆகவேதான் சோமந்திரா, நீங்கள் என்னுடன் மிகவும் நெருங்கிக் கலந்து வரும் பொழுது, நீங்கள் உங்களுடைய குரலை, பேச்சை இழக்கிறீர்கள் . இது உங்களிடம் மாத்திரம் ஏற்படவில்லை. யாரெல்லாம் என்னுடன் நெருங்கி வருகிறார்களோ, அவர்களிடம் அது நிகழும்.

நீங்கள் " நீங்களாகவே இருக்கும் பொழுது, குரல் "உங்களுடைய" தாகவே இருக்கும்பொழுது எப்படி என் அருகில் நீங்கள் நெருங்கி வரமுடியும் . உங்களுடைய " நீங்கள் மறைய ஆரம்பிக்கும் போது தானாகவே உங்கள் குரலும் மறைய ஆரம்பிக்கிறது.

இரண்டாவதாக , நீங்கள் அப்பொழுது சொல்வதற்கு எதுவுமே இருக்காது. நீங்கள் என்னுடன் மிக நெருக்கமாக அன்புடன் இருந்தால் , நீங்கள் அப்பொழுது சொல்வதற்கு ஏதும் இருந்தால் , அது எனக்குத் தெரியும் என்பது உங்களுக்குப் புரியும் அப்படி எனக்குத் தெரியாவிட்டால் , அந்த எண்ணத்திற்கு, அந்த கேள்விக்கு அர்த்தமில்லை, அவசியமில்லை. அதை வெளியே சொல்லவும் தேவையில்லை. உங்களுடைய சக்திதான் வீணாகும்.

எல்லா இடங்களிலிருந்தும் , ஆயிரக்கணக்கான எண்ணங்களை, உங்களுடைய மனம் சேகரித்துக்கொண்டே இருக்கும் . எல்லா எண்ணங்களும் , உங்களுடையது அல்ல . நீங்கள்

அவைகளை வெளியே சொல்லாவிட்டாலும் , எண்ணங்கள் ஒன்றின் மேல் ஒன்று பதிந்து முண்டியடித்துக்கொண்டு வரும். நீங்கள் அவைகளைப் பிடித்துக்கொண்டு, சில நேரம் அவைகளினால் மிகவும் ஆக்ரமிக்கப்படுகிறீர்கள் . மற்றும் அது மிகவும் அவசியமானது என்றும் கருதுகிறீர்கள் . நீங்கள் என்னுடன் நெருங்கி வரும்பொழுது, வெளியிலிருந்து வந்து அடைந்த எண்ணங்களெல்லாம் , மறைவதை உணர்வீர்கள்.

இதைப்போல , பல சந்நியாசிகளுக்கு நிகழ்ந்திருக்கிறது. அவர்கள் பல கேள்விகளோடு, என் முன்னே அமர்கிறார்கள் . ஆனால் மெல்ல , மெல்ல எல்லா கேள்விகளும் மறைவதை. அவர்கள் தானே உணர்கிறார்கள் . அந்த கேள்விகளெல்லாம் , மிகவும் முக்யத்வம் வாய்ந்தது என்று கருதி வந்த நீங்கள் , திடீரென்று அவைகள் மறைந்துகொண்டிருப்பதை உணர்வீர்கள் . அப்பொழுது. அந்தக் கேள்விகள் அர்த்தமில்லாதது என்று உணர்வீர்கள் . இதைப்போல பல சந்நியாசிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது. அப்பொழுது, அந்தக் கேள்விகளெல்லாம் , உண்மையாக உங்களுடையது இல்லை என்பதையே அது காட்டுகிறது.

நீங்கள் என் முன்னே, உண்மையாக இருந்தால் , நீங்கள் என்னை முழுமையாகப் பார்த்துக் கொண்டு இருந்தால் , எந்தக் கேள்விகளெல்லாம் உண்மையிலேயே மிகவும் முக்யத்வம் வாய்ந்ததோ, அவைகள் மட்டும்தான் இருக்கும் ; தேவையில்லாத , அர்த்தமில்லாத கேள்விகள் எல்லாம் மறைந்துவிடும் . சிலசமயம் , எல்லாக் கேள்விகளுமே மறைந்துவிடும் . அதாவது உங்களுடைய குரலை மட்டும் இழக்கவில்லை, உங்களுடைய மனதையும் இழக்கிறீர்கள்! நீங்கள் ஒரு குருவைச் சுற்றி இருக்கும் போது. இதுதான் நிகழும் . உங்கள் மனம் இறந்துகொண்டே இருக்கும்.

ஆகவே, மிகவும் ஓய்வாக , எந்தவித இறுக்கமும் இல்லாமல் , வெறுமனே உட்கார்ந்திருங்கள் . சொல்வதற்கு ஒன்றும் இல்லை. நீங்கள் கேட்பதற்கு நிறைய இருக்கிறது. ஆனால் சொல்வதற்கு ஒன்றுமில்லை

அடுத்து மூன்றாவதாக , சோமநதராவுடன் , எல்லாமே நல்லவிதமாக நடக்கிறது. ஒன்று. உங்களிடம் சரியில்லாத பொழுதுதான், ஒத்துவராதபொழுதுதான், நீங்கள் அதை வெளியே கூறுவீர்கள். கேள்வி 2:

" நான் சமீபத்தில் , பிராங் பாட்டில் உள்ள ஒரு தொல் பொருள் காட்சியகத்துக்குச் சென்றிருந்தேன் . அங்குள்ள ஒரு அறையில் நுழைந்து பார்க்கும் பொழுது, அங்கு புத்தருடைய சிலைகள் மற்றும் ஓவியங்களைத் தவிர வேறு எதுவும் இல்லை. நான் கல் உருவங்களில், நம்பிக்கை இல்லாதவன். ஆனால், அந்த அறையில் ஒரு வித்தியாசமான சக்தி ஓட்டம் இருப்பதை உணர்ந்து, மிகவும் ஆச்சரியப்பட்டேன் . அதாவது, உங்களுடைய பிரசங்கத்தைக் கேட்கும் பொழுது, எப்படி உணர்கிறேனோ, அப்படி. நான் ஏதோ கற்பனையில் மிதக்கிறேனா, என்ன ? அப்படியிருந்தால் , நான் இங்கு உணர்வதை, எப்படி என்னால் நம்ப முடியும்?"

இந்தக் கேள்வி, அனந்த் சமக்ராவிடமிருந்து வந்திருக்கிறது.

முதலில் , நீங்கள் புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் , அந்த புத்தசிலைகளுக்கும் , புத்தருக்கும் எந்தவித சம்மந்தமும் இல்லை என்பதுதான் ! அவைகளெல்லாம் பொய் . புத்தருடைய உண்மையான உருவத்துக்கும் , அதற்கும் சம்மந்தமில்லை. ஆனால் புத்தருடைய தன்மைக்கும் (BUDDAHOOD) அதற்கும் சிறிது சம்மந்தம் உண்டு; கௌதம புத்தர் என்ற மனிதரோடு இல்லை புத்தருடைய தன்மையோடு.

நீங்கள் ஒரு ஜைனக் கோவிலுக்குச் சென்றால் , ஜைனமதத்தை உண்டாக்கிய 24 தீர்த்தங்கரர்களை, சிலைவடிவத்தில் பார்க்கலாம் . ஆனால் , அந்தச் சிலைகள் எல்லாம் ஒன்று போலவே இருக்கும். அதில் எந்த வித்தியாசத்தையும் காணமுடியாது. ஆனால் , அது யாருக்கு உடையது என்பதைக்காட்ட ஜைனர்கள் மிகச்சிறிய அடையாளத்தை அவைகளிடம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதை, அந்த சிலைகளுக்கு

அடியில் , சில கோடுகளால் தெரியப்படுத்தியிருக்கிறார்கள் . ஆனால் , சாதாரணமாக அதைப் பார்க்க முடியாது. சில சிலைகளுக்கு அடியில், பாம்பு, தேள் என்று மிகச்சிறிய அளவில் செதுக்கியிருப்பார்கள். அதைக் கவனித்துப் பார்த்து, எந்த சிலை, யாருக்கு உரியது என்பதை அடையாளம் கண்டுகொள்ள முடியும். அடுத்து, அந்த சிலைகளெல்லாம் , புத்தரைப்போலவே இருப்பதைக் கண்டு, நீங்கள் ஆச்சரியப்படலாம். அந்த முகங்களில், எந்தவித்தியாசத்தையும், காண முடியாது.

ஆரம்பத்தில் மேலைநாடு, மஹாவீராவைப்பற்றி அறிந்து கொள்ளும் பொழுது, அவருடைய கதை, புத்தருடைய கதையிலிருந்து மாறுபட்டது அல்ல என்றும், அதே உருவச்சிலைகள் தான் என்றும், அதே தத்துவங்கள் , அதே போதனைகள் தான் என்றும் , அவைகள் புத்தருடைய கொள்கைகளிலிருந்து

மாறுபட்டது இல்லை என்றும் , கருதினார்கள் . மஹாவீரர் என்ற பெயர், புத்தருடைய வேறு ஒரு பெயர் என்றும் , பல சமயங்களில் , இருவரையுமே, புத்தர் ' என்றே அழைப்பதாலும் - புத்தர் என்றால் விழிப்புணர்வு பெற்றவர் என்று அர்த்தம் இருவருமே ஜைனர்கள் தான் என்று கருதியதாலும் ' ஜெயின் (JAIN) என்றால் வெற்றிகண்டவர் என்று அர்த்தம் - இருவருமே, தன்னை வென்றவர்கள் என்று எண்ணப்பட்டதாலும் , அவர்கள் இருவருமே, ஒருவர்தான் என்று முடிவுகட்டிவிட்டார்கள்.

அந்த இருவருடைய சிலைகளும் , கிட்டத்தட்ட ஒன்றுபோலவே இருக்கும் . ஆனால் அவைகள் , அவர்களுடைய உண்மையான தோற்றத்தைப் பிரதிபலிக்கவில்லை. அவர்களுடைய உண்மையான உருவத்துக்கும் , அவைகளுக்கும் உருவத்தில் , எந்த சம்மந்தமும் இல்லை. அவைகள் ஒரு தெய்வீக நிலையை எடுத்துக்காட்டுகின்றன . இதை நீங்கள் முதலில் புரிந்துகொள்ள வேண்டும் . இப்பொழுது அதைப்பற்றி சிறிது ஆழமாக விளக்குகிறேன்.

இந்தியாவில் , ' தந்திரா' ' மந்திரா' ' யந்திரா' என்ற வார்த்தைகள் மிகவும் முக்யத்வம் வாய்ந்தது.

உங்களுடைய பிரக்ஞைநிலையை, விரிவுபடுத்தும் முறைக்கு தந்த்ரா என்றும், - இதைப்பற்றி இப்பொழுது பேசிக்கொண்டு இருக்கிறோம் - மந்திரா' என்றால் உங்களுடைய உள் ஒளியை, உள் லயத்தை (RHYTHM) உள் அதிர்வை (VIBRATION) அறிந்துகொள்தல் என்றும் , ஒருவித குறிப்பிட்ட நிலையில் உள்ள தோற்றம் , உருவம் , ஒரு குறிப்பிட்ட நிலையை, தன்மையை உங்களிடம் ஏற்படுத்துவதற்கு - ஒரு குறிப்பிட்ட உருவத்தைப் பார்த்தால் , அது உங்களிடம் ஒரு குறிப்பிட்ட உணர்வை ஏற்படுத்தும் - யந்திரா என்று அழைக்கிறார்கள் . நீங்கள் , மந்திராவை அறிந்து கொண்டால் , அது உங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும் . அந்த மந்திரத்தை சொன்னவுடனே, நீங்கள் வேறு ஒரு உலகத்தில் இருப்பீர்கள் அவைகள் , அந்தமேலான உலகத்தை அடைய ஒரு சாவிபோலவும் , ஒரு பாதையாகவும் அமைகிறது. ஒரு குறிப்பிட்ட மந்திரம், ஒரு குறிப்பிட்ட, இயற்கையோடு ஒத்த அதிர்வை உங்களிடம் ஏற்படுத்துகிறது.

நீங்கள் கவனித்தது இல்லையா? பிக்காஸோவுடைய ஓவியங்களைப் பார்க்கும் பொழுது, உங்களிடம் ஒருவிதப் பரபரப்பு மற்றும் குழப்பம் ஏற்படுவதைக் கவனித்து இல்லையா? நீங்கள் அதிலேயே சுமார் அரைமணி நேரம் , மனதை ஒரு முகப்படுத்தினால் , நீங்கள் ஒருவித பைத்திய நிலைக்குச் செல்வதை உணரவில்லையா? நீங்கள் அவருடைய ஓவியங்களை, உங்களுடைய படுக்கை அறையில் வைத்திருந்தால் , உங்களுக்குப் பயங்கரக் கனவுகள் ஏற்படும் . நீங்கள் ஆவிகளால் துறத்தப்படுவதாகவும் , ஹிட்லரால் கொடுமைப்படுத்தப்படுவதாகவும் , ரஷ்யாவின் , மிகக் கொடுமையான ' கான் சென்ட்ரேசன் கேம்பில் ' இருப்பது போலவும் ,.... இப்படி பல விபரீதமான கனவுகளைக் காண்பீர்கள் . குருட்ஜீவ் , இதை ' முன்னிலைக் கலை (OBJECFIVE ART) என்று அழைக்கிறார் . நீங்கள் , இப்பொழுது உண்டான ' பாப் (POP) சங்கீதத்தைக் கேட்டால் , ஏதோ ஒன்று உங்களிடம் ஏற்பட்டு

பாலுணர்வால்

உந்தப்படுவதை உணர்வீர்கள். இது, வெளியிலிருந்து வரும் ஒலிதான். ஆனால், இது உங்களுடைய உள்ளே உள்ள ஒலியின் அலைவரிசையைத்தாக்கி, ஒரு வித்தியாசமான உணர்வை ஏற்படுத்துகிறது. அதைப்போல, நீங்கள் பழைய மெட்டுகளைக் கேட்டால் - கர்னாட்டிக் சங்கீதம் , பீத்தோவனின் இசை போன்றவைகள் - உங்களுடைய பாலுணர்வு குறைவதை உணர்வீர்கள் . அவைகள் உங்களிடம் ஒருவித அமைதியையும், சாந்தத்தையும் ஏற்படுத்தும். சில மிகச்சிறந்த கர்னாட்டிக் சங்கீதத்தைக் கேட்டால், நீங்கள் பாலுணர்வை கிட்டத்தட்ட மறந்தே போய் விடுவீர்கள் நீங்கள் வேறு ஒரு உலகத்தில், வேறு ஒரு பரிமாணத்தில், ஒருவித இன்பமான மயக்க நிலையில், மிகுந்த சுவையை உணர்வீர்கள்.

அதைப்போல , புத்தர் போன்ற மிகச் சிறந்த ஞானிகளுடைய உருவங்களை, நீங்கள் கவனிக்கும் பொழுது, அது உங்களுக்குள்ளே ஒரு உருவத்தை ஏற்படுத்துகிறது. அப்பொழுது நீங்கள் ஒரு தெய்வீக வழியைத்தான் (YATRA)காண் கிறீர்கள். அந்த உருவம், உங்களிடம் , சில இயல்பான அதிர்வுகளை (VIB) ஏற்படுத்துகிறது. அது ஒன்றும் கற்பனை இல்லை. அதைப்போலவே, பிராங்போட்டில் உள்ள அந்த புத்த சிலைகள் , உங்களிடம் ஒரு வித்தியாசமான அலைவரிசையை, அதிர்வை ஏற்படுத்தி இருக்கிறது.

அமைதியாகவும் , ஆழ்ந்த தியான நிலையிலும் இருப்பது போன்ற புத்தர் சிலைகளை சற்று உன்னிப்பாகக் கவனியுங்கள். அப்படியே சிறிது நேரம் கவனித்துக்கொண்டு இருந்தால் , அதைப்போன்ற அமைதிநிலை, உங்களுக் குள்ளே ஏற்படுவதை உணர்வீர்கள். இறுகிய முகத்தோடு அமர்ந்திருக்கும் 10 சந்நியாசிகளோடு, 11 வது சந்நியாசியாக , நீங்கள் அமர்ந்திருந்தால் , நீங்கள் எவ்வளவு நேரம் தான் மகிழ்ச்சியாக உட்கார்ந்திருக்க முடியும் ? அந்த 10 சந்நியாசிகளும் , ஒரு துக்கமான சூழ்நிலையை, வழியை உண்டாக்குகிறார்கள். நீங்களும், விரைவில் அவர்களைப் போல மாறிவிடுவீர்கள் ! அதைப்போல, நீங்கள் இறுக்கமாக , துக்கமாக இருந்தது சந்தோஷமாகவும் , சிரிப்பாகவும் பேசிக்கொண்டிருக்கும் , உங்களுடைய நண்பர்களின் கூட்டத்தில் கலந்து கொண்டால், எவ்வளவு நேரம்தான்,

உங்களால் துக்கமாக இருக்க முடியும் ? அந்த மகிழ்ச்சியான சூழ்நிலை, உங்களையும் ஆட்கொள்ளும். அது உங்களுடைய வழியை, இலக்கை மாற்றிவிடும் . இது ஒவ்வொரு நாளும் தெரிந்தோ, தெரியாமலோ, உங்களிடம் ஏற்படுகிறது.

நீங்கள் முழுநிலவைப் பார்க்கும்பொழுது, உங்களிடம் என்ன நிகழ்கிறது? நீங்கள் அந்தப் பறவைகளின் இசையைக் கேட்டும்பொழுதும் , அந்தப் பச்சை நிறப் மரத்தைப் பார்க்கும்பொழுதும் , உங்களிடம் என்ன நேர்கிறது? அப்பொழுது, சிலசமயம் உங்களுக்குள்ளே பச்சைநிறம் ஏற்படுகிறது. பச்சை நிறம் என்பது இயற்கை, அவ்வப்பொழுது நிகழ்வது மற்றும் வாழ்வின் தன்மையை எடுத்துக்காட்டும் நிறம் . அந்த வெளியில் உள்ள நிறம் , உங்குள்ளுக்குள்ளே பிரதிபலிக்கிறது, ஏதோ ஒரு அதிர்வைக்கொடுத்து, உங்களுக்குள்ளே ஏதோ

ஒன்றை உண்டாக்குகிறது. நீங்கள் அந்தப் பச்சை நிறத்தைப் பார்க்கும்பொழுது. மிகவும் புத்துணர்ச்சிகொண்டு மேலும் இளமையாகிறீர்கள்

நீங்கள் , அடர்த்தியான பனி படர்ந்த இமயமலைக்குச் சென்று, - அந்த சாசுவதமான , உருகாத நிலையில் உள்ள , மனிதர்களின் காலடிகளால் அசுத்தப்படுத்தப்படாத , எப்பொழுதும் , புதுமையாக உள்ள அந்த வெண்மைநிற பனியைப் பார்க்கும் பொழுது, ஏதோ ஒரு புதுமை உங்களிடம் ஏற்படுவதை உணர்வீர்கள் . ஒரு ஆழ்ந்த அமைதிநிலை உங்களுக்குள்ளே ஏற்படுகிறது.

வெளித்தன்மை, வெளியிலேயே இருப்பதில்லை. அதைப் போல உள்தன்மை, உள்ளேயே இருப்பது இல்லை. அவைகள் இரண்டும் சேர்ந்தே இருக்கின்றன. ஆகவே, நீங்கள் வெளியே பார்ப்பதிலும், கேட்பதிலும், படிப்பதிலும் , எங்கே செல்கிறீர்கள் என்பதிலும் ஜாக்கிரதையாய் , உணர்வாக , பிரக்ஞையாக இருங்கள்.

இதுதான் பிராங்போர்ட்டில் , நடந்தது. உங்களைச் சுற்றியுள்ள புத்தரின் சிலைகள் , ஏதோ ஒரு புதிய

தன்மையை உங்களுக்குள்ளே ஏற்படுத்தியிருக்கிறது. இந்த சிலைகளையெல்லாம் உண்டாக்கிய அடிப்படைத் தத்துவம் , காரணம் எல்லாம் இதுதான் . நீங்கள் நினைப்பது போல , அவைகள் வெறும் சிலைகள் இல்லை. இந்த கிருஸ்த்துவ , முகமதிய மற்றும் யூத மதங்கள், இதைப்பற்றி, ஒரு தவறான அபிப்ராயத்தை, இந்த உலகத்தில் ஏற்படுத்திவிட்டது. அவைகள் வெறும் சிலைகள் இல்லை; அது மிகவும் விஞ்ஞானப்பூர்வமானது. நீங்கள் வணங்கும் வெறும் சிலைகள் இல்லை. அவைகள் உங்களுக்குள்ளே நிகழவேண்டிய ஒரு தெய்வீக நிலைகள். ஆகவே இது முற்றிலும் வித்தியாசமானது.

சைனாவில் , ஒரு புத்தகோவிலில் 10000 புத்த சிலைகள் இருக்கின்றன . அவைகள் அனைத்தும் ஒன்றுபோலவே இருக்கும். எங்கு பார்த்தாலும், மேல் கூறை, பக்கங்கள் என்று எல்லா இடங்களிலும், அதே புத்தசிலைகள் தான் ! பத்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் அந்த சிலைகளுக்கு மத்தியில் , நீங்கள் இருக்கிறீர்கள். அதாவது 10000 புத்தர்களால், நீங்கள் சூழப்பட்டிருக்கிறீர்கள் ! எல்லா பக்கங்களிலிருந்தும் , மூலை முடுக்குகளிலிருந்தும் அவைகள் உங்களை ஊடுறுவுகின்றன. அப்பொழுது, நீங்கள் மறைகிறீர்கள் . உங்களுடைய சாதாரண வாழ்க்கைநிலை அங்கே இல்லை. சில கணங்களுக்கு, நீங்கள் ஒரு மேலான நிலையில் சஞ்சரிக்கிறீர்கள் . சுவர்கள்

அதுவேதான், இங்கும் உங்களிடம் நிகழ்கிறது. நீங்கள் என்னைக் கேட்கும் பொழுது, என்னுடைய முன்னிலை, தோற்றம் , வார்த்தைகள் , மற்றும் பல ஆரஞ்சுநிற உடைகளை அணிந்தவர்களால் சூழப்பட்டுள்ள , ஒரு வித்தியாசமான நிலையெல்லாம் , ஏதோ ஒரு புதுமையை உங்களிடம் ஏற்படுத்துகிறது. இது ஒரு அமைப்பு. கோவில் கூட ஒரு அமைப்புதான் , ஒரு தெய்வீக சூழ்நிலைதான் . நீங்கள் , வெறுமனே ஒரு பிரசங்க கூடத்தில் அமர்ந்திருக்கவில்லை. இங்கே, என் பேச்சை, மிகவும் ஆவலுடனும் , அன்புடனும் நன்றியறிதலோடும் , அமைதியோடும் , அனுதாபத்தோடும் கேட்கும் இந்த சூழ்நிலையே, ஒரு

கோவிலைப்போலத்தான் . இந்த இடமே ஒரு தீர்த்தாவாக (TEERTHA)- புனிதம் பெற்று இருக்கிறது. நீங்கள் இந்த இடத்துக்கு வரும் பொழுது, ஒருவிதமான அலைகளின்மேல் மிதந்துவருகிறீர்கள் அதற்காக , மிகுந்த முயற்சியை, நீங்கள் மேற்கொள்ளவேண்டியது இல்லை. நீங்கள் , அது உங்களிடம் நிகழ, வெறுமனே அனுமதித்தால் போதும். நீங்கள் வெகுதூரத்தில் உள்ள அடுத்தகரைக்கு இழுத்துச் செல்லப்படுவீர்கள்.

ஒரு நிகழ்ச்சி :

ஒருவர், தன் மகனுக்கு ஏற்ற பெண் என்று கருதிய ஒரு பெண்ணை, அவளுடைய பெற்றோர்களுடன் சந்திக்க, தன் வீட்டில் ஏற்பாடு செய்யும்படி ஒரு கல்யாணத் தரகரிடம் சொல்லி, அவர்களையெல்லாம் வருவித்து, பெண்ணைப் பார்த்து, பிறகு எல்லோரையும் அனுப்பிவிட்டு, அவர் , அந்தக் கல்யாணத் தரகரிடம் , மிகவும் கோபமாக , " என்ன ஐயா, இது, இப்படி அவலட்சணமான ஒரு பெண்ணை எப்படி அழைத்துவந்தாய் ? அவளுடைய ஒரு கண் முன்னந்தலையில் இருக்கிறது. அவளுடைய இடது காது மேலே தூக்கிக்கொண்டு இருக்கிறது. வலது காது, கீழே தொங்கிக்கொண்டு இருக்கிறது, அவளுடைய தாடை பின்னோக்கி இருக்கிறது. இது என்ன பெண்ணா அல்லது பேயா?" என்று எல்லோரும் சேர்ந்து கத்த , அந்தத் தரகர் , " இதோ பாருங்கள் . நீங்கள் பிக்காஸோவுடைய படங்களை ரசிப்பீர்களா, இல்லையா?' என்று கேட்டார்!

இந்த உலகத்தில் உள்ள அவலட்சணங்களை, எடுத்துக்காட்டுவதே. பிக்காஸோவுடைய , நவீன ஓவியங்களின் நோக்கம் . அவருடைய ஓவியங்களில் அது ஏன் , மிகவும் சித்தரிக்கப்படுகிறது? பல நூற்றாண்டுகளிலேயே, மிகவும் அருவருப்பான நூற்றாண்டு இதுதான் என்று காட்டவே அப்படிச் செய்தார். 50 வருடங்களில், 2 உலக யுத்தம், பல லட்சம் மக்களை பலவாறாகக் கொடுமைப்படுத்தி, பைத்தியம் போலச் சாகடித்து, சாதனை செய்த நூற்றாண்டு இதுதான் இது ஒரு மிகப்பயங்கரமான நூற்றாண்டு. மனிதன், தன் மனிதத்தன்மையையே இழந்துவிட்டான்.

மனிதன் , மனிதனுக்கு செய்கின்ற காரியமா இது! இயல்பாகவே, இந்த பைத்தியத் தன்மை ஒவ்வொன்றிலும் பிரதிபலிக்க ஆரம்பித்தது. அதாவது, ஓவியம் , சங்கீதம் , சிற்பம் , நாவல் இப்படி எல்லாவற்றிலும் இது பிரதிபலித்தது. எல்லா இடங்களிலும் , இந்த அருவருப்பான மனித மனம் , அருவருப்பையே உண்டாக்கிவிட்டது.

அருவருப்பான அனைத்தும் , கலையம்சம் பொருந்தியதாகக் கருதப் பட்டது. இப்பொழுது, புகைப்படக்காரர்கள் கூட , அவலட்சணத்தையே படம் பிடித்துக்காட்ட விரும்புகிறார்கள் . எவைகளெல்லாம் அழகாக இருந்தனவோ, அவைகளெல்லாம் அலட்சியப்படுத்தப்பட்டது. அழகிய ரோஜாமலர் இருக்க வேண்டிய இடத்தில் , இப்பொழுது வெறும் முள்தான் இருக்கிறது. அந்த முள் , ஏதோ புதியது போலத் தோன்றி, இந்த நூற்றாண்டில் , அந்த ரோஜா மலர்களைவிட , இவைகள் தான் உண்மையானது என்பது போலக் காட்டப்படு .

கிறது. ரோஜா மலர் என்பது ஒரு கனவாகிவிட்டது. அது நமக்கு ஒத்துவர வில்லை. அந்த முட்புதர்கள் , உங்களுடைய வரவேற்பு அறைக்குள் வந்துவிட்டது. ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவர்கள் , முட்புதர்களுக்கு இவ்வளவு முக்யத்வம் கொடுக்கப்படும் என்று கனவில் கூட கருதியிருக்க மாட்டார்கள் . இப்பொழுது நீங்கள் ஒரு நாகரீகமான , நவீனகாலத்து மனிதர் என்றால் , உங்களுடைய தோட்டம் முழுவதும் முட்புதர்களா களாகவே இருக்க வேண்டும் . இப்பொழுது ரோஜா மலர்கள் மிகவும் பின்தங்கி, காலத்துக்கு ஒவ்வாததாகிவிட்டது. அது, பழங்காலத்தைச் சேர்ந்ததாகிவிட்டது. அந்த முட்கள் , மிகவும் புரட்சிகரமாக தோற்றம் அளிக்கிறது - அதாவது அடால்ப் ஹிட்லர் , ஜோசப் ஸ்டாலின் , மாசேதுங், பிடல் காஸ்ட்ரோ போல!

இந்த நூற்றாண்டில் , புகைப்படக்காரர்கள் , ஒரு அழகான பெண்ணைப் படம் பிடிப்பதற்கு பதிலாக, ஒரு அருவருப்பான முதிர்ந்த பிச்சைக்காரன் , மற்றும் பிச்சைக்காரிகளை படம் பிடிக்கவே விருப்பம்

கொள்கிறார்கள் பிச்சைக்காரர்கள், அந்தக் காலத்தில் இல்லை என்பது போலவும், இந்தக் காலத்தில் தான் இருப்பது போலவும் அவர்கள் சித்தரிக்கிறார்கள். அவர்களுடைய தோற்றம் உண்மையானதுதான். அதில் எந்தவித சந்தேகமும் இல்லை. ஆனால் அதிலிருந்து ஒருவிதமான கலையம்சத்தை, யாருமே இதற்கு முன்பு உண்டாக்கியதே இல்லை. நாம் அவர்களிடம் அனுதாபம் கொண்டு, ஐயோ, இந்த நிலையிலும் மனிதர்கள் இருக்கிறார்களே என்று நினைத்து உணர்ச்சி வசப்படலாம். இவர்களுடைய வறுமையைப் போக்க என்ன வழி என்று கருணையோடு சிந்தனை செய்யலாம். ஆனால், இந்த நூற்றாண்டு இந்தப் அருவருப்பைத்தான் தேடிக்கொண்டு செல்கிறது.

சிலகாலை வேளைகளில், பைன் மரங்களுக்கிடையே, சூரியக்கதிர்கள் புகுந்து வருவது எவ்வளவு ரம்மியமான காட்சி அது இப்பொழுதும் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. ஆனால், எந்தப் புகைப்படக்காரனுக்கும், அதில் அக்கரை இல்லை. அது அவர்களைக் கவரவில்லை. அவர்களை இந்த அருவருப்பானது தான் கவர்கிறது. ஏனென்றால் நாம் அருவருப்பை நோக்கித்தான் சென்றுகொண்டு இருக்கிறோம். எது நம்மைக் கவர்கிறதோ, அது நம்முடைய உள்ளத்தைக் காட்டுகிறது.

புத்தர், ஒரு அழகிய ரோஜா மலர். அவர் மிகுந்த மேலான நிலையில் இருக்கிறார். ஆனால், இந்த புத்த சிலைகள், அவருடைய உண்மையான உருவத்தைப் பிரதிபலிக்கவில்லை என்பது உங்களுடைய ஞாபகத்தில் இருக்கட்டும். உருவத்தில் அவர் எப்படி இருந்தார் என்பது பற்றி, யாருக்குமே தெரியாது. ஆனால், அது இங்கு முக்கியமல்ல. அவருடைய உண்மையான உருவம் என்ன? என்பது பற்றி, நமக்கு அக்கரை இல்லை. முக்கியமாக கீழை நாட்டுக்கு. நாம், அந்த முடிவான உண்மையில்தான், அக்கரை கொள்கிறோம். நடந்த உண்மையான நிகழ்ச்சிகளைப் பற்றி, நமக்கு அக்கரை இல்லை. நம்முடைய ஆர்வமெல்லாம், அந்த முடிவான உண்மையைப் பற்றித்தான்.

புத்தருடைய , உண்மையான மூக்கு, சற்று நீண்டு இருக்கலாம் . ஆனால் , அந்தச் சிலையைச் செதுக்கிய சிற்பி, அது சிறிதாக இருந்தால் , அவருடைய தியான உருவத்துக்கு மிகவும் எடுப்பாக இருக்கும் என்று நினைத்திருக்கலாம் . அவருடைய வயிறு சிறிது பெருத்திருக்கலாம் . யாருக்குத் தெரியும் ? ஜப்பானில் உள்ள புத்த சிலைகளுக்கு, வயிறு பெருத்து இருக்கிறது. ஆனால் , இந்தியாவில் உள்ள புத்த சிலைகள், வயிறு ஒடுங்கியவாறு காட்சி அளிக்கிறது. எது உண்மையானது?

ஆழ்ந்த தியானத்தில் உள்ளவர்கள் , வயிற்றில் உள்ள தொப்புள் மையத்திலிருந்துதான் , மூக்கு வழியாக மூச்சுவிடுகிறார்கள் , மற்றும் இழுக்கிறார்கள் என்று ஜப்பானியர்கள் நினைக் கிறார்கள் அப்போது உங்களுடைய வயிறு சற்று பெருத்துக் காணப்படும் . மாறாக , உங்களுடைய மார்பு சிறுத்துக் காணப்படும் . வயிற்றில் அசைவை ஏற்படுத்தி மூச்சைவிடுவதுதான். சரியானது என்பதைக் காட்டவே, அப்படிச் செய்திருக்கலாம் . ஆகவே, ஜப்பானில் உள்ள புத்த சிலைகளுக்கு, பெருத்த வயிறு இருக்கிறது.

ஆனால் , இந்தியச் சிலைகளில் எல்லாம் வயிறு சிறுத்தே காணப்படுகிறது. ஏனென்றால் , இந்திய யோக முறைகள் , மூச்சுவிடும் பொழுது, வயிற்று அசைவை விரும்புவது இல்லை. இதற்கும் , சில காரணங்கள் இருக்கின்றன . உங்களுடைய பாலுணர்வு சக்தி, மேலே வரவேண்டும் என்றால் , வயிற்றின் அசவைத் தூண்டும் வகையில் , மூச்சுவிடுவது சரியில்லை. வயிறு ஒடுக்கமாக இருந்தால் தான் , பாலுணர்வு சக்தியை மேலே சுலபமாக கொண்டுவர வசதியாக இருக்கும் என்று இவர்கள் கருதியிருக்கலாம் . எல்லாம் வெவ்வேறு முறைகள்.

வயிற்றை மையமாகக் கொண்டு, மூச்சுவிடுதல் , தியானம் செய்பவர்களுக்கு மிகுந்த ஓய்வைக் கொடுக்கும். ஆனால், வயிறு ஒடுக்கமான நிலையில், பாலுணர்வு சக்தி மேல் நோக்கி செல்லும் வேகம் , வயிறு பெருத்த நிலையில், குறைவாகவே இருக்கும். இந்தியப் புத்தர் சிலைகளுக்கு வயிறு சிறுத்தே

காணப்படும் . சிலசமயம் வயிறே இருக்காது. இந்த புத்தர் சிலைகளின் முகத்தில், ஆண் தன்மையைவிட, பெண்தன்மை அதிகமாகத்தெரியும் நீங்கள் தாடி மீசையுடன் எந்த புத்தர்சிலையையாவது பார்த்திருக்கிறீர்களா? கிடையாது. ஆனால் , ஜீசஸின் உருவத்தை, ஓவியர்கள் வரையும்பொழுது, மிகவும் இயல்பாக தாடி, மீசையுடன் வரைந்திருக்கிறார்கள் . கீழைநாட்டில் , புத்தர் ஓவியங்களில் , தாடி மீசை கிடையாது. ஏனென்றால் , கீழைநாடு உண்மையான உருவத்தைவிட , அந்த முடிவான உண்மையில்தான் அக்கரை காட்டுகிறது. இவர்கள் , புத்தர் எந்த உருவத்தில் இருந்தார் என்பதில் அக்கரை காட்டவில்லை. ஆனால், ஒரு தியான நிலையில் உள்ள உருவம் எப்படி இருந்திருக்கக் கூடும் என்பதில் ஆர்வம் காட்டினார்கள் . அவர்கள் புத்தருடைய உருவத்துக்கு முக்யத்வம் கொடுக்கவில்லை. அவர்கள், அந்தச் சிலைகளைப் பார்க்கும் மக்களிடத்தில்தான் அக்கரை செலுத்தியிருக்கிறார்கள் - அவைகளைப் பார்க்கும் மக்களுக்கு அது எந்த வகையில் உதவிசெய்யும் என்பதில் தான் அக்கரை செலுத்தி இருக்கிறார்கள்

ஆகவேதான் புத்தருடைய உருவத்தை சற்று இளைமையாகத் தீட்டியிருக்கிறார்கள் ஆனால் புத்தருக்கு வயது 82 இருந்திருக்கக்கூடும் . ஆகவே, அவர் நிச்சயமாக கிழட்டுத்தன்மையில் , சில வியாதிகளோடு இருந்திருக்கக் கூடும் - ஏனென்றால், அவர் செல்லும் இடங்களுக்கெல்லாம் ஒரு வைத்தியனும் கூடவே செல்வான் . ஆனால் , எந்தப் புத்த சிலைகளுமே, அவ்வளவு வயதானதாகக் காட்டப்படவில்லை. ஏனென்றால் உருவம் இங்கு முக்கியமில்லை. அவருடைய உள்ளம் தான் முக்கியமாகக் கருதப்பட்டது. அது எப்பொழுதும் இளைமையாகவே இருக்கும் . அதற்கு வயோதிகமோ, வியாதியோ கிடையாது, இருக்கவும் முடியாது ஆன்மீகமாக , புத்தர் பிறக்கவும் இல்லை, இறக்கவும் இல்லை அவர் எப்பொழுதும் சாசுவதமாக , இளைமையாகத்தான் இருக்கிறார் . ஆனால் ,

அவருடைய உடலுக்குத்தான் பிறப்பு, இறப்பு உண்டு. இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள் ஒரு புத்தர் சிலையை, இளமையாகப் பார்க்கும் பொழுது, அந்த இளமை உங்களிடமும் தொத்தி கொள்கிறது. நீங்கள் அப்பொழுது சற்று புத்துணர்ச்சி பெறுகிறீர்கள்.

இந்தியர்கள், ஜீசஸ் போன்ற ஞானிகள், சிலுவையில் அறைந்து கொல்லப்படுவதைக் காட்சியாகப் பார்க்க விரும்பமாட்டார்கள் . அது அருவருப்பானது. துக்ககரமானது. அது, சரித்திரபூர்வமாகச் சரியாக இருந்தாலும் , அந்தக் காட்சியை, ஞாபகப்படுத்திப் பார்ப்பது என்பது நல்லது அல்ல. ஏனென்றால், நீங்கள் அப்படிப்பட்ட காட்சியை அடிக்கடி ஞாபகப் படுத்திக் கொண்டால் , அது மீண்டும் நிகழ உலகத்தில் ஒரு சந்தர்ப்பத்தை மற்றும் சூழ்நிலையை ஏற்படுத்திவிடும். நீங்கள் இறந்த காலத்தை அப்படியே, பின்பற்ற வேண்டிய அவசியம் இல்லை. அது, ஒரு வகையில் நாம் எதைத் தேர்ந்து எடுத்துக்கொள்வது என்பதற்கு உதவலாம் . ஆகவே, தவிர்க்க வேண்டியவைத் தவிர்த்தால் , ஒரு நல்ல எதிர்காலத்துக்கு, அது அடி கோலும்

ஆமாம் , ஜீசஸ் சிலுவையில் அறையப்பட்டது உண்மைதான் . ஆனால் , அவர் இந்தியாவில் அறையப்பட்டிருந்தால் , அந்த அருவருப்பான காட்சியை, ஓவியமாகத் தீட்டி இருக்கமாட்டார்கள் . அந்தச் சிலுவையில் கூட , அவரை வேறுவிதமாகத்தான் தீட்டியிருப்பார்கள் , மேற்கே தீட்டிய அந்த ஓவியத்தை, நீங்கள் சற்று உற்றுப்பார்த்தால் , தியானத் தன்மையில் வெறுமனே பார்த்தால் நீங்கள் துக்கமான உணர்வைத்தான் அடைவீர்கள் . ஜீசஸ் ஒருக்காலும் சிரித்தது இல்லை என்று கிருஸ்தவர்கள் நம்புவது, யதேச்சையான செயலல்ல . நீங்கள் ஒரு சர்ச்சுக்கு சென்று, மகிழ்ச்சியாக ஆடுவதும் , பாடுவதும் , சிரித்து மகிழுவதும் முடியாத காரியம் சர்ச்சு என்பது ஒரு இறுக்கமான , துக்கமான சூழ்நிலை நீங்கள் , அங்கே தொங்கிய முகத்தோடு, துக்கமாகத்தான் இருக்க வேண்டும் . அங்கே, மேடைமீது, ஜீசஸ் சிலுவையில் அறையப்பட்டு இறப்பு நிலையில் இருக்கும் பொழுது, உங்களால் எப்படி, ஆடிப்பாடி மகிழ முடியும்?

ஆனால் , இந்திய கோவில்களில் , நீங்கள் ஆடலாம் , பாடலாம் மற்றும் மகிழ்ச்சியாக இருக்கலாம் . பொதுவாக, மதம் என்றாலே ஆனந்தம், மற்றும்

கொண்டாட்டம்தான் . கீழைநாடுக்கும் , மேலைநாட்டுக்கும், அடிப்படையில் என்ன வித்தியாசம் என்றால் , மேலைநாட்டு மனம் , அதிகமாகச் சரித்திரத்துக்கு முக்யத்வம் கொடுக்கிறது. ஆனால் , கீழைநாட்டு மனம் , உயிரியக்கம் , உயிர்த்தன்மை போன்றவைகளுக்கு, அதிக முக்யத்வம் கொடுக்கிறது. மேலை மனம் , சரித்திரப்பூர்வமான நிகழ்ச்சிகளுக்கு முக்யத்வம் கொடுக்கிறது. ஆனால் , கீழைநாட்டு மனம் இவைகளுக்கு அதிய முக்யத்வம் கொடுப்பதில்லை. மேலைநாடு, இந்தியாவில் குடியேறிய பிறகுதான் , அது சரித்திரத்துக்கு முக்யத்வம் கொடுத்தது. அதுவரை, அதற்கு சரித்திரம் என்றாலே என்னவென்று தெரியாது! அதற்கு முன்பு, எந்தச் சரித்திரத்தையும் , யாரும் எழுதியது கிடையாது. ஆகவேதான் , புத்தர் எப்பொழுது பிறந்தார் ; எப்பொழுது இறந்தார் என்பது சரியாக விளங்கவில்லை. மேலோட்டமான உண்மை நிகழ்ச்சிகள் அர்த்தமில்லாததுதான் . புத்தர் , திங்கள்கிழமை பிறந்தால் என்ன , செவ்வாய் மற்றும் வியாழக்கிழமையில் பிறந்தால் என்ன ? இதற்கும் , அவருடைய ஆன்மீக நிலைக்கும் என்ன சம்மந்தம் ? நீங்கள் முக்கியமாக தெரிந்துகொள்ள வேண்டியது, பிறந்தது யார் , அவருடைய உள்மையம் என்ன என்பதுதான்

சரித்திரம், மேலோட்டமாக நிகழ்ச்சிகளை அணுகுகிறது. புராணங்கள் , உள் தன்மையை, உள் நிலையை மையமாக வைத்து எழுதப்பட்டிருக்கிறது. இந்தியா, புராணங்களைத்தான் எழுதியிருக்கிறது. சரித்திரத்தையல்ல புராணங்கள் , கவித்தன்மையும் , கற்பனையும் கலந்து, எப்படி இந்த உலகம் இருக்கிறது. எப்படி எல்லோரும் இருக்க வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. மக்களுக்கு விளங்காததை, அது விளக்கிக்காட்டுகிறது. அவைகள் அந்த முடிவான உண்மையை இலக்காக வைத்து எழுதப்பட்டுள்ளது. புத்தருடைய சிலைகள் , அந்த முடிவான உண்மையை,

அதாவது சமாதி நிலையை எடுத்துக்காட்டுகிறது.

நீங்கள் , பிராங்போர்ட்டில் உள்ள தொல்பொருள் கலைக்கூடத்தில் பார்த்த சிலைகள் , உள் அமைதிநிலையை எடுத்துக்காட்டுகிறது. ஒருவன், தன் உள் அமைதியில் ஆழ்ந்து இருந்தால் , அந்த உருவ அமைப்பில்தான் இருக்க முடியும் . எல்லாம் மிகவும் அமைதியாக , மிகவும் நிசப்தமாக , ஒரே நிலையில் இருந்தால் - ஒரு சிறிய எண்ணம் கூட இல்லாத நிலையில், நகராத நிலையில், எல்லா இயக்கங்களும் நிற்கும் பொழுது, காலமும் மறைகிறது - நீங்களும் அந்தப் புத்தர் வடிவத்தில்தான் அமர்ந்திருப்பீர்கள் . இது முன்னிலையைப் பொருத்த கலை. இவைகள் உருவ அமைப்புக்கு முக்யத்வம் கொடுப்பதைவிட , அவர்களுடைய உள் ஆன்மீக நிலைக்குத்தான் முக்யத்வம் கொடுக்கிறது. புத்தரைவிட , புத்தா தன்மையை அடைய நினைக்கும் மக்களுக்கு, இந்த நிலை, மிகவும் உதவியாக இருக்கும். அவர்கள் இந்தச் சிலைகளை உன்னிப்பாகக் கவனித்து, அந்த சிலைகளின் முன்னால் மண்டியிட்டு, வெறுமனே தியானம் செய்வார்கள்.

இந்தியாவில் உள்ள கஜுராஹோவின் கோவில்கள் அனைத்தும் சாதாரண கோவில்கள் அல்ல . அங்கு, ஆணும் - பெண்ணும் பல நிலைகளில் உ உடலுறவு கொள்வதை, சிற்பமாக வடித்திருக்கிறார்கள் . அவைகளில், பல அமைப்புகள்

மிகவும் கற்பனையானது மற்றும் நடைமுறையில் சாத்யம் இல்லாததுதான் . அந்த கற்பனைச் சிலைகளைப்போல, ஒரு டீ சாடோ (de SADE) அல்லது ஒரு வான் சாச்சர் மாஸோவோ (VON SACHER MASOCH) தங்களுடைய கற்பனைகளில் கூட நினைத்துப் பார்த்திருக்கமாட்டார்கள் . உதாரணமாக , ஒரு ஆணும், பெண்ணும் தலைகீழாக நின்று கொண்டு, உடலுறவு கொள்வதாக காட்டப்பட்டிருக்கிறது! ஆனால், இதைப் போல யாரும் செய்ய முயலமாட்டார்கள் என்றே நினைக்கிறேன் . எந்த நாடுகளிலும் , இப்படி செய்ய முடியாது. எத காக, இப்படிப்பட்ட ஓவியங்களை வரைந்திருக்கிறார்கள் ? இவைகள் எல்லாம்

முன்னிலைக் கலையின் (OBJECTIVE ART) கற்பனை வடிவங்கள் இவைக ளெல்லாம் உங்களுடைய அடக்கப்பட்ட காம உணர்வுகளுக்கு, சிகிச்சை (THERAPY) அளிக்கிறது. யாராவது, அடக்கப்பட்ட காம உணர்வில் , மனநிலை பாதிக்கப்பட்டிருந்தால் , அவர்களை இங்கு அனுப்பிவிடுவார்கள் . அவர்கள் , இந்த சிலைகளையெல்லாம் நன்றாகக் கவனித்து, தங்கள் மனத்தில் வாங்கி, மனக்கண்ணால் , அந்தத் தோற்றங்களை வெறுமனே பார்த்து, தியானிப்பார்கள், அந்த விபரீதமான அடக்குதல் , அவனுடைய பிரக்ஞையற்ற மனதில் ஆழமாகப்பதிந்து இருக்கிறது. மனநல வைத்தியம் இதற்கு என்ன செய்கிறது? அது. பிரக்ஞையற்ற மனதில் உள்ளதை, பிரக்ஞை மனதுக்கு மேலே கொண்டுவருகிறது. அவ்வளவுதான். இந்த பிரக்ஞைநிலைக்கு, அது வந்தால் , அது அடக்கப்பட்டதிலிருந்து விடுதலை அடைகிறது. அப்பொழுது நீங்கள் சுதந்திரமாக இருப்பதை உணர்கிறீர்கள் என்று மனநல வைத்தியம் சொல்கிறது.

ஆனால் , இந்தச் சிகிச்சையை, கஜுராஹோ மிகத் திறமையாகச் செய்கிறது. அந்தக் கால மனநல வைத்தியர்கள் , மிகவும் நிபுணர்களாக இருந்திருக்க வேண்டும் . அடக்கப்பட்ட பாலுணர்வால் , பாதிக்கப்பட்டவர்களை, இங்கு கொண்டுவந்து, அந்த சிலைகளையும் , ஓவியங்களையும் பார்க்க வைக்கிறார்கள் . அப்பொழுது அந்த உணர்வுகள் மேலே வர ஆரம்பிக்கின்றன.

தனக்குள்ளே அடக்கப்பட்ட காம உணர்வால் , ஒரு சீழ்பிடித்த காயம் இருக்கிறது என்பது அவனுக்குத் தெரியும் . ஆனால் , அதை நேருக்கு நேர் பார்க்க , தைரியம் இல்லை. அவன் அந்த கோவிலில் உள்ள சிலைகளை உ ற்றுப்பார்த்து ஒவ்வொன்றையும் தியானிக்க வேண்டும். ஒரு நாள் , திடீரென்று ஏதோ ஒரு சிலை வடிவம் , அவனுக்குள்ளே உள்ள உருவ அமைப்போடு ஒத்து வருவதை உணர்வான் . அப்பொழுது, அந்த அடக்கப்பட்ட காம உணர்வு மற்றும் உருவ அமைப்பு பிரக்ஞை மனத்துக்கு மேலே வந்துவிடும். இப்பொழுது அவனால் அதை தெளிவாக நேருக்கு நேர் பார்க்க முடியும். பிறகு பிராய்டு (FREUD) அல்லது ஜங் (JUNG) மற்றும் அட்லர் (ADLER) உதவி

இல்லாமல் அவைகள் மெல்ல அவனைவிட்டு நீங்கும். அவர்கள் முயன்று செய்வதை, இந்தக் கோவில்கள் எந்தவித முயற்சியும் இல்லாமல் செய்துவிடுகின்றன! அவன் அங்கு சிலவாரங்கள் தங்கியிருக்க , தகுந்த ஏற்பாடுகளைச் செய்வார்கள். தியானத்தில் ஆழமாகச் செல்ல விரும்புபவர்கள், முதலில் இங்கேவந்து, இந்தச் சிலைகளை ஆழ்ந்து பார்த்து, தியானித்து, தங்கள் உள்ளே ஆழமாகச் செல்வார்கள்.

இந்தக் கோவிலின் வெளிப்பிரகாரம், சுவர்போன்று எல்லா இடங்களிலும், இப்படி விபரீதமான , கற்பனைக்கெட்டாத வகையில் பல சிலைகள் இருப்பதைக் காணலாம் . ஆனால் , கோவிலுக்குள்ளே, இப்படிப்பட்ட எந்தச் சிலையும் இருக்காது. ஏன் , கிருஷ்ணா, புத்தா மற்றும் சிவா சிலைகள் போன்றுகூட , எதுவும் இருக்காது. இதற்கு என்ன அர்த்தம்? ஏன், வெளியே மட்டும் அந்த உடலுறவு சிற்பங்கள் இருக்கின்றன ? ஏன் , உள்ளே அவைகள் கிடையாது? அது ஒரு தந்திரமான முறை! நீங்கள் முதலில் மேலோட்டமாக உள்ளதில் (PERIPHERY) கவனம் செலுத்த வேண்டும் . அதில் முழுமையாக , பாலுணர்வு மற்றும் உடலுறவில் (SEX) பிரக்ஞையாகச் சென்றால் , அதிலிருந்து நீங்கள் விடுபடுவீர்கள் . அதைப்போல இந்த சிலைகளில் முழுமையாக கவனம் வைத்து, பிறகு அதைத் தியானமாக்கினால் , நீங்கள் அதிலிருந்து விடுபடுவீர்கள் . இதுதான் உடலுறவு சிலைகளின் அடிப்படைத் தத்துவம் . இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள் . ஆகவே, இப்படி நீங்கள் தியானிக்கும் பொழுது, ஒரு கட்டத்தில் அந்த சிலைகளால் , நீங்கள் கவரப்படமாட்டீர்கள் . நீங்கள் அதற்கு முன்பு உட்கார்ந்திருக்கலாம் . ஆனால் , அவைகள் உங்களுடைய உள்ளத்தில் , எந்தவிதக் கிளர்ச்சியையும் தூண்டாது. ஒரு வாரம் கூட , நீங்கள் உட்கார்ந்து பார்க்கலாம். அவைகள் உங்களிடம் எந்த மாறுதலையும் உண்டு பண்ணாது. அப்பொழுதுதான் , நீங்கள் அந்த கோவிலுக்குள்ளே செல்லத் தகுந்த தகுதியைப் பெறுகிறீர்கள்.

இவைகள் எல்லாம் ஒரு உருவகம்தான். இப்பொழுது. நீங்கள் உங்களுடைய பாலுணர்வை கடந்து

செல்கிறீர்கள் . இந்தக் கோவில்கள் எல்லாம் , தந்த்ரா கோவில்கள்தான். இந்த உலகத்திலேயே, இப்படிப்பட்ட வித்தியாசமான பரிசோதனை, இந்தியாவைத் தவிர , வேறு எங்கேயும் நடந்ததில்லை. அவைகளெல்லாம் அசிங்கமானதோ, அருவருப்பானதோ அல்ல . அவைகள் மேலைநாட்டில் உலவும் நிர்வாணப்படங்கள் போல அல்ல. இவைகள் ஆன்மீகமானது - இவைகள் ஆன்மீகத்தில் , ஒரு மிகப்பெரிய முன்னேற்பாடின் பரிசோதனை; மனிதனின் பாலுணர்வு சக்தியை, மேலான நிலைக்குக் கொண்டுவர , மற்றும் ஆன்மீக சக்தியாக மாற்ற , இது ஒரு மிகப்பெரிய ஆரம்பப் பரிசோதனை.

முதலில் , இந்த சக்தி, கீழான நிலையிலிருந்து விடுபடவேண்டும் . அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. அதை முழுமையான பிரக்ஞையுடன் கவனிக்க வேண்டும் . உங்களுடைய பிரக்ஞையற்ற மனதில் பதிந்த , பல் கற்பனையான பாலுணர்வு எண்ணங்கள் அனைத்தும் மேலே உள்ள பிரக்ஞைநிலைக்கு வரவேண்டும் . இது ஆரம்பத்தில் மிக , மிக கஷ்டம் . பல தடவை, நீங்கள் பழைய நிலையில் வழுக்கி விழநேரிடும் . அதையும் நீங்கள் பிரக்ஞையுடன் கவனிக்க வேண்டும். இந்தப் பிரக்ஞை உணர்வு முழுமையடைய சில மாதங்கள் கூட, ஆகலாம். அப்படி முழுமையடையாத நிலையில் , நீங்கள் ஒரு காமுகனாக மாறினால் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. இது கத்திமேல் நடப்பது போன்ற சமாச்சாரம் மிக, மிக ஜாக்ரதையாக அணுக வேண்டும் . இப்படி உங்களுடைய

பிரக்ஞையற்ற நிலையில் உள்ள அருவருப்பான எண்ணங்கள் அனைத்தும் விடுபட்ட நிலையில் , அந்த நிலை சுத்தமாகிறது. பிறகு, நீங்கள் ஆன்மீகத்தில் முன்னேற , எந்தத் தடையும் இருக்காது. நீங்கள் சுலபமாக மேலே செல்லாம் நீங்கள் இப்பொழுது, கோவிலின் உள்ளே செல்லலாம் . ஆனால் , அந்தக் கோவிலின் உள்ளே எதுவுமே இல்லை. எந்த விக்ரகமும் கிடையாது. இது எதைக் காட்டுகிறது

என்றால் , நீங்கள் மேலே, மேலே சென்று இந்த ஒன்றுமற்ற பிரபஞ்ச பரவெளியோடு கலப்பதை, உருவகமாகக் காட்டப்படுகிறது. இப்பொழுது, நீங்கள் வேறு கோவிலுக்குச் சென்று, அங்கேயுள்ள புத்தா, சிவா மற்றும் கிருஷ்ணா சிலைகளின் மேல் கவனம் வைத்து, தியானிக்கலாம்

ஆகவே, உங்களிடம் ஏற்பட்ட, அந்த சக்தி உணர் வின் ஓட்டம் கற்பனையல்ல. அந்த புத்தச் சிலைகளெல்லாம், ஒரு ஆன்மீக முன்னிலைக்கலை. நீங்கள் அதன்மேல் , தெரியாமலே தவறிவிழுந்துவிட்டீர்கள்!

கேள்வி 3:

''என்னிடம் இல்லாதது, எது உங்களிடம் இருக்கிறது?

( நான் உங்களுடைய ஆஸ்ரமத்தைப் பற்றியோ, காரைப்பற்றியோ மற்றும் காரியதரிசி போன்றவைகளைப் பற்றியோ பேசவில்லை )

நீங்கள் , என்னுடைய எல்லா வசதிகளைப் பற்றியும் முன்னமே பேசியிருக்க வேண்டும்; யோசித்து இருக்க வேண்டும். இல்லாவிட்டால், இதைப்பற்றி இப்பொழுது சொல்ல வேண்டிய அவசியம் என்ன? இப்படி நீங்கள் குறிப்பிடுவதே. உங்களுடைய மனநிலையை எடுத்துக்காட்டுகிறது. நீங்கள் பயந்திருக்க வேண்டும். ஆகவேதான் , இந்த எண்ணங்கள் , உங்களுடைய மனதை ஆக்ரமித்துக்கொண்டு இருக்கிறது.

முதலில் , இதைத் தெரிந்து கொள்ளுங்கள் . எனக்கு என்று எந்த ஆஸ்ரமமோ, காரோ மற்றும் காரியதரிசி என்று எதுவும் இல்லை. இங்கே எனக்கென்று எதுவுமே கிடையாது. என்னுடைய உயிர்தன்மையைத் தவிர நான் இங்கு வெறுமனே இருக்கிறேன் . இப்படி இருப்பதுதான் என்னுடைய பொக்கிஷம் , நான் பெற்றிருப்பது அல்ல.

இந்த ஆஸ்ரமம் உங்களுக்காகவே இருக்கிறது; எனக்காக அல்ல. இந்த காரியதரிசியும், ஏன் எல்லாமே, உங்களுக்காகவே இருக்கின்றன . இதற்கும் எனக்கும் எந்தவித சம்மந்தமும் கிடையாது.

நான் என்னளவில் தனித்து இருப்பதில் மிகுந்த

நிறைவாகவே இருக்கிறேன்.

ஆனால் , உங்களுடைய மனத்தில் , எங்கேயோ ஆழமாக , இந்த வெளிப்பொருள்களின் கவர்ச்சி இருந்துகொண்டே இருக்கிறது. நீங்கள் ஒரு கேள்வியைத் தயாரிக்கும் பொழுதே, அது உங்களுடைய மனநிலையை எடுத்துக்காட்டும் . ஒரு கேள்வி என்பது கேள்வி மட்டும் அல்ல ; அது உங்களையும் பிரதிபலிக்கிறது.

ஒரு புகைபிடிக்கும் அறையில், சிலர் கூடி, யாரு சிறந்த கண்டுபிடிப்பாளன் என்று சர்ச்சையில் ஈடுபட்டார்கள் . அதில் ஒருவன் , ரயிலைக் கண்டுபிடித்த ஸ்டீவன்சன் என்றும் , அடுத்தவன் மார் கோனி என்றும் , எடிசன் என்றும் ஒவ்வொருவராக ஒரு கண்டுபிடிப்பாளனை குறிப்பிட்டார்கள் . முடிவில் , ஒரே ஒரு மனிதன் மாத்திரம் எதுவும் கூறாமல் பேசாமல் , இவர்கள் சொல்வதையெல்லாம் வெறுமனே கேட்டுக் கொண்டிருந்தான் . அவர்கள் , அவனிடம் , " நீ என்ன சொல்கிறாய் என்று கேட்டார்கள்.

அதற்கு அவன் , சிறிது புன்முறுவல் பூத்தவாறு. ' யார் இந்த " வட்டியை (INTEREST) கண்டுபிடித்தானோ, அவன் முட்டாளல்ல" என்றான்.

ஒரு யூதன் , எல்லோரிடமும் ( உங்களையும் சேர்த்துதான் ) மறைந்தே இருக்கிறான் . ஒரு யூதன் எப்பொழுதும் பணம் , பொருள் , வட்டி போன்ற பொருள்களைப் பற்றியே எப்பொழுதும் நினைத்துக்கொண்டு இருப்பான்.

முதலில், நீங்கள் செய்ய வேண்டியது என்னவென்றால், உங்களுடைய இருத்தலில் (BEING) கவனம் செலுத்துங்கள், பெற்றிருப்பதில் (HAVING) கவனமாக இருக்க வேண்டாம் . உங்களுடைய கவனத்தை பெற்றிருப்பதிலிருந்து 'இருத்தலில் மாற்றவும். நீங்கள் இந்த உலகத்தையே பெற்றிருக்கலாம். ஆனால் , அது, முடிவில் உங்களுக்கு எந்த விதத்திலும் உபயோகப்படப்போவது இல்லை. நீங்கள் ஒரு பிச்சைக்காரனாகவே இருப்பீர்கள். ஞாபகமிருக்கட்டும்.

நான் , இந்த உலகத்தை நீங்கள் துறக்க வேண்டும் என்று கூறவில்லை. இந்த முடிவுக்கு திடீரென்று வந்துவிடாதீர்கள் . நான் சொல்வது என்னவென்றால் , நீங்கள் இந்த உலகத்தையே அடைந்திருந்தாலும் , எதுவுமே உண்மையாக அடையவில்லை என்பதையே குறிப்பிடுகிறேன் . நான் , இந்த உலகத்தைத் துறக்க வேண்டும் என்று கூறவில்லை. இந்த வித்தியாசத்தை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள் . ஏனென்றால் , பெரும்பாலான துறந்தவர்களுடைய மனம் எப்பொழுதும் உடையதிலேயே நாட்டமாக இருக்கும் . நீங்களும் பணத்தை எண்ணுகிறீர்கள் . அவர்களும் பணத்தை எண்ணுகிறார்கள் . நீங்கள் . ' என்னிடம் ஆயிரக்கணக்கான டாலர்கள் '' இருக்கின்றன என்று கூறுகிறீர்கள் . அவர்களும் , " நான் பல ஆயிரக்கணக்கான டாலர்களை துறந்திருக்கிறேன் என்று சொல்கிறார்கள் . ஆகவே, அந்த துறந்தவர்களின் மனமும் அதையேதான் சுற்றிக்கொண்டு இருக்கிறது! அந்த எண்ணுதல் இருவரிடமும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது. நீங்களும் வரவு - செலவு நோட்டை வைத்திருக்கிறீர்கள் . அவர்களும் அப்படியே வைத்திருக்கிறார்கள்.

நீங்கள் யாரென்று அறிந்துகொள்வதுதான், உங்களை ஒரு சக்கரவர்த்தியாக மாற்றும் . ' இருத்ததில் நீங்கள் ஒரு அரசனாக இருக்கிறீர்கள் . ' பெற்றிருப்பதில் நீங்கள் ஒரு ஏழையாகத்தான் இருக்கிறீர்கள்.

இந்த உலகத்தில் , இரண்டு வகையான ஏழைகள் இருக்கிறார்கள் . ஒருவகையில் , பெற்றிருந்தும் ஏழையாக , அடுத்தவகை பெறாமல் ஏழையாக இருக்கிறார்கள் . ஏனென்றால் , ஒரு வகை, அடைந்தும் மனத்தளவில் ஏழையாக

.

இருக்கிறது. அடுத்தவகை, வெளியிலும் , உள்ளும் ஏழையாக இருக்கிறது. உடமை' ஏதும் இல்லாதவர்கள், " இதை வைத்துக்கொண்டு எப்படி வாழ்வது? " என்று குழம்புகிறார்கள் . அவர்கள் அதிலேயே நின்றுவிடுகிறார்கள் . ' உடமை' மிகவும் பெற்றவர்களும் ( பணம் , மற்றும் வசதிமிக்கவர்கள் )

கடைசியில் , ' இதைவைத்துக் கொண்டு. இப்பொழுது என்ன செய்வது? என்று குழம்புகிறார்கள் . அவர்கள் , தங்கள் வாழ்நாளை இதற்காகவே, வீணடித்து விட்டோமே என்று கலங்குகிறார்கள். அது, இப்பொழுது அவர்களிடம் எந்தத் திருப்தியையும் கொடுக்கவில்லை, எந்த நிறைவையும் ஏற்படுத்தவில்லை, எந்த மலர்ச்சியையும் உண்டாக்கவில்லை. அவர்களது வாழ்க்கையில் மனத்தளவில் கொண்டாட்டமே இல்லை. அவர்களது உடமை' , கடவுளை அடைய ஒரு பெரிய தடங்கலாகவே இருக்கிறது. அவர்கள் ஒருக்காலும் கடவுள்தன்மையை அடைய முடியாது.

நீங்கள் , ' என்னிடம் இல்லாதது, உங்களிடம் எது இருக்கிறது? என்று கேட்கிறீர்கள்.

நீங்கள், 'உடமை'யைப் பற்றி பேசினால், என்னைவிட, உங்களிடம் மிக அதிகமாகவே இருக்கும் . மற்றும் எல்லையில்லாத அளவுக்கு, கர்வம் , அகங்காரம் , கோபம் , ஆசை, காம இச்சை என்று சொல்லிக்கொண்டே போகலாம்.

நான் அடைந்திருப்பது என்ன ? எதுவுமே இல்லை. உண்மையில் , என்னிடம் உள்ளும் , புறமும் எதுவுமே இல்லை. ஆக . 'உடமை என்ற அர்த்தத்தில் என்னைப் பார்த்தால் , நான் ஏழையிலும் , ஏழைதான் . ஆனால் , இருத்தல் ' என்ற அர்த்தத்தில் என்னைப் பார்த்தால் , நான் இந்த உலகத்திலேயே பெரிய பணக்காரன் . நீங்கள் எப்பொழுது உங்களுடைய அகங்காரத்தையும் பேராசை மற்றும் கோபம் போன்றவைகளை விடுகிறீர்களோ, அப்பொழுது நீங்கள் எதையுமே இழக்கவில்லை; மாறாக நீங்கள் மேலும் , மேலும் பணக்காரனாகிறீர்கள்.

நீங்கள் பேராசையைவிடும்பொழுது, அந்தப் பேரியிக்க உயிர்த்தன்மை, தன்னை உங்களோடு பகிர்ந்து கொள்ள வருகிறது. உங்களுடைய கோபம் மறையும் பொழுது, அதனுடைய கருணையைப் பெறுகிறுநீர்கள். அதைப்போல , உங்களுடைய வெறுப்பு, தன்னுடமை (POSSESSIVENESS) போன்றவைகள் மறையும் பொழுது, அதனுடைய அன்பைப் பெறுகிறீர்கள் . நான் என்னையே அடைந்திருக்கிறேன் , அந்த இருத்தலில் இருக்கிறேன் . அதுவே, என் மூலமாக பல பரிமாணங்களில் தன்னை அது

வெளிப்படுத்திக்கொள்கிறது

ஆகவே, நீங்கள் என்னைவிட மிக அதிகமாகப் பெற்றிருக்கிறீர்கள் ! இருந்தும் , நீங்கள் எதை அடையவேண்டுமோ, அதை அடையவில்லை என்று என்னால் உறுதியாகக் கூறமுடியும் . நான் , நானாக இருக்கிறேன். நீங்கள் அப்படி இல்லை.

கேள்வி 4:

" மனிதன் ஒரு இயந்திரம் தான் என்று நீங்கள் எந்த அர்த்தத்தில் சொல்கிறீர்கள்?''

ஆமாம். மனிதன் ஒரு இயந்திரம்தான். ஒரு நிகழ்ச்சி

சார்லி (CHARLIE) தன் பழைய நண்பனைப் பார்த்து, உற்சாகமாக , ' ஹலோ பெர்னி (BERNIE) எப்படி இருக்கிறாய் ? என்னுடன் வா. என்னிடம் உள்ள இந்த புகை பிடிக்கும் பழக்கத்தை, ஒரு பாருக்கு (BAR, குடிக்கும் இடம் ) சென்று கொண்டாடலாம்.' என்றான்.

பெர்னி, "நீ என்ன சொல்கிறாய்?"

சார்லி, " என்னுடைய மனைவி, சிகரெட்டு பழக்கத்தைவிட்டு விடும்படி வற்புறுத்தினாள் . அவளுடைய அறிவுரை என்னவென்றால் , எனக்கு எப்பொழுதெல்லாம் , சிகரெட்டைப் பிடிக்க வேண்டும் என்று ஆசை ஏற்படுகிறதோ, அப்பொழுது ஓ ஹென்றி (O HENDRY) சாக்லெட்டை சுவையுங்கள் என்பதுதான்' என்றான்.

'நீ, அவள் சொன்னது போலச் செய்தாயா?''

"ஆமாம். அதைத்தான் கொண்டாடப்போகிறோம். நான் இன்று, மீண்டும் அந்த சிகரெட் பழக்கத்துக்கு திரும்ப வந்துவிட்டேன் . அந்த சாக்லெட் , ஒன்றும் வேலை செய்யவில்லை!' என்றான்.

நான், மனிதனை இயந்திரம் என்று ஏன் சொல்கிறேன் என்றால் , அவன் , தன் பழைய பழக்கத்தின்

மூலமாகவே இயங்குகிறான் , தன்னுடைய பிரக்ஞைநிலையில் அல்ல . அவன் , தன் இறந்த காலத்தையொட்டியே இயங்குகிறான் , அப்போதைக்கப்போது (SPONTANEOUS) நிகழ்காலத்தைப் பார்ப்பதில்லை. உண்மைநிலைக்கு ஏற்றவாறு, தன்னை மாற்றிக் கொள்ள அவனால் முடியவில்லை. அவன் , எப்பொழுதும் பழைய எண்ணங்களிலும் , பழைய பழக்கவழக்கத்திலுமே வாழ்ந்துகொண்டு இருக்கிறான்.

அடுத்தது :

ஒருநாள் , முல்லா நசுருதீன் ஒருவார இதழில் உள்ள ஒரு பாட்டை ரசித்துப்படித்தான் . அதனுடைய அர்த்தம் என்னவென்றால் , " இந்த மலர்கண்காட்சியிலிருந்து, ஒன்று அல்லது இரண்டு பூங்கொத்துகளை வாங்கி, உங்கள் வீட்டுக்குக் கொண்டு சென்று, உங்களுடைய மனைவி மகிழ்ச்சியற்ற நிலையில் இருக்கும்பொழுது, அவளிடம் அன்புடன் அதைக்கொடுத்து " இன்று கடைத்தெருவில் , உன்னை நினைத்துக்கொண்டேன் '' என்று ஏன் நீங்கள் சொல்லக்கூடாது? ' என்பதுதான்.

முல்லாவும் , அப்படியே செய்தான் . அவன் சில மலர்க்கொத்துகளை வாங்கிக்கொண்டு, தன் வீட்டுக்கு வந்து, எப்பொழுதும் போல் சாதாரணமாக உள்ளே நுழையாமல் , கதவைத் தட்டினான் . அவனுடைய மனைவி, கதவைத் திறந்ததும் , அந்த மலர்களை அன்புடன் , அவளிடம் கொடுத்தான் . ஆச்சரியத்திலும், அதிர்ச்சியிலும் மூழ்கிய அவள் , ' ஓ ' வென்று கத்த ஆரம்பித்துவிட்டாள்.

அதிர்ச்சியடைந்த முல்லா, ' என்ன , என்ன நடந்தது? என்று கேட்டான்

அவள், 'இன்று மோசமான நாள் என்று நினைக்கிறேன். இன்று, டீ பாத்திரத்தை, கை நழுவிப் போட்டு உடைத்து விட்டேன் . குழந்தை அழுது கொண்டே இருக்கிறது. சமையல்காரியும் நின்றுவிட்டாள் . இப்பொழுது, நீ , குடித்துவிட்டு வந்திருக்கிறாய்!" என்றாள்.

மனிதன் , ஒரு இயந்திரம்தான் என்று நான் சொன்னதன் அர்த்தம் இதுதான் . நீங்கள்

பிரக்ஞையாக செயல்படமாட்டீர்கள் . ஒரு இயந்திரம் எப்படி பிரக்ஞையாகச் செயல்படும்?

வெளியே உள்ள சிலர், உங்கள் தலையில் தொடர்ந்து அடித்துக்கொண்டே இருக்க வேண்டும் . அப்பொழுது ஒரு நாள் அது உண்மையிலேயே வேலை செய்து, உங்களுடைய பழக்க வழக்கத்தில் ஒரு அதிர்ச்சியை ஏற்படுத்தலாம் . அந்தச் சில கணங்களில் , நீங்கள் விழிப்புணர்வு பெறலாம்.

ஒரு குருவின், முக்கிய வேலையே இதுதான் . அவர் எப்பொழுதும் , உங்களுடைய தலையில் , இந்தப் பக்கமும், அந்தப் பக்கமும் தட்டிக்கொண்டே இருப்பார். அவர் எப்பொழுதும் தன்னுடைய செயல்முறைகளை சூழ்நிலை, மற்றும் அணுகுமுறைகளை மாற்றிக்கொண்டே இருப்பார் . அப்பொழுதுதான் , நீங்கள் பிரக்ஞையின்றிச் செயல்படமாட்டீர்கள் . ஒரு சில கணங்கள், நீங்கள் பிரக்ஞை நிலைக்கு வந்தால், உங்களுடைய செயல்கள். அனைத்தும், பழைய பழக்க வழக்கத்தையொட்டியே இயந்திரத்தனமாக அமைந்திருப்பதை அந்தக்கணத்தில் உணர்வீர்கள் . நான் சொல்வதால் அல்ல - அந்த ஒரு கணநேர பிரக்ஞையை உணரும் பொழுதுதான் , நீங்கள் தெரிந்து கொள்வீர்கள் . அப்பொழுது, உங்களுடைய வாழ்க்கையே ஒரு இயந்திரத்தனமானதுதான் என்று அறிந்து கொள்வீர்கள் , புரிந்து கொள்வீர்கள் . ஏனென்றால் , நீங்கள் அதை உண்மையாகப் புரிந்து கொள்ள , உங்களுக்கு, அதனோடு ஒப்பிட்டுப்பார்க்க ஒன்று தேவையாக இருக்கிறது. ஆனால், அப்பொழுது, உங்களிடம் ஒப்பிட்டுப் பார்க்க எதுவுமே இல்லை. 1

நீங்கள் இயந்திரங்களோடு வசிக்கும்பொழுது, உங்களுடைய அதிகாரியும் ஒரு இயந்திரம்தான் ! நீங்கள் ஒரு இயந்திரமாக இருக்கும் பொழுது, எப்படி அவர்களை வேறுவகையில் நினைத்துப் பார்க்க முடியும்?

ஒரு தடவை, முல்லாவுடைய மனைவி என்னிடம் , " ஒருநாள் இரவு, தன் கணவன் வருத்தத்துடன் வரும்பொழுதுதான், அவன் குடித்துவிட்டு வருகிறான்

என்று புரிந்தது. அதுவரையில் அவன் குடிபபான் என்பது எனக்கு விளங்கவில்லை. என்றாள் . ஒருவன் தொடர்ந்து குடித்துவந்தால் , அவன் குடித்து இருக்கிறான் என்று அறிவது, மிகவும் கஷ்டம் ஏனென்றால் , அவன் அப்படியே குடிக்காமல் இருப்பது போல நடித்துக் கொண்டு இருப்பதைப் பார்த்து பழக்கமாகிவிட்டார்கள் நீங்கள் ஒரு இயந்திரம் தான் . இப்படி சொல்வது, உங்களை வேதனைப்படுத்தும் என்பது எனக்குத் தெரியும் . அதற்காகவே, மீண்டும் அப்படிச் சொல்கிறேன் ! நீங்கள் ஒரு இயந்திரம் தான் . நீங்கள் அதனால் , வேதனைப்பட வேண்டும் என்பதுதான் என்னுடைய நோக்கம் அது, உங்களை வேதனைப்படுத்தவில்லை என்றால் , நீங்கள் மாறமாட்டீர்கள் . அது நடக்காது. அப்படி வேதனைப்பட்டால் , உங்களுடைய பிரக்ஞையற்ற மனதில் , மிகவும் ஆழமாக , " ஆமாம் . அது உண்மைதான்' என்று உணர்வீர்கள்

உங்களால், இந்தக் கணம் இப்பொழுது வாழமுடியுமா? உங்களுக்கு முன்னேயுள்ள பொருள்களை, இறந்தகால எண்ணங்களோ அல்லது எதிர்கால எண்ணங்களோ குறுக்கிடாமல், அப்படியே வெறுமனே பார்க்க முடியுமா? மிகவும் கஷ்டம். இதற்குத் தியானப் பயிற்சி வேண்டும் . நீங்கள் சாதாரணமாக என்ன செய்வீர்கள்? நீங்கள் அதை உடனே, உங்களிடம் உள்ள ஏதோ ஒரு பழைய பெட்டியில் போட்டு அடைத்துவிடுவீர்கள் . அந்தப் பழைய பெட்டி என்பது உங்களுடைய இறந்தகால எண்ணங்கள் தான் . உதாரணமாக , நீங்கள் ஒரு ஹிந்து என்று வைத்துக்கொள்ளுங்கள் . நீங்கள் ஒரு அழகான , கவர்ச்சியான பிராமணன் போன்ற தோற்றமுள்ள ஒருவனைக் கண்டு, அவன் ஒரு ஹிந்துவாகத்தான் இருக்கக் கூடும் என்று கருதி, அவனிடம் ஆவலாக பேச்சுக்கொடுக்க ஆரம்பிக்கிறீர்கள் . அப்பொழுது அவன், தான் ஒரு ஹிந்து இல்லை, முகமதியன் என்று சொல்கிறான் என்று வைத்துக்கொள்ளுங்கள் அவ்வளவுதான் . உங்களுடைய கற்பனைகள் இடிந்துவிட்டன . உங்களுடைய ஆர்வம் எல்லாம் இப்பொழுது இல்லை. நீங்கள் மறுபடியும் சுருங்கிப்

போய்விட்டீர்கள் . நீங்கள் , ' முகமதியர்கள் எல்லாம் நல்லவர்கள் இல்லை" என்ற ஒரு நிலையான பழைய பெட்டியில் , அவனைப்போட்டு அடைத்துவிடுகிறீர்கள் . நீங்கள் , உடனே அவனைத் தனியாகப் பிரித்துவிடுகிறீர்கள் . ஆனால் , உண்மை வேறுவிதமாகச் சொல்கிறது. அவன் உண்மையிலேயே நல்லவனாக இருக்கக்கூடும் . அதை நீங்கள் புரிந்துகொள்வதற்கு முன்பே, அவனை பழைய கொள்கை, அனுபவம் அல்லது அனுமானம் என்ற பழைய பெட்டியில் போட்டு அடைத்துவிட்டீர்கள் என்று.

இப்படி எல்லாவற்றையும் பிரித்துப்பார்ப்பதுதான் , உங்களுடைய மனதின் முக்கிய வேலை. நன்றாகக் கவனியுங்கள் . நீங்கள் ஒரு வேலையைச் செய்தால் , அதன் உண்மை நிலையை, ' இப்பொழுது. இங்கே' என்ற தன்மையில் பார்க்கிறீர்களா அல்லது முன்பு ஏற்படுத்தப்பட்ட கொள்கை, கோட்பாடுகளின்படி பார்க்கிறீர்களா? நீங்கள் ஒன்றைச் செய்யும் பொழுது, கவனமாகவும் , பிரக்ஞையாகவும் செய்கிறீர்களா அல்லது ஒரு இயந்திரமனிதன் (ROBOT) போல் செய்கிறீர்களா?

நான், இந்த பிரக்ஞைத் தன்மையைப் பற்றி ஏற்கனவே பேசியிருக்கிறேன் . அதாவது பிரக்ஞைநிலை ஒன்று, இரண்டு, மூன்று எ என்று சொல்லி விளக்கியிருக்கிறேன். உங்களுடைய செயல்களையும், மறுசெயல்களையும் , கவனித்தல் என்பதுதான் பிரக்ஞைநிலை ஒன்று. நீங்கள் ஒரு மனிதனைப்போல செயல்படுகிறீர்களா அல்லது ஒரு இயந்திரம் போல செயல்படுகிறீர்களா? கவனிக்கவும். 100க்கு 99 தடவை, நீங்கள் ஒரு இயந்திரம் போல செயல்படுவதைக் கண்டு ஆச்சரியப்படுவீர்கள் ! ஆனால் , இதை பிரக்ஞையாகக் கவனித்து. தவிர்த்து, உங்களுடைய செயல்களில் , பிரக்ஞையைக் கலந்தால் , நீங்கள் ஒரு இயந்திரத்தைவிட, மேலான நிலையில் இயங்குவதை உணர்வீர்கள் . அந்த பிரக்ஞைநிலை, உங்களை ஒரு உண்மையான மனிதனாக மாற்றும்

நீங்கள் பிரக்ஞைநிலையில் மட்டும் தான் , மனிதனாக உண்மையாக இயங்குவீர்கள் . நீங்கள் அதில் முழுமையாக இருந்தால் , நீங்கள் முழுமனிதனாகிவிடுகிறீர்கள் . முழுமையான பிரக்ஞையற்றநிலையில் , நீங்கள் ஒரு முழுமையான இயந்திரமாகிவிடுகிறீர்கள்.

கேள்வி 5:

" நான் இங்கே இருப்பதிலிருந்து, நான் விரும்பியது எல்லாம் ஒவ்வொன்றாக நிகழ்வதைக் கண்டு ஆச்சரியப்படுகிறேன் . நான் விரும்பியது எல்லாம் , எனக்குக் கிடைத்துவிட்டது. இப்பொழுது மகிழ்ச்சியால், என்னுடைய இதயமே வெடித்து விடும் போல இருக்கிறது. என்னிடம் என்ன நிகழ்கிறது?"

நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் . மகிழ்ச்சியால் , இதயமே வெடித்துக்கொண்டு இருக்கிறது. மகிழ்ச்சி நிறைவால், இதயமே வெடித்துக் கொண்டு இருக்கிறது. ஒரு கட்டத்தில் , மகிழ்ச்சி மற்றும் இன்பத்தைக் கூட பொறுக்க முடியாது. அந்த பொறுக்க முடியாத நிலையில்தான் , அந்த மகிழ்ச்சி உண்மையானதாக இருக்கும் . அப்பொழுது மகிழ்ச்சி தன் உச்சத்தில் இருக்கும் . விரைவில் , அதனால் , நீங்கள் ஆவியாகி மறையக்கூடும். அந்தத் தெய்வீகத் தன்மையில், நீங்கள் மறைய ஆரம்பிப்பீர்கள். நீங்கள் ஒன்றும் பயப்பட வேண்டாம். எதுவும் தவறாக நேராது. நீங்கள் ஆசீர்வதிக்கப் பட்டவராவீர்கள்

ஆமாம். நீங்கள் அப்படித்தான் நினைப்பீர்கள்.

யாராவது அழுதால் , அவர் துன்பத்தில் , துயரத்தில் இருப்பதாகத்தான், நீங்கள் நினைத்துக் கொள்வீர்கள். 'ஆனந்தக் கண்ணீர் (TEAR OF JOY) என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? மகிழ்ச்சியில்கூட , கண்ணீர் வரும் . ஆகவே, அவர்களுக்கு ஆறுதல் சொல்ல அவசரப்படாதீர்கள் அது மகிழ்ச்சியின் விளைவு. ஆனால் , மக்கள் துன்பத்தில் இருக்கும் பொழுதுதான் , கண்ணீர் விடுவதை, நாம் பார்த்திருக்கிறோம். ஆனால், மகிழ்ச்சியாக இருக்கும் பொழுதுகூட , ஒருவன் கண்ணீர் விடுவான் என்பதை உங்களால் நம்ப முடியாததுதான். ஏனென்றால், மக்கள் மகிழ்ச்சியில் ( உண்மையான ) இருந்து, நீங்கள்

பார்த்தது இல்லை. ஆகவே, ' ஆனந்தக் கண்ணீர் ' என்பதை நீங்கள் பாடலில்தான் கேள்விப்பட்டிருப்பீர்கள் - மக்களின் கண்களில் அல்ல

ஆனால் , துன்பத்திற்கும் , கண்ணீருககும் எந்தவிதச் சம்மந்தமும் இல்லை. துன்பம் , துக்கம் என்பது மனித குலத்தின் சாபக்கேடு அப்பொழுது மனிதகுலம் கத்தி, கதறிதான் அந்தத் துன்பத்தை வெளியிடும். ஆனால், துன்பத்திற்கும், கண்ணீருக்கும் எந்தவித சம்மந்தமும் இல்லை. ஏதாவது ஒன்று, உங்களை மீறி வழியும் பொழுது. கண்ணீர் வெளியே வரும் . அது துன்பமாகவோ, மகிழ்ச்சியாகவோ, அன்பாகவோ அல்லது கோபமாகவோ இருக்கலாம் . நீங்கள் பெண்களைக் கவனித்துப் பாருங்கள் . அவர்கள் மிகுந்த கோபத்தில் இருக்கும்பொழுது, அவர்கள் கதறி அழுது கண்ணீர்விடுவதைப் பார்க்கலாம் . அது கோபத்தால் ஏற்பட்டது, துன்பத்தால் அல்ல . அதைப் போல , ஒரு சிறிய குழந்தையைக் கவனித்துப் பாருங்கள் . அது நன்றாகச் சிரித்தபிறகு, அழ ஆரம்பிக்கும் . அந்த மகிழ்ச்சி நிறைந்து இருக்கும்போது, அதனால் தாங்க முடியாது. ஆகவே, அது அழ ஆரம்பிக்கிறது. அந்த தாங்க முடியாத நிலையில், கண்ணீர் வெளியே வருகிறது.

நீங்கள் , நான் இங்கு வந்து தங்கியது முதல் , நான் விருப்பப்பட்ட அனைத்தும் நடந்திருக்கிறது என்று கூறுகிறீர்கள். ஆமாம். அதனால்தான் , அந்த மகிழ்ச்சி தாங்க முடியாத நிலையில் இருக்கிறது. நீங்கள் , உங்களுடைய சொந்த வீட்டுக்கு மிக அருகில் வருகிறீர்கள் . என்னிடம் என்ன நிகழ்கிறது? ' என்று கேட்கிறீர்கள்.

இந்த கேள்வி, ஆனந்த் பிராத்திமாவிடமிருந்து (ANAND PRATIMA) வந்திருக்கிறது.

ஏதோ, பிரம்மாண்டமான அழகு, உங்களிடம் நிகழ்ந்திருக்கிறது. அதை நீங்கள் ஆராய்ச்சிபண்ண வேண்டாம். அதைப்பற்றி நினைக்கக்கூட வேண்டாம். அதன் குறுக்கே பாய வேண்டாம் . ஏனென்றால் , உங்களுடைய மனம் எல்லாவற்றையும் அழித்துவிடும்.

மனம் . இதயத்தின் குறுக்கே பாயமுயலும் . இந்தக் கேள்வியே, உங்களுடைய மனத்திலிருந்துதான் வருகிறது. உங்களுடைய இதயம், இன்பத்தால் நிரம்பி வழிகிறது. ஆகவேதான் , அது உடைந்து விடுவது போலத் தெரிகிறது. அப்படியே உடையட்டும் . அதற்காகத்தான் , நான் இங்கே இருக்கிறேன் . அதற்காகத்தான் , நீங்களும் இங்கே வந்து இருக்கிறீர்கள் அது உடைந்து தூள் தூளாகட்டும். அது வெடிக்கட்டும் . அந்த இன்பம் அப்படியே வெடித்துச் சிதறி, அந்த முடிவில்லாத பேரியக்க பிரபஞ்ச சக்தியோடு கலக்கட்டும்.

கேள்வி 6:

" ஏன் , நான் அடுத்தவர்களது கருத்துக்களைக் கண்டு பயப்படுகிறேன்?"

ஏனென்றால் , நீங்கள் நீங்களாக இல்லை. இன்னும் , நீங்கள் உங்களுடைய இருப்பு நிலையில் இல்லை. நீங்கள் மற்றவர்களது அபிப்ராயங்களைத் தாங்கும் தூணாக இருக்கிறீர்கள் நீங்கள் மற்றவர்களது அபிப்ராயங்களைத் தவிர வேறு

இல்லை. உண்மையில் நீங்கள் யார் ? சிலர் , நீங்கள் அழகாக இருக்கிறீர்கள் என்று சொல்கிறார்கள் . அப்பொழுது நீங்கள் அழகாக இருப்பதாகக் கருதுகிறீர்கள் மற்றும் சிலர் , நீங்கள் அவலட்சணமாக இருப்பதாகக் கூறுகிறார்கள் . அப்பொழுது நீங்கள் அவலட்சணமாக இருக்கிறீர்கள் . சிலர் , நீங்கள் அபூர்வமானவர் என்றும் மற்றும் சிலர் , ' உங்களைப் போல அருவருப்பான மனிதர் வேறுயாரும் இல்லை' என்று கூறும் பொழுதும் , நீங்கள் அப்படி அப்படியே இருக்கிறீர்கள் . இப்படி மக்கள் , உங்களைப் பற்றி ஒவ்வொரு அபிப்ராயத்தைக் கூறும் பொழுது. நீங்கள் அதையெல்லாம் சேர்த்து வைத்துக்கொண்டிருக்கிறீர்கள் . அவைகள்தான் , உங்களுடைய தோற்றம் மற்றும் நீங்கள் எல்லாம் . ஆகவேதான் , நீங்கள் மாறுபட்டு, இப்படியும் அப்படியுமாக இருக்கிறீர்கள் . ஒருவர் நீங்கள் அழகானவர் என்றும் , மாறாக அடுத்தவர் நீங்கள்

அருவருப்பானவர் என்றும் கூறும்பொழுது, நீங்கள் பின்னவர் சொன்னதை மறக்க நினைக்கிறீர்கள் . ஆனால் , அதை உங்களால் மறக்க முடியாது. அது உங்கள் உள்ளேதான் ஆழமாக இருக்கும் . ஆகவே, நீங்கள் அழகானவர் என்ற கருத்தை மட்டும் வைத்துக்கொள்ள வேண்டும் என்று நினைத்தல் , அருவருப்பானவர் என்ற கருத்தையும் வைத்துக்கொள்ள வேண்டும்.

இப்பொழுது உங்களுடைய நிலை அல்லது தோற்றம் இரண்டுங்கெட்டான் நிலையில்தான் இருக்கிறது. நீங்கள் உண்மையிலேயே யார் என்று உங்களுக்கே தெரியவில்லை இப்படிப்பட்ட நிலையை, இந்தியாவில் கெட்கிரீ ' (KEDGEREE) என்று அழைப்பார்கள். அதாவது, நீங்கள் பல பொருள்களின் கலவை' என்று அர்த்தம் . இன்னும் நீங்கள் உங்களுடைய ஆன்மாவை அடையவில்லை. உங்களுக்கென்று, எந்தத் தனித் தன்மையும் இல்லை. உங்களிடம் எந்த ஒருங்கிணைந்த மையமும் இல்லை. நீங்கள் வெறும் அடுத்தவர்களது குப்பைதான் ! ஆகவேதான் , நீங்கள் ஒருவிதப் பயத்தில் எப்பொழுதும் இருக்கிறீர்கள் . ஏனென்றால் , அடுத்தவர்களது கருத்து மாறினால் , நீங்களும் மாறவேண்டிய நிலையில் இருக்கிறீர்கள் நீங்கள் எப்பொழுதும், அடுத்தவர்களது பிடியில் இருக்கிறீர்கள். இப்படித்தான். இந்தத் தந்திரமான சமூகம், உங்களை உபயோகப்படுத்திக் கொள்கிறது. .

சமூகத்திக்கென்று ஒரு தந்திரமான முறை இருக்கிறது. அதாவது சமூக அங்கீகாரத்திலும், மதிப்பிலும், நீங்கள் மிகவும் அக்கரைகொள்ள வேண்டும் என்றும் அதில் மிகுந்த திறமையுடன் இருக்க வேண்டும் என்று உங்களைத் தயாராக்குகிறது - அதன்மூலமாக , அது உங்களை ஆட்டிப்படைக்கிறது. நீங்கள் அதனுடைய கொள்கை கோட்பாடுகளை மதித்தால் , அது உங்களுக்கு மதிப்புக் கொடுக்கிறது. அப்படியில்லாவிட்டால் அது உங்களை மிகவும் அவமதிக்கிறது உங்களுக்குப் பல துன்பங்களைக் கொடுக்கிறது. அந்தச் சமூகத்துக்கு இணங்க, நீங்கள் நடந்தால் , நீங்கள் விரைவில் ஒரு முழுமையான

அடிமையாகிவிடுகிறீர்கள் . அப்படி நீங்கள் முழு அடிமையாகிவிட்டால், அதுவும் முழுமையாக உங்களை மதிக்கிறது. அதைப் போல , நீங்கள் ஒரு சுதந்திர மனிதனாக இருக்கவிரும்பினால் , அது மிகவும் கோபமடைந்து, உங்களோடு

ஒத்துழைக்க மறுக்கிறது. உங்களோடு எதையும் பகிர்ந்துகொள்ள மறுக்கிறது. உங்களைத் தள்ளிவைக்கிறது.

நீங்கள் மிகவும் சுதந்திரமாக , இந்த சமூகத்தில் வாழ்வது மிகவும் கஷ்டம் இதை, நான் என் அனுபவத்தின் மூலமாகக் கூறுகிறேன் . ஏன் , அது கிட்டத்தட்ட முடியாத காரியம் . அது ஒரு போதும் , உங்களைச் சுதந்திரமாக இருக்க அனுமதிக்காது சமூகம் நிலைத்து நிற்க, ஒரு சுதந்திர மனிதன் மிகவும் அபாயகரமாக இருக்கிறான். அது இயந்திரத்தனமான, அடிமையைப் போல உள்ள ஒரு மனித உருவத்தைத்தான் (ROBOT) விரும்புகிறது. படைவீரர்கள் , எப்படி அதன் தலைவருக்குக் கட்டுப்பட்டு நடக்கிறார்கள் ? நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? ' அட்டன்ஷன் ' (ATTENTION) என்று அவன் குரல் கொடுத்தால், எவ்வளவு வேகமாக அவர்கள் வரிசையை ஏற்படுத்திக் கொள்கிறார்கள் - மிகவும் இயந்திரத்தனமாக ? அவர்கள் ஏன் என்று கேள்வி கேட்பது இல்லை. அங்கு ஒருவரைப் பார்த்து மற்றவர்கள் நடிக்கிறார்கள் ராணுவத்திற்கும் (MILITARY), சுதந்திரத்தனமைக்கும் எந்தவிதச் சம்மந்தமும் இல்லை.

இப்பொழுது, அதற்கு இந்த சமூகம் எல்லாவற்றையும் தாராளமாகக் கொடுக்கிறது. அதாவது, மதிப்பு, அந்தஸ்த்து, கௌரவம் , பரிசு, பதக்கம் , என்று. அது அப்படித்தான் இயங்கும் . அவர்களெல்லாம் ஒரு முழுமையான அடிமைத்தனத்தில் வாழ்கிறார்கள். இது ஒரு தந்திரம்தான் ஒரு சுதந்திர எண்ணமுள்ள மனிதனுக்கு, அது எந்தப் பரிசோ, எந்த மதிப்போ ஒருக்காலும் கொடுக்காது - அவர்கள் , அதற்கு எதிரிகள் தான் ஒழுங்கற்ற சமூகத்தில் , ஒழுக்கமுள்ள சுதந்திர மனிதன் பகைவன்தான் . மதத்தன்மையற்ற சமூகத்தில் , ஒரு மதத்தன்மையுடையவன் பகைவன்தான் . உலகப் பொருள்களால் கவரப்பட்ட

இந்த உலகத்தில் , ஒரு உண்மையான ஆன்மீகவாதி வாழ்வது மிகவும் கஷ்டம் அவன் , எதிலும் ஒத்துவரமாட்டான் . உங்களுடைய எந்தக் கொள்கை கோட்பாடுகளுக்கும் அவன் சரியாகப் பொருந்தி வரமாட்டான் நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . உங்களுடைய தோற்றம் மற்றும் வெளித்தன்மை, அந்த சமூகத்தின் கைகளில்தான் இருக்கிறது.

நீங்கள் , " நான் எப்பொழுதும் அடுத்தவர்களது கருத்துக்களைக் கண்டு ஏன் பயப்படுகிறேன் ?' என்று கேட்கிறீர்கள் . ஏனென்றால் , இன்னும் நீங்கள் , நீங்களாக இருக்கவில்லை. நீங்கள் , அடுத்தவரது அபிப்ராயங்களாகவே இருக்கிறீர்கள் . ஆகவேதான் அந்தப் பயம் . ஏனென்றால் , அவர்கள் அந்த அபிப்ராயங்களை எப்பொழுது வேண்டுமானாலும் , திரும்ப எடுத்துக் கொள்ளலாம் . ஒரு பாதிரியார் , உங்களை நல்லவன் என்று சொன்னால் , நீங்கள் அவரது அபிப்ராயப்படி வாழ்ந்தால் , நீங்கள் நல்லவன்தான் . மாறாக நடந்தால் , உங்களுடைய எண்ணப்படி வாழ்ந்தால் , அந்தப் பாதிரியார் உங்களைப் பார்த்து, " நீங்கள் ஒழுக்கக் கட்டுப்பாட்டுக்கு மாறாக நடக் கிறீர்கள் . நீங்கள் மத விதிகளுக்கும், பழைய பழக்க வழக்கத்துக்கும் மாறாக நடக்கிறீர்கள் . நீங்கள் பாபக்குழியில் விழுகிறீர்கள் !'' என்று எச்சரிப்பார். உங்களைப்பற்றிய, அவரது

அபிப்ராயத்தை மாற்றிக் கொண்டு விடுவார் . நீங்கள், உங்களை நல்லவன் என்று கருதிக்கொள்வது, அடிப்படையில் அவரது அபிப்ராயம்தான் ! உங்களுடைய அபிப்ராயம் இல்லை. அந்தப் பாதிரியார், ஒரு கிறுக்கனாகக்கூட இருக்கலாம் . ஆனால் நீங்கள் அவனுடைய அபிப்ராயப்படி ஒரு கிறுக்கனாகத்தான் வாழவேண்டும் ! அப்பொழுதுதான் , நீங்கள் நல்ல மனிதன்.

ஆகவே, முதலில் தைரியமாக , உங்களையே சார்ந்து இருங்கள் . அப்பொழுது, உங்களைத் தவிர , வேறு யாரும் உங்களை நல்லவனாகவோ அல்லது

கெட்டவனாகவோ மாற்ற முடியாது. இந்தப் பொய்யான பிறருடைய அபிப்ராயத்துக்கும் , நீங்கள் ஒரு கனவுலகில் சஞ்சரிப்பதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை -

ஒரு டாக்டர் , ஒருவனிடம் , " நீ மருத்துவ சரித்திரம் படைக்கப் போகிறாய் இதுவரையில், உன்னைத்தவிர, வேறு எந்த ஆணும் கர்ப்பம் தரித்ததில்லை என்று மகிழ்ச்சியாகச் சொன்னார்.

அவன் , மிகவும் அதிர்ச்சியடைந்து, " ஐயோ. என் பக்கத்தில் உள்ளவர்கள் , என்ன சொல்வார்கள் ? எனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே என்றான்.

இப்பொழுது அவன் மருத்துவத்தில் சாதனை அல்லது சரித்திரம் படைக்க விரும்பவில்லை. தான் , கல்யாணமாகாத நிலையில் , கர்ப்பம் தரித்தால் , அடுத்தவர்கள் என்ன சொல்வார்கள் என்றுதான் குழம்புகிறான்!

நாம் தொடர்ந்து பயத்தில்தான் இருக்கிறோம். நீங்கள் அடுத்தவரது அபிப்ராயங்களை சேர்த்து வைக்காவிட்டால் , உங்களுடைய பயம் தானே விலகிவிடும் . ஆகவே, முதலில் அவைகளை விட்டுவிடுங்கள் . உங்களை சிலர் ஞானி என்று நம்பலாம். அதை விலக்கி விடுங்கள். ஏனென்றால், அது ஆபத்தானது. அவன் , இந்த எண்ணத்தை உங்களிடம திணித்து, உங்களை தன் இஷ்டம் போல் ஆட்டிப்படைக்க நினைக்கிறான். நீங்கள் அவனுடைய பேச்சைக்கேட்டால் , அவனை நம்பினால் , அவன் உங்களுடைய குருவாகவும் நீங்கள் அவனுடைய அடிமையாகவும் மாறிவிடுவீர்கள். ஜாக்கிரதை.

சிலர் என்னிடம் வந்து, " நீங்கள் மிகப்பெரிய ஞானி " என்று கூறுவார்கள் . நான் , " மிகவும் வருத்தப்படுகிறேன் . மன்னிக்கவும் . அதைப்போல மீண்டும் என்னிடம் கூறாதீர்கள் . ஏனென்றால் , என்னை யாரும் ஆட்டிப்படைக்க விரும்பவில்லை. நான் , நானாகவே இருக்கிறேன் நான் ஞானியோ அல்லது பாவியோ; அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை' என்பேன் . அவன் , என்னைப் புகழ்வதாக நினைக்கிறான். ஒரு சமயம், அவன் என்ன

செய்கிறான் என்பதே அவனுக்குத் தெரியாமல் கூட இருக்கலாம்.

நீங்கள் ஒருவனைப் புகழும் பொழுது, நீங்கள் தான் சக்திமிக்கவராக ஆகிறீர்கள் . உங்களுடைய புகழ்ச்சியை அவன் ஏற்றுக்கொண்டால் , அவன்தான் உங்களுடைய இரையாவன் . இப்பொழுது, நீங்கள் அவனை உங்கள் பிடிக்குள் வைத்துக்கொள்ளலாம் . இதைச் சற்று நினைத்துப்பாருங்கள். நீங்கள் ஒருவரை ஞானி என்றும் மகாத்மா என்றும் அழைக்கலாம் . அவரும், இதை

அவருக்கு உயர் நிலைக் காட்டும் " தந்த்ரா' ஏற்றுக்கொண்டு விட்டால் இப்பொழுது. ஒருநாள் புகை பிடிக்கவேண்டும் என்ற ஆசை உண்டாகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள் ! இப்பொழுது அவர் என்ன செய்ய முடியும் ? அவரால் இப்பொழுது புகைபிடிக்க முடியாது. அப்படிச் செய்தால் , அவருடைய சந்நியாசித்தன்மை என்னவாவது? அவர் , அதற்காக மிகுந்த விலைகொடுக்க வேண்டும் - அதாவது தன்னுடைய கௌரவமிக்க சந்நியாசித் தன்மையை அவர் புகைப்பிடிப்பதற்காக , தன்னுடைய சந்நியாசத்தை விடவேண்டும். அல்லது அவர் மறைந்து நின்று புகைபிடித்துவிட்டு, மற்றவர்களிடம் , அந்தப் பழக்கமே எனக்குக்கிடையாது என்று சொல்ல வேண்டும் . பொது இடத்தில் , அவர் அதை மிகவும் கண்டிக்க வேண்டும் . ஆகவே, அவருக்கு இப்பொழுது இரண்டு முகம் வேண்டும்; ஒன்று பொது இடத்துக்காக மற்றொன்று தனிமையில் இருப்பதற்காக

ஆகவே, பிறருடைய அபிப்ராயத்தை ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாதீர்கள் அது நல்லதோ, கெட்டதோ, அப்பொழுது அவரிடம் , " வருத்தப்படுகிறேன் நீங்கள் , உங்களுடைய அபிப்ராயத்தை, உங்களிடமே வைத்துக்கொள்ளுங்கள் நான் , நானாகவே இருக்க ஆசைப்படுகிறேன் .' என்று சொல்லவும் . நீங்கள் மிகவும் பிரக்ஞையாக , ஜாக்கிரதையாக இருந்தால் , யாராலேயும் உங்களை ஆட்டி வைக்க முடியாது. நீங்கள் சுதந்திரமாக இயங்கலாம் . சுதந்திரம்தான் மகிழ்ச்சி ஆனால் , அது அவ்வளவு சுலபமல்ல . ஏனென்றால் , இந்தச் சமூகம் அடிமைகளால் ஆக்கப்பட்டு இருக்கிறது. இதை நன்றாக ஞாபகம்

வைத்துக்கொள்ளுங்கள்.

ஆகவே, சுதந்திரமாக இருப்பது கஷ்டம்தான். ஆனால், உங்களுடைய உண்மையான மகிழ்ச்சி, அதில்தான் இருக்கிறது. அதில்தான், உங்களுடைய உண்மையான ஆடல் இருக்கிறது. கடவுளை அடைய ஒரே வழி சுதந்திரம்தான் . ஒரு அடிமையால் , ஒருபோதும் கடவுளை அடைய முடியாது. அது அவனால் முடியாது.

கேள்வி 7:

" பகவான் , ஆங்கிலேயர்கள் இந்த உலகத்தில் மிகச் சிறந்த வேலையாட்களை உருவாக்கியிருக்கிறார்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நீங்கள், எனக்கு ஒரு புதுப் பெயர் கொடுக்கும் பொழுது, என்னுடைய பெயரை, " அன்பைச் செலுத்துபவள்" (IN SERVICE OF LOVE) என்று மொழியெர்த்து வழங்கியிருக்கிறீர்கள் . இது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. என்னுடைய பெயரை, '' அன் பின் அடிமை'' (SERVANT OF LOVE) என்றும் மொழிபெயர்க்கலாமே? நான் , அன்பை பிறரிடம் செலுத்த விரும்பாமல், நான் நானாக இருக்கும் பொழுது, நான் மிகவும் அன்பு செலுத்துபவராக என்னையே உணருகிறேன் . நான் , அந்த அடிமைத்தனம், தாழ்மையுடன் நடந்துகொள்ளல், பணிவு போன்ற ஆங்கிலேயர்களின் பண்பாட்டை வெறுக்கிறேன் . இதைப்பற்றி, நீங்கள் கருத்துக்கூற முடியுமா?"

இந்த கேள்வி, மா பிரேம்தாசி (MA PREM DASI) யிடமிருந்து வந்திருக்கிறது. இந்தப் பெயரின் அர்த்தம். அன்பின் அடிமை தான் . ஆனால் , நான் வேண்டுமென்றே, அதை அன்பைச் செலுத்துபவள் " என்று மாற்றியிருக்கிறேன் . அதற்குச் சில காரணங்கள் இருக்கின்றன . நீங்கள் , மேலும் மேலும் சேவை செய்வதில் ஈடுபடவேண்டும் என்றும் , நீங்கள் ஒரு அடிமையாகவோ அல்லது ஒரு வேலைக்காரியாகவோ இருக்க வேண்டும் என்றும் நான் விரும்பவில்லை. வேலைக்காரர்கள் சேவை செய்யமாட்டார்கள் . குருமார்கள் தான் சேவை செய்வார்கள் . வேலைக்காரர்கள் , தன் கடமையைத்தான் செய்வார்கள் . கடமை என்பது மிகவும் அருவருப்பானது. அவர்களுக்குப் பிடிக்கிறதோ, பிடிக்கவில்லையோ, அவர்கள் அதைச் செய்துதான் ஆகவேண்டும் . அதில் எந்த அழகோ, இன்பமோ இருக்க முடியாது. ஆகவே, நீங்கள் சேவையில் இருக்கவும் . வேலைக்காரியாக மற்றும் அடிமையாக இருக்கவேண்டாம் - இது ஒன்று.

அடுத்தது, நீங்கள் ஒரு வேலைக்காரியாக இருந்தால் , நீங்கள் வெறும் பழக்கத்தைத்தான் (HABIT) கற்றுக்கொள்வீர்கள் . சேவை செய்தல் என்பது இயங்கிக்கொண்டே செல்வது. நீங்கள் ஒரு வேலைக்காரியாக இருப்பதற்கு, சில தனித்தகுதிகள் வேண்டும் . அது ஒரு இறந்த தகுதிதான் . நீங்கள் ஒரு வேலையாள் என்பது எல்லோருக்கும் தெரியும் . ஆனால் , ஒருவன் சேவை செய்யும்பொழுது, அவன் வேறு ஒரு பரிமாணத்தில் இயங்குகிறான் . அவன் என்ன செய்வான் என்று முன் கூட்டியே, யாராலும் தீர்மானிக்க முடியாது. ஒவ்வொரு கணமும் , நிலைமைக்கு ஏற்றவாறு, அவனுடைய சேவையில் மாற்றமும் இருக்கும் . அவனுடைய இறந்தகாலத்தை நீங்கள் சார்ந்து இருக்க முடியாது. ஆகாவேதான், நான் உங்களுடைய பெயரை, " அன்பை செலுத்துபவள் " என்று மொழிபெயர்த் திருக்கிறேன் . சேவை என்ற

வார்த்தை, மிகவும் அழகானது. ஆனால், வேலையாள் என்பது சரியில்லை. சேவை என்பது அப்போதைக்கப்போது நிகழ்வது. உதாரணமாக, நீங்கள் வீதியில் சென்று கொண்டிருக் கிறீர்கள் அப்பொழுது ஒரு வீடு தீப்பற்றி எரிவதைக் காண்கிறீர்கள் . நீங்கள் விரைந்து அங்கு சென்று, இறக்கும் நிலையில் இருக்கும் ஒரு குழந்தையைக் காப்பாற்றுகிறீர்கள் . ஆனால் , நீங்கள் அதை தேடிச் சென்று செய்வதில்லை. நீங்கள் ஒரு பொது சேவையைச் செய்ய , எதையும் தேடிக் கொண்டிருக்க வேண்டியதில்லை நீங்கள் அந்த நிகழ்ச்சியை எதிர்பார்க்கவில்லை நீங்கள் வெறுமனே காலையில் நடக்கச் செல்கிறீர்கள் . நீங்கள் அதைப்பற்றி நினைக்கவே இல்லை. அந்த நிலையை, அப்போது பார்த்து, நீங்கள் அதற்கு ஏற்றவாறு செயல்படுகிறீர்கள் . நீங்கள் சேவையில் வெறுமனே இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள் . ஆனால் , ஒரு வேலைக்காரன் என்பவன் ஆபத்தானவன் . ஏனென்றால் , அவன் , வேலை செய்வதற்கு எதுவும் அகப்படவில்லை என்றால் , அவன் வேலை செய்வதற்கு, யாரையாவது தேடிச் செல்வான், அல்லது யாரையாவது கட்டாயப்படுத்துவான். .

ஒரு நிகழ்ச்சி.

ஒரு கிருஸ்துவ அமைப்பினர் பள்ளிச் சிறுவர் , சிறுமிகளுக்கு, ஞாயிற்றுக்கிழமையில் , கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கத்தை, போதித்து

வந்தார்கள் . அவர்கள் , அந்த சறுவர , சறுமகளுக்கு, குறைந்தது வாரம் ஒரு முறையாவது, ஒரு நல்ல காரியத்தை, நல்ல வேலையைச் செய்யவேண்டும் என்று போதித்தனர் . பிறகு, அடுத்தவார , ஞாயிற்றுக்கிழமையில் , அந்த ஆசிரியர், யார் யார் என்ன நல்ல காரியம் செய்தார்கள் என்று கேட்டார் . மூன்று பையன்கள் எழுந்து நின்றார்கள் . அதைப் பார்த்து அவர் மகிழ்ச்சியடைந்தார். 30 பேர்களில் 3 பேர்தான் ..... சரி!

அவர், ஒரு பையனிடம் மிகவும் ஆர்வமாக, " நீ என்ன செய்தாய் ? நீ செய்ததை, இந்த வகுப்பில் உள்ள

அனைவருக்கும் சொல்" என்றார்.

அவன் , ' ஐயா, ஒரு வீதியை கடக்க , ஒரு வயதான பெண்மணிக்கு உதவி செய்தேன்' என்றான்.

அவர் , " ரொம்ப நல்லது. அப்படித்தான் இருக்கவேண்டும் . எப்பொழுதும் வயதானவர்களுக்கு உதவி செய்யுங்கள்" என்றார்.

அடுத்து, அடுத்த பையனைக் கேட்டார். அவன் "நானும், ஒரு வீதியைக்கடக்க , ஒரு வயதான பெண்மணிக்கு உதவிசெய்தேன்' என்றான்.

அந்தப் பாதிரியார் , சிறிது குழப்பம் அடைந்து, சரி, எத்தனையோ வயதான பெண்மணிகள் இருக்கிறார்கள் என்று மனதை தேற்றிக்கொண்டு, மூன்றாவது பையனிடம் கேட்டார் . அவன் , ' நானும் , வீதியை கடக்க , ஒரு வயதான பெண்மணிக்கு உதவி செய்தேன்!" என்றான்.

அந்தப் பாதிரியார் . " என்ன இது? மூன்று பேர்களும் , வயதான பெண்களுக்கே உதவி செய்திருக்கிறீர்கள் ?' என்று ஆச்சரியமாகக் கேட்டார் . அதற்கு அவர்கள் , " இல்லை. மூன்று பேரும் வெவ்வேறு வயதான பெண்கள் இல்லை. ஒரே பெண்மணிக்குத்தான் , நாங்கள் மூன்று பேரும் உதவி செய்தோம் !" என்றார்கள்.

அவர் , ' உங்கள் மூவருக்கும் , மூன்று பேர்களல்லவா தேவை?" என்று கேட்டார்.

அவர்கள் , ' ஏன் , ஆறுபேர்கள் இருந்தாலும் , அது கஷ்டம்தான். நாங்கள் மூவரும், ஒரு பெண்மணியோடு பட்ட கஷ்டம், எங்களுக்குத்தான் தெரியும். ஏனென்றால், அவள் வீதியின் அடுத்த பக்கத்துக்குச் செல்ல விரும்பவே இல்லை. எப்படியோ, நாங்கள் ஒரு பக்கத்திலிருந்து, அடுத்த பக்கத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டோம் . ஏதாவது நாங்கள் செய்ய வேண்டுமே! அவள் , எங்கள் மேல் மிகவும் கோபமாக இருந்தாள்!" என்றார்கள்.

ஆகவே, ஒருபோதும் வேலையாளாக இருக்காதீர்கள் . அப்படியிருந்தால் , நீங்கள் எப்பொழுதும் தேடிக் கொண்டே இருக்க வேண்டியதுதான் . அப்படியிருந்தால் , வேலை செய்ய ஏதும் இடம்

கிடைக்காவிட்டால், நீங்கள் கோபமாக இருப்பீர்கள். இதைப்போன்ற வேலையாட்கள், இந்த உலகம் முழுவதும் இருக்கிறார்கள். அவர்கள், மிகவும் தொந்திரவு கொடுப்பவர்கள்.

ஏனென்றால், வேலை செய்வதற்கு எதுவுமே இல்லாதநிலையில், அவர்கள் தாங்களே சில வேலைகளை உண்டாக்கிக் கொள்வார்கள். உதாரணமாக, குஷ்டரோகியோ, வியாதியுடையவர்களோ இல்லையென்றால், எந்த மருத்துவமனையும் தேவையில்லை. எல்லோருமே, ஞானம் அடைந்துவிட்டால் - அப்பொழுது எந்தப் பள்ளியோ, எந்தக் காலேஜோ தேவையில்லை. இந்தச் சூழ்நிலையில், இந்தப் பொது வேலையாட்கள் என்ன செய்வார்கள்? அவர்கள், தற்கொலை செய்துகொள்ள வேண்டியதுதான் ! வேலை கொடுப்பதற்கு யாருமே இருக்கமாட்டார்கள். அப்பொழுது, அவர்களே, வேலை செய்யும் சூழ்நிலைய உண்டுபண்ணிவிடுவார்கள். அவர்களுடைய கௌரவமே அதில் தான் இருக்கிறது. இது ஒரு அகங்கார, தன் முனைப்பு உந்துதல் ஆகவே, எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தும் பிரேம் தாசிக்கு ஒரு புதுப்பெயரை மொழிபெயர்க்கும் பொழுது, நான் அன்பின் அடிமை என்றுதான் கொடுக்க நினைத்தேன். பிறகு, இது சரியில்லை என்று உணர்ந்துதான், அதை மாற்றி, " அன்பைச் செலுத்துபவள் ' என்று அறிவித்தேன்.

நீங்கள் வேலையை ஒரு சேவையாகச் செய்யுங்கள். வேலை செய்வதை நீங்கள் உங்களுடைய தகுதியாக்கிக் கொள்ளாதீர்கள். எந்தவிதத் தகுதியோ, திறமையோ இல்லாமல், அப்போதைக்கப்போது வாழ்பவர்களை, நான் மிகவும் நேசிக்கிறேன். அவர்கள், சூழ்நிலைக்கு ஏற்ப, அப்போது தன்னைத் தயாரித்துக் கொள்பவர்கள். இல்லாவிட்டால், நீங்கள் கட்டுப்படுத்தப்படுவீர்கள்.

பிரேம் தாசி, நீங்கள் சொல்லுவது சரிதான். அது உண்மைதான் அப்படித்தான் இருக்க வேண்டும்.

நீங்கள் வேலை செய்ய விரும்பினால், அது ஒருக்காலும் அழகு நிறைந்ததாக இருக்காது. அன்பு

கொண்டதாக இருக்காது. நீங்கள் , நீங்களாக முழுமையாக இருந்தால் , அந்தச் சுதந்திரமான இருத்தலிலிருந்து உண்மையான அன்பு எழும்பி, நீங்கள் மக்களுக்கு எதையும் எதிர்பார்க்காமல் வேலை செய்வீர்கள் . நீங்கள் , அவர்களுடைய வேலையாள் என்ற உணர்வு உங்களிடம் ஏற்படாது. நீங்கள் வேலையாளும் இல்லை. அவர்கள் எஜமானரும் இல்லை. நீங்கள் உங்களிடம் இருப்பதை - உங்களுடைய சக்தியை - வெறுமனே பங்கிட்டு அளிக்க விரும்புகிறீர்கள் . அந்த மகிழ்ச்சியில் , அந்த அன்பில் , அந்தக் கருணையில் , நீங்கள் இளகி ஓட விரும்புகிறீர்கள்

கேள்வி 8:

"சிலசமயம் பிரார்த்தனைகூட கெடுதல் செய்யுமா?"

அதைப்போல நான் கேள்விப்பட்டதே இல்லை - ஒரே ஒரு விஷயத்தைத் தவிர இந்தக் கதையைக் கேளுங்கள்.

நண்பர்களாக உள்ள இரண்டு பெண்கள் ஒரே நாளில் திருமணம் செய்து கொண்டு அவர்களுடைய கணவர்களோடு ஒரே ' தேனிலவு ஹோட்டலுக்கு (HONEY MOON HOTEL) ச் சென்று, அறை எடுத்துத் தங்கினார்கள். அவர்கள், அந்த

ஹோட்டலுக்கு எதிரேயுள்ள ஒரு புல்வெளியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும் பொழுது. எல்லோருமே ஒரே சமயத்தில் , சீக்கிரமே படுக்கைக்குச் சென்றால் , எவ்வாறு இருக்கும் என்று யோசித்தார்கள் . பிறகு, பெண்கள் இருவரும் , கழிப்பறைக்குச் சென்று, பிறகு தங்கள் தங்கள் அறைக்குச் செல்ல வேண்டும் என்றும், ஆண்கள் இருவரும் , கீழேயுள்ள ' பாரில் கடைசியாகச் சிறிது குடித்துவிட்டு, ஒரு 10 15 நிமிடங்கள் கழித்து, தங்கள் தங்கள் அறைக்குச் சென்று, தங்களுடைய புது மனைவியோடு சேர்ந்துகொள்ள வேண்டும் என்றும் முடிவாகியது.

இப்படியாக , கடைசியாக அவர்கள் குடித்து விட்டு, தங்களுடைய அறையை நோக்கி வரும் பொழுது

எல்லா விளக்குகளும் அணைந்துவிட அவர்கள் மெல்ல, சில அடையாளங்களை வைத்துக்கொண்டு, தங்களுடைய அறையை அடைந்தார்கள். அவர்களில், ஹேரி (HARRY) என்பவன், மிகவும் ஜாக்கிரதையாக ஒவ்வொன்றையும் தடவிப்பார்த்து, உறுதி செய்துகொண்டு, தன்னுடைய அறையை அடைந்தான். பிறகு தன் உடைகளை மெல்ல அகற்றிவிட்டு, பைஜாமா போட்டுக் கொண்டு, முழங்காலிட்டு , சற்று பிரார்த்தனை செய்த பிறகு , கட்டிலில் ஏறி படுத்து. மனைவியோடு காதல் செய்ய ஆரம்பித்தான்.

அந்தச் சமயத்தில் , விளக்குள் மீண்டும் எரிய , தான் சரியான அறைக்கு வந்திருப்பதும், ஆனால் தவறான படுக்கையில் - தன் நண்பனின் மனைவியோடு படுத்திருப்பதையும் உணர்ந்து தன்னுடைய உடைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு, அடுத்த அறைக்கு விரைந்து செல்ல , அங்கே அந்த நண்பன் ஒரு நாத்திகனாக இருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்தான் ! ( அதாவது பிரார்த்தனை ஏதும் செய்யாமல் , தனக்கு முன்பே, காதலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறான் இவன் மனைவியோடு!) ப

## 7." சுயசிந்தனையும், ஒரு தியானமே'' (INTELLIGENCE IS MEDITATION)

மனம் , அறிவு மற்றும் மனத்தின் பகுதிகளாகும் அதிலிருந்து இந்த உலகம் மற்ற எல்லாமும் மாறுபட்டே தோன்றும் . எல்லாமே. .. சோர்வு வெறுப்பு, ஆசை, ஞானம் நுகரக் கூடியது மற்றும் உணரக் கூடியது எல்லாமே. ஆன்மீகம் அறியாத இருட்டு ஒன்றில் விளக்கு ஒளிர்வது போல் மனத்தின் தெளிவின்மைகளை அது போக்கும் புத்தியின் தடைகளைப் பொறுத்தவரை. .. யார்தான் தன்னை ஆசையற்றவனாகக் கற்பனை செய்துகொள்ள முடியும் ? மறுப்பதற்கு ஏதும் இல்லை. உறுதிப்படுத்தவோ கிரகித்துக் கொள்ளவோ ஏதுமில்லை ஏனென்றால் அது எப்போதும் உருக்கொண்டு உண்டாக முடியாது புத்தியின் தடைகள் எல்லாம் செயற்கையான பிணைப்புகளே தூய்மை. .. பிரியாத தூய்மை தன்னிச்சையாக அப்படியே இருக்கும் . ஒன்றும் பலவுமாக ஏதேதோ கேள்விகளால் பிரபஞ்ச உண்மையைப் பற்றி நீ

கேட்கலாம் .. ஒருமை என்பது விடாதபோது. .. மேம்படுத்தப்பட்ட அறிவும் உணரக் கூடிய தன்மைகளும் சுதந்திரமாக இருக்கும் பிரகாசமான சக்தி புத்தியினுள் மறைந்திருக்கிறது அதுதான் தியானமாகக் காட்சியளிக்கும் ; தடம் மாறிப் போகாத மனமே நமது உண்மையான சாரம் ஆகும்.

தந்த்ராவின் நோக்கம் என்பது, கடவுளை, உண்மையை, எது அதுவாக இருக்கிறதோ, அதை, நேரடியாக அணுகுவதுதான் . அதற்கு இடைத்தரகரோ, பாதிரியாரோ தேவையில்லை. தந்த்ரா என்ன சொல்லுகிறது என்றால் , " எப்பொழுது பாதிரியார் குறுக்கே வருகிறாரோ, அப்பொழுதே மதத்தன்மை அசுத்தப்படுத்தப்படுகிறது என்பதுதான் சாத்தான் , மதத்தை

அசுத்தப்படுத்தவில்லை; பாதிரியார்களதான் அதை அசுத்தப்படுத்துகிறார்கள் சாத்தானின் அடிமைதான் , வேலைக்காரர்கள், இந்தப் பாதிரியார்கள்

கடவுளை நேரடியாகத்தான் அணுகவேண்டும். அதற்கு எந்த இடைத் தரகரும் தேவையில்லை. மேலும் , அவர்கள் மூலமாக செல்லவும் முடியாது. கடவுள் என்பது " இதோ, இங்கே, இப்பொழுது நிகழ்வது, மற்றும் அது ஏற்கனவே உங்களைச் சூழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. உங்களுக்கு வெளியேயும், உள்ளேயும் சூழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. உங்களுக்கு வெளியேயும் , உள்ளேயும் அதுதான் இருக்கிறது. நீங்கள் கடவுளைக்காண , உங்களுக்கு யாருடைய உதவியும் தேவையில்லை. நீங்கள் ஏற்கனவே, அதனுள்தான் இருக்கிறீர்கள் . நீங்கள் அதைப் பிரிந்து, ஒருக்காலும் இல்லை. அப்படியே பிரிந்து இருக்க , நீங்கள் நினைத்தாலும், அதைவிட்டு உங்களால் பிரியமுடியாது. எந்த முயற்சியும் பயன்தராது. நீங்கள் அவரைத் தவிர்த்து வேறு எங்கேயும் செல்ல முடியாது. ஏனென்றால் , அவர் இல்லாத இடமே இல்லை.

தந்த்ரா என்பது, நீங்கள் நினைப்பதுபோல ஒரு மதமல்ல . அதனிடம் எந்தச் சடங்கோ, எந்தப் பாதிரியாரோ, எந்த வேத நூல்களோ கிடையாது.

உண்மையை நோக்கி, நீங்கள் தனியாக செல்வதுதான், தந்த்ரா முறை நோக்கம் எல்லாம் . அது மிக மிக புரட்சிகரமானது. அது, எந்த மத ஏற்பாடுகளையோ, சடங்குகளையோ சமுதாயத்தையோ நம்புவதில்லை. அது தனிமனிதனையே சார்ந்து இருக்கிறது. தந்த்ரா உங்களைத்தான் நம்புகிறது.

ஒரு நிகழ்ச்சி:

ஒரு மதக்கூட்டத்தில் , ஒருவன் பணம் வசூலித்து, யாருக்கும் தெரியாமல் , அதை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டான் . நல்ல சமயத்தில் , இரண்டு போலீஸ்காரர்கள் , அவனைக் கையும் களவுமாகப் பிடித்துவிட்டார்கள் . அவனை பில்லி கிரஹாம் என்பவரிடம் கொண்டுவந்தனர் . அவர் அவனைப் பார்த்து, மிகவும் கோபமாக , அந்தப்பணம் கடவுளுக்குரியது. நீ என்ன காரியம் பண்ணியிருக்கிறார். கடவுளை ஏமாற்ற நினைத்தாயா, என்ன ?' என்று கேட்டார் . அவன் , " ஐயா, கடவுளை நெருக்கமாக , யாருடைய உதவியும் இல்லாமல் , எனக்கிடையில் எந்தத் தரகரும் இல்லாமல் , - அடைவதற்காகவே, அந்தப்

பணத்தை எடுத்துக்கொண்டு ஓடினேன் ." என்றான்.

உங்களுக்கும் , கடவுளுக்குமிடையே யாரும் தேவையில்லை. ஒரு உண்மையான குரு, ஒரு தரகராக இருக்க விரும்பவே மாட்டார் - அது அவரால் முடியாது. அவர் கடவுளை அடைய , உங்களுக்கு எந்த உதவியும் செய்யமாட்டார் . ஏற்கனவே உங்களுக்குள்ளே இருக்கும் கடவுளைப் பற்றிய பிரக்ஞையை, உங்களிடம் ஏற்படுத்தவே முனைவார் . அவர் , உங்களுக்கும் , கடவுளுக்கும் ஒரு பாலமாக இருக்க விரும்புவதே இல்லை. அவர் உங்களுடைய பிரக்ஞையற்ற தன்மைக்கும் , பிரக்ஞைநிலைக்கும் இடையில் மட்டும்தான் , ஒரு பாலமாக இருக்க விரும்புகிறார் . எந்தக் கணம் , நீங்கள் உங்களுடைய பிரக்ஞைநிலையில் முழுமையாக இருக்கிறீர்களோ, எந்தக் கணம் , உங்களுடைய விழிப்புணர்வால் , அவரை உணர்ந்துகொள்கிறீர்களோ, அப்பொழுது, நீங்கள் கடவுளை நேரடியாக உடனே சந்திக்கிறீர்கள் - யாரும் குறுக்கே இல்லாமல்

மனிதன் , கனவில்கூடக் கண்டிராத மிகப்பெரிய வெளிப்பாடு , நோக்கம், பார்வை எல்லாம் தந்த்ராதான். அது, பாதிரியார் மற்றும் மதத்தலைவர் என்று யாரும் இல்லாமல், தனிக்கோவில் என்று எதுவும் இல்லாமல், மத ஒழுங்குமுறை என்று எதுவும் இல்லாமல் , ஒருவனின் தனிப்பட்ட சுதந்திரத்தை அழிக்காமல் , அவனுடைய தனித்தன்மைக்கு மிகுந்த மதிப்பு கொடுக்கக்கூடிய, மற்றும் ஒரு சாதாரண ஆணையும், பெண்ணையும் முழுமையாக நம்பக்கூடிய ஒரே மதமற்ற மதம் , தந்த்ராதான் தந்த்ரா உங்கள் மேல் வைத்திருக்கும் நம்பிக்கை ஆழமானது. முழுமையானது. தந்த்ரா, உங்களுடைய உடலை மிகவும் நம்புகிறது. வேறு எந்த மதமும், உங்களுடைய உடலை நம்புவதே இல்லை. அவர்கள், உங்களுக்கும், உங்களுடைய உடலுக்குமிடையே ஒரு பிளவை உண்டு பண்ணுகிறார்கள் அவர்கள் , உங்களுக்கும் , உங்களுடைய உடலுக்குமிடையே, பகையை ஏற்படுத்துகிறார்கள் மற்றும் உங்களுடைய உடலின் புத்திசாலித்தனத்தை அழிக்க முயல்கிறார்கள்.

. தந்த்ரா, உங்களுடைய உடலையும், புலன்களையும், பாலுணர் சக்தியையும் மற்றும் உங்களுடைய உள்ளத்தையும் , உணர்வையும் பெரிதும் நம்புகிறது. அது எதையும் அழிப்பதில்லை; மாறாக அது எல்லாவற்றையும் மேலான நிலைக்கு மாற்றுகிறது.

எப்படி இந்த தந்த்ரா நோக்கத்தை அடைவது?

நிங்கள் உங்கள் மேல் செல்ல , நீங்கள் உங்களுக்குள்ளே செல்ல , நீங்கள் உங்களுக்கு அப்பாலும் செல்ல , இந்த வரைபடத்தை உபயோகித்துக் கொள்ளுங்கள்.

முதலில் , உங்களுடைய உடலில் கவனம் செலுத்துங்கள். உங்களுடைய உடல்தான் அஸ்திவாரம்; அதில்தான் நீங்கள் நிலைப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள் . நீங்கள் , உங்களுடைய உடலுக்கு எதிராகச் செயல்படுவது என்பது. உங்களுடைய உடலை அழிப்பதற்கும் , அதில் பிளவை உண்டு பண்ணி, உங்களுக்கு துன்பமயமான நரகத்தை உண்டுபண்ணுவதற்கும் சமம்தான் நீங்கள்

ஆரம்பத்தில் உடலாகத்தான், அதன் உணர்வாகத்தான் செயல்படுகிறீர்கள். நீங்கள், உங்களுடைய உடலைவிட 'மேலான' நிலையில் இருப்பது என்பது, பிறகுதான் ஏற்படுகிறது. அந்த 'மேலான நிலை, உங்களுடைய உ உடலுக்குப் பின்னால் தான் வருகிறது. முதலில், நீங்கள் உடலாகவே இருக்கிறீர்கள் உங்களுடைய உடல்தான், அடிப்படை உண்மை. ஆகவே, உங்களுடைய உடலுக்கு எதிராகச் செயல்படாதீர்கள். நீங்கள் அதற்கு மாறாகச் சென்றால், நீங்கள் கடவுளுக்கு மாறாகச் செல்கிறீர்கள் என்று அர்த்தம். நீங்கள், உங்களுடைய உடலை மதிக்கவில்லை என்றால், நீங்கள் ' உண்மை'யின் தொடர்பை இழக்கிறீர்கள் என்று அர்த்தம். ஏனென்றால், உங்கள் உடல்தான், உங்களுக்கும் கடவுளுக்குமிடையே, ஒரு பாலமாக இருக்கிறது. உங்களுடைய உடல் தான் கோவில் உங்களுடைய உடலை எப்படி நேசிக்கவேண்டும் என்பதை, அதை எப்படி அன்புடனும், கருணையுடனும் நன்றியுணர்வோடும் நடத்த வேண்டும் என்பதை, தந்திரா போதிக்கிறது. உங்களுடைய உடல், மிகவும் அபூர்வமானது. இந்த உலகத்தில் உள்ள பல புரியாத புதிர்களில், மிக மிக சிக்கலானதும், மிகப்பெரிய புதிரும் உங்களுடைய உடல்தான்

ஆனால், நீங்கள் உங்களுடைய உடலுக்கு எதிராகச் செயல்படுங்கள் என்றுதான் போதிக்கப்பட்டு வந்திருக்கிறீர்கள். நீங்கள் மரத்தின் பச்சை நிறத்தைக் கண்டு வியக்கிறீர்கள். சிலசமயம், சூரியனைக்கண்டும், சந்திரனைக் கண்டும், மற்றும் பலவித வண்ண மலர்களைக் கண்டும் வியக்கிறீர்கள் இது என்ன அற்புதமான, விளங்காத புதிர் என்று ஆச்சரியப்படுகிறீர்கள். என்றைக்காவது உங்களுடைய உடல் எவ்வளவு, மிகப்பெரிய அதிசயம் என்று நீங்கள் வியந்திருக்கிறீர்களா? உலகத்தில், ஏன் இந்த பிரபஞ்சத்தில் உள்ள அற்புதங் களில் மிகச்சிறந்த அற்புதம் இந்த உடல்தான்! சூரியனோ,

சந்திரனோ, எந்த மலரோ, உங்களுடைய உடலைப் போல அழகானதும் , அற்புதமானதும் , மிக மிக சிக்கலான (COMPLEX) தன்மையுள்ள அபூர்வமான உடலைப் பெற்றிருக்க வில்லை. உலக அதிசயங்களிலே, மிகப் பெரிய அதிசயம் , உங்களுடைய உடல் தான் . உதாரணமாக , நீங்கள் ஏதோ ஆகாரத்தை சாப்பிட்டு நீர் அருந்துகிறீர்கள். அது, உங்கள் உடலுக்குள் சென்று, எப்படி உங்களை ஆட்டுவிக்கிறது?! நீங்கள் ஆடுகிறீர்கள் பாடுகிறீர்கள், சிரிக்கிறீர்கள் கோபப்படுகிறீர்கள், பொறாமை மற்றும் பேராசை கொள்கிறீர்கள் , பாலுணர்வால் ஆட்டிவைக்கப்படுகிறீர்கள் இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம் அதனுடைய செயல்பாட்டின் அடிப்படைத் தன்மை (MECHANISM) யைக் கண்டு ஆச்சரியப்படுங்கள்.

ஆனால் , இந்த மிகச் சாதாரணமான மலர்களையும் , பாறை, மலை, ஆறு, கடல் போன்றவைகளைத்தான் , நீங்கள் வியக்க வேண்டும் என்று கற்பிக்கப்பட்டு வந்திருக்கிறீர்கள் . ஆனால் , உங்களுடைய உடலின் செயல்பாட்டைக்கண்டும் . அதனுடைய அழகிய தோற்றத்தைக் கண்டும், நீங்கள் அதிசயப்படவேண்டும். வியக்க வேண்டும் என்று உங்களுக்குக் கற்பிக்கப்படவில்லை. ஏனென்றால், அது உங்களுக்கு மிக அருகில் இருக்கிறது. ஆகவே, அதை நீங்கள் சுலபமாக மறந்துவிடுகிறீர்கள் , அது வெளிப்படையாகத் தெரிகிறது. ஆகவே சுலபமாக அதைப் புறக்கணித்து விடுகிறீர்கள் . ஆனால் உடல் மிகவும் அழகான அற்புதம்

நீங்கள் ஒரு அழகிய மலரைப் பார்த்து ரசித்தால் , " எப்படி ரசிக்கிறான் என்று மக்கள் உங்களைப் பாராட்டுவார்கள் . அதே சமயம் , நீங்கள் , ஒரு பெண்ணின் அழகையோ மற்றும் ஒரு ஆணின் அழகையோ ரசித்தால் , " இது ஆபாசம் என்று உங்களைக் கடிந்து கொள்வார்கள் . நீங்கள் ஒரு மரத்தடிக்குச் சென்று, அதனடியில் நின்றுகொண்டு அங்கு இருக்கும் மலர்களைப் பார்த்து ரசித்தால் - உங்களுடைய கண்களை நன்றாகத் திறந்து, அந்த மலர்களின் அழகை உங்களுடைய புலன்களின் வழியாக , திறந்த மனத்துடன் உள்ளே செலுத்திக்கொண்டு இருந்தால் , நீங்கள் ஒரு சிறந்த

கவிஞன் , அல்லது ஓவியன் மற்றும் ஞானி என்றெல்லாம், அவர்கள் நினைத்துக் கொள்வார்கள். ஆனால் , நீங்கள் ஒரு ஆணுக்கு / பெண்ணுக்கு அருகில் , மரியாதையுடனும் , அன்புடனும் நின்றுகொண்டு, அவளுடைய / அவனுடைய அழகை, உங்களுடைய இரண்டு கண்களையும் , நன்றாகத் திறந்து, அள்ளிப்பருகினால், அங்கு உங்களைத் தேடி போலீஸ்தான் வரும்! உங்களை அப்பொழுது யாரும் கவிஞன் என்றோ ஓவியன் என்றோ கருதமாட்டார்கள், உங்களைப் பாராட்டமாட்டார்கள் . ஏதோ தவறு நடந்துகொண்டிருக்கிறது என்றுதான் நினைப்பார்கள்.

நீங்கள் வீதியில் செல்லும் , உங்களுக்கு அறிமுகமில்லாத ஒரு பெண்ணிடம் சென்று. ' உங்களுடைய கண்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன என்று கூற , நீங்களும் சங்கடப்படுவீர்கள் , அந்தப் பெண்ணும் அதைக் கேட்டுச் சங்கடப்படுவாள். அவள், "மிக்க நன்றி'' என்று உங்களிடம் கூறமாட்டாள் . மாறாக , அவள் கோபம் கொண்டு, என்ன தைரியம் ? நீ யார் என்னுடைய தனிப்பட்ட வாழ்க்கையில் குறுக்கிட ? என்று கத்தினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

நீங்கள் ஒரு மரத்தைத் தொட்டுத் தடவிக் கொடுத்தால் அதற்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. இதையே ஒரு மனிதனிடம் செய்தால் , அவனை அது பாதிப்பதாக உணர்வான் . ஏதோ ஒன்று அவனை வெகு ஆழத்தில் கடுமையாகப் பாதித்திருக்கிறது. அங்கு என்ன தவறு நடந்திருக்கிறது?

உங்களுடைய உடலை முதலில் மதிக்க வேண்டும் என்றும், அதனிடம் அன்பு செலுத்தவேண்டும் என்றும், கடவுளின் மிகச்சிறந்த படைப்பு என்று அதைக் கருத வேண்டும் என்றும் , தந்த்ரா உங்களுக்குப் போதிக்கிறது. தந்த்ராவை, ஆரம்பத்தில் உடலைப்பற்றிய மதம் என்று கருத வேண்டும். அது, உடலுக்கு மேலாகச் சென்றாலும் , அது உடலைவிட்டு அகலவில்லை. அதனுடைய ஆணிவேர் . உடலில்தான் இருக்கிறது. மற்றும் இந்த பூமியைத்தான் ஆதாராமாகக் கொண்டிருக்கிறது. மற்ற

மதங்களெல்லாம், வேர் பிடுங்கப்பட்ட மரங்கள் தான் - அவைகள் இறந்தும் , இறந்து கொண்டும்தான் இருக்கின்றன மற்றும் அவைகளில் எந்தவிதமான சக்தியும் கிடையாது.

தந்த்ரா உண்மையிலேயே சக்திமிகுந்தது, உயிரோட்டமுள்ளது.

முதலில் , நீங்கள் உங்களுடைய உடலை மதித்து. அதைப் பற்றி அசிங்கமாக , முட்டாள் தனமாகக் கற்பிக்கப்பட்ட அனைத்தையும் நீக்கி, அதை சுத்தப்படுத்த வேண்டும் . இல்லாவிட்டால் , உங்களால் உள்ளே திரும்ப முடியாது. உங்களுக்குள்ளே செல்ல முடியாது. மற்றும் அதைக் கடந்தும் செல்ல முடியாது. ஆன்மீக யாத்திரையை, முதலில் , உங்களுடைய உடலிலிருந்து ஆரம்பிக்க வேண்டும்.

அடக்கப்பட்ட பல உணர்வுகளிலிருந்து உங்கள் உடலை முதலில் சுத்தம் செய்யவேண்டும் . ஒரு மிகச் சிறந்த மருந்து உங்கள் உடம்பிற்குத் தேவைப்படுகிறது. நீங்கள் இதுவரை, அதற்கு எதிர்ப்பாக இருந்த காரணத்தால் நீங்கள் அதை பலவழிகளில் அடக்கி, விஷத்தன்மையுடையதாக ஆக்கிவிட்டீர்கள் . உங்களுடைய உடல் இப்பொழுது, கீழான நிலையில் , எந்தவிதப் புத்துணர்ச்சியும் இல்லாமல் இருக்கிறது. உங்களுடைய துன்பத்துக்கு அடிப்படைக் காரணம் இதுதான் . நீங்கள் உங்களுடைய உயிரோட்டத்தின் உச்சத்தில் இருந்தால்தான் , அந்த மேலான பேரின்ப நிலையை அடைய முடியும் என்று அது கூறுகிறது. நீங்கள் இந்த வாழ்க்கையில் , முழுமையாக இருந்தால்தான் , அந்த மேலான முழுமையை அடைய முடியும் நீங்கள் உங்களுடைய உடலுக்கு எதிராக இருந்தால் , உங்களால் எப்படி ஊக்கமிக்கவர்களாக வாழமுடியும்?

நீங்கள் எப்பொழுதும், ஒரு மண்புழு போலத்தான் வாழ்கிறீர்கள் . பல நூற்றாண்டு காலமாக உங்களுக்குள் உள்ள தீ அழிக்கப்பட்டு வந்திருக்கிறது. அந்த நெருப்பு மீண்டும் எரிய , இப்பொழுதும் , நீங்கள் ஒரு தூண்டுதலாக இருக்க வேண்டும் . தந்த்ரா என்ன சொல்கிறது

என்றால் , உங்களுடைய உடலை சுத்தம் செய்ய வேண்டும் , உங்கள் உடலின் உள்ளே அடக்கப்பட்டவைகளை யெல்லாம் வெளியேற்றி சுத்தப்படுத்த வேண்டும் . உங்களுடைய உடல்சக்தி, எந்தவிதத் தடங்கலும் இல்லாமல் , ஒரே சீராக ஓடவேண்டும்.

ஆனால் , தடங்கலில்லாத மனிதனைப் பார்ப்பது மிகவும் அரிது. இறுக்கமில்லாத உடலை உடைய மனிதனைப் பார்ப்பது, மிகவும் கஷ்டம் உங்களுடைய இறுக்க நிலையை தளரவிடுங்கள் . அதுதான் மிகப் பெரிய தடங்களாக இருக்கிறது. அதனால்தான், சக்தி ஓட்டம் தடைப்படுகிறது.

ஏன் ஒவ்வொருவரும் , இறுக்கமாக இருக்கிறார்கள் ? ஏன் நீங்கள் ஓய்வுத்தன்மையில் இருக்கக் கூடாது. மாலையில் , உங்களுடைய அறையில் தூங்கும் பூணையைப் பார்த்திருக்கிறீர்களா? எவ்வளவு எளிதாக , எவ்வளவு அழகாக , அது ஓய்வு எடுக்கிறது? நீங்களும் அப்படி ஓய்வு எடுக்க முடியாதா? அந்த பூனையின் அழகு, அது முழுமையாக ஓய்வு எடுப்பதிலேயும் , அதே சமயம் , மிகவும் ஜாக்கிரதையாகவும் விழிப்பாகவும் இருப்பதிலும்தான் இருக்கிறது. ஒரு மென்மையான ஒலிகூட , அதை விழிக்கச் செய்துவிடும். அது உடனே குதித்து எழுந்து, தயாராகிவிடும் . இந்தப் பூனை எப்படித் தூங்குகிறது என்பதை மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும் . மனிதன் இதை எப்பொழுதோ மறந்துவிட்டான்

ஒரு பூனை எப்படித் தூங்குகிறது என்றும் , எப்படி முழுமையான ஓய்வு எடுக்கிறது என்றும் , எப்படி அது எந்தவித இறுக்கமும் இல்லாமல் , வாழ்கிறது என்றும், மனிதன் அதனிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும் என்று தந்த்ரா கூறுகிறது. ஏன் எல்லா மிருக இனங்களும் , எந்தவித இறுக்கமும் இல்லாமல்தான் வாழ்கின்றன . ஆனால் , மனிதன் தவறான வழியில் கற்பிக்கப்பட்டிருக்கிறான் . அவன் தவறான வழியில் தயாரிக்கப்பட்டிருக்கிறான் . அவன் அவைகளிடமிருந்து உண்மை நிலையைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

உங்களுடைய சிறுவயது முதற்கொண்டே, நீங்கள் இறுக்கமாக இருக்கவே தயாரிக்கப்படுகிறீர்கள்

பயத்தினால் நீங்கள் சரியாகக்கூட மூச்சுவிடுவது இல்லை. பாலுணர்வுப் பயத்தினால் , நீங்கள் முழுமையாக மூச்சுவிடுவது இல்லை. ஏனென்றால் , நீங்கள் ஆழமாக இழுத்து மூச்சைவிட்டால் , உங்களுடைய மூச்சு பாலுணர்வு மையத்தை அடைந்து, அதைத் தாக்குகிறது, அதைப் பிசைந்து தூண்டுகிறது. பாலுணர்வு, மிகவும் தவறானது என்று உங்களுடைய சிறுவயதிலேயே, உங்களுக்குப் போதிக்கப்பட்டதால் , நீங்கள் உங்களுடைய மூச்சை, மிக மென்மையாகவே விடுகிறீர்கள் . அந்த மூச்சு, அவனுடைய மார்புக்குக் கீழே செல்வது இல்லை. அப்படிச் சென்றால் , திடீரென்று அந்த உணர்வு மேலே கிளம்பி, உங்களைப் பயத்தில் ஆழ்த்தும்.

ஆனால் , அந்தப் பாலுணர்வு சக்தி வெளியேறி, அது, உங்களுடைய உயிர்த்தன்மை முழுவதிலும் ஓடவேண்டும். அப்பொழுது, உங்கள் உடல் முழுமையும், உச்ச இன்பத்தில் இருக்கும் . ஆனால் , பயத்தினால் நீங்கள் மூச்சை சரியாக விடாத காரணத்தால் , உங்களுடைய பாதி நுரை ஈரல் , கரியமிலவாயுவால் , நிரப்பட்டுவிடுகிறது.

உங்களுடைய நுரைஈரலில் , சுமார் 6000 ஓட்டைகள் இருக்கின்றன . சாதாரணமாக , 3000 ஓட்டைகள் சுத்தப்படுத்தப்படுவது இல்லை. அது கரியமில வாயுவால் தான் நிரப்பட்டிருக்கிறது. ஆகவேதான் , நீங்கள் சோர்வாக இருக்கிறீர்கள் . அப்பொழுது. முழுமையான ஜாக்கிரதை உணர்வு மற்றும் விழிப்புணர்வு உங்களிடம் நிகழக் கஷ்டமாக இருக்கிறது. அதனால்தான் யோகாவும் , தந்த்ராவும் , பிராணயாமத்தை ( ஆழ்ந்து மூச்சுவிடும் பயிற்சி ) முக்கியமாகப் போதிக்கின்றன . இதனால் , உங்களுடைய நுரைஈரலில் உள்ள கரியமிலவாயு வெளியேற்றப்படுகிறது. அது உங்களுடைய உடலுக்குத் தேவையில்லாதது. நீங்கள் அதை முற்றிலுமாக வெளியேற்றினால்தான் , புதிய பிராணவாயுவுடன் கூடிய வெளியே உள்ள காற்று உங்களுக்குள்ளே செல்ல முடியும் . இந்த

பிராணவாயுவினால் , உங்களுக்கு உள்ளே உள்ள நெருப்புத் தூண்டப்படுகிறது. அது உங்களுடைய பாலுணர்வைத் தூண்டுகிறது. யோகாவைவிட , தந்த்ராதான் மிக ஆழமாக மூச்சை இழுத்து, விடுவதில், சிறப்பாக வேலை செய்கிறது. உங்களுடைய தொப்புள் மையம் வரைதான் அதாவது ஹரா (HARA) வரைதான், சுவாதிஸ்தான் வரைதான் , யோகாவினால் செல்லமுடியும். சுவாதிஸ்தானைத் தாண்டிச் சென்றால், நீங்கள் மூலதாரத்தில்தான் குதிக்க வேண்டும் . தந்த்ராதான், இதை முழுமையாகச் செய்கிறது. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ, எப்படி இருக்க முடியுமோ, அந்த நிபந்தனையற்ற சுதந்திரத்திற்கு வழி செய்கிறது. அது உங்களிடம் எந்த எல்லைகளையும் ஏற்படுத்துவது இல்லை. இங்கு நீங்கள் ஆன்மீகத்தில் முழுமையாக முன்னேற முடியும்.

நான் புரிந்து கொண்டது என்னவென்றால் , யாரெல்லாம் பாலுணர்வை மிகத் தீவிரமாக அடக்குகிறார்களோ, அவர்கள் புத்தி கூர்மையற்று இருக்கிறார்கள் . யாரெல்லாம் பாலுணர்வால் மிகவும் ஆக்ரமிக்கப்படு கிறார்களோ, அவர்களெல்லாம், புத்தி கூர்மையுடையவர்களாகவே இருக்கிறார்கள் . இப்பொழுது, பாலுணர்வு, பாபம் நிறைந்தது என்ற கருத்து. மனிதர்களின் புத்திக்கூர்மையை மழுங்க அடிக்கிறது - மிக மோசமாக அதை அழிக்கிறது. நீங்கள், எந்தவித அடக்குதலும் இல்லாமல், அதனுடன் மிகவும் சுதந்திரமாக , இயல்பாக ஒத்துப்போனால் , எந்தவிதச் சண்டையும் போடாமல் , அதனுடன் இயைந்து சென்றால் , உங்களுடைய உடல் , அதன் உச்சத்தன்மையில் செயல்படும் . நீங்கள் அப்பொழுது மிகவும் புத்திக்கூர்மையாகவும் , சுறுசுறுப்புடனும் , விழிப்புணர்வோடும் இருப்பீர்கள்.

நீங்கள் , உங்களுடைய உடலோடு நட்பாகவே இருக்கவேண்டும் என்று தந்த்ரா கூறுகிறது.

நீங்கள் , உங்களுடைய உடலை முழுமையாகத் தொட்டிருக்கிறீர்களா? உங்களுடைய உடலின்

உணர்வை, நீங்கள் முழுமையாக உணர்ந்திருக்கிறீர்களா? அல்லது ஒரு இறந்த கூண்டுக்குள் , அடைப்பட்டிருப்பது போன்று நினைக்கிறீர்களா? ஆனால் இப்படித்தான் பெரும்பாலான மக்கள் வாழ்கிறார்கள் . அவர்கள் , கிட்டத்தட்ட உறைந்த நிலையில்தான் இருக்கிறார்கள் அவர்கள் , இந்த உடலை ஒரு சுமைபோலவே தூக்கிக்கொண்டு அலைகிறார்கள் அது மிகவும் பளுவாகவும் , தடங்கலாகவுமே இருக்கிறது. அது, உண்மையோடு தொடர்புகொள்ள எந்தவித உதவியும் செய்யாது. நீங்கள், உங்களுடைய மின்சாரம் போன்ற சக்தியை, உயிர்ச்சக்தியை (BIO ENERGY) கால் முதல் தலைவரை முழுமையான சுதந்திரத்தில் இயங்க வைத்தால் - நீங்கள் ஆறுபோல தங்குதடையின்றி ஓடு வீர்கள், அப்பொழுது உங்களுடைய உணரமாட்டீர்கள். நீங்கள் உடலற்று இருப்பது போல உணர்வீர்கள் உங்களுடைய உடலோடு , நீங்கள் சண்டைபோட்டால்தான் அதை ஒரு பளுவாக உணர்வீர்கள். இந்த உணர்வோடு , நீங்கள் கடவுளை ஒருக்காலும் அடைய முடியாது.

உங்களுடைய உடல் எடையற்று இருக்கவேண்டும். அப்பொழுதுதான் , உங்களால் , பூமிக்கு சற்று மேலே நடக்க முடியும் . இதைத்தான் , ' தந்த்ரா நடை என்று கூறுவார்கள் பூமியின் புவிஈர்ப்பு சக்தி தாக்காத வகையில் , உங்களுடைய உடல் அவ்வளவு லேசாக இருக்கும். அப்பொழுது, பூமிக்கு சற்று மேலே பறப்பது போல உணர்வீர்கள் . நீங்கள் , உங்களுடைய உடலை முழுமையாக ஏற்றுக்கொண்டால் தான் . அப்படிப் பறப்பதை உணர்வீர்கள் . ஆனால் உங்களுடைய உடலை ஏற்றுக்கொள்வது என்பது மிகவும் கஷ்டம் . நீங்கள் அதில் ஏதாவது குற்றம் கண்டு பிடித்துக்கொண்டே, கண்டித்துக்கொண்டு இருப்பீர்கள். நீங்கள் அதை ஒரு போதும் போற்றமாட்டீர்கள் . அன்பு செலுத்தமாட்டீர்கள் . ஆனால் , அதனிடம் அற்புதத்தை எதிர்பார்ப்பீர்கள் . நீங்கள் உங்கள் உடலிடம் அன்பு செலுத்தாவிட்டால் , பிறர் எப்படி உங்களுடைய உடம்பை விரும்புவார்கள்? உங்களுடைய வெறுப்பான அதிர்வே, அவர்களை பின்னடையச் செய்துவிடும். . உ

யார் ஒருவன் , தன்னையே விரும்புகிறானோ, அவனால் அடுத்தவரையும் விரும்ப முடியும் . முதலில் ,

அவன் தன்னைத்தான் விரும்பவேண்டும் . அந்த மையத்திலிருந்துதான் , அடுத்தவரிடம் செலுத்த , தேவையான அன்பு கிளம்ப வேண்டும் . ஆனால் , நீங்கள் உங்களுடைய உடலை விரும்புவதே இல்லை. அதனுடைய உணர்வுகளை ஆயிரத்தோரு வழிகளில் அடக்கி வைத்திருக்கிறீர்கள் . நீங்கள் உங்களுடைய உடலில் ஏற்படும் நாற்றத்தை மறைக்கிறீர்கள் . உங்களுடைய உடலை, ஆடை ஆபரங்களால் மறைக்கிறீர்கள் . அதனுடைய தோற்றத்தை எவ்வளவு மாற்ற முடியுமோ, அவ்வளவு மாற்றுகிறீர்கள் . இது எப்பொழுதும் தொடர்ந்து நடைபெறுகிறது. தான்

நீங்கள் , உதட்டில் சாயம் பூசிக்கொண்டிருக்கும் பெண்களைப் பாருங்கள் . அது எவ்வளவு அருவருப்பாக இருக்கிறது? உங்களுடைய ஆரோக்கியத்தினால்

மட்டுமே, அது இளஞ்சிவப்பு நிறத்தில் இருக்கவேண்டும் . அதற்குச் சாயம் பூசக்கூடாது. நீங்கள் அன்பு செலுத்துவதன் மூலம் , உடல் புத்துணர்வுபெற்று. இயற்கையாகவே அழகுடையதாக இருக்க வேண்டும் . இப்பொழுது, உதட்டுக்குச் சாயம் பூசுவதாலும் , முகத்துக்குப் பவுடர் போடுவதாலும் மட்டுமே, நீங்கள் உங்களை அழகுபடுத்திக் கொள் கிறீர்கள் . தங்களுடைய அருவருப்பான முகத்தைப் பற்றி உணர்ந்து யார் ஒருவர் பிரக்ஞையாகவும், அதே நினை வாகவே இருக்கிறார்களோ அவர்கள் தான் , அழகு சாதன நிலையத்துக்குச் செல்வார்கள் . இல்லாவிட்டால், அதற்கு என்ன தேவை?

நீங்கள் , ஒரு அருவருப்பான பறவையைப் பார்த்திருக்கிறீர்களா? அவைகளில் , எதுவும் எந்த அழகுசாதன கடைக்கோ மற்றும் அது சம்மந்தமான நிபுணர்களைத் தேடியோ. செல்வதில்லை. அவைகள் , தங்களுடைய இயற்கையான அழகை. அப்படியே ஏற்றுக் கொள்கின்றன . அப்படி ஏற்றுக்கொள்வதால் மட்டுமே அவைகள் அழகு நிறைந்ததாகக் காணப்படுகின்றன.

நீங்கள் , எப்பொழுது உங்களுடைய இயற்கையான அழகை ஏற்றுக்கொள்கிறீர்களோ, அப்பொழுதே,

நீங்கள் அழகு மிகுந்தவராகக் காணப்படுவீர்கள் . நீங்கள் , உங்களுடைய உடலின் அழகை வசீகரித்தால்தான் அடுத்தவர்களை, நீங்கள் வசீகரிக்க முடியும் . எந்த அளவுக்கு நீங்கள் உங்களையே விரும்புகிறீர்களோ, அந்த அளவுக்கு அடுத்தவர்களும், உங்களை விரும்புவார்கள் இப்பொழுது நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்ளுங்கள் ; அப்பொழுது உங்களுடைய முகம், எவ்வளவு அருவருவப்பாக, வெறுக்கத் தகுந்த விதத்தில் இருக்கும் என்பதையும், நீங்கள் அறிவீர்கள். அப்பொழுது, அதுவே மற்றவர்களை விரட்டிவிடும் . பிறர் உங்களை ஒருக்காலும் விரும்பமாட்டார்கள் . அப்படியே, ஒரு சிலர் உங்களை நெருங்கி வந்தாலும், உங்களுடைய கோபம் மற்றும் வெறுப்பு அலைகளால் அவர்கள் தாக்கப்பட்டு உங்களை விட்டு அகன்று சென்றுவிடுவார்கள்.

உங்களை விரும்புவதற்கு, நீங்கள் யாரையும் தேடிச் செல்லவேண்டாம் நாம் , நம்மையே விரும்பாததால்தான் , நாமே அடுத்தவரை நோக்கி, அவர்களது அன்புக்காக ஓட வேண்டிய நிலையில் இருக்கிறோம். நீங்கள் உங்களையே விரும்பாவிட்டால், அடுத்தவர்கள் மட்டும் எப்படி உங்களை விரும்ப முடியும்?

எதற்காக , இவ்வளவு மக்கள் , புத்தரை நோக்கியும் , சாரஹா மற்றும் ஜீசஸ் போன்றவர்களை நோக்கியும் ஓடுகிறார்கள் ? அவர்களெல்லாம் தங்களையே விரும்புபவர்கள் யார் ஒருவர் தங்களுடைய இருத்தலில் , தங்களுடைய உடலின் அழகில் பிரக்ஞையாக இருக்கிறார்களோ, அவர்கள்தான், அதே அன்பு நிலையில் உள்ளார்களால் ஈர்க்கப்பட்டு அதே அன்பு நிலையில் உள்ளவர்களை நாடிச் செல்வார்கள். அவர்கள் உண்மையான மகிழ்ச்சியோடு இருக்கும் பொழுது. பிறரிடம் உள்ள உண்மையான மகிழ்ச்சியை, எப்படி அவர்களால் வெறுக்க முடியும் ? அப்படி இருப்பவர்களோடு, சேர்ந்து இருப்பதே பேரானந்தமயமானது.

தந்த்ரா போதிப்பது

என்னவென்றால் , நீங்கள் முதலில் , உங்களுடைய உடலை நேசியுங்கள். அதன்மீது அன்பு செலுத்துங்கள், அதைப் போற்றுங்கள் மற்றும் அதைக் காப்பாற்றுங்கள் என்பதுதான் - அது கடவுளால் கொடுக்கப்பட்ட பரிசு அதனுடன் மிக நட்புடன் இருங்கள் , அப்பொழுது அது தன்னிடமுள்ள அற்புதங்களை, உங்களுக்குக் காட்டும். நீங்கள் எப்படி உங்களுடைய உடலை வைத்திருக்கிறீர்களோ, அதைப் பொருத்தே, எல்லா வளர்ச்சியும் இருக்கின்றன.

இரண்டாவதாக , உங்களுடைய புலன் உணர்வுகளைப் பற்றித் தந்த்ரா பேசுகிறது. மறுபடியும் , உங்களுடைய மதம் , அங்கே குறுக்கிடுகிறது. அவைகள் , உங்களுடைய புலனுணர்வை மந்தமாக்கவே, மழுங்கடிக்கவே மிகவும் தீவிரமாக இருக்கின்றன . ஆனால், அந்தப் புலன்களின் வழியாகத்தான், நீங்கள் உண்மையை உணர முடியும். அவைகள்தான் , இந்தப் பிரபஞ்ச பேரியக்க சக்தி என்ற கோவிலின் , பெருங்கதவுகள் , மற்றும் ஜன்னல்கள் உங்களுடைய கண்களும் , காதுகளும் , மூக்கும் என்னவென்று கருதுகிறீர்கள் ? அவைகளெல்லாம் கடவுளைக்காண , கேட்க , நுகர , உதவும் ஜன்னலாகவே இருக்கின்றன . நீங்கள் இந்த உலகத்தைச் சரியாகப் பார்த்தால் , இந்த உலகத்தை நீங்கள் சரியாகக் கேட்டால் , இந்த உலகத்தை நீங்கள் சரியாக நுகர்ந்தால் , எங்கும் , எதிலும் கடவுள் இருப்பதை உணர்வீர்கள் . கண்கள் , தங்களை மூடிக்கொள்வதற்காக இல்லை அவைகள் , தங்களை நன்றாகத் திறந்து இந்த உலகத்தை சரியாகப் பார்க்க வேண்டும் . காதுகளை நன்றாகத் திறந்து, இந்த இயற்கையின் ஒலிகளைக் கேட்க வேண்டும் - பறவை, கடல், காற்று, மரங்களின் அசைவு போன்றவைகளை. இவைகளெல்லாம் தெய்வீக இசைகள்.

இந்தப் பறவைகளெல்லாம் தெய்வீக மந்திரங்களைச் சொல்கின்றன . இந்த மரங்களெல்லாம் அமைதியாக , கடவுளைப் போற்றிக் கொண்டிருக்கின்றன . எல்லா இயற்கையான ஒலிகளும் , படைப்புகளும் , வாசனைகளும் , கடவுளுக்கே உரியது. இந்த உணர்வுகளை, நீங்கள் அழித்துக் கொண்டால் , எப்படி

நீங்கள் கடவுளைக்காண முடியும் ? அப்பொழுது, நீங்கள் ஒரு சர்ச்சை நாடியோ அல்லது கோவிலைநாடியேதான் செல்ல வேண்டும் . இதோ, உங்களைச் சுற்றி, கடவுள் தன்னை வெளிப்படுத்திக்கொள்வதை, உங்களால் காண முடியவில்லையா? கேட்கமுடியவில்லையா, நுகர முடியவில்லையா? இந்த உலகமே கோவில்தான் , கடவுளுடைய இருப்பிடம்தான் என்பதை நீங்கள் புரிந்துகொள்ளவில்லையா? மனிதனால் உண்டாக்கப்பட்ட இந்த கோவில் மற்றும் சர்ச்சுகளை நோக்கி, நீங்கள் கடவுளைக் காணச் செல்கிறீர்கள் ! மனிதன் , தன்னை எவ்வளவு முட்டாளாக்கிக் கொண்டிருக்கிறான் ! கடவுள் எங்கேயும் இருக்கிறார் ; எங்கேயும் உயிரோட்டமாகவும் , தன்னை எங்கும் வெளிப்படுத்திக்கொண்டிருக்கிறார் . ஆனால் , அதை உணர உங்களிடம் சுத்தமான புலனுணர்வுகள் தேவை

ஆகவே, மழுங்கடிக்கப்பட்ட , அசுத்தப்படுத்தப்பட்ட , அடக்கி வைக்கப்பட்டுள்ள , உங்களுடைய புலன்களையும் , அதன் உணர்வுகளையும் சுத்தப்படுத்தி, கூர்மையாக்கி, அதனுடைய இயல்பான நிலைகளில் வைக்க வேண்டும் என்று தந்த்ரா கூறுகிறது. அவைகள், உங்களைச் சுற்றியுள்ள

அவைகளை கடவுளின் நிலைகளை பிரதிபலிக்கும் கண்ணாடிகள் அதில் பல பிறவிகளால் தூசு படிந்து இருக்கிறது. அதை முதலில் சுத்தப்படுத்த வேண்டும் . அவைகள் இப்பொழுது மங்கலாக இருக்கின்றன . நன்றாகத் துடைக்கவேண்டும்.

எல்லாவற்றிலும் , தந்த்ராவின் நோக்கப்படி அணுகுங்கள் எல்லா மதவாதிகளும் , " உங்களுடைய புலனுணர்வுகளை மழுங்கடியுங்கள் என்றும் அழியுங்கள் என்றும் கூறுகின்றன . ஆனால் தந்த்ரா, ' கடவுளை ஒவ்வொன்றிலும் ருசியுங்கள் என்றும் , தொட்டு அனுபவியுங்கள் என்றும் , அதனுடன் இயைந்து செல்லுங்கள் ' என்றும் கூறுகிறது. ஆனால் மற்ற மதங்களெல்லாம் அவைகளை அடியோடு வெட்டி வீழ்த்துங்கள் என்று கூறுகின்றன.

ஒவ்வொன்றையும் , முடிந்தவரை முழுமையாக ருசியுங்கள் , உணருங்கள் , கேளுங்கள் , பாருங்கள் மற்றும் நுகருங்கள் என்று தந்த்ரா கூறுகிறது. நீங்கள் இப்பொழுது அந்த இயற்கையான மொழியைக் கற்க வேண்டும் . உங்களுடைய சமூகம் உங்களை முட்டாளாக்கி வைத்திருக்கிறது. உங்களை மறக்கடித்து வைத்திருக்கிறது.

ஒவ்வொரு குழந்தையும் , அழகிய புலன் உணர்வுகளோடுதான் பிறக்கிறது. ஒரு குழந்தையைப் பாருங்கள் . ஏதாவது ஒன்றைப் பார்க்கும் பொழுது, அது, எப்படி முழுமையாக அதைக் கவனிக்கிறது? அதைப்போல , விளையாட்டு பொம்மைகளுடன் விளையாடும் பொழுது, அவைகளோடு எப்படி அது ஐக்கியமாகிவிடுகிறது? அது ஒன்றைப் பார்க்கும்பொழுது, அதுவே கண்களாக மாறிவிடுகிறது. அதைப்போல , அது ஒன்றை கேட்கும் பொழுது, அது காதாகவே மாறிவிடுகிறது; ஒன்றைச் சாப்பிடும்பொழுது, அது நாக்காக்வே ஆகி விடுகிறது; அதாவது அது, ஒரு ஆப்பிளைச் சாப்பிடும் பொழுது, எப்படி ஆர்வமாக , தன் முழுசக்தியோடு ஆனந்தமாகச் சாப்பிடுகிறது? அது. ஒரு அழகிய பட்டாம்பூச்சியின் பின்னால் ஓடும்பொழுது கவனித்திருக்கி றீர்களா? அப்பொழுது கடவுளே நேரில் வந்தாலும் , அதன் ஓட்டத்தைத் தடுத்து நிறுத்த முடியாது. அந்த அளவுக்கு அத்துடன் ஒன்றிவிடுகிறது. அப்பொழுது, கடவுள் கூட மிகச்சாதாரணம் . அந்த அளவுக்கு, அது பூரணமான ஒன்றுதலில் இருக்கிறது. அவைகள் , கடல் மணலில் கிளிஞ்சல் பொறுக்கும் பொழுது. வைரங்களை பொறுக்குவது போல , அவ்வளவு ஆர்வமாக , அவைகளுடன் ஒன்றிப் போய்விடும் . புலன்களெல்லாம் , புத்துணர்ச்சியோடு இருக்கும்பொழுது. எல்லாமே மதிப்புமிக்கதாகத்தான் தெரியும். மற்றும் மிக சுத்தமாகவும் தெரியும்

அதே குழந்தை, வளர்ந்து பெரியவனான பிறகு, அது இருண்ட கண்ணாடியின் வழியாகத்தான் , உண்மையைப் பார்க்கிறது. அந்த கண்ணாடியில் புகையும் , தூசும் நிறையப் படிந்துவிட்டது. இதனால்தான் , எல்லாமே மங்கலாக இறந்தது போலக் காணப்படுகின்றன . அப்பொழுது இந்தப் பச்சைமரங்கள் கூட , மங்கலாகவே தெரியும் .

ஏனென்றால் உங்களுடைய கண்கள் மங்கலாக

இருக்கின்றன. நீங்கள் ஒரு அருமையான சங்கீததததை, மிகவும் சோர்வாக காதுகளுடன்தான் கேட்கிறீர்கள் அதில் உங்களுக்கு எந்தவித ஈடுபாடும் இருக்காது நீங்கள் சாரஹாவின் இசையைக் கேட்கலாம். ஆனால், உங்களுடைய அறிவு சோர்வாக இருப்பதால், அதை உங்களால் அனுபவிக்க முடியாது மற்றும் பாராட்ட முடியாது.

நீங்கள் மறந்த மொழியை, மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள் உங்களுக்கு நேரம் கிடைக்கும் பொழுது, உங்களுடைய புலன்களோடு முழுமையாக இருங்கள் . நீங்கள் ஒன்றைச் சாப்பிடும் பொழுது, மறந்துபோன அந்த சுவை உணர்வு மொழியை மீண்டும் உங்களுடைய ஞாபகத்துக்குக் கொண்டு வாருங்கள் . ரொட்டியைத் தொடும் பொழுது. அதனுடைய மென்மையை உங்களுடைய முழுமையான உணர்வுக்குக் கொண்டுவாருங்கள் புறக்கண்களை மூடிக்கொண்டு, மனக்கண்ணை நன்றாகத் திறந்து பாருங்கள் நீங்கள் ஒன்றை மெல்லும் பொழுது, கடவுளையே மெல்லுவதுபோல ருசித்து மெல்லுங்கள். அங்கு கடவுள், ருசியாகத்தான் இருக்கிறார் . நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . நீங்கள் சரியாக ருசித்து சாப்பிடாவிட்டால், நீங்கள் கடவுளை அவமதிக்கிறீர்கள். அது ஒரு முழுமையான பிரார்த்தனையாக இருக்கட்டும் . நீங்கள் ஒரு புதிய பிரக்ஞைத் தன்மையை, உங்களிடம் ஏற்படுத்திக் கொள் கிறீர்கள். நீங்கள் அப்பொழுது தந்த்ராவின் ரசவாத வித்தையை (ALCHEMY) கற்றுக்கொள்கிறீர்கள்.

அதிகமான மக்களைத் தொடுங்கள் . மக்களைத்தொடும் பொழுது, அந்த உணர்வோடு ஒன்றிவிடுங்கள் . யாராவது உங்களிடம் நெருங்கி வந்து, பேசமுயன்றால் , நீங்கள் பின்னால் செல்கிறீர்கள் . நாம் ஒரு எல்லைக்குள் நிற்க விரும்புகிறோம். நாமும் சரியாகத் தொடுவது இல்லை, பிறரையும் சரியாகத்தொட அனுமதிப்பது இல்லை.

நாம் சரியாக அவர்களுடைய கைகளைப் பிடிப்பது இல்லை, முழுமையாக கட்டி அணைப்பது இல்லை. அடுத்தவர்களுடைய உயிர்த்தன்மையை அனுபவிப்பதில்லை.

ஓஷோ கேளுங்கள் . இப்படி கொள்ளுங்கள் . அப்பெ கற்றுக்கொள்ள முடியு கொண்டுதான், நீங்கள் த

பழக்கம் என்ப விடுவியுங்கள் உங்களு இருக்கின்றன. புதிய புதியவழிகளைத் தேடும் ஆனால் , இதற்கெல்லாம்

ஒரு மரத்தைத் தொடும்பொழுதும் , ஒரு பாறையைத்தொடும்பொழுதும் , உணர்வோடு தொடுங்கள் . ஆற்றின் நீர் , உங்களுடைய கைகளின் வழியாகச் செல்லட்டும். அதில் நீந்துங்கள் அப்பொழுது, அந்தத் தண்ணீரின் தன்மையை முழுமையாக உணருங்கள் , ஒருமீன் அதை உணர்வதைப் போல உங்களுடைய புலன்கள் , புத்துணர்ச்சி பெறக்கூடிய சந்தர்ப்பத்தை நழுவவிடாதீர்கள். ஒரு நாள் முழுவதும் இப்படி ஆயிரக்கணக்கான சந்தர்ப்பங்கள் ஏற்பட்டு கொண்டே இருக்கின்றன. அதற்காக, நீங்கள் தனியாக நேரத்தை ஒதுக்க வேண்டியது இல்லை. நாள் முழுவதும், உங்களுடைய புலன்கள் புத்துணர்ச்சிபெற, பயிற்சி எடுத்துக்கொள்ளுங்கள் . எல்லாச் சந்தர்ப்பங்களையும் , சரியாக உபயோகித்துக் கொள்ளுங்கள் . நீங்கள் , நீர்த்திவலைக்கு (SHOWER) அடியில் குளிக்கும் பொழுது, அந்த நீரின் தன்மையை, உடல் முழுவதும் உணருங்கள். தரையில் ஆடையின்றி, ஓய்வாகப்படுத்து, அந்தத் தரையை உணருங்கள் கடல் மணலில் படுத்து, அந்த மணலை உணருங்கள் . கடலின் ஓசையை, இசையை உன்னிப்பாகக்

ஆகவே, பழக்கத பழக்கங்களும் , வாழ்வி இறப்பை நோக்கித்தான் கண்டுபிடிக்க முடியும் அ மாறுதல்கூட, உங்களுக்கும் சாப்பிடும் மேஜைமீது த புல்தரையில் உட்கார்ந்து கொடுக்கும் ! வெட்டிய ட பறவைகளின் கீதம், சூரியக்கதிர்கள்....எவ்வம்

அதைப் போல , ஆ பாருங்கள் . சிறிய மாறுதல் இருக்கும். நீங்கள், கத்தி, க அவைகளை ஒதுக்கிவிட்டு நீங்கள் அந்த உணவின் 6 உணவைத் தொடும் பொழு கரண்டி, கத்திக்கு, ஏது இந்த மூக்கினால் நன்றாக

முகர் இன்பமே அலாதிதான் ஆகவே, ஒவ்வொன்றிலு உண்டாக்க முயலுங்கள் இ

மக்கள், பழக்கம் எ ஒவ்வொரு சந்தர்ப்பத் வேண்டும். நீங்கள் ஒரு அதை முழுமையாகக் ஏதாவது புதுமையைப் இருவரும் சேர்ந்து ஆடு சிலசமயம் நீந்திய பிறகு, ஏற்படுத்துங்கள். இல்ல கொடுக்கும்.

கேளுங்கள். இப்படி ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் உபயோகித்துக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான், மறந்து போன அந்த புலன்களின் மொழியை கற்றுக்கொள்ள முடியும். புத்துணர்ச்சியோடு கூடிய, அந்த புலன்களைக் கொண்டுதான், நீங்கள் தந்திராவைப் புரிந்து கொள்ள முடியும்.

பழக்கம் என்பதிலிருந்து (HABITS) உங்களுடைய புலன்களை விடுவியுங்கள். உங்களுடைய சோர்வின் அடிப்படை வேர்கள் அதில் தான் இருக்கின்றன. புதியவைகளில் உங்களுடைய புலன்கள் ஈடுபட, புதியவழிகளைத் தேடுங்கள். அன்பு செலுத்த புதிய வழிகளைத் தேடுங்கள். ஆனால், இதற்கெல்லாம் மக்கள் பயப்படுகிறார்கள்.

மக்கள், பழக்கம் என்பதிலேயே தங்களை நிலைநிறுத்திக் கொள்கிறார்கள். ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும், மிகுந்த உணர்வோடு உண்டாக்கிக்கொள்ள வேண்டும். நீங்கள் ஒரு பெண்ணோடு / ஆணோடு காதல் செய்யும்பொழுது, அதை முழுமையாகக் கொண்டாடுங்கள். ஒவ்வொரு சமயத்திலும், அதில் ஏதாவது புதுமையைப் புகுத்துங்கள். காதல் உறவில் ஈடுபடுவதற்கு முன்பு, இருவரும் சேர்ந்து ஆடுங்கள். சிலசமயம், காட்டில் வேகமாக ஓடிய பின்பு, சிலசமயம் நீந்திய பிறகு, காதலில் ஈடுபடுங்கள். இப்படிச் சற்று புதுமை, அதில் ஏற்படுத்துங்கள். இல்லாவிட்டால், அது சோர்வையும், அலுப்பையும்தான் கொடுக்கும்.

ஆகவே, பழக்கத்தில், உங்களையே இழந்து விடாதீர்கள். எல்லா பழக்கங்களும், வாழ்வின் மறுப்புதான் (ANTI-LIFE) அவைகள், உங்களை இறப்பை நோக்கித்தான் அழைத்துச் செல்லும். நீங்கள்

எப்போதும் புதுமையை கண்டு பிடிக்க முடியும். அதற்கு எல்லை என்று எதுவும் கிடையாது. ஒரு சிறிய மாறுதல்கூட , உங்களுக்குப் புத்துணர்ச்சியைக் கொடுக்கும் நீங்கள் எப்பொழுதும் சாப்பிடும் மேஜை மீது தான், சாப்பிடுகிறீர்கள். ஒரு மாறுதலுக்காக, ஒரு புல்தரையில் உட்கார்ந்து சாப்பிட்டுப்பாருங்கள் . அது எவ்வளவு மகிழ்ச்சியைக் கொடுக்கும் ! வெட்டிய புல்லின் வாசனை, சுற்றியுள்ள பூக்களின் நறுமணம் பறவைகளின் கீதம் , மரங்களின் அசைவுகள் , சுத்தமான காற்று. சூரியக்கதிர்கள் ... எவ்வளவு புதுமையாக இருக்கும்?

அதைப்போல , ஆடையின்றி, வெறுமனே உட்கார்ந்து சாப்பிட்டுப் பாருங்கள் . சிறிய மாறுதல்தான் . அது, எவ்வளவு புதுமையான அனுபவமாக இருக்கும் நீங்கள், கத்தி, கரண்டியுடன் சாப்பிட்டுப் பழக்கப்படுத்திக் கொண்டால் , அவைகளை ஒதுக்கிவிட்டு, வெறுங்கையால் எடுத்துச் சாப்பிட்டுப் பாருங்கள் . நீங்கள் அந்த உணவின் வெப்பத்தை உணர்ந்து சாப்பிடுவீர்கள் . நீங்கள் அந்த உணவைத் தொடும்பொழுது ஒரு வெதுவெதுப்பை அந்த உணவு உணர்கிறது. கரண்டி, கத்திக்கு, ஏது இந்த உணர்வு? நீங்கள் அவைகளை கைகளால் உணர்ந்து, மூக்கினால் நன்றாக முகர்ந்து, மெல்ல மெல்ல ருசித்து, மெல்லுங்கள். அந்த இன்பமே அலாதிதான் அதுதான், மனிதத்தன்மையானது. இயல்பானது. ஆகவே, ஒவ்வொன்றிலும் , ஒரு புதுமையைக் காண முயலுங்கள் அல்லது உண்டாக்க முயலுங்கள். இதுவே, உங்களுடைய சாதனா வாக இருக்கட்டும்.

நீங்கள் ஒவ்வொரு நாளும் இப்படிப் புதுயனவற்றைக் கண்டு பிடித்துக்கொண்டிருந்தால் , உங்களுடைய வாழ்க்கை மிகவும் உற்சாகமாகவும் , தீரம் நிறைந்ததாகவும் இருக்கும் என்று தந்த்ரா கூறுகிறது. உங்களுக்கு ஒருபோதும் சோர்வு நேராது.

சோர்வு நிறைந்தவன் . மதத்தன்மையற்றவன் நீங்கள் எப்பொழுதும் எதையாவது அறிந்து கொள்வதில்

ஆர்வமுடையவராக இருக்கவேண்டும் உங்களுக்குப் புரியாததையும் , பரிச்சயமில்லாதவற்றையும் , தெரிந்துகொள்ள வேண்டும் . புரிந்து கொள்ளவேண்டும் என்ற உந்துதல் உங்களிடம் ஏற்படவேண்டும். அந்த நிலையில், நீங்கள் சோர்வாக இருக்கமுடியாது. முட்டாள் தன்மையில் இருக்கமுடியாது. உங்களுடைய கண்களும் , புலன்களும், கூர்மையாகவும், சுத்தமாகவும் இருக்கும்.

உங்களுடைய நான்காவது வயதில் , முட்டாள் தனம் ஆரம்பமாகிறது. ஏழாவது வயதில் வெளியே தெரிகிறது என்று மனநல வல்லுனர்கள் கூறுகிறார்கள் பார்க்கப்போனால் , ஒரு குழந்தை, தன்னுடைய ஏழாவது வயதில் , வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்திலும் சுமார் 50 சதம் , கற்றுக்கொள்கிறது என்றும் , அவனுடைய வாழ்க்கை 70 வயது என்று இருந்தால் 63 வயதுவரை மீதமுள்ள 50 சதத்தைக் கற்றுக்கொள்கிறது என்கிறார்கள் . ஏன் இவ்வளவு காலம்? என்ன நேரிடுகிறது? அவன், அந்த 7 வயதுக்குப் பிறகு, சோர்வடைந்து, மேலும் கற்பதை நிறுத்திவிடுகிறான். அறிவுத்திறன் என்ற நிலையில், நீங்கள் அதை கூற நினைத்தால் , ஏழு வயதுக்குப் பிறகு, அவன் முதுமையடைந்து விடுகிறான் . உடலளவில் , அவன் மெதுவாகத்தான் முதுமையடைகிறான் தன்னுடைய முப்பத்தைந்தாவது வயதில் , அவனுடைய உடல் வளர்ச்சி நின்று பிறகு தசைகள் தளர ஆரம்பிக்கிறது. ஆனால், மனத்தளவில், ஏற்கனவே அவன் முதுமையடைந்து விட்டான்.

உங்களுடைய மனதின் வயது, சராசரியாக பனிரெண்டுதான் என்பது உங்களுக்கே ஆச்சரியத்தைக் கொடுக்கும் . அதற்குமேல் , மக்கள் வளர்வதே இல்லை; அங்கேயே நின்றுவிடுகிறார்கள் . ஆகவேதான் , இந்த உலகம் , இவ்வளவு குழந்தைத்தனம் உடையதாக இருக்கிறது. ஒருவன் அறுபது வயதில் இருக்கும் பொழுது, அவனைச் சற்று அவமதித்துப்பாருங்கள் . அவன் உடனே தன்னுடைய பனிரெண்டாவது வயதுக்கு கீழே இறங்கிவிடுவான் . அவன் , இந்த அளவுக்குக் குழந்தைத்தனமாக நடந்து கொள்வான் என்று நீங்கள் நினைத்தே பார்த்திருக்கமாட்டீர்கள்.

மக்கள் , பின்னோக்கிச் செல்ல , எப்பொழுதும் தயாராகவே இருக்கிறார்கள் . அவர்களது மனதின் வயது, அப்படியே மிகவும் ஆழமாகப் பதிந்து மறைந்து இருக்கிறது. அவர்களைச் சற்று உரசிப்பாருங்கள் ; அவர்களுடைய மனதின் வயது வெளியே வரும் . அவர்களுடைய உடல்வயது, இங்கு முக்கியமில்லை. மக்கள் , மனத்தளவில் தன்னுடைய பனிரெண்டாவது வயதிலேயே இறந்துவிடுகிறார்கள்

எப்பொழுதும் , புதியனவற்றைச் செய்யக் கற்றுக்கொள்ளுங்கள். மற்றும் எந்த அளவுக்கு, நீங்கள் உங்களுடைய பழைய பழக்கவழக்கத்திலிருந்து விடுபடமுடியுமோ, அந்த அளவுக்கு விடுபடுங்கள் என்று தந்த்ரா கூறுகிறது. மற்றும் அது மற்றவரைப் பார்த்து காப்பி அடிக்காதீர்கள் , காப்பி அடித்தால் உங்கள் புலன் உணர்வுகள் மழுங்கிவிடும் என்று கூறுகிறது. நீங்கள் செய்வது அனைத்திலும் , உங்களுக்கே உரியது என்று உங்களுடைய கையெழுத்து அதில் இருக்கட்டும்.

தன்னுடைய சொந்த ஊருக்குத் திரும்பும் , ஒரு பெண் சந்நியாசி சென்ற இரவு ஒரு நாள் என்னிடம் , தனக்கும் , தன்னுடைய கணவனுக்குமிடையே உள்ள அன்பு மற்றும் காதல் மறைந்து விட்டது என்று கூறினாள் இப்பொழுது, அவர்களதங்களுடைய குழந்தைகளின் நலத்திற்காக ஒருவரை, ஒருவர் பிடித்துத் தொங்கிக்கொண்டு இருக்கிறார்கள் . நான் அவளிடம் , தியானத்தன்மையில் இருக்கவும் என்றும் , அவளுடைய கணவோடு நட்புடன் பழகவும் என்றும் கூறினேன் . அன்பு மறைந்து விட்டால் , எல்லாமே மறைந்துவிடும் . ஆகவேதான் , குறைந்தது நட்பாக இருக்கவும் என்று கூறினேன் . அதற்கு அவள் ' அது மிகவும் கஷ்டம். உடைந்த பீங்கான், உடைந்ததுதான் ' என்றாள்

நான் அவளிடம் , கீழ்கண்ட விஷயத்தை கேள்விப்பட்டிருக்கவில்லையா என்று கேட்டேன் . அதாவது, ஜப்பானில் உள்ள ஜென் மக்கள் , கடைக்குச்சென்று. பீங்கான் டீ கப்பை வாங்கிவந்து, உடைத்து, மறுபடியும் பசைபோட்டு ஒட்டி அதை

வித்தியாசமாகவும் , தனித்தன்மையுடையதாகவும் செய்கிறார்கள் இல்லாவிட்டால் , எல்லோரும் உபயோகிக்கும் டீ கப் போலத்தான், அதுவும் இருக்கும். ஒரு நண்பர் , உங்களுடைய வீட்டுக்கு வந்தால் , அவருக்குக் கடையில் வாங்கிய அதே டீ கப்புடன், டீ கொடுத்து உபசரித்தால் , அது நல்ல வரவேற்பின் அடையாளம் இல்லை மற்றும் அது மரியாதையாகாது. ஆகவேதான், அந்தப் புதிய டீ கப்பை உடைத்து, ஒட்டித் தனித்தன்மையுடையதாக ஆக்குவார்கள் அதைப்போல டீ கப் , உலகத்தில் வேறு எங்கேயும் இருக்காது. பீங்கான் உடைவது ஒரே மாதிரியாக ஒருபோதும் இருக்காது. ஜென் மக்கள் , ஒருவர் வீட்டுக்கு மற்றவர் வந்தால் , அவர் டீயை உடனே குடித்து விடமாட்டார். முதலில் அவர்கள் அந்த டீ கப்பை, நன்றாகக் கவனித்து, போற்றி மகிழ்வார்கள் . அதன் ஒட்டுதலைக் கவனிப்பார்கள் . அந்த உடைந்த கோடுகளை, ஒரு கலைபோல மதித்துப் போற்றுவார்கள் ' என்றேன் . இதைக்கேட்டு, அந்தப் பெண் மகிழ்ந்துச் சிரித்தவாறு அப்படியென்றால் , நாங்களும் சேர முடியும் என்று நம்புகிறேன்'' என்றாள்.

ஆகவே, ஒரு பொருளில் தனித்தன்மையை ஏற்படுத்துங்கள் . ஒன்றைப் பார்த்து அப்படியே காப்பி அடிக்காதீர்கள் . அப்படிக் காப்பி அடித்தால் , நீங்கள் வாழ்வைத் தவறவிடுகிறீர்கள் என்று அர்த்தம்.

மூன்றாவதாக, தந்த்ரா சொல்வது என்னவென்றால் :

i) முதலில் , நீங்கள் உங்களுடைய அடக்கப்பட்ட உணர்வுகளை, ஆசைகளை வெளியேற்ற வேண்டும்.

ii) இரண்டாவதாக , புலன்களைப் புத்துயிர்பெறச் செய்ய வேண்டும்.

iii) இப்பொழுது மூன்றாவதாக , மனதை. விபரீதமான மற்றும் அடக்கப்படக் கூடிய எண்ணங்களை மேலும் சேகரிக்கவிடாமல் , அமைதிநிலையை நோக்கிச் செலுத்த வேண்டும் . எப்பொழுதெல்லாம் முடிகிறதோ, அப்பொழுதெல்லாம் அதற்கு ஓய்வு கொடுத்து, சற்று

ஒதுக்கி வைக்கவும் " இப்பொழுது, மனதிற்கு எப்படி ஓய்வுகொடுப்பது மனதை எப்படி ஒதுக்கிவைப்பது? அது எப்போதும் செயல்பட்டுக் கொண்டுதானே இருக்கிறது? அது அவ்வளவு சுலபமா, என்ன ? என்று நீங்கள் கேட்கக்கூடும். அதற்கும் ஒருவழி இருக்கிறது.

இந்த மூன்று பிரக்ஞை நிலையையும் கவனியுங்கள் என்று தந்த்ரா கூறகிறது.

i) பிரக்ஞைநிலை ஒன்று: மனதை எண்ணங்களால் நிரப்புங்கள் . பிறகு அவைகளை வெறுமனே கவனியுங்கள் - அவைகளுக்கும் , உங்களுக்கும் சம்மந்தமில்லாதது போல அது. என்ன எண்ணம் என்பது பற்றி கவலைப்படவேண்டாம் . வெறுமனே அதைக் கவனியுங்கள் . நீங்கள் வெறும் கவனிப்பவராக மட்டும் இருங்கள். சில நாட்களுக்குப் பிறகு, அந்த எண்ணங்களுக்கிடையே, அமைதியான இடைவெளி (GAPS) உண்டாவதை உணர்வீர்கள். அந்த இடைவெளியை மேலும் மேலும் அதிகரிக்கவும்.

ii) பிரக்ஞைநிலை இரண்டு : இப்படி இடைவெளி நன்றாக ஏற்பட்ட பிறகு, அந்த இடைவெளியை கவனிப்பவன் யார் என்று கவனியுங்கள் (THE OBSERVER MUST BE OBSERVED) அப்பொழுது, புதிய இடைவெளிகள் தோன்றுவதை உணர்வீர்கள் . பிறகு, எண்ணங்கள் , இடைவெளிவிட்டு மறைவதைப்போல , கவனிப்பவனும் மறைந்துவிடுவான். அந்த நிலையில், ஒரு கட்டத்தில் பேரமைதி நிலவும் . அதுதான் உண்மையான அமைதிநிலை

iii) இந்த மூன்றாவதும் , கடைசியுமான பிரக்ஞை நிலையில் , தன்னிலையும் , முன்னிலையும் (SUBJECT, OBJECT) முற்றிலும் மறைந்துவிடும் . நீங்கள் , இந்த இரண்டுக்கும் அப்பால் நுழைகிறீர்கள்.

ஆக, இந்த மூன்று பிரக்ஞைத் தன்மைகளால், முதலில் அடக்கப்பட்ட உணர்வுகளிலிருந்து உடல் விடுவிக்கப்படுகிறது, சோர்வான நிலையில் உள்ள புலன்கள் , அந்தச் சோர்விலிருந்து விடுவிக்கப்படுகிறது. அடுத்து, தேவையில்லாத , விபரீதமான கற்பனைகளிலிருந்து மனம்விடுவிக்கப்படுகிறது. இப்படி இந்த மாயைகள் விலகி, ஒரு புதிய தோற்றம் எழும்புகிறது. அதுதான்

தந்த்ராவின் தோற்றம் , பாதை மற்றும் நோக்கம் எல்லாம்.

இப்பொழுது சூத்திரத்தைப் பார்ப்போம்:

மனம் , அறிவு மற்றும் மனத்தின் பகுதிகளாகும் அதிலிருந்து இந்த உலகம் மற்ற எல்லாமும் மாறுபட்டே தோன்றும் . எல்லாமே. .. சோர்வு வெறுப்பு, ஆசை, ஞானம் நுகரக் கூடியது மற்றும் உணரக் கூடியது எல்லாமே.

பார்ப்பவனும் , பார்க்கப்படும் பொருளும் மறைந்த பிறகு ( தன்னிலையும் , முன்னிலையும் ) அந்தப் பேரமைதி நிலையில் இந்த சூத்திரத்தின் அர்த்தம் விளங்கும்.

பேரியிக்க உயிர்த்தன்மை (EXISTENCE) ஒன்றுதான் . அது, எல்லாம் அடங்கி, சேர்ந்து, ஒரே கலவையாக இருக்கிறது. அதில் இரண்டு நிலைகள் என்று எதுவும் கிடையாது. அது ஒரே பெருங்கடல்தான் . ஆனால் அவைகளுக்குள்ளே பல வேறுபாடுகள் இருக்கின்றன. ஏனென்றால் , நாம் , நமக்குள்ளே பிளவுபட்டே இருக்கிறோம் (UNITY IN DIVERSITY)இந்த வேற்றுமை உணர்வுதான் , வெளியே உள்ள பொருள்களிடம் பதிகிறது. அப்பொழுது பொருள்களும், வேறுபாடாகத் தெரிகிறது. ஆனால் , உடலையும் , புலன்களையும் சுத்தம் செய்த பிறகு, மனம் அமைதியில் அடங்குகிறது. மற்றும் அதில் உள்ள வேற்றுமைத் தன்மைகள் அனைத்தும் மறைந்துவிடுகின்றன . அப்பொழுது, உங்களுக்குள்ளே வெறும் சுத்தமான வெட்டவெளி(SPACE)தான் இருக்கும். அந்த நிலையில், உங்களுக்கு வெளியேயும் சுத்தமான வெட்டவெளியாக இருப்பதை அறியக்கூடிய தன்மை உங்களிடம் தானே உண்டாகிறது. அதாவது, உள்ளும், புறமும் அதே சுத்த ஆகாயம் தான் இருக்கிறது. வேறு விதமாகச் சொன்னால், 'உள் (IN), 'வெளி (OUT) என்ற வேறுபாடு மறைந்து எல்லாம் ஒரே நிலையில் தான் இருக்கிறது என்பதை நீங்கள் உணர்வீர்கள்.

இப்பொழுது, உங்களுடைய எண்ணங்கள் கூட , உங்களுக்கு எதிரி இல்லை என்பதைப்

புரிந்துகொள்வீர்கள் ஏன், ஆசைகள் கூட உங்களுக்கு எதிரி இல்லை என்பதை உணர்வீர்கள் . அவைகளெல்லாம் , அந்தப் பேரியக்க உயிர்த்தன்மையின் ஒருமையிலிருந்து எழும்பிய பல தோற்றங்கள் என்பதை விளங்கிக்கொள்வீர்கள் . அப்பொழுது. நிர்வாணாவும் , சம்சாராவும் ஒன்றாகிவிடுகிறது. இப்பொழுது, இந்த மாயையைக்கண்டு, வயிறு குலுங்கச் சிரிப்பீர்கள் . மற்றும் , ஞான நிலைக்கும் , பற்று நிலைக்கும் (BONDAGE) எந்த வேறுபாடும் இல்லை என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள் . அதைப்போல , நீங்கள் அறிந்துகொண்டதும் , அறியாததும் வெவ்வேறு அல்ல ஒரு புத்தாவுக்கும், ஒரு சாதாரண மனிதனுக்கும் எந்த வேறுபாடும் இல்லை. எல்லா வேற்றுமைகளும் மறைந்துவிடுகின்றன.

ஆனால் , இவைகளை, ஒரு புத்தரால் அல்லது புத்தா தன்மையில் உள்ளவர்களால் மட்டுமே அறிந்துகொள்ள முடியும் . ஒருவகையில் , ஒரு ஞானிக்கும் , ஒரு சாதாரண மனிதனுக்கும் பெருத்த வேறுபாடு இருக்கிறது. ஒரு புத்தரால் , எண்ண முடியாது எண்ணங்கள் எப்பொழுதும் வேற்றுமையில்தான் உருவாகின்றன . எண்ணங்களற்ற நிலையில் , அந்த வேறுபாடுகள் மறைந்துவிடுகின்றன

ஆன்மீகம் அறியாத இருட்டு ஒன்றில் விளக்கு ஒளிர்வதுபோல் மனத்தின் தெளிவின்மைகளை அது போக்கும் புத்தியின் தடைகளைப் பொறுத்தவரை. .. யார்தான் தன்னை ஆசையற்றவனாகக் கற்பனை செய்துகொள்ள முடியும்?

மறுப்பதற்கு ஏதும் இல்லை. உறுதிப்படுத்தவோ கிரகித்துக் கொள்ளவோ ஏதுமில்லை

எல்லாமே அதுதான் இதுவும் அதுவே, அதுவும் அதுவே. இந்த பிரபஞ்ச முழுமையைத்தான் அது. (IT) என்று

தந்த்ரா கூறுகிறது.

ஆகவே, கவலைப்படுவதற்கு எதுவுமே இல்லை என்று சாரஹா அந்த அரசனிடம் கூறுகிறார் . அரண்மனையில் வசிப்பதும், மயானத்தில் வசிப்பதும் ஒன்றேதான் அறிந்த படித்த பிராமணனும், அறியாத பைத்தியம் பிடித்த நாயும் ஒன்றுதான் எல்லாமே அதுதான். அறிபவனும், அறிந்துகொள்ளும் பொருளும், காண்பவனும் , காணும் பொருளும் ஒன்றே என்ற பக்குவப்பட்ட அனுபவ நிலைக்கு, நான் வந்து சேர்ந்து விட்டேன். ஆமாம், நான் என்னுடைய சொந்தவீட்டுக்கு வந்துவிட்டேன் . நன்மை, தீமை, பாபி, ஞானி என்ற வேற்றுமை அர்த்தமில்லாதது என்று உணர்ந்து கொண்டேன் பாபத்துக்கும் ஞானத் தன்மைக்கும் எந்த வேறுபாடும் இல்லை. ஆகவேதான், நான் தந்த்ராவை, இந்த மனித முழு பிரஞ்ஞைநிலையின் சரித்திரத்திலேயே, மாபெரும் ஆன்மீகப் புரட்சியாக இருக்கிறது என்று வர்ணிக்கிறேன்.

சாரஹா சொல்வது என்னவென்றால் " ஐயா, உங்களைப் பொருத்த அளவில் அந்த வேறுபாடு இருக்கத்தான் செய்யும் . இது மயானபூமி. ஆனால் , நீங்கள் வசிப்பதோ அரண் மனையில் என்னைப் பொருத்தவரை, எந்த வேறுபாட்டையும் எதிலும் காண முடியவில்லை. இதே சுடுகாட்டில், பல அரண்மனைகள் தோன்றி மறைந்திருக்கின்றன . உங்களுடைய அரண்மனையே கூட , விரைவில் ஒரு மயான பூமியாகலாம் . அதற்காக நீங்கள் கவலைப்படவேண்டாம் . அதற்கு இன்னும் காலம் இருக்கிறது. ஆகவே, உண்மைத் தன்மையில் எந்த வேற்றுமையும் இல்லை என்பதைக் காணும் நிலை உங்களுக்கு வந்தால் அதுவேதான் எங்கேயோ பாபியாகவும் , மற்றும் எங்கேயோ ஞானியாக இருப்பதும் ஒன்றுதான் என்று தீர்க்கமாகப் புரிந்துகொள்வீர்கள்.

ஆன்மீகம் அறியாத இருட்டு ஒன்றில் விளக்கு ஒளிர்வது போல் மனத்தின் தெளிவின்மைகளை அது போக்கும் புத்தியின் தடைகளைப் பொறுத்தவரை. ... யார்தான் தன்னை ஆசையற்றவனாகக் முடியும்?

சாரஹூா அது இருக்கிறது என்றும் என்னால் சொல்ல முடியாது. அது இல்லை என்றும் என்னால் சொல்ல முடியாது. அதைத் தள்ளவும் அல்லது நிலைப்படுத்தவும் என்னால் முடியாது. அதை நான் இல்லையென்றும் அல்லது உண்டு என்றும் சொல்ல மாட்டேன் . ஏனென்றால் , இரண்டுமே மிகச்சிறியது. அது இந்த இரண்டையும் விட மிகப்பெரியது. அதில் இந்த இரண்டும் இருக்கிறது. ஆனால் அவைகளைத் தாண்டியும் இருக்கிறது. கடவுள் உண்டு என்று சொல்பவர்கள், கடவுளை அவமதிக்கிறார்கள் - அவரை கீழே இறக்கிக்கொண்டு வருகிறார்கள் கடவுள் இல்லை என்று சொல்பவர்கள் , நிச்சயமாக அவர்களுக்குக் கடவுளைப் பற்றி எதுவும் தெரியாது. அவர்களால் , அவரைப் புரிந்துகொள்ள முடியாது. இருவருமே ஒருநிலையில் தான் இருக்கிறார்கள் . ஒருவர் அதை மறுக்கிறார் . மற்றவர் அதை நிலைப்படுத்துகிறார்.

மறுப்பதும் , நிலைப்படுத்துவதும் அதே மனம்தான் . அதே மனம்தான் , ஆமாம் என்று சொல்கிறது மற்றும் இல்லை' என்றும் சொல்கிறது இரண்டுமே எண்ணம்தான் , மொழிதான் . சாரஹூா, ' கடவுள் இருக்கிறார் என்றும் , என்னால் சொல்ல முடியாது. இல்லை என்றும் என்னால் சொல்ல முடியாது ஆனால், அதை அடையக்கூடிய வழியை, பாதையை என்னால் காட்ட முடியும் அது எங்கே எப்படி, என்னவாக இருக்கிறது என்பதைச் சற்று கோடிட்டுக் காட்ட முடியும் நீங்கள் இதை அனுபவப்பூர்வமாக உணரலாம் . உங்களுடைய திறந்த கண்களினால் அதைப் பார்க்க முடியும்.

ஒரு நிகழ்ச்சி

ஒரு சமயம் , புத்தரிடம் ஒரு குருடனை அழைத்துவந்தார்கள் . அவன் ஒரு சாதாரணக் குருடன் இல்லை. சிறந்த படிப்பாளி, தர்க்க வாதத்தில் நிபுணன். அவன் புத்தரோடு வாதம் செய்ய வந்திருக்கிறான்.

அவன் , " மக்கள் ஒளி இருக்கிறது என்று சொல்கிறார்கள் . ஆனால் , நான் இல்லை என்று கூறுகிறேன் . நான் குருடன் என்று அவர்கள்

சொல்கிறார்கள் நான் அவர்களைத்தான் , குருடன் என்று கூறுகிறேன் . அவர்கள் சொல்வதுபோல , ஒளி இருந்தால், அதை என்னிடம் வரச்சொல்லுங்கள். நான் அதைத் தடவிப்பார்க்கவேண்டும். அல்லது குறைந்தது அதை ருசிபார்க்க வேண்டும் அல்லது முகர்ந்து பார்க்க வேண்டும் . அப்பொழுதுதான் அதை நான் நம்புவேன். அல்லது அந்த ஒளியைக் கொண்டு மத்தளத்தில் ஒலியை எழுப்பினால் , நான் கேட்கவாவது முடியும் . என்னிடம் இருப்பது இந்த நான்கு புலன்கள்தான் மக்கள் பேசும் அந்த ஐந்தாவது புலன் என்பது வெறும் கற்பனைதான். மக்கள் ஏமாற்றுகிறார்கள். அவர்களில் யாருக்குமே கண்கள் இல்லை என்றான்.

ஒரு குருடனிடம், ஒளி இருக்கிறது என்பதை நிரூபிக்க வழியே கிடையாது. ஆனால் , அவன் , மக்களுக்குத்தான் கண்கள் இல்லை என்று சொல்கிறான் . மேலும் , அவன் சிறந்த தர்க்கவாதி. ' அவர்களுக்கு கண்கள் இருக்கின்றன என்பதை நிரூபியுங்கள் " என்று சொல்கிறான் . அதற்கு என்ன நிரூபணம் இருக்கிறது?

' புத்தர் . ' நான் எதுவும் சொல்வதற்கில்லை எனக்கு ஒரு கண் வைத்தியனைத் தெரியும் உன்னை நான் அவனிடம் அனுப்புகிறேன் . அவனால் உன் கண்களைக் குணப்படுத்த முடியும்" என்றார்.

அவன் மறுபடியும் அவரிடம் , " நான் இதைப்பற்றி உங்களிடம் வாதம் செய்ய வந்திருக்கிறேன் " என்று சொல்லி வற்புறுத்தினான்

ஆனால், புத்தர், "இது தான் என்னுடைய வாதம் அந்தக் கண்வைத்தியனிடம் செல் என்றார். அப்படியே, அவன் அங்கு அழைத்துச் செல்லப்பட்டான் . ஆறு மாதத்தில் அவனுடைய கண்கள் குணமாகி வெளிப்பொருள்களை நன்றாகப் பார்க்க ஆரம்பித்து விட்டான் . அவனால் நம்பவே முடியவில்லை. அவன் அடைந்த ஆனந்தத்திற்கும் , மகிழ்ச்சிக்கும் அளவே இல்லை. அந்த மகிழ்ச்சியில் , ஒரு பைத்தியம் போல

ஆடிக்கொண்டே புத்தரிடம் வந்து, அவருடைய காலில் விழுந்து ' உங்களுடைய தர்க்கம் மிகச் சிறப்பாக வேலை செய்தது என்று கூறி மகிழ்ந்தான்.

அதற்குப் புத்தர் . " நன்றாகக் கேட்டுக்கொள் . நான் உன்னிடம் எந்த வாதத்தையும் செய்யவில்லை. அப்படிச் செய்திருந்தால் , நான் தோற்பேன் என்பது தெரியும் . ஏனென்றால் , நிரூபிக்க முடியாத , ஆனால் அனுபவப்பூர்வ மாக உணரக்கூடிய விஷயங்கள் இந்த உலகத்தில் எவ்வளவோ இருக்கின்றன என்றார்.

கடவுள் தர்க்கத்துக்கு அப்பாற்பட்டவர் . நிர்வாணா என்பது தர்க்கம் இல்லை. முடிவான கோட்பாடு இல்லை அது நிகழ்ந்து கொண்டிருக்கும் அனுபவம் . நீங்கள் அதை அனுபவப்பூர்வமாக உணர்ந்தாலொழிய, அதை சரியாகக்கூடப் புரிந்துகொள்ள முடியாது. நீங்கள் , அனுபவப்படாவிட்டால் , அது அர்த்தமற்ற முட்டாள்தனமாகவேபடும்.

உயிர்த்தன்மையின் சுத்தமானது. அடிப்படை

மறுப்பதற்கு ஏதும் இல்லை. உறுதிப்படுத்தவோ கிரகித்துக் கொள்ளவோ ஏதுமில்லை ஏனென்றால் அது எப்போதும் உருக்கொண்டு உண்டாக முடியாது புத்தியின் தடைகள் எல்லாம் செயற்கையான பிணைப்புகளே தூய்மை. .. பிரியாத தூய்மை தன்னிச்சையாக அப்படியே இருக்கும்.

உண்மையில் அங்கு உருவாக்க , பற்றிக்கொள்ள எதுவுமே இல்லை அங்கு தன்னிலையும் , முன்னிலையும் மறைந்துவிடுகிறது. அறிபவனும் , அறிந்துகொள்ளும் பொருளும் மறைந்துவிடுகிறது. பிறகு, அந்த முழுமையைப் பற்றிய அனுபவம் மட்டுமே இருக்கிறது. அது எப்பொழுதும் ஒருமையில் இருக்கிறது. அதுவேதான் , அது கடவுள் தன்மை, உயிர்த்தன்மை எல்லாம் அது புரியாத மாபெரும் இயக்கம் (PROCESS) ஆகவே, சாரஹா மேலும் அந்த அரசனிடம், உ

புத்தியின் தடை தூய்மை. ... பிரிய சாரஹா, " ஐய புரிந்து கொண்டிருக்கிற வைத்திருக்கிறார்கள். கடவுள், ஒரு எண்ணம் இ மாட்டார். அது ஒரு வெ இல்லை அது உண்மை உயிரோட்டமுள்ள அனு

மேம்படுத்தப்பட் கூடிய தன்மைகள் பிரகாசமான சக்தி

ஆனால் , மக்கள் அவர்கள் , தங்களுக்கென தத்துவங்களையும் வைத் ஒரு பைத்தியம் போலத் என்றால் என்னவென்று ஆகவேதான் அவர்கள் அவர்கள், தங்களுடைய

சாரஹா மேலும் , தன்மையை உற்றுக் கவ நினைக்காதீர்கள். நல்ல கண்ணோட்டத்தில் என்ன

நான் இங்கு இருக்கி எப்பொழுதும் அடைய ந என்னுடைய முன்னிலை நிகழ்காலத்தையும் , கள்ள உயிர்த்தன்மையையும் உன் உங்களுக்குள்ளே ஆழ போதிக்கிறார். மேலும் அ

ஒன்றும் பலவுமா கேள்விகளால் பி. பற்றி நீ கேட்கலா விடாதபோது...

தூய்மை... பிரிய

ஓஷோ

புத்தியின் தடைகள் எல்லாம் செயற்கையான பிணைப்புகளே தூய்மை. .. பிரியாத தூய்மை தன்னிச்சையாக அப்படியே இருக்கும்

எ சாரஹா, " ஐயா, உண்மையைப் பற்றி மக்கள் தவறாகவே புரிந்து கொண்டிருக்கிறார்கள் . அவர்கள், அதுபற்றிக் கருத்துச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். ஆனால் , உண்மை ஒருநாளும் கருத்துக்கு உட்படாது. கடவுள், ஒரு எண்ணம் இல்லை கடவுள், கடவுள் என்ற வார்த்தையில் அடங்க மாட்டார் . அது ஒரு கொள்கையோ அல்லது அனுமானமோ (IIYPOTHESIS) இல்லை. அது உண்மை என்ற ருசியாக இருக்கிறது. அந்த முழுமை, ஒரு உயிரோட்டமுள்ள அனுபவமே தவிர வேறல்ல.

ஆனால் , மக்கள் மனமென்ற விலங்கால் பூட்டப்பட்டிருக்கிறார்கள் அவர்கள் , தங்களுக்கெனச் சில கருத்துக்களையும் , நோக்கங்களையும் , மற்றும் தத்துவங்களையும் வைத்திருக்கிறார்கள் . ஆகவேதான் , அவர்களுக்கு, சாரஹா ஒரு பைத்தியம் போலத் தெரிகிறார் . சந்நியாசம் என்றால் என்ன ,

ஆன்மீகம் என்றால் என்னவென்று. அவர்கள் சில கருத்துக்களை வைத்திருக்கிறார்கள் ஆகவேதான் அவர்கள் சாரஹாவைப் பைத்தியம் என்று நினைத்தார்கள் அவர்கள் , தங்களுடைய கருத்துக்களின் வழியாகவே அவரைப் பார்க்கிறார்கள்.

தூய்மை. .. பிரியாத தூய்மை தன்னிச்சையாக அப்படியே இருக்கும்.

உயிர்த்தன்மையின் நிகழ்வு (SPONTANEITY) வேறுபாடற்றது மற்றும் சுத்தமானது. அடிப்படையில் அது கள்ளம்கபடற்று இருக்கிறது.

சாரஹா மேலும் , " என்னை நன்றாகப் பாருங்கள் . என்னுடைய நிகழ்காலத் தன்மையை உற்றுக் கவனியுங்கள் . மக்களின் அபிப்ராயத்தைப் பற்றி எதுவும் நினைக்காதீர்கள் . நல்லது, கெட்டது, பாபம் , புண்ணியம் , சரி தவறு என்ற கண்ணோட்டத்தில் என்னைப் பார்க்காதீர்கள் என்னை வெறுமனே பாருங்கள்.

நான் இங்கு இருக்கிறேன் . அதுவும் இங்கேயே இருக்கிறது. அது என்னை, எப்பொழுதும் அடைய நான் என்னைத் தயாராகவே வைத்திருக்கிறேன் . நீங்கள் என்னுடைய முன்னிலையை (PRESENCE) ஆழ்ந்து அனுபவியுங்கள் நீங்கள் நிகழ்காலத்தையும் , கள்ளம்கபடமற்ற தன்மையையும் , என்னுடைய சுத்தமான உயிர்த்தன்மையையும் உணர்ந்தால்தான் , உங்களால் தந்த்ராவின் யாத்திரையில் , உங்களுக்குள்ளே ஆழமாகச் செல்ல முடியும் என்று அந்த அரசனுக்கு போதிக்கிறார். மேலும் அவர்,

ஒன்றும் பலவுமாக ஏதேதோ கேள்விகளால் பிரபஞ்ச உண்மையைப் பற்றி நீ கேட்கலாம் . ஒருமை என்பது விடாதபோது..

மேம்படுத்தப்பட்ட அறிவும் உணரக் கூடிய தன்மைகளும் சுதந்திரமாக இருக்கும் பிரகாசமான சக்தி புத்தியினுள் மறைந்திருக்கிறது

அதுதான்

தியானமாகக் காட்சியளிக்கும் ; தடம் மாறிப் போகாத மனமே நமது உண்மையான சாரம் ஆகும்.

நீங்கள் கேள்வி கேட்டால், அதைத் தவறவிடுவீர்கள். உண்மையை ஒருக்காலும் கேள்வியாக மாற்ற முடியாது ஆமாம் அதைத் தாகமாக (QUEST) மாற்றலாம் ஆனால் கேள்வியாக மாற்ற முடியாது. எவைகளுக்கு பதில் அளிக்க முடியுமோ, அவைகள்தான் கேள்வியாக மாறமுடியும் தாகம் என்பது அனுபவப்பூர்வமாக உணர்வது. அதற்கு, நீங்கள் அதனிடம் அணுகவேண்டும் வேறுவழியே கிடையாது. எந்த கடன் வாங்கிய விஷயஞானமும் உங்களுக்கு உதவி செய்யாது. எல்லா விஷயஞானங்களும், கடன் வாங்கப்பட்டவைதான்.

ஆகவேதான் சாரஹா, மேம்படுத்தப்பட்ட அறிவும் உணரக் கூடிய தன்மைகளும் சுதந்திரமாக இருக்கும்

ஒருவன் தன்னுடைய விஷயஞானத்திலிருந்து விடுபடவேண்டும் விஷயஞானம் உங்களுக்கு விடுதலையைக் கொடுக்காது. அது மிக ஆழத்தில், உங்களை அடிமைப்படுத்தி வைத்துள்ளது (BONDAGE) விஷயஞானத்தின் மூலம், அந்த உண்மையை, நீங்கள் ஒருக்காலும் அடைய முடியாது. எல்லா விஷயஞானங்களையும், முதலில் விடுங்கள். அப்படி விட்டால் தான் உங்களுடைய அறிதல் மிகவும் சுத்தமாகும். அந்த நிலையில், எண்ணமேகங்கள் உங்களை சூழாது. கடன் வாங்கிய விஷய ஞானத்தை விட்ட நிலையில், உங்களுடைய மனம் என்ற கண்ணாடி, எந்த தூசுகளும் படியாமல், மிகவும் சுத்தமாக இருக்கிறது. அப்பொழுது, அது உண்மையை, உண்மையாகப் பிரதிபலிக்கும்.

விஷய ஞானத்தோடு, ஆன்மீக யாத்திரையில் செல்லாதீர்கள். அப்படிச் சென்றால், உங்களால் அதை ஒருக்காலும் அடைய முடியாது. கடன்வாங்கிய அனுபவங்களை நம்ப வேண்டாம்.

புத்தரிடம் ஏதோ நிகழ்ந்திருக்கிறது. ஆனால் அது உங்களுடைய அனுபவம் இல்லை. அதைப்போல கிருஸ்துவுக்கு, ஏதோ நிகழ்ந்திருக்கிறது. அதுவும் உங்களுடைய அனுபவம் இல்லை. நான் சொல்வது என்னவென்றால், நீங்கள் கடன் வாங்கி மனதில் சேர்த்தால், அது விஷயஞானமாகிவிடுகிறது. அதுவே உங்களிடம் ஆன்மீகத்தாகத்தை ஏற்படுத்தினால், அது

அறிதலாக மாறிவிடுகிது. ஆகவே, எதையும் உங்களுடைய ஞாபகத்தில் அடைக்க வேண்டாம்.

உங்களுடைய ஞாபகத்தில் அடைக்கப்பட்ட விஷயஞானம் , உங்களுக்குச் சுமையாகி விடுகிறது. அது உங்களுடைய விடுதலை இல்லை.

பிரகாசமான சக்தி புத்தியினுள் மறைந்திருக்கிறது அதுதான் தியானமாகக் காட்சியளிக்கும் ;

நீங்கள் , நிர்வாணா நிலையை அடையக்கூடிய , மலரக்கூடிய சக்தி மற்றும் விதை, உங்களிடமே இருக்கிறது - அதுவே ஞானமாக மலரும் ஒவ்வொரு அறிவு படைத்தவனிடமும் , உண்மையான அறிவுக்கூர்மை, அவனுக்குள்ளே மறைந்திருக்கிறது. நீங்கள் , உங்களுடைய வெளி அறிவை மிகவும் நம்பினால் , நீங்கள் உங்களுடைய உண்மையான அறிவுத்தன்மையை இழந்து விடுவீர்கள் இப்பொழுது. நீங்கள் இந்த இரண்டு வார்த்தைகளையும் , அதாவது அறிவு படைத்தவன் (INTELLECT), அறிவுக்கூர்மை (INTELLIGENCE) சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். இவைகள் இரண்டும் ஒரே வேரிலிருந்துதான் கிளம்பியிருக்கின்றன . ஆனால் , இந்த இரண்டு வார்த்தைகளின் அர்த்தங்கள் வெவ்வேறானவை. அறிவு படைத்த ஒருவன் , உண்மையாக அறிவுக்கூர்மை யுடையவனாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை ஒரு அறிவற்றவன் , மிகச்சிறந்த அறிவுகூர்மையுடையவனாகவும் , சுயசிந்தனைமிக்கவனாகவும் இருப்பதைக் காணலாம்.

கிருஸ்துவோ, கபீரோ, மீராவோ, அறிவுமிக்கவராக இல்லை. ஆனால் , அவர்கள் மிகச்சிறந்த அறிவுக்கூர்மை படைத்தவர்கள் , சுயசிந்தனையாளர்கள் . அறிவு படைத்தவனிடம் , கடன்வாங்கப்பட்ட விஷயஞானம்தான் இருக்கும் அறிவுக்கூர்மை என்பது உங்களுக்கே உரியது. அறிவுக் கூர்மை அல்லது சுயசிந்தனை என்பது, நீங்கள் உண்மையாகப் பார்க்ககூடிய தகுதி, திறமை எல்லாம் . அது கள்ளம்கபடமற்ற தகுதியைக்கொண்டு ஒன்றை புரிந்துகொள்வது. அறிவுடையவனிடம் , கடன்வாங்கப்பட்ட விஷயஞானம்தான் இருக்கும். அது

ஒரு பொய்யான நாணயம்தான்.

நீங்கள், பல இடங்களிலிருந்து விஷயஞானத்தையும், தகவல்களையும் சேகரிக்கிறீர்கள் . பிறகு, விஷய ஞானம் மிக்கவராக , எல்லாவற்றையும் அறிந்தவர் போல காட்சியளிக்கிறீர்கள். ஆனால், உண்மையான அறிவுக்கூர்மை இன்னும் வளரவில்லை. இன்னும் வெடிக்கவில்லை. அந்தப் பொய்யான விஷயஞானம், ஒரு செல்லாத காசுதான் . அது உங்களுக்குச் சுமையாகவே இருக்கும் . விஷயஞானம் என்பது உங்களுடைய உண்மையான அறிவுக்கூர்மை என்ற கண்ணாடியில் படிந்த தூசுதான் . அறிவுக்கூர்மை என்ற கண்ணாடி, சுத்தமாக ஒன்றை அப்படியே பிரதிபலிக்கக் கூடியது.

பிரகாசமான சக்தி புத்தியினுள் மறைந்திருக்கிறது அதுதான் தியானமாகக் காட்சியளிக்கும்;

ஒவ்வொரு அறிவுடையவனிடமும் , உண்மையான அறிவுக்கூர்மை அடக்கமாக இருக்கிறது. விஷயஞானம் என்ற பொய்யான தகவல்களைக் கொண்டு அதன்மீது பழு ஏற்றாதீர்கள்

அப்படி விஷயஞானத்தைக் கொண்டு பழு ஏற்றாவிட்டால் , அந்த அறிவுக்கூர்மை, உங்களுடைய தியானமாகிவிடுகிறது. தியானத்திற்கு இது மிகச்சிறந்த விளக்கமாகும் . உங்களுடைய உண்மையான அறிவுக்கூர்மையே தியானமாகும் . அறிவுத் தன்மையோடு வாழ்வது என்பது தியானத்தன்மையோடு வாழ்வது என்று அர்த்தம் இது மிகச்சிறந்த விளக்கமாகும் . மிகச் சிறந்த அர்த்தமுடையது. உங்களுடைய அறிவுக்கூர்மையைக்கொண்டு, தியானத்தை செய்ய முடியாது. ஆனால், உங்களுடைய அறிவுக்கூர்மையே, தியானமாக மாறவேண்டும் அந்தத் தியானத்தன்மையை, உங்களுடைய வாழ்க்கையில் கொண்டு வரவேண்டும்.

நீங்கள் நேற்றும் , அதற்கு முந்திய நாளும் கோபமாக இருந்தீர்கள் இப்பொழுதும் அதே சூழ்நிலை உருவாகிறது நீங்கள் மறுபடியும் கோபப்படவேண்டும் - இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்கள் ? நீங்கள் உங்களுடைய முட்டாள்தனத்தை மீண்டும் கொண்டுவந்து, அதை மறுபடியும் இயந்திரத்தனமாகச் செய்யப்போகிறீர்களா? அல்லது, அதில் உங்களுடைய அறிவை, புத்திசாலித்தனத்தை கொண்டு வரப்போகிறீர்களா? நீங்கள் ஆயிரக்கணக்கான விஷயங்களில் கோபப்பட்டிருக்கிறீர்கள். அதிலிருந்து, நீங்கள் ஏதும் கற்றுக்கொள்ளவில்லையா? அதனுடைய இயலாமையை, நீங்கள் புரிந்து கொள்ளவில்லையா? இப்பொழுது. உங்களால் கொஞ்சம் புத்திசாலித்தனமாக நடக்க முடியவில்லையா? ஒவ்வொரு சமயமும் , நீங்களும் கோபப்பட்டு விரக்தியடைந்ததைக் கவனிக்கவில்லையா? ஒவ்வொரு சமயமும் , கோபப்படும் பொழுது. உங்களுடைய சக்தி வீணாவதை உணரவில்லையா? அது, எதையும் தீர்க்கவில்லை என்பதையும் , அது மேலும் பிரச்சினையைத்தான் உண்டு பண்ணுகிறது என்பதையும் நீங்கள் அறியவில்லையா? நீங்கள்

நீங்கள் அதை வெறுமனே பார்ப்பது கூட உங்களுடைய அறிவுக்கூர்மையை வெளிப்படுத்துகிறது. உங்களை இழிவாகப் பேசினாலும், உங்களுக்கு கோபமே வராது. மாறாக , அவனிடம் உங்களுக்குக் கருணைதான் பிறக்கும் . அவன் கோபத்தில் துன்பப்படுகிறான் - அதனால் அவனிடம் உங்களுக்குக் கருணைதான் ஏற்படுகிறது. இப்பொழுது இந்தப் புரிந்துகொள்ளும் ஆற்றலே, அறிவுக் கூர்மையே தியானம் என்பது. அதாவது ஒருவருடைய வாழ்க்கையை ஊன்றிக் கவனிப்பது, அந்த அனுபவத்திலிருந்தும் , உயிர்த்தன்மையின் அனுபவத்திலிருந்தும் கற்றுக் கொண்டே இருப்பது - கடன் வாங்கியல்ல - இவைகள்தான் அறிவுக்கூர்மை என்பது. யாராவது

புத்தர் , கோபம் கெடுதியானது என்று கூறினார் . இப்பொழுது இந்த வித்தியாசத்தைக் கவனியுங்கள் . அதாவது, நீங்கள் ஒரு புத்தமதத்தினராக இருந்தால்தான் நீங்கள் அவரை நம்பமுடியும் - புத்தர்,

கோபம் கெடுதியானது என்று கூறிவிட்டார். ஆகவே அது கெடுதலைத்தான் உண்டுபண்ணும். புத்தர்

ஓஷோ - காரணத்தால் , உங்களிடம் கோபம் கிளட தவறாக எப்படிச் சொல்ல முடியும்? ஆக முயல் வீர்கள். ஏனென்றால் புத்தர் விஷயஞானத்தின் மூலமாக , ஒரளவு பு உங்களிடம் வேலை செய்கிறது. ஆனால் தடவை கோபப்பட்டிருக்கிறீர்கள் . நீங்கள் கேட்க வேண்டிய அவசியம் என்ன ? அது புரிய வேண்டிய அவசியம் என்ன . அ புரிந்துகொள்ள முடியாதா?

நீங்கள் அதை உங்களுடைய பார்த்தால், உங்களுக்கு, கோபம் என்ற ஆழ்ந்து பார்ப்பதினால், நீங்கள் கோபத் இதுதான் அறிவுக்கூர்மை மற்றும் உன்ன இந்தப் புரிந்து கொள்ளும் ஆற்றலால் இருக்கிறீர்கள் . அப்பொழுது நீங்கள் . என்னுடைய அனுபவமே, அதை நி அப்படியில்லாமல், "புத்தர் சொல்வது சரி அப்படியே பின்பற்றி அனுபவப்பூர்வமாக நீங்கள் புரிந்து கொள்வது சரியில்லை சொன்னது போல , ' புத்தர் சொன்னது சரி என்னுடைய அனுபவத்தின் மூலமாக உண அனுபவத்தின் மூலமாக , அவர் சொன்ன இப்பொழுது, அவருடைய கருத்துக்கு சாட வெறுமனே பின்பற்றுபவன் அல்ல' என்று

என்னுடைய சந்நியாசியாகிய நீ சாட்சியாக இருங்கள் என்னைப் பின்பற்றுப அனுபவத்தின் மூலமாக, நான் சொ அப்பொழுதுதான் நீங்கள் என்னோடு இ நீங்கள் என்மேல் உண்மையாக அன்பு செலு இருப்பீர்கள் . மாறாக , என்னுடைய கரு இருந்தால் , நீங்கள் ஒரு கருத்துக்கு மாறிவிடுவீர்கள். அப்பொழுது என்னை ஓ நீங்கள் அறிவு மிக்க தர்க்கவாதியாக உங்களுடைய புத்தி கூர்மையை தற்கொலைக்குச் சமம்தான் . உங்களுடைய தவர் ஆற்றலைச் சரியாகப் பயன்படுத்துங் புரிந்துகொண்ட , அனுபவமாக உணருங்கள்

தவறாக எப்படிச் சொல்ல முடியும்? ஆகவே, அவர் அது தவறு என்று சொன்ன காரணத்தால் , உங்களிடம் கோபம் கிளம்பும் பொழுது, நீங்கள் அதை அடக்க

முயல் வீர்கள் . ஏனென்றால் புத்தர் அப்படிச் சொல்லிவிட்டார். இதை விஷய ஞானத்தின் மூலமாக, ஒரளவு புரிந்துகொண்ட காரணத்தினால் , அது உங்களிடம் வேலை செய்கிறது. ஆனால் என்ன முட்டாள்தனம் ? நீங்கள் பல தடவை கோபப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் இதைப்பற்றி, புத்தர் சொன்னதைக் கேட்க வேண்டிய அவசியம் என்ன ? அவர் சொல்லித்தான் , அது தவறு என்று புரிய வேண்டிய அவசியம் என்ன . அதை உங்களுடைய அனுபவத்தால் புரிந்துகொள்ள முடியாதா?

நீங்கள் அதை உங்களுடைய அனுபவத்தின் மூலமாக, நேரடியாகப் பார்த்தால், உங்களுக்கு, கோபம் என்றால் என்னவென்று புரியும் . அப்படி ஆழ்ந்து பார்ப்பதினால் , நீங்கள் கோபத்திலிருந்து விடுதலையடைகிறீர்கள் இதுதான் அறிவுக்கூர்மை மற்றும் உண்மையாகப் புரிந்து கொள்தல் என்பது. இந்தப் புரிந்து கொள்ளும் ஆற்றலால் , நீங்கள் புத்தருக்கு , சாட்சியாக இருக்கிறீர்கள் . அப்பொழுது நீங்கள் , " ஆமாம் . புத்தர் சொன்னது சரிதான் . என்னுடைய அனுபவமே. அதை நிரூபிக்கிறது'' என்று கூறுவீர்கள் அப்படியில்லாமல் , " புத்தர் சொல்வது சரியாகத்தான் இருக்கும் . ஆகவே, அதை அப்படியே பின்பற்றி அனுபவப்பூர்வமாக எடுத்துக்கொள்ள வேண்டும் " என்று நீங்கள் புரிந்து கொள்வது சரியில்லை முட்டாள் தனம் . மாறாக , முன்னே சொன்னது போல, 'புத்தர் சொன்னது சரிதான். நானே அதற்கு சாட்சி. அதை என்னுடைய அனுபவத்தின் மூலமாக உணர்ந்தேன் . இப்பொழுது, என்னுடைய அனுபவத்தின் மூலமாக, அவர் சொன்னது சரியென்று உணர்கிறேன் . நான் இப்பொழுது, அவருடைய கருத்துக்கு சாட்சியாக இருக்கிறேன் . நான் , அவரை வெறுமனே பின்பற்றுபவன் அல்ல ' என்றுதான் நீங்கள் கூறவேண்டும்.

என்னுடைய சந்நியாசியாகிய நீங்கள் , தயவு செய்து, என்னுடைய சாட்சியாக இருங்கள் என்னைப் பின்பற்றுபவனாக இருக்காதீர்கள் . உங்களுடைய அனுபவத்தின் மூலமாக , நான் சொன்னது சரி என்று உணருங்கள் . அப்பொழுதுதான் , நீங்கள் என்னோடு இருக்க முடியும் . அப்பொழுதுதான் , நீங்கள் என்மேல் உண்மையாக அன்பு செலுத்துவீர்கள் , என்னோடு

உண்மையாக இருப்பீர்கள் . மாறாக , என்னுடைய கருத்துகளைச் சேகரித்துக்கொண்டே இருந்தால் , நீங்கள் ஒரு கருத்துக் குவியலாக , ஒரு தத்துவவாதியாக மாறிவிடுவீர்கள் . அப்பொழுது என்னை இழந்துவிடுவீர்கள். அந்த நிலையில், நீங்கள் அறிவு மிக்க தர்க்கவாதியாகக் கூட மாறிவிடுவீர்கள். இப்படி உங்களுடைய புத்தி கூர்மையை தவறாகப் பயன்படுத்துவது என்பது தற்கொலைக்குச் சமம்தான். உங்களுடைய புத்திகூர்மையை அறிந்துகொள்ளும் ஆற்றலைச் சரியாகப் பயன்படுத்துங்கள் . வாழ்க்கையை ஆழமாகப் புரிந்துகொண்ட , அனுபவமாக ' உணருங்கள்.

' நல்ல சுத்தமான நாணயம் இருக்கும் பொழுது, எதற்காக பொய்யான நாணயத்தைத் தேடி ஓடுகிறீர்கள் வாழ்க்கை, எந்த அளவுக்கு புத்தரிடம் நிகழ்ந்ததோ, அதே அளவில்தான் உங்களுக்கும் நிகழ்ந்திருக்கிறது. நீங்கள் ஏன் , அதன் மூலமாகக் கற்றுக்கொள்ளக் கூடாது? எதற்காக , ஒரு புத்தரை ஒரு ஓஷோவைத் தேடுகிறீர்கள்?

ஆகவே, உண்மையாகப் புரிந்துகொள்தலே, தியானமாகும் . ஆமாம் . தியானத்தைப் பற்றிய மிகச்சிறந்த கருத்து இதுதான் . " நான் அதை அனுபவப்பூர்வமாக உணர்கிறேன் என்று நீங்கள் கூறவேண்டும். இப்படித்தான் , ஒருவன் ஆன்மீகத்தில் மலரவேண்டும்.

பிரகாசமான சக்தி புத்தியினுள் மறைந்திருக்கிறது அதுதான் தியானமாகக் காட்சியளிக்கும்; தடம் மாறிப் போகாத மனமே நமது உண்மையான சாரம் ஆகும்.

நீங்கள் எந்த அளவுக்கு உண்மையான புத்திசாலித்தனம் மிக்கவராக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு உங்களுடைய மனம், பழைய மனம் இல்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

தந்தரா, மனத்தை இரண்டு அர்த்தத்தில் சொல்கிறது. ஒரு மனத்தை (MIND) ஆங்கிலத்தில் , சிறிய எழுத்தான 'm ல் ஆரம்பிக்கிறது, அடுத்த மனத்தை

பெரிய எழுத்தான 'M' ல் ஆரம்பிக்கிறது. இந்த பெரிய எழுத்தில் ஆரம்பிக்கும் மனம்தான் , உண்மையான ஆதாரமான, செயலற்ற மனம். இதுதான் புத்தா மனம்,

அந்த சிறிய எழுத்தில் ஆரம்பிக்கும் மனம் , எல்லைக்குட்பட்டு, பல உணர்வுகளைக் கொண்ட விஷயஞானத்தை தன்னுள்ளே அடக்கிக்கொண்டு இருக்கிறது. இந்த சிறிய, அற்பமான மனத்தைத்தான், நாம் ஹிந்து மனம் முகமதிய மனம் , யூத மனம் , கிருஸ்துவமனம் .... என்று கூறுகிறோம் . அதே சிறிய மனத்தைத்தான் , நாம் கல்லூரியிலும் , பல்கலைக்கழகத்திலும் உண்டாக்கிக் கொள்கிறோம் . எந்த மனத்தை, இந்த சமூகம் நெறிப்படுத்தி வைத்திருக்கிறதோ, அந்த மனத்தை, தந்த்ரா ' சிறிய மனம்' என்று சொல்கிறது.

எப்பொழுது இந்தத் தடைகள் உடைக்கப்பட்டு குப்பைகள் அகற்றப்படுகின்றனவோ அப்போது நீங்கள் அந்தப் பெரிய (M) மனதை - புத்தா மனதை அடைகிறீர்கள் . அது பிரபஞ்சத்தைப் போன்றே மிகப் பெரியது. அதுவே பிரபஞ்ச உயிர்த்தன்மை.

தடம் மாறிப் போகாத மனமே நமது உண்மையான சாரம் ஆகும். ம்

நேர் வழியிலிருந்து விலகாத மனமே நமது உண்மையான சாரம் எண்ணங்கள் என்ற குப்பைகளால் அசுத்தப்படுத்தப்படாத, சுத்தமான புத்தா

மனம் ' அதையே நீங்கள் கடவுள் என்றும் கூறிக்கொள்ளலாம் , நிர்வாணா என்றும் கூறிக்கொள்ளலாம் . அது வெறும் உயிர்த்ன்மையைத் தவிர வேறல்ல . செயலற்ற மனத்தன்மையில் , அதுவே உயிருக்கு ஆதாரமாக மாறிவிடுகிறது. இல்லை, உயிரே அதற்கு ஆதாரமாகிவிடுகிறது. அதாவது இரண்டும் ஒன்றுதான் ! அந்த நிலையில் , மனம் முழுமையான அமைதியில் ஆழ்ந்து இருக்கிறது - அதில் இப்பொழுது எந்த எண்ண அலைகளோ, ஊசலாடும் தன்மையோ, ஆசையோ எதுவும் கிடையாது. அது காலத்தைக் கடந்த தெய்வீக

நிலையில் இருக்கிறது, அங்கே எல்லா வேறுபாடுகளும் மறைந்து விட்டன, மற்றும் தன்னிலை, முன்னிலை என்ற பேதம் கூட கிடையாது, அறிபவனும் இல்லை, அறிந்து கொள்ளும் பொருளும் இல்லை. அங்கே வெறும் , சுத்தமான , விடுவிக்கப்பட்ட பிரக்ஞைதான் , உயிரிக்கம்தான் , உயிர்த்தன்மை மட்டும்தான் இருக்கிறது. .

இந்தச் சூத்திரம் , உங்களுடைய ஞாபகத்துக்காக அல்ல . இதை மனப்பாடம் செய்தால் , நீங்கள் சாரஹாவுக்குத் துரோகம் செய்கிறீர்கள் மற்றும் எனக்கும் துரோகம் செய்கிறீர்கள் . இதை வெறுமனே தியானித்து, மறந்துவிடுங்கள் . இந்த சூத்திராவில் நிகழ்ந்த தியானத்தன்மையால் உங்களிடம் எழும் அறிவு கூர்மையை, புத்திசாலித்தனத்தை, உங்களுடைய வாழ்க்கையில் கடைப்பிடியுங்கள் . கணத்துக்கு கணம் , உங்களுடைய உண்மையான அறிவு அனுபவத்தின் மூலமாக மேலும் மேலும் கூர்மையாகட்டும் . அந்த புரிந்துகொள்தலே, அந்தத் தெய்வீக சந்நிதியின் கதவாக இருக்கட்டும்.

8."அன்புக்கு எந்த அடையாளமும் இல்லை"

கேள்வி 1:

(LOVE MAKES NO SHADOW)

" நேற்று, நீங்கள் சரியான அறிவுக் கூர்மையையும் , சரியான புரிந்து கொள்தலும், தியானமாகிறது என்று பேசினீர்கள் . அதைக் கேட்டு என்னுடைய இதயமே வெடித்துவிடும் அளவுக்கு, என்னுள்ளே மகிழ்ச்சி பொங்கியது. நான் எதை உங்களிடமிருந்து கேட்க விரும்பினேனோ, அதைப்பற்றித்தான் பேசினீர்கள் . கொஞ்சம் விளக்கமாகச் சொல்ல முடியுமா?"

இந்தக் கேள்வி கிருஷ்ண பிரேமிடமிருந்து வந்திருக்கிறது.

அறிவுக்கூர்மை என்பது வாழ்க்கையோடு மிகவும் சம்மந்தப்பட்ட இயற்கையான தன்மை. எப்படி நெருப்பு இயல்பாக சுடுமோ, எப்படி காற்றை நம்மால் பார்க்க முடியாதோ, எப்படி நீர் கீழ்நோக்கிச் செல்லுமோ, அதைப்போலத்தான் , வாழ்வும் , அறிவுக்கூர்மையை ஒட்டி நிகழ்கிறது.

அறிவுக்கூர்மை என்பது, உங்களுடைய முயற்சியால் அடைந்தது இல்லை நீங்கள் அறிவுக்கூர்மையோடுதான் பிறந்திருக் கிறீர்கள் , மரங்கள் , அதன் தன்மையில் , அறிவுக்கூர்மையோடுதான் படைக்கப்பட்டிருக்கிறது. அவைகளுடைய வாழ்க்கைக்குத் தேவையான அறிவு, அவைகளிடமே உள்ளது. அதைப்போல பறவைகள் , மிருகங்கள் எல்லாம் . அவைகளுக்குத் தேவையான அளவு, புத்திக்கூர் மையோடுதான் படைக்கப்பட்டிருக்கின்றன . கடவுளால் அர்த்தம் செய்யப்பட்ட மதம் என்னவென்றால், இந்த பிரபஞ்சமே, அறிவுக்கூர்மையோடுதான் படைக்கப்பட்டிருக்கிறது. அந்த அறிவுக்கூர்மை,

எல்லா இடத்திலேயும் பரவலாக மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்கும் கண்களை நீங்கள் பெற்றால் அதை எங்கும் காணலாம் என்பதே.

வாழ்வு, அறிவுமயமாகவே இருக்கிறது. ஆனால் , மனிதன்தான் அறிவை இழந்து நிற்கிறான் . மனிதனைத்தவிர, வேறு எங்கேயும், அறிவற்ற நிலை இல்லை. நீங்கள் , முட்டாள்த் தனமான பறவையைப் பார்த்திருக்கிறீர்களா? அதைப்போல முட்டாள்தனமான மிருகத்தை எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களா? ஆனால் , மனிதனுக்குத்தான் இது நிகழ்ந்திருக்கிறது. ஏதோ அவனிடம் தவறு நடந்திருக்கிறது. மனிதனுடைய அறிவுக்கூர்மை, சிதைக்கப்பட்டிருக்கிறது. முடமாக்கப்பட்டிருக்கிறது மற்றும் அசுத்தப்படுத்தப்பட்டிருக்கிறது.

தியானம் என்பது, அந்த முடமாக்கப்பட்ட அறிவை, சீர்படுத்துவதுதான் . மனிதனைத் தனியாக இயற்கையோடு இயற்கையாக விட்டு விட்டால் , அவனுக்குத் தியானமே தேவையில்லை. பாதிரிமார்களும் , அரசியல்வாதிகளும் , அவனுடைய அறிவுக்கூர்மையில் தலையிடாவிட்டால் , அவனுக்குத் தியானமே தேவையில்லை தியானம் என்பது ஒருவித மனநல வைத்தியம்தான் ! நீங்கள் முதலில் அந்த

வியாதியை ஏற்படுத்திவிடுகிறீர்கள் . பிறகு அதைக்குணப்படுத்த , தியானம் தேவையாக இருக்கிறது. இந்த ஆங்கில வார்த்தைகளான , 'மெடிடேசனும் (தியானம்), மெடிசனும் (மருந்து) ஒரே வேரிலிருந்துதான் கிளம்பி இருக்கின்றன . அதாவது, தியானத்துக்கு மருத்துவ குணம் உண்டு என்று அர்த்தம்.

ஒவ்வொரு குழந்தையும் , அறிவுக்கூர்மையோடுதான் பிறக்கின்றது. ஆனால் , அது பிறந்ததும் , நாம் அதன் மேல் பாய்ந்து, அதனுடைய இயல்பான அறிவுக்கூர்மையை அழிக்க முனைகிறோம் . ஏனென்றால், அறிவுக் கூர்மை என்பது அரசியல், மதம் மற்றும் சமூக அமைப்புகளுக்கு அபாயத்தை ஏற்படுத்திவிடும் . அது, போப் , பூரிசங்கராச்சாரியார் , பாதிரியார்கள் , அரசியல் தலைவர்கள் மற்றும் பல சமூக அமைப்புகளுக்கும் ஆபத்தாகவே இருக்கும்.

அறிவுக்கூர்மை, இயற்கையாகவே எதிர்க்கும் தன்மை படைத்தது. அதை யார் மீதும் திணிக்க முடியாது. அறிவுக்கூர்மை, மிகவும் தீர்மானமானது மற்றும் தனி மனிதனுக்குரியது. அதை ஒருக்காலும் இயந்திரத்தனமாக மாற்ற முடியாது. ஆனால் , சமூகம் மக்களை, பல நகல் பிரதிகளாக (CORBON COPIES) ஒன்றுபோல செய்து வைத்திருக்கிறது. அவர்களுடைய தனித்தன்மை அழிக்கப்பட்டிருக்கிறது. இல்லாவிட்டால் , இந்த உலகத்தில் உலவும் பல முட்டாள்தனமான செய்கைகள் உயிரோடு இருக்க முடியாது.

உங்களுக்கு ஒரு தலைவன் தேவையாக இருக்கிறது. அதற்கு முதலில் மக்களை முட்டாளாக்க வேண்டும் . அப்படிச் செய்யாவிட்டால் , உங்களுக்குத் தலைவனே தேவையில்லை. எதற்காக , நீங்கள் ஒருவரைப் பின்பற்ற வேண்டும் ? நீங்கள் உங்களுடைய அறிவுக்கூர்மையையே நம்பலாமே? யாராவது, ஒருவன் , தான் தலைவனாக வேண்டும் என்று நினைத்தால், முதலில், அவன் தன்னை

232 உயர்நிலைக் காட்டும் " தந்த்ரா' ' சுற்றியுள்ள மக்களை முட்டாள்களாக்க வேண்டும் . அவர்களுடைய அறிவுத்திறனை அழிக்க வேண்டும் . உங்களை

அடியோடு உலுக்கவேண்டும் , உங்களைப் பயத்தில் ஆழ்த்த வேண்டும் . உங்களுடைய தைரியத்தை, தன்னம்பிக்கையை ஒழிக்க வேண்டும் . ஒருவன் . தலைவனாவதற்கு, இவைகளெல்லாம் மிகவும் அவசியம்:

நீங்கள் அறிவுக்கூர்மையோடு இருந்தால் , உங்களுடைய பிரச்சினையை, நீங்களே தீர்த்துக் கொள்ளலாம் . அது ஒன்றே போதும் . உங்களுடைய வாழ்க்கையில் ஏற்படும் . எல்லாப் பிரச்சினையையும் விட அதிகமாக உங்களுடைய அறிவுத் திறன் இருக்கிறது. அது கடவுளால் உங்களுக்கு வழங்கப்பட்ட ஒரு வெகுமதி.

ஆனால் , தாங்கள் அதிகாரம் செலுத்த வேண்டும் , மக்களை அடக்கி ஆளவேண்டும் என்ற பேராசைமிக்கவர்கள், இந்த உலகத்தில் மிக அதிகம். இந்த பேராசைப் பைத்தியங்கள்தான் , உங்களிடம் பயத்தை ஏற்படுத்தி இருக்கிறது. அது ஒரு துருப்பிடித்த இரும்பு அது உங்களுடைய எல்லா அறிவுத்திறனையும் அழித்துவிடுகிறது. ஒருவனுடைய அறிவுத்திறனை அழிக்கவேண்டும் என்றால், முதலில் அவனிடம் பயத்தை, நரகம் என்ற பயத்தை, ஆழமாக ஏற்படுத்த வேண்டும் . அந்தப் பயத்தினால்தான் அவர்கள் , பாதிரியாரைத் தேடிச்சென்று, அவர்களுடைய காலில் விழுவார்கள் . அவருடைய பேச்சை, ஆவலுடன் கேட்பார்கள் . அப்படி அவர்களுடைய பேச்சைக் கேட்காவிட்டால் , தாங்கள் நரகக் குழியில் விழுந்து விடுமோ என்று பயத்தால் அமைதியற்று இருப்பார்கள். அதிலிருந்து, தங்களைக் காப்பாற்றிக்கொள்ள , பாதிரியார் உதவி செய்வார் என்று நம்புகிறார்கள் . அவர்களால் , ஒரு பாதிரியார் இல்லாமல் நிம்மதியாக வாழ முடியாது.

ஒரு நிகழ்ச்சி:

இரண்டு நண்பர்கள் சேர்ந்து ஒரு வியாபாரத்தை ஆரம்பித்தார்கள். அவர்களுடைய வியாபாரம், மிகவும் வித்தியாசமானது. அதற்காக அவர்கள் ஊர் ஊராக சென்று வந்தார்கள் . அவர்களது வியாபாரம் எப்படி என்றால்: எ

இருவரில் ஒருவன் , இராத்திரியில் யாருக்கும்

தெரியாமல் , ஒரு நகரத்துக்குள் சென்று, அங்குள்ள பணக்காரர்களது வீட்டில் உ உள்ள ஜன்னல்களில் தாரைப் பூசிவிட்டு வந்துவிடுவான் . இரண்டு மூன்று நாட்கள் கழித்து அடுத்தவன் அங்கு சென்று, தாரைச் சுத்தம் செய்து கொடுப்பதாகச் சொல்லி, கூலி பேசிக்கொண்டு, வேலையை முடித்துக் கொடுத்துவிட்டு வந்துவிடுவான் . வரும் வசூலில் , இருவரும் பங்கு போட்டுக்கொள்வார்கள். .

ஒருவன் கெடுக்க , அடுத்தவன் சீர் செய்வான் ! இதுதான் அவர்களது வியாபாரம் . அதைப்போல மக்களிடம் முதலில் பயத்தை ஏற்படுத்துகிறார்கள் . பேராசையைத் தூண்டுகிறார்கள். பிறகு அவைகளைப் போக்குவதாக, வேஷம் போடுகிறார்கள்.

அறிவுத்திறன், பேராசைகொண்டதாக இருக்காது. ஒரு அறிவுக் கூர்மையுடையவன் , பேராசை கொண்டவனாக இருக்கமாட்டான் என்பதை அறிந்து நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள் . அறிவற்ற நிலையின் வெளிப்பாடே பேராசை. நீங்கள் , நாளைக்கு என்று சேர்த்து வைக்கிறீர்கள் . ஏனென்றால் நாளைய வாழ்க்கயைப் பற்றி உங்களுக்கு நம்பிக்கை இல்லை. அப்படியிருந்தால் , எதற்காக நீங்கள் சேர்த்து வைக்க வேண்டும்? அதனால் நீங்கள் பேராசை கொள்கிறீர்கள், கஞ்சனாக இருக்கிறீர்கள். ஏனென்றால், உங்களுடைய அறிவுத்திறன் , வாழ்க்கைக்குப் பொருந்தி வருமா என்பதில் உங்களுக்கே நம்பிக்கை இல்லை. யாருக்குத் தெரியும் ? ஆகவே, உங்களுடைய அறிவுக்கூர்மையின்மேல் , உங்களுக்கே நம்பிக்கை இல்லை. ஆகவே தான், நீங்கள் பேராசையுடன் மேலும் மேலும் சேர்த்துக்கொண்டே இருக்கிறீர்கள்.

ஆகவே, மக்களிடம் கோபத்தையும் , பேராசையையும் , எவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கு, அவைகளை ஏற்படுத்துகிறார்கள் . அதனால் அவர்கள் தங்கள் வாழ்வின்மேல் உள்ள நம்பிக்கையை இழக்கிறார்கள் . ஆகவே, அவர்கள் பாதிரியர்களைத் தேடியும் , தலைவர்களைத் தேடியும் ஓடுகிறார்கள் . மற்றும் , அவர்கள் , தங்களுடைய வருங்கால வாழ்க்கை

தோல்வியடைந்து விடுமோ என்றும் , தங்களுடைய முட்டாள்தனமான ஆசைகள், நிறைவேறாதோ என்றும் பயப்படுகிறார்கள் . நன்றாகக் கவனியுங்கள் . தேவையற்றதற்கு, முடியாததற்கு, ஆசைப்படுவது மிகவும் முட்டாள்தனம்.

இருப்பதில் , எவன் திருப்தியடைகிறானோ, அவனே அறிவுக்கூர்மை யுடையவன் மற்றும் புத்திசாலி. எது தேவையோ, எது முடியுமோ அதற்காகத்தான் , அவன் வேலை செய்வான் . தேவையற்றதிலும் , முடியாதவற்றிலும் , அவன் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளமாட்டான் உதாரணமாக , நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறீர்கள் . அவளிடம் உண்மையான கற்பை எதிர்பார்க்கிறீர்கள் . அப்படி, இருவரும், ஒருவரை ஒருவர் எதிர்பார்த்தால் நீங்களும் பைத்தியமாகிவிடுவீர்கள் ; அவளும் பைத்தியமாகி விடுவாள் ! உண்மையான கற்பு என்றால் , அவளோ அல்லது நீங்களோ, கனவில் கூட வேறு பெண்ணையோ, ஆணையோ நினைத்துக் கூட இருக்கக் கூடாது. இது ஒருக்காலும் நடக்காது. முதலில், நீங்கள் யார்? எதற்காக அவள் , உங்கள் மேல் காதல் கொள்ள வேண்டும்? ஏனென்றால், நீங்கள் ஒரு ஆண் அவள் , உங்கள் மேல் காதல் கொண்டால் , அதையே, ஏன் பிறரிடமும் கொள்ளக்கூடாது? உங்களை நினைத்தது போல , ஏன் மற்றவர்களையும் நினைக்கக்கூடாது? இந்தச் சாத்தியக்கூறு, எல்லோரிடமும் இருக்கிறது. ஒரு அழகான, கம்பீரமான ஆண் வீதியில் செல்லும்பொழுது, உங்களுடைய காதலி, அவனைப் பார்த்து ஆசைப்படுவதை, எப்படி அவளால் தடுக்க முடியும்? நீங்கள் தான், அதை எப்படி தடுப்பீர்கள் ? அதைப் போல , உங்களுக்கும் நேரிடுவதை எப்படி நீங்கள் தடுப்பீர்கள்? மற்றும் எப்படி அவள் தடுப்பாள்? அந்த மனிதன் எவ்வளவு அழகாக இருக்கிறான் ' என்று அவள் எண்ணும் பொழுதே அவளுக்குள் ஆசையும் உண்டாகிறது. நீங்கள் ஒன்றை

' அழகாக இருக்கிறது என்று சொல்லும் போதே, அதில் வசப்பட்டு விட்டதை, அதில் சந்தோஷமடைவதை உள்ளூற உணர்கிறீர்கள் . அதிலிருந்து உங்களால்

வேறுபட முடியாது.

ஆகவே, ஒரு ஆணோ, பெண்ணோ தங்களுடைய மனைவி, கணவனிடம் முழுமையான காதலை, கற்பை எதிர்ப்பார்த்தால், அவர்கள் எப்பொழுதும் ஒருவர் மேல் ஒருவர் சந்தேகப்பட்டுக் கொண்டேதான் இருப்பார்கள் ஏனென்றால் , உங்களுடைய மனத்தைப்பற்றி, உங்களுக்கே நன்றாகத் தெரியும் அதைப் போல , அவளிடமும் ஏன் இருக்கக் கூடாது? நீங்கள் வேறு ஒரு பெண்ணை நினைப்பதுபோல , அவளும் ஏன் வேறு ஒரு ஆணை நினைக்கக் கூடாது? இந்த எண்ணமே, உங்களுக்கிடையே சந்தேகத்தை எழுப்பவும் , சண்டையை ஏற்படுத்தவும் போதுமானது. ஆகவே, சாத்தியமாக இருந்த காதல் இப்பொழுது சாத்தியமில்லாததாகிவிட்டது. ஏனென்றால் , அந்த நிறைவேறாத ஆசை, உங்கள் மனத்தில் இருந்துகொண்டே இருக்கிறது.

எதை அடைய முடியாதோ, எதை அடையக்கூடாதோ, அதன் மேல்தான் , மக்கள் ஆசை வைக்கிறார்கள் . அடையக்கூடியதில் , அடைய முடிவதில் எதற்காக ஆசை வைக்க வேண்டும் ? நீங்கள் , நாளையைப் பற்றிய பாதுகாப்பு நினைப்பில் இருக்கிறீர்கள் அதற்கு யாரும் உத்திரவாதம் கொடுக்க முடியாது. மற்றும் வாழ்க்கையின் இயல்பே அப்படித்தான். உங்களுடைய வருங்காலம் திறந்தே இருக்கிறது. அதில், எப்பொழுது வேண்டுமானலும் , என்னவேண்டுமானாலும் ஏற்படலாம் . உங்களுடைய பாதுகாப்பு நினைப்பு அர்த்தமற்றது. இதை ஒரு அறிவுக்கூர்மையுடையவன் தான் புரிந்து கொள்வான். நாளை நடப்பது யாருக்குத் தெரியும் ? நீங்கள் பணம் போட்டிருக்கும் , வங்கி திவாலாகக் கூடும், உங்களுடைய மனைவி, வேறு ஒரு ஆணுடன் ஓடிவிடக்கூடும் . உங்களுடைய கணவன் , நாளை இறக்கக் கூடும் . உங்களுடைய குழந்தைகள் , நீங்கள் நினைப்பது போல இல்லாமல் , வேறுகெட்ட வழியில் செல்லலாம். நீங்களே வியாதியில் விழலாம், முடமாக்கப்படலாம். யாருக்குத் தெரியும்?

நாளையைப்பற்றிய பாதுகாப்பு நினைப்பு என்பது நீங்கள் எப்பொழுதும் , ஒருவிதப் பயத்திலேயே வாழ்க்கையை நடத்துகிறீர்கள் என்று அர்த்தம். அந்த பயத்தை அழிக்கவே முடியாது. நீங்கள் ஒருவித

நடுக்கத்தோடுதான் , நாளையை எதிர்பார்க்கிறீர்கள் . உங்களுடைய பாதுகாப்பு நினைப்பு பொய். அதனால் இப்பொழுது நிகழும் வாழ்க்கையைத் தவறவிடுகிறீர்கள் . அந்தப் பொய்யான பாதுகாப்பு நினைப்பில் , நீங்கள் இந்தக் கணத்தைத் தவற விடுகிறீர்கள் இப்பொழுது நிகழும் இந்த வாழ்க்கைதான் உண்மையானது. ஆகவே, அந்தப் பாதுகாப்பு நினைப்பினால் , நீங்கள் மேலும் மேலும் பயத்தோடு பேராசையுடையவர்களாக மாறுகிறீர்கள்.

ஒரு குழந்தை பிறக்கும்பொழுது, மிக மிகத் திறந்த மனநிலையில் , மிகவும் சுத்தமாக இருக்கிறது. அது 100 சதம் புத்திகூர்மையோடு இருக்கிறது. ஆனால் , நாம் அதன் மேல் பாய்ந்து, அதனுடைய அறிவுக் கூர்மையை மெல்ல

மழுங்கடிக்கிறோம் . அதனிடம் , பல வகைகளில் பயத்தை ஏற்படுத்துகிறோம். நீங்கள் அதை கற்பித்தல் என்று வேறு ஒரு பெயரில் அழைக்கிறீர்கள் மற்றவர்களைப் பார்த்து, நடிக்க அதற்குக் கற்றுத்தருகிறீர்கள் அந்தப் பயமற்ற பிஞ்சுமனத்தில் , பயத்தை ஏற்படுத்துவதுதான் பெற்றோர்கள் , ஆசிரியர்கள் , மற்றும் நெருங்கிய உறவினர்களின் முக்கிய வேலை

இவைகளில் முக்கிய பங்கு வகிப்பது. உங்களுடைய பள்ளிகள் கல்லூரிகள் மற்றும் பல்கலைக்கழகங்கள் தான் . அவைகள் உங்களை மேலும் மேலும் முட்டாளாக்குகின்றன . நீங்கள் உங்கள் பிள்ளைகளை முட்டாளாக வற்புறுத்துகிறீர்கள் . இதனால் , அதனுடைய இயல்பான அறிவுக்கூர்மை மழுங்கடிக்கப்படுகிறது. இப்பொழுது, அதனால் இந்த உலகத்தை உண்மையாகப் பார்க்க முடிவதில்லை. இப்பொழுது, அவைகள் பள்ளி, கல்லூரி, மற்றும் பல்கலைக்கழகத்தால் திணிக்கப்பட்ட கருத்துகளோடுதான் , இந்த உலகத்தைப் பார்க்கிறது. பெற்றோர்களும் , மற்றும் உறவினர்களும் , ' நாங்கள் சொல்லுவது போல நட , இப்பொழுது கேள்வி எதுவும் கேட்காதே அதைப்பற்றி, போகப்போக உனக்கே

தெரியும் என்று கூறி அடக்கி விடுவார்கள் அதாவது, உங்களுடைய அறிவுக்கூர்மை அடக்கப்படுகிறது. மழுங்கடிக்கப்படு கிறது.

சரித்திரத்தை மனப்பாடம் செய்கிறீர்கள் . அதாவது. மனிதன் , மனிதர்களுக்குச் செய்த முட்டாள் தனமான காரியங்களையும் , கொடுமை களையும் அறிந்து கொள்கிறீர்கள் . ஆனால் , ஒரு குழந்தை இதையெல்லாம் பார்க்காது. இங்கிலாந்தை ஆண்ட அரசனைப்பற்றி, நீங்கள் தெரிந்து என்ன செய்யப்போகிறீர்கள் ? அவன் எவ்வளவு வருடங்கள் ஆண்டான் என்பது பற்றி நீங்கள் அறிவதால் என்ன பயன் ? இவையெல்லாம் , ஒருவனை முட்டாளாக்கவே உதவி செய்யும் . இப்படிப்பட்ட தேவையில்லாத விஷயஞானம் என்ற குப்பைகளால் , உங்களுடைய இயல்பான புத்திகூர்மை மூழ்கடிக்கப்பட்டு, மழுங்கடிக்கப்பட்டு, தூசி படிந்து, முடமாக்கப்படுகிறது. அவன் , ஒரு பல்கலைக்கழகத்திலிருந்து, வெளியே வரும்பொழுது, வாழ்வைப் பற்றி எதுவும் அறியாத ஒரு மூடனாகவே வருகிறான் ! அந்தப் பல்கலைக்கழகம் அதைத்தான் செய்திருக்கிறது. அப்படி யாராவது, தன்னுடைய புத்தி கூர்மையை, சுயசிந்தனையை இழக்காமல் வெளியே வந்தால், அது மிக அபூர்வமான விஷயம் . அந்தப் பல்கலைக்கழகத்தை, அவ்வளவு திறமையாக , அவ்வளவு இயந்திரத்தனமாக வேலை செய்யும்படி அமைத்திருக்கிறார்கள் . நீங்கள் படித்துப்பட்டம் பெற்று, முட்டாளாகவே வெளியே வருகிறீர்கள்! இந்த முட்டாள் தனத்தோடுதான், நீங்கள் ' வாழ்க்கை' (LIFE) என்ற பல்கலைக் கழகத்துக்குள் நுழைகிறீர்கள்.

இதை உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லையா? ஒரு படித்தவன் , எவ்வளவு முட்டாள் தனமாக நடந்து கொள்கிறான் என்பதைக் கவனித்துப் பாருங்கள் . நீங்கள், கல்வி ஏதும் கற்காத, காட்டுவாசிகளிடம் எறு பாருங்கள். அங்கே சுத்தமான அறிவுக்கூர்மை வேலை செய்வதைப் பார்க்கலாம்.

ஒரு நிகழ்ச்சி:

ஒருத்தி ஒரு டின்னை' (TIN) திறப்பதற்கு . முயன்று, முடியாமல் சமையல்கலைப் புத்தகத்தைப் பார்க்கச் சென்றாள் , அதற்குள் , அவளுடைய சமையல்காரன் அதைத் திறந்து வைத்திருந்தான் . அவள் திரும்பி வந்து. அதைப்பார்த்து, அவனிடம் மிகவும் ஆச்சரியமாக, "எப்படித்திறந்தாய்?" என்று கேட்டாள்.

அவன், 'உங்களுக்கு படிக்கத் தெரியாவிட்டால், நீங்கள் என்ன செய்வீர்கள் ? உங்களுடைய சொந்த அறிவைத்தான் உபயோகிக்க வேண்டும்' என்றான்.

ஆமாம். இது மிகவும் சரிதான். உங்களுக்கு படிக்கத் தெரியாவிட்டால் , நீங்கள் உங்களுடைய சொந்த அறிவைத்தான் உபயோகிக்க வேண்டும் உங்களால் வேறு என்ன செய்ய முடியும்? அந்த 'படித்தல்' என்று ஐந்து எழுத்து, மிகவும் அபாயகரமானது. நீங்கள் அதைச் செய்யத் தயாராகிவிட்டால் , பின்பு, நீங்கள் உங்களுடைய சொந்தப் புத்திசாலித்தனத்தை, அறிவை உபயோகிக்க மாட்டீர்கள் . நீங்கள் படிக்கும் , அந்தப் புத்தகம், அந்த வேலையைச் செய்துவிடும்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஒருவன் தட்டெழுத்தை பயின்றபிறகு அவனுடைய இயல்பான , அழகான கையெழுத்து மறைந்துவிடும் . அவனுடைய எழுத்து, கிறுக்கலாகவே இருக்கும் . ஏனென்றால் , அந்த வேலையை, இப்பொழுது அந்த தட்டெழுத்து இயந்திரம் எடுத்துக்கொண்டது!

நீங்கள் ஒரு கணக்கிடும் யந்திரத்தை (CALCULATOR) எடுத்துக்கொண்டு சென்றால் , நீங்கள் கணக்கையே மறந்துவிடலாம் . அதற்கு அவசியமே இல்லை. விரைவிலேயே, என்சைக்கிளோபிடியா பிரிட்டானிக்காவில் உள்ள அனைத்து தகவல்களும் அடங்கிய சிறுகணிப்பொறியை எல்லோரும் எடுத்துக்கொண்டு செல்வார்கள் . அப்பொழுது நீங்கள் ஒரு அறிவுக்கூர்மையுடையவராக இருக்கத் தேவையில்லை. அந்த கணிப்பொறி, அந்த வேலையைச் செய்துவிடும்.

நீங்கள் , படிக்காத ஆதிவாசி மற்றும் கிராமத்தார்களிடம் சென்று பாருங்கள் . அவர்களிடம் மென்மையான , ஆழமான புத்திசாலித்தனம் இருப்பதைக்கண்டு வியப்பீர்கள் . அவர்களுக்கு இந்த

உலகத்தைப் பற்றியும் , விஞ்ஞானத்தைப் பற்றியும் எதுவும் தெரியது. உங்களைப்போன்று, அவர்கள் விஷயஞானமிக்கவர்களாக இருக்கமாட்டார்கள் - இது உண்மைதான் . ஆனால் , அவர்களுடைய அறிவுக் கூர்மை மிகவும் வியக்கவைக்கக் கூடியது. அது. புகையில்லாத சுடரைப்போன்று விளங்குகிறது.

இந்த சமூகம் , ஏதோ ஒருவகையில் , ஏதோ காரணத்திற்காக மனிதனுக்கு பெரிய உங்களை தீங்கை ஏற்படுத்தியிருக்கிறது. எப்பொழுதும் அடிமைத்தனத்திலும் , ஒருவித பயத்திலும் , பேராசையுடனும் , திருப்தியற்ற நிலையிலும் , போட்டியிடும் தன்மையிலும், அன்பற்ற நிலையிலும்,

எப்பொழுதும் கோபத்தோடும் , வெறுப்போடும் , கோழைத்தனத்திலும் , ஒருவரைப் பார்த்து, மற்றவர் காப்பி அடிக்கும் நிலையிலும் வைத்திருக்கவே அது ஆசைப்படுகிறது.

அது உங்களை, ஒரு புத்தாவைப் போன்று, கிருஷ்ணாவைப் போன்று மற்றும் கிருஸ்துவைப் போன்றும் பார்க்க விரும்பவில்லை. ஆகவேதான் உங்களுடைய அறிவுக்கூர்மை அழிக்கப்படுகிறது.

இந்த சமூகம் , உங்களுக்குச் செய்த தீங்கைக் களையவே, தியானம் தேவையாக இருக்கிறது. தியானம் , விஷய ஞானத்துக்கு எதிராகச் செயல்படுகிறது. அது, இந்தச் சமூகம் செய்த கெடுதல்களை சீர் செய்கிறது. அது சமூகம் புகுத்திய வியாதியைக் குணப்படுத்துகிறது. எப்பொழுது, நீங்கள் அந்த வியாதியிலிருந்து விடுதலையடைகிறீர்களோ, அப்பொழுதே, உங்களுடைய உடல் ஆரோக்கியத்தை மீண்டும் உணர்வீர்கள் இந்த நூற்றாண்டில் , இந்த விஷயஞானத் திணிப்பு மிக அதிகமாகிவிட்டது. அதிகம் படித்தவர்களால் , இந்த உலகம் மிகுந்த அபாயத்தில் தான் இருக்கிறது. நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . நான் , இப்படிப்பட்ட கல்விமுறைக்கு எதிரானவன்

வேறு முறையில் , உங்களுடைய இயல்பான அறிவுத்திறனுக்கு ஏற்றவாறு ஒரு கல்வித் திட்டத்தை ஏற்படுத்த முடியும் . அது, உங்களுடைய அறிவுத்திறனை, மேலும் கூர்மையாக்கும் . அது, தேவையில்லாத விஷயஞானங்களை உங்களிடம் புகுத்தி, உங்களுடைய அறிவுத்திறத்துக்கு பழு ஏற்றாமல் , அதை மேலும் புத்துணர்ச்சியோடும் , இளைமையோடும் இருக்க உதவி செய்யும்

இப்பொழுதுள்ள கல்விமுறையால் , நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்தலில் திறமைசாலிகளாக இருக்கிறீர்கள். நான் கூறும் கல்வி முறையால், நீங்கள் தெளிவு பெறுவீர்கள் . இப்பொழுது இருக்கும் கல்விமுறை, உங்களுடைய புதிதாகக் கண்டுபிடிக்கும் ஆற்றலைக் குறைக்கிறது. நான் கூறும் கல்விமுறை, உங்களை, புதியவனவற்றைக் கண்டுபிடிக்க ஊக்கம் கொடுக்கும்

உதாரணமாக , நான் சொல்கின்ற கல்விமுறையால் , எந்தக் குழந்தையும் பழையமுறையில் , ஒருவன் கொடுக்கும் அதே பதிலை மற்றவர்களும் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை அதனால், ஒரு குழந்தை புத்தகத்தில் உள்ளதை, அப்படியே எழுதவேண்டிய அவசியம் இல்லை. பரிசுக்காக , அது எதையும் தயாரிக்கத் தேவையில்லை. அது, உங்களுடைய புத்திசாலித்தனத்தையும், அறிவுத்திறனையும் தூண்டி, புதியனவற்றை கண்டுபிடிக்க உதவி செய்யும். நீங்கள் கண்டுபிடித்த அந்தப் பதில் , சரியாகவோ அல்லது தவறாகவோ இருக்கக்கூடும் . ஆனால் , புத்தகத்தில் உள்ளதை, அப்படியே எழுதவில்லை. அவன் , தானாக சிந்தித்து, ஒரு புதிய பதிலை உண்டாக்கி இருக்கிறான் . இதுதான் முக்கியம் . அது நிச்சயமாக சாக்ரட்டீஸ் போன்றவர்களின் பதிலைப்போல , இருக்காது - அவன் சிறிய பையன் ஆல்பர்ட் ஈன்ஸ்டனைப்போன்று, அந்தப் பதில் ஒருக்காலும் இருக்காது. அதைப்போல பதிலை ஒரு சிறுவனிடமிருந்து எதிர்பார்ப்பது

' முட்டாள்தனம் . அவன், ஏதோ ஒன்றைப் புதிதாக உண்டாக்க முயல்கிறான் .

அதை நாம் பாராட்டவேண்டும், மெச்ச வேண்டும்.

கல்விமுறை போட்டிபோடும் மனப்பான்மையில் இருக்கக் கூடாது. ஒருவரை ஒருவர் ஒப்பிட்டு, தீர்ப்புக் கூறக்கூடாது. போட்டி மனப்பான்மை, மிகவும் தீவிரமானது. பிறருக்குத் துன்பத்தை ஏற்படுத்தக்கூடியது, அழிவை உண்டுபண்ணக்கூடியது. சிலர் , கணக்கில் மந்தமாக இருப்பார்கள் . அவனை, நீங்கள் முட்டாள் என்று அழைக்கக்கூடும் . ஆனால் , அவன் தச்சுவேலையில் மிகவும் கெட்டிக்காரனாக இருக்கலாம் . ஆனால் , யாரும் அதைக்கவனிப்பது இல்லை. சிலர் இலக்கியத்தில், மந்தமாக இருப்பார்கள். ஆனால், அவர்கள் சங்கீதம், நாட்டியம் போன்றவற்றில் திறமைசாலிகளாக இருப்பார்கள்.

உண்மையான கல்விமுறை ஒருவன் வாழ்க்கையில் எதில் திறமைசாலியாக இருக்கிறான் என்று கண்டு பிடித்து, ஊக்குவிக்கும் . ஒருவன் தச்சுவேலைக் காரனாகப் பிறந்திருந்தால் அவனை அதில் விடுவதுதான் சரியானது. வேறு வகையில் அவனை செலுத்த யாருக்கும் அதிகாரம் இல்லை. அப்பொழுது இந்த உலகம் , மிகத் திறமைசாலிகள் நிறைந்த அறிவுக் கூர்மையுடையவர்களால் நிரப்பப்பட்டிருக்கும். அதற்கு ஒருவனை அவனுடைய திறமையில் , ஊக்கத்தில் இருக்க அனுமதிக்க வேண்டும் , அவன் அதில் வளர்வதற்குத் தகுந்த உதவிகளைச் செய்யவேண்டும் . யாரும் , அவனுக்குக் குறுக்கே வரக்கூடாது. யாரும் அவனை அதிகாரம் செய்யக்கூடாது, கட்டுப்படுத்தக் கூடாது. அவன் நாட்டியக்காரனாக வேண்டும் என்றால் அடுத்தவன் , ஒரு கவிஞனாக வேண்டும் என்றால் , ஒரு மீன்பிடிப்பவனாக , தச்சுவேலை செய்பவனாக வேண்டும் என்றால் மற்றும் ஒரு மரம் வெட்டுபவனாக வேண்டும் என்றால் , மிகவும் நல்லது. இந்த உலகத்துக்கு எல்லோருடைய சேவையும் தேவையாகத்தான் இருக்கிறது. எதிலும் உயர்வு, தாழ்வு கிடையாது. அப்பொழுது மிகக்குறைந்த அளவிலேதான் ஜனாதிபதியாகவோ, பிரதம மந்திரியாகவோ, ஆசைப்படுவார்கள் . அது ஒரு ஆசிர்வாதம்தான்.

ஆனால் , இப்பொழுது எல்லாம் தலைகீழாக

இருக்கிறது. யாரிடம், ஒரு தச்சுவேலை செய்யக்கூடிய திறமை இருக்கிறதோ, அவன் ஒரு டாக்டராக இருக்கிறான் . யாரிடம் மருத்துவத் திறமை இருக்கிறதோ, அவன் தச்சுவேலை செய்துகொண்டு இருக்கிறான் . யாரும் , அவர்களுடைய புத்திசாலித்தனத்திலும் , திறமையிலும் இருக்கவில்லை. ஆகவேதான் , இந்த உலகம் மிகவும் முட்டாள் தனத்தில் இருக்கிறது. ஒவ்வொருவரும் , அடுத்தவர்களுடைய வேலையை செய்துகொண்டு இருக்கிறார்கள் . இந்த உலகம் முட்டாள்தனத்தில் இருப்பதற்கு, இதுவே காரணம்.

இந்தியாவில் , நாம் ஆழமாக தியானம் செய்கிறோம் . அதை 'சுயதர்மா (SWADHARMA சுயத்தன்மை) என்று ஒரு வார்த்தையால் அழைக்கிறோம். இது, வருங்கால உலகத்தில் , மிகப்பெரிய பாதிப்பை, மாற்றத்தை ஏற்படுத்தக்கூடியது.

கிருஷ்ணா, "ஒருவன், தன்னுடைய சுயத் திறமையில், சுய இயல்பில் வாழ்ந்து, இறப்பதே மேல் . இன்னொருவருடைய இயல்பில் வாழ்வது, மிகவும் அபாயகரமானது. யாரைப் பார்த்தும் நடிக்காதீர்கள் . நீங்கள், உங்களுடைய திறமையில் இருக்கவும்" என்று கூறுகிறார்.

ஆனால் , மனிதன் பிறரைப் பார்த்து நடித்துக்கொண்டே இருக்கிறான் . தன்னுடைய சுயஉணர்வை, சுயதோற்றத்தை, அவன் முற்றிலும் இழந்து வெகு நாட்களாகிறது. ஸென் (ZEN) மக்கள் சொல்வது என்னவென்றால் ," உங்களுடைய சொந்த முகத்தைத் தேடுங்கள் " என்பதுதான் . அதைப்போலத்தான் தந்த்ராவும் சொல்லுகிறது.

அது. உங்களுடைய , சொந்த இயல்பான தன்மையை தேடிக்கண்டுபிடியுங்கள் . நீங்கள் உண்மையிலேயே யார் ? உங்களுக்கு, நீங்கள் யார் என்று உறுதியாக , உண்மையாகத் தெரியாதபொழுது, நீங்கள் எப்பொழுதும் விபத்தை, அபாயத்தைச் சந்திக்க வேண்டிவரும் - எப்பொழுதும் உங்களுடைய வாழ்க்கையே, ஆபத்து நிறைந்ததுதான். அதைப்போல, எந்த நிகழ்ச்சியும் உங்களை ஒருக்காலும் முழுமையாக

திருப்திபடுத்தாது. திருப்தியற்ற நிலையே, உங்களுடைய வாழ்க்கையின் நியதியாகிவிடும் " என்று கூறுகிறது.

நீங்கள் உங்களைச் சுற்றி, சற்று உன்னிப்பாகக் கவனியுங்கள். ஏன், இவ்வளவு பேர்கள் சோர்வாகவும், அலுப்பாகவும், இன்னும் பாக்கி நாட்களை எப்படியோ ஓட்டவேண்டும்' என்று விரக்தியாகப் பேசிக்கொண்டு இருக்கிறார்கள்? அவர்களால், திரும்பிப்பெற முடியாத மதிப்புமிக்க காலத்தை, நேரத்தை, ஏதோ இறப்புக்காக மட்டும் காத்துக்கொண்டிருப்பதாக, சோர்வுடன் ஏன் கழிக்க வேண்டும்? ஏன். இந்த மரங்களைப் போல, அவர்கள் புத்துணர்ச்சியோடு இருக்கக் கூடாது? ஏன் இந்தப் பறவைகளைப் போல, ஆனந்தமாகப் பாடக்கூடாது? அவர்களுக்கு என்ன நேர்ந்தது?

ஆனால், ஒன்று மட்டும் அவனிடம் உறுதியாக நிகழ்ந்திருக்கிறது. அவன், நன்றாக நடிக்கக் கற்றுக்கொண்டிருக்கிறான்! அவன், எப்பொழுதும் வேறு ஒருவரைப்போல இருக்கவே முயல்கிறான். யாருமே, தன்னுடைய இயல்பான சொந்த வீட்டில் இருப்பதே இல்லை. அவன், எப்பொழுதும் வேறு ஒருவருடைய வீட்டின் கதவைத் தட்டிக்கொண்டே இருக்கிறான். அதனால்தான் இவ்வளவு சோகம், சோர்வு, துன்பம் எல்லாம்.

அறிவுக்கூர்மையின் வெளிப்பாடுதான் தியானம் என்று கூறும் பொழுது என்ன சாரஹா அர்த்தத்தில் சொல்கிறார் என்றால் 'என்ன விலைகொடுத்தாகிலும், ஒரு அறிவுக்கூர்மையுடையவன், தன்னிலையில் தன் இயல்பில், தான் இருக்கவே முயற்சி செய்வான். அவன் ஒருக்காலும் அடுத்தவரைப் பார்த்து நடிக்க மாட்டான். அவன் ஒரு கிளிப்பிள்ளைப்போல இருக்கமாட்டான். அவன், தன்னுடைய உள் குரலுக்கு மட்டும்தான், மதிப்புக் கொடுப்பான்; அதை மட்டும் உன்னிப்பாகக் காதுகொடுத்துக் கேட்பான். அவன் தன்னுடைய உயிர்த்தன்மையை மட்டும்தான் உணர்வான். எவ்வளவு ஆபத்து..

' வந்தாலும் , அதன்படியே செயல்களைச் செய்வான் . அவனுக்கு யஜமானன் அவனுடைய உயிர்த்னமையேதவிர (EXISTENCE) அவனுடைய மனமல்ல.

ஆனால் இதில் ஆபத்து அதிகம் . மற்றவர்களைப் போல, நடிப்பதில் ஆபத்து மிகக் குறைவு ஏனென்றால், மற்றவர்கள் மனத்தால் இயங்குகிறார்கள் மனம் என்றாலே பொய் மற்றும் நடிப்புதான் ஆனால் , நீங்களோ, உங்களுடைய சொந்த இருப்பில் , சுய உணர்வில் இயங்குகிறீர்கள் . சமூகத்துக்கும் , உங்களுக்கும் எப்படி ஒத்துப் போகும் ? அப்பொழுது. நீங்கள் தனிமையில் தான் இருக்கவேண்டும் . ஆகவேதான் , உங்களுக்கு ஆபத்து அதிகம் என்று கூறுகிறேன் . ஆனால் , இப்படி ஆபத்துகளால் சூழப்பட்டிருப்பவர்களிடம்தான் , உண்மையான வாழ்க்கை நிகழ்கிறது. யார் ஒருவன் புதுமையில் தீரத்துடன் புகுந்து செல்லவும் , மிகுந்த தைரியத்துடனும் எதையும் சந்திக்கத் தயாராக உள்ளவனிடம்தான் , வாழ்க்கை நிகழ்கிறது. தைரியமில்லாத மண்புழு போன்ற கோழைகளிடம் , அது ஒருக்காலும் நிகழாது.

ஒரு புத்திகூர்மையுள்ளவன் , தன்னுடைய உயிர்த்தன்மையைத்தான் , அதாவது தன்னையேதான் நம்புவான் . அந்த நம்பிக்கை, முழுமையானது மற்றும் எந்தவித சந்தேகத்துக்கும் அப்பாற்பட்டது. நீங்கள் உங்களையே நம்பாவிட்டால் , எப்படி நீங்கள் அடுத்தவரை நம்பமுடியும்?

மக்கள் உங்களை என்னிடம் வந்து பகவான் , நாங்கள் நம்பவிரும்புகிறோம் என்று சொல்கிறார்கள் . அவர்களிடம் நான் , " நீங்கள் முதலில் உங்களையே நம்புகிறீர்களா? அப்படி நீங்கள் உங்களையே, உங்களுடைய உயிர்த்தன்மையையே நம்பினால் , என்னையும் நீங்கள் நம்பக்கூடிய சாத்யம் உண்டு. ' என்று சொல்வேன் நீங்கள் , மிக அருகில் உள்ள உங்களையே நம்பாவிட்டால் , நீங்கள் என்னை எப்படி நம்ப முடியும் ? நீங்கள் உங்களை முழுமையாக நம்பினால் , என்னையும் நம்ப முடியும் . உங்களுடைய நம்பிக்கையில் , முழுமையாக நம்பிக்கை வைத்தால் , என்மீதும் நீங்கள் நம்பிக்கை வைக்கலாம் .

இல்லாவிட்டால், அது முடியாது.

அறிவுக்கூர்மை என்பது, உங்களையே நீங்கள் நம்புவதுதான் அறிவுக்கூர்மை என்பது தீரமிக்கது, எதிர்க்கும் தன்மை படைத்தது. ஆனந்தமானது. எப்பொழுதும் புதுமையை நோக்கிச் செல்வது. அது, இந்த கணத்தில் மட்டும்தான் வாழ்வது. அது ஒருக்காலும் வருங்காலத்தைப் பற்றி கவலைப்படாது. அது இறந்தகாலத்தை நினைப்பதே இல்லை மற்றும் வருங்காலத்தைப்பற்றியும் எதையும் எதிர்ப்பார்ப்பது இல்லை. ஏனென்றால், இறந்தகாலம் என்பது முடிந்து போனது; எதிர்காலம் என்பது இன்னும் ஆரம்பிக்கவே இல்லை. ஆகவே, இந்தக் கணத்தில் நிகழும் வாழ்வை, முழுமையாக வாழ்வதிலும், கொண்டாடுவதிலும்தான், அந்த அறிவுக்கூர்மை மகிழ்ச்சியடைகிறது. அது தானே, உங்களை வந்து அடையும். அதற்காக நீங்கள் எதுவும் செய்யத் தேவையில்லை. என்னுடைய இன்றைய நாள் மிகவும் ஆனந்தமாக கொண்டாட்டத்துடன் ஜொலித்தால், நாளை இதைவிட, ஏன் கொண்டாட்டம் நிறைந்ததாக ஜொலிக்காது.

நாளைய கொண்டாட்டம் , எங்கு இருந்துவருகிறது? அது இன்றைய கொண்டாட்டத்திலிருந்துதான் வருகிறது. என்னுடைய , இந்த வாழ்க்கை ஆசீர்வதிக்கப்பட்டிருந்தால் , என்னுடைய அடுத்த வாழ்க்கை இதைவிட ஆசீர்வதிக்கப்பட்டதாகவே இருக்கும் . அது எங்கே இருந்து வரும் ? அது, இந்த வாழ்க்கையிலிருந்துதான் வளரவேண்டும் ? ஆகவே, ஒரு புத்தி கூர்மையுள்ளவன், சொர்க்கத்தைப் பற்றியும், நரகத்தைப் பற்றியும் கவலைப்படமாட்டான் அவன் அடுத்த வாழ்க்கையைப் பற்றி கவலைப்படமாட்டான் . ஏன் , கடவுளைப்பற்றிக்கூட கவலைப்படமாட்டான் , நினைக்கவும் மாட்டான்! ஒரு புத்தி கூர்மையுள்ளவன், புத்திகூர்மையோடு இப்பொழுது, இங்கே வாழ்ந்துகொண்டிருப்பான் . அதைத்தவிர , அவனுக்கு வேறு எதுவும் தெரியாது. கடவுள், ஆத்மா, சொர்க்கம், நிர்வாணா என்பவைகள் , தானே அவனை வந்து அடையும்.

நீங்கள் , சமூகத்தின் மேல் , நம்பிக்கை வைத்து

வாழ்கிறீர்கள் . இது, புத்திகூர்மையுள்ளவனால் முடியாத காரியம். அறிந்தவற்றில் வாழுங்கள். அறிதல் என்பதே அறிவுக்கூர்மையாகும் . ஆகவே, சாரஹா சொன்னது முற்றிலும் சரியே. " அறிவுக்கூர்மையே, தியானம்."

அறிவுக்கூர்மை இல்லாதவர்கள் கூட தியானம் செய்யலாம். ஆனால், அவர்கள் நிச்சயமாக அறிவற்ற நிலையிலேதான் அதைச் செய்ய முடியும். அவர்கள் ஒவ்வொரு ஞாயிறும் சர்ச்சுக்குச் சென்று ஒருமணி நேரம் பிரார்த்தனை பண்ணவேண்டும் என்று நினைக்கிறார்கள் - இது அவர்களுடைய மதம் வழங்கிய முறை மதத்தை ஒட்டி, மதத்துக்காகப் பிரார்த்தனை செய்வது என்பது முட்டாள்தனம் . சர்ச்சுக்கும், ஞாயிற்றுக்கிழமைக்கும் என்ன சம்மந்தம்? நீங்கள் , ஆறு நாட்களும் , வேலை செய்து, ஓய்வு எடுக்கும் நாள் ஞாயிற்றுக்கிழமை. நீங்கள் ஆறுநாட்களும் , மதத்தன்மையற்ற நிலையில் வாழ்ந்துவிட்டு, பிறகு ஒரு நாளைக்கு சர்ச்சுக்கு வந்து ஒருமணி நேரமோ அல்லது இரண்டு மணிநேரமோ பிரார்த்தனை செய்வதால் என்ன பயன் ? நீங்கள் யாரை ஏமாற்ற நினைக்கிறீர்கள்? சர்ச்சுக்கு வாரம் ஒரு நாள் சென்று, கடவுளை ஏமாற்ற முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

அல்லது, இன்னும் கொஞ்சம் சிரமம் எடுத்துக்கொண்டு, ஒவ்வொரு நாளும் காலை 20 நிமிடமும், மாலை 20 நிமிடமும் , நீங்கள் ஆழ்நிலைத்தியானம் (TRANSCENDENTAL MEDITATION) செய்து, கடவுளை ஏமாற்றலாம் என்று நினைக்கிறீர்களா? நீங்கள் , கண்களை மூடிக்கொண்டு, முட்டாள் தனமாக "ஓம் ஓம், ஓம் " என்று திரும்பத்திரும்ப கூறிக்கொண்டே இருக்கிறீர்கள் . அது உங்களுடைய மனத்தை மேலும் மழுங்கடிக்கவே செய்யும் . ஒரு மந்திரத்தை இயந்திரத்தனமாகத் திரும்பத்திரும்ப சொல்வதால் , உங்களுடைய அறிவை அப்புறப்படுத்திவிடும் . அது, குழந்தைக்குச் சொல்லும் தாலாட்டுதான்.

பலநூற்றாண்டு காலமாக , இந்த வித்தையை, தாய்மார்கள் கையாண்டு வந்திருக்கிறார்கள் . ஒரு குழந்தை தூங்காமல் தொந்திரவு கொடுத்துக்கொண்டு இருந்தால் , அதனுடைய தாய் ,

தாலாட்டுப்பாடி, அதைத் தூங்கவைப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள் . ஒரேவிதமான ராகமுள்ள பாட்டால், அது அலுப்படைந்து, வேறு எங்கேயும் தப்பித்துச் செல்ல முடியாதநிலையில், வேறு வழியின்றி, தூங்கத்தான் வேண்டும். அதாவது, அந்த குழந்தை. தன் தாயிடம் சரணாகதியடைந்து விடுகிறது. நீங்கள் . தாய்மார்களும் , பாட்டிகளும் குழந்தைக்குக் கதை சொல்லித் தூங்க வைப்பதைப் பார்க்கலாம். அந்தக் கதைகளை உற்று கவனித்தால், ஒரேவிதமாகத் திரும்பத்திரும்பச் சொல்வதை அவர்கள் கையாள்வதைப் புரிந்துகொள்ளலாம்.

ஆனால் , குழந்தைகள் எப்பொதுமே, ஒருவிதக் குழப்பத்தில் தான் இருக்கிறார்கள் . எல்லாமே அவர்களுக்கு முட்டாள் தனமாகப் படுகிறது. அவர்கள், காலையில் இன்னும் சற்று தூங்க வேண்டும் என்று நினைத்தால் , எல்லோரும் தூங்கவிடாமல் எழுப்பிவிடுகிறார்கள் . அவர்கள் , தூங்கவேண்டாம் என்று நினைக்கும் பொழுது, எல்லோரும் வற்புறுத்தித் தூங்கச் சொல்கிறார்கள் . இந்த ஜனங்களுக்கு பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன ? தூக்கம் வரும்பொழுது, தூங்குவது நல்லது - இது புத்திகூர்மையின் அடையாளம். தூக்கம் வராதபோது விழித்திருந்தாலும் , சரிதான் . வயதானவர்கள் கதைசொல்ல ஆரம்பிக்கும் பொழுது, குழந்தைகள் மிக ஆவலாகக் கேட்பார்கள் . அந்தக் கதையையே, அடுத்தடுத்த நாட்களில் கேட்கும்பொழுது, அவைகள் அலுப்படைந்து, விரைவில் தூங்கிவிடுங்கள்.

இதையேதான், ஒரு மந்திரங்களும் செய்கிறது. நீங்கள், '' ஓம் , ஓம் , ஓம் என்றோ அல்லா - அல்லா' என்றோ திரும்பத்திரும்பக்கூறினாலும் , உங்களிடம் ஒரே அலுப்பைத்தான் ஏற்படுத்தும் , பாட்டியிடம் கதை கேட்டுவிட்டுத் தூங்கும் குழந்தைபோல நீங்கள் தூங்கிவிடுவீர்கள் . ஆமாம் . இப்படித் திருப்பித் திருப்பிச் சொல்லும் மந்திரங்கள் என்ற வார்த்தைகள் உங்களையே வசியப்படுத்தி, தூங்கச் செய்துவிடும் . அதனால் தவறேதும் இல்லை நீங்கள் தூங்குவதற்கு

சிரமப்பட்டால் , தூக்கவியாதியால் அவதிப்பட்டால் , இந்த மந்திரங்கள் நன்றாக வேலை செய்யும். இதற்கும், ஆத்மீகத்துக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. இது ஒரு முட்டாள் தனமான தியானம் தான் . பிறகு , புத்திசாலித்தனமான , அறிவுக்கூர்மையான தியானம் என்றால் என்ன?

நீங்கள் செய்யும் ஒவ்வொரு வேலைகளிலும் , செயல்களிலும் உங்களுடைய அறிவுக் கூர்மையை கொண்டு வருவதுதான். அறிவுக் கூர்மையோடு உள்ள தியானம் என்பது. நீங்கள் நடக்கும் பொழுது, அதில் உங்களுடைய பிரக்ஞை நிலையைக்கொண்டு வாருங்கள் , புத்திசாலித்தனத்தைக் கொண்டு வாருங்கள். அதைப் போல, நீங்கள் சாப்பிடும் பொழுது, அதில் உங்களுடைய புத்திசாலித்தனத்தைக் கொண்டு வாருங்கள் . நீங்கள் எப்பொழுதாவது அறிவுக் கூர்மையோடு சாப்பிட்ட டதாக உங்களால் ஞாபகப்படுத்திப் பார்க்க முடியுமா? நீங்கள் சாப்பிடும் உணவைப்பற்றியும் , அது உண்மையிலேயே சத்தான உணவா, அதனுடைய ருசி என்ன என்று அறிந்து சாப்பிட்டிருக்கிறீர்களா? இல்லை, ஏதோ சாப்பிடவேண்டும் என்பதற்காக , கிடைத்ததை சாப்பிடுகிறீர்களா?

நீங்கள் செய்யும் செயலைக் கவனித்துச் செய்கிறீர்களா? நீங்கள் புகைபிடித்துக் கொண்டிருக்கிறீர்கள் . இதைத் தொடர்ந்து செய்துகொண்டே இருக்கிறீர்கள் . நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள் என்பதை உணர்ந்திருக்கிறீர்களா? நீங்கள் புகையை இழுத்துவிடுவதால் , உங்களுடைய நுரை ஈரலுக்குத்தான் தீங்கு என்பதை உணர்ந்து செய்கிறீர்களா? நீங்கள் உண்மையிலேயே, உங்களுடைய உடலுக்கு செய்யும் தீங்கை உணர்ந்து செய்கிறீர்களா? உங்களுடைய பணத்தையும் செலவு செய்துகொண்டு, உங்கள் உடலையும் கெடுத்துக்கொண்டு...

நீங்கள் சாப்பிடும்பொழுதும், புகைபிடிக்கும்பொழுதும்,

உங்களுடைய புத்திகூர்மையை அதில் கொண்டுவாருங்கள் . ஒரு செயலைச் செய்வதற்கு முன் ஏன், எதற்காக என்று கேள்வி கேளுங்கள். ஒரு செயலை, பழக்கத்தால் செய்கிறீர்கள் என்றால் , அதைக் கவனித்து மெல்ல அதை விட்டுவிடுங்கள் நீங்கள் ஒரு ஆணையோ, பெண்ணையோ காதலிக்கும் பொழுது அல்லது காதலிப்பதற்கு முன்பு, அதில் உங்களுடைய அறிவுக்கூர்மையை கொண்டுவாருங்கள். நீங்கள் என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள் ? நீங்கள் உண்மையிலேயே, காதலில்தான் இருக்கிறீர்களா? இல்லை, பழக்கத்தால், அப்படிச் செய்கிறீர்களா? அப்படியென்றால் , அது அருவருப்பானது, தவிர்க்கவேண்டியது. காதலை, மிகவும் பிரக்ஞையாகச் செய்யவேண்டும் . அப்பொழுதுதான், அது பிரார்த்தனையாக மாறும்.

ஒரு பெண்ணை, நீங்கள் காதலிக்கும்பொழுது, நீங்கள் உண்மையிலேயே என்ன செய்கிறீர்கள்? உங்களுடைய சக்தியை , விந்துவை வெளியேற்றுவதற்கு அவளுடைய உடலை உபயோகிக்கமட்டும் விரும்புகிறீர்களா? இல்லை, அவளை முழுமையாக விரும்புகிறீர்களா? அந்தக் காதலுக்கு மதிப்புக் கொடுக்கிறீர்களா? அந்தப் பெண்ணை, கருணையோடும் , உள்ளார்ந்த அன்புடனும் நெருங்குகிறீர்களா? உ

நான் அப்படி யாரையும் பார்க்கவில்லை. கணவன் , மனைவிக்கு மதிப்பு கொடுப்பது இல்லை. அவளை, அவன் உபயோகித்துக்கொள்ளவே நினைக்கிறான் . அதைப்போல , மனைவியும் , கணவனுக்கு மதிப்புக்கொடுப்பது இல்லை. அவனை உபயோகித்துக்கொள்ளவே விரும்புகிறாள் . உங்களுடைய அன்பில் , கருணை கலக்காவிட்டால் , உங்களுடைய அறிவுத்திறன் , மற்றும் புத்திசாலித்தனம் அங்கே இல்லை என்று அர்த்தம் . அப்படி கலந்து இருந்தால் , நீங்கள் அடுத்தவரிடம் , மிகவும் கருணையுடையவர்களாக இருப்பீர்கள் . அப்பொழுது உங்களுடைய காதல்உறவு, சிறந்த தியானமாகிவிடும் . ஆகவே, நீங்கள் எதைச் செய்தாலும் , அதில் உங்களுடைய புத்திசாலித்தனத்தைக் கொண்டு வாருங்கள். அதை, அறிவுக்கூர்மையுடன் அணுகுங்கள் . அதுதான்

தியானத் தன்மை என்பது. ஆகவே, சாரஹாவின் கருத்து, மிகவும் வித்தியாசமானது, மிகவும் முக்யத்வம் வாய்ந்தது. எ

"அறிவுக்கூர்மையே, தியானம்."

" இந்த அறிவுக்கூர்மை, உங்களுடைய வாழ்க்கை முழுவதும் பரவியிருக்க வேண்டும். இது ஞாயிறு மட்டும் செய்யும் செயலல்ல. அதை, 20 நிமிடம் மாத்திரம் செய்துவிட்டு, பிறகு அதை மறந்துவிடுவது அல்ல புத்திகூர்மை என்பது நீங்கள் மூச்சுவிடுவதுபோல நீங்கள் எதைச் செய்தாலும், அது சிறியதோ அல்லது பெரியதோ ஏன், நீங்கள் தரையைச் சுத்தம் செய்தாலும் - அதை இயந்திரத்தனமாகவும் செய்யலாம் அல்லது பிரக்ஞையுடனும் செய்யலாம் ஆனால், நீங்கள் ஒன்றை இயந்திரத்தனமாக செய்யும் பொழுது, அதில் உண்மையான மகிழ்ச்சி ஏற்படாது - நீங்கள் ஏதோ கடமைக்காச் செய்கிறீர்கள்

நீங்கள் ஒரு காரியத்தை, கடமைக்காகச் செய்தால், அதில் உங்களுடைய அன்பு கலந்திருக்காது. அதை நீங்கள் விரும்பிச் செய்வதில்லை இயந்திரத் தனமாகச் செய்கிறீர்கள். பிறகு, எப்படி அதிலிருந்து விடுதலையடைவது என்று கஷ்டப்படுகிறீர்கள் நீங்கள் ஒரு நாளின் 24 மணிநேரத்தை எப்படி செலவழித்தீர்கள் என்று சிந்தனை செய்திருக்கிறீர்களா? நீங்கள் எவ்வளவு காரியங்களை மகிழ்ச்சியற்றுச் செய்திருக்கிறீர்கள் என்பது உங்களுக்கு புரிகிறதா? அதிலிருந்து, நீங்கள் எந்த வளர்ச்சியும் பெறவில்லை என்பதை உணர்ந்திருக்கிறீர்களா? உண்மையில் நீங்கள் அதிலிருந்து விடுதலை அடையவே நினைக்கிறீர்கள், இப்படி உங்களுடைய வாழ்வில் பல காரியங்களை விருப்பமில்லாமலேயே, இயந்திரத்தனமாக, உங்களுடைய புத்திகூர்மையை அதில் கொண்டுவராமல், செய்திருக்கிறீர்கள் தெரியுமா?

ஒரு அறிவுக்கூர்மையுள்ளவன், தன் வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும் கவித்தன்மையுடனும், அன்புடனும், மகிழ்ச்சியுடனும் செய்துகொள்வான். இது உங்களுடைய வாழ்க்கை நீங்கள் இதில்

கருணையோடு இல்லாவிட்டால் , அன்புடன் இல்லாவிட்டால் , வேறுயார் அதில் அன்பு செலுத்த முடியும் ? நீங்கள் அதை வீணடித்தால் , அதற்கு பொருப்பு வேறு யாரும் இல்லை. ஆகவே, முதலில் உங்களுடைய வாழ்க்கையை புத்திசாலித்தனத்துடனும் , பொறுப்போடும் , கருணையோடும் நடத்திச் செல்லுங்கள் என்றுதான் , நான் உங்களுக்கு போதிக்கிறேன் . மற்றவை எல்லாம் தானே அடுத்தடுத்து வரும் . ஏன் , கடவுள்கூட பிற்பாடுதான் வருவார் ! ஏனென்றால் , நீங்கள் நீங்களாக இருக்கும்பொழுதுதான் , அவர் வருவார் . உங்களுடைய உலகத்தின் மையம் நீங்கள்தான் , உங்களுடைய உயிர்த்தன்மைதான்.

ஆகவே, உங்களுடைய அறிவைக் கூர்மையாக்கிக்கொண்டு, இயல்பாக , ஒவ்வொரு செயலிலும் பிரக்ஞையாக இருந்துவாழுங்கள் . நீங்கள் எவ்வளவு அறிவுக்கூர்மையுடன் இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு அதை உங்களுடைய வாழ்க்கையில் கொண்டு வாருங்கள் . கடவுளைப்பற்றியோ அல்லது கடவுள்தன்மையப் பற்றியோ கவலைப்படவேண்டாம் . அது தானே உங்களை வந்து அடையும் . ஆகவே, மதத்தைப் பற்றியோ, பழக்கவழக்கங்களைப் பற்றியோ, சர்ச்சு மற்றும் கோவிலுக்கு போவது பற்றியோ மற்றும் இப்படிப்பட்ட காரியங்களில் ஈடுபடுவதோ தேவையில்லை. வாழ்வே, அறிவுக் கூர்ல மை யுடன்தான் அமைந்திருக்கிறது.

ஆகவே, வாழ்வை முழுமையாக , பிரகாசமாக , இயற்கையோடு ஒத்து, பிரக்ஞையாக முதலில் வாழுங்கள் . மற்றவையெல்லாம் , மிக அழகாக தானே வரும் பிரகாசமான அறிவுக்கூர்மையைத் தொடர்ந்து கொண்டாட்டம் நிறைந்த வாழ்வு உங்களிடம் நிகழும்.

கேள்வி 2:

கடமை உணர்வோடு, மக்களுக்கு நன்மை செய்வது சரியில்லையா?"

இல்லை. ஒருக்காலும் இல்லை. அது அருவருப்பானது.

நீங்கள் எந்தவித அன்பும் , கருணையும் இல்லாமல் , கடமைக்காக ஒரு காரியத்தைச் செய்தால் , நீங்கள் உங்களுக்கு மாத்திரம் தீங்கு செய்துகொள்ளவில்லை, அடுத்தவருக்கும், தீங்கு செய்கிறீர்கள். நீங்கள், அன்பு இல்லாமல் , வெறும் கடமைக்காக ஒரு காரியத்தைச் செய்யும்பொழுது, நீங்கள் , அதனால் பயன் அடைந்தவரிடமிருந்து, நன்றியை எதிர்பார்க்கிறீர்கள் . நீங்கள் அவனிடமிருந்து, பதில் செய்கையை எதிர்பார்க்கிறீர்கள் . பார்க்கப் போனால் , நீங்கள் அதற்காக , அவனை வற்புறுத்தினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நீங்கள் அவனிடம் சென்று, "நான் இவ்வளவு உனக்கு செய்திருக்கிறேன். நீ ஏன் எனக்கு பதிலுக்குச் செய்யவில்லை என்று கேட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை! இது ஒரு அருவருப்பான வியாபாரம்.

ஆனால் , நீங்கள் அன்பு மிகுந்து செய்பவைகளுக்குப் பதிலாக , நீங்கள் எதையும் எதிர்பார்ப்பது இல்லை! அது ஒரு பண்டமாற்று வியாபாரம் இல்லை. நீங்கள் அதைச் செய்யும்பொழுது, மிகவும் மகிழ்ச்சியடைகிறீர்கள் . அப்பொழுது நீங்கள் அடுத்தவரைக் கட்டுப்படுத்துவது இல்லை. அதற்காக , அந்த அன்பு திரும்பிவராமல் இருப்பதில்லை - அது ஆயிரம் மடங்கு பெருகி உங்களை வந்து அடைகிறது. ஆனால், கடமை அப்படித் திரும்பிவருவது இல்லை.

பார்க்கப்போனால் , நீங்கள் ஒருவருக்கு கடமையாக ஏதும் செய்தால் , அவர்கள் உங்களை ஒருக்காலும் மன்னிக்கமாட்டார்கள் . இதைக் குழந்தைகளிடம் நீங்கள் பார்க்கலாம் . அவர்கள் ஒருக்காலும் , தங்களுடைய பெற்றோர்களை மன்னிக்கவே மாட்டார்கள் . அவைகளுடைய பெற்றோர்கள் , கடமையாகப் பல காரியங்களை அவர்களுக்குச் செய்திருக்கக்கூடும் . அதைப்போல செய்பவர் களை மன்னிப்பது கடினம்தான். உ

உங்களை ஒருவர் மிகவும் அன்புடன் நேசித்தால் மகிழ்ச்சியால், நன்றியுணர்வால், அவரை மதிப்பீர்கள், வணங்குவீர்கள் . கடமை செய்பவர்கள் மேல் , அந்த உணர்வு வருவதே இல்லை.

நீங்கள் இந்த வித்தியாசத்தைப் பார்த்திருக்கிறீர்களா? ஒருதாய் , உங்கள் மேல் அன்பு செலுத்துகிறாள்

என்றால் , அவள் , அந்த அன்பை உணர்ந்து செயல்படுகிறாள் - அதை நீங்கள் திருப்பிக் கொடுப்பீர்களோ, மாட்டீர்களோ, அதைப்பற்றி அவள் கவலைப்படுவது இல்லை. அது ஒரு ஒப்பந்தம் இல்லை.

'' மற்றும் பண்டமாற்று வியாபாரமும் இல்லை. நீங்கள் அதற்குப்பதிலாக ஏதும் திருப்பி செய்யாவிட்டால், அவள் அதைப்பற்றி எதுவும் நினைக்கமாட்டாள் மற்றும் வருத்தப்பட்டு எதுவும் சொல்லமாட்டாள் . அவள் , உங்கள் மேல் அன்பு செலுத்தும் பொழுது, அவ்வளவு மகிழ்ச்சியடைகிறாள். அதற்குமேல் , அவள் உங்களிடம் என்ன எதிர்பார்க்க முடியும்?

ஒருதாய் , தன் பிள்ளைக்கு, தான் நினைத்த அளவுக்குச் செய்ய முடியவில்லையே என்றுதான் வருத்தப்படுவாள் . ஆனால் , அவள் , அதை கடமையாகச் செய்தால் , தான் , நினைத்ததற்குமேல் உங்களுக்கு அதிகமாகச் செய்ததாகவே நினைப்பாள் - இப்படிப்பட்டவர்களை, மகன் வெறுப்பான் உங்களுடைய அன்பை அவளுக்குத் திருப்பித்தர முடியாது. அவள் , தன் கால்களால் , உங்களுடைய தலைமேல் உதைப்பதுபோல , எப்பொழுதும் " நான் உனக்கு அதைச் செய்தேன் , இதைச் செய்தேன் . உன்னை 10 மாதம் சுமந்து பெற்றேன் ' என்று அந்த பழைய கதைகளைச் சொல்லிச்சொல்லி, உங்களுடைய மனதை நோகடிப்பாள் . இது ஒருக்காலும் , அன்பை வளர்க்காது. அவளுடைய பிள்ளைகள் மிகவும் கோபமடைந்து. அவளை ஒதுக்கிவைத்தாலும், ஆச்சரியப்படுவதற்கில்லை.

எனக்கு ஒரு பையனைத் தெரியும். நான் ஒரு சமயம், அவனுடைய குடும்பத்தோடு தங்கியிருந்தேன் ஒருநாள் , அவனுடைய தாயார் , அவனை என்னிடம் அழைத்துவந்து, அவனுக்குப் புத்திமதி சொல்லும்படிக் கேட்டாள். அவன், பெற்றோர்களை மதிப்பதில்லையாம்.

எனக்கு அந்தக் குடும்பத்தைப் பற்றி நன்றாகத் தெரியும் . அவன் , அவர்களுக்கு மதிப்பு கொடுப்பதில்லை என்பதும் எனக்குத் தெரியும் .

அவர்கள், அவனுக்கு செய்ததெல்லாம், கடமைக்காகச் செய்தார்களேயொழிய, அன்பினால் செய்யவில்லை.

நான் அவர்களிடம், "இதற்குக் காரணம் நீங்கள் தான். நீங்கள் அந்த பையனை ஒருபோதும் விரும்பவில்லை, உண்மையாக அன்பு செலுத்தவில்லை. அதனால், அவன் வேதனையடைந்திருக்கிறான். அவனை, நீங்கள் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. உங்களுடைய போலியான அன்பு, அவனுடைய இதயத்தை, பாறாங்கல்போல் அழுத்திக்கொண்டு இருக்கிறது. இப்பொழுது அவன் வளர்ந்துவிட்டதால், தைரியமாக உங்களை எதிர்த்து நிற்கிறான். அவன் உங்களை மதிக்காததற்கு இதுதான் காரணம்! என்றேன்.

இதைக் கேட்டு, அந்தப் பையன் அழுதவாறு, யார் என் வீட்டுக்கு வந்தாலும், என்னை அவர்கள் முன், கோர்ட்டில் நிறுத்துவது போல நிறுத்தி, அவர்களெல்லாம் எனக்குப் புத்திமதி சொல்வது, எனக்கு கொஞ்சம் கூட பிடிக்கவில்லை. நீங்கள்தான், என்னைச் சரியாகப் புரிந்துகொண்ட முதல் ஆள். இவர்கள் என்னை நாக்கினாலேயே கொடுமைப்படுத்துகிறார்கள். என்னுடைய தாய் எப்பொழுதும், "நான் உன்னை 10 மாதம் சுமந்தேனே' என்று

கூறிக்கொண்டே இருக்கிறாள். அதற்கு நான், " என்னை சுமக்கும்படி நான் கேட்கவில்லையே? அதற்கும், எனக்கும் சம்மந்தமில்லை. அது உங்களுடைய வேலை. நீங்கள்தான் தீர்மானித்தீர்கள். ஏன் நீங்கள் அப்பொழுதே கருக்கலைப்பு செய்திருக்கக்கூடாது? நான் அதற்கு குறுக்கே நிற்கமாட்டேனே. முதலில், நான் சொல்லியா, நீங்கள் கர்ப்பம் தரித்தீர்கள்? நான், அப்படி ஒன்றும் உங்களை கேட்கவில்லையே?" என்று திருப்பிக் கேட்டேன்.

அவன் கோபமாக இருப்பது எனக்குத் தெரியும். ஆனால், அவன் சொன்னது மிகவும் சரியே

இப்பொழுது நீங்கள், " கடமை உணர்வோடு,

மக்களுக்கு நன்மை செய்வது, சரியில்லையா?'' என்று கேட்கிறீர்கள் . ஆமாம் . சரியில்லைதான் . நீங்கள் அப்படிச் செய்தால் , நீங்கள் அவர்களைக் கொடுமைப்படுத்துபவர்களாக மாறுகிறீர்கள் நீங்கள் அவர்கள் மேல் ஆதிக்கம் செய்கிறீர்கள். இது அரசியல் தனமானது, ஆதிக்கம் செலுத்த ஒரு வழி.

முதலில் , அவர்களது காலை அமுக்கிவிடுவதில் ஆரம்பியுங்கள் விரைவில் , நீங்கள் அவர்களுடைய கழுத்துக்கு வந்துவிடலாம். பிறகு நீங்கள் அவர்களைக் கொல்வது சுலபம் . முதலில் , நீங்கள் அவர்களது காலை அமுக்கும்பொழுது, அவர்கள், "ஆஹா, சுகமாக இருக்கிறது' ' என்று ஆனந்தமாக சொல்வார்கள் . அடுத்து என்ன நடக்கும் என்று அவர்களுக்குத் தெரியாது. எல்லா அரசாங்க ஊழியர்களும், விரைவில் அரசியல்வாதியாகக் கூடும் . அரசாங்க ஊழியனாக ஆரம்பிப்பதுதான் , ஒரு அரசியல்வாதியாக மாறுவதற்கு, சரியான ஆரம்பம். ஆகவே, மக்களுக்குக் கடமையுடன் சேவை செய்ய முதலில் ஆரம்பியுங்கள் . விரைவில் , நீங்கள் அவர்களுடைய தலைமீது ஏறி உட்கார்ந்து விடலாம் . அவர்களுடைய சுதந்திரத்தை நீங்கள் உபயோகித்துக் கொள்ளலாம். நீங்கள் உங்கள் இஷ்டப்படி அவர்களை கசக்கிப் பிழியலாம் . அவர்களால் கத்தக் கூட முடியாது. ஏனென்றால் , நீங்கள் ஒரு பொதுஜன ஊழியன். ஆகவே, மக்களின் தலைவனாக இருப்பதற்கு, உங்கள் வாழ்க்கையை அரசாங்க ஊழியனாக ஆரம்பிக்க வேண்டும். நான் , இந்த எலிப்பொறிகளைப்பற்றி, உங்களுக்குத் தெளிவுப்படுத்துவதற்காகவே, இங்கு உட்கார்ந்திருக்கிறேன் . இந்தப் பொறிகளெல்லாம் , அகங்காரத்தால் உண்டாக்கப்பட்டது. வெளியில் அவர்கள் , மிகவும் சாதுவாக , உங்களுக்கு சேவை செய்வது போலத் தோன்றினாலும், அவர்கள், தங்கள் அகங்காரத்தின் வழியேதான் செல்கிறார்கள். ஆகவே, உதவி செய்யுங்கள் . ஆனால் , அன்பினால் செய்யுங்கள் . இல்லாவிட்டால் , தேவையில்லை; தயவுசெய்து, செய்யாதீர்கள் . நீங்கள் பேசாமல் இருப்பதே மேல்.

நீங்கள் அன்பினால் செய்துதான் ஆகவேண்டும் . நீங்கள் உங்களுடைய அன்பை பிறருக்குக் கொடுக்காமல் தொடர்ந்து இருக்கமுடியாது.

உங்களிடம் சக்தி ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. அதை நீங்கள் பிறருக்கு கொடுத்துதான் ஆகவேண்டும். அப்பொழுது, நீங்கள் உங்களிடமிருந்து வாங்குபவர்களிடம்,

நன்றியுடையவர்களாகவே இருப்பீர்கள். ஏனென்றால், உங்களுடைய அன்பை அவர்கள் ஏற்றுக் கொண்டு விட்டார்கள். உங்களுடைய அன்பு நிலைக்கு, அவர்கள் ஒருவடிகாலாக இருக்கிறார்கள் . உங்களுடைய சக்தியை அவர்கள் பகிர்ந்து கொண்டிருக்கிறார்கள். உங்களுடைய அன்புச் சுமையை கீழே இறக்க அவர்கள் உதவி செய்திருக்கிறார்கள்.

நீங்கள், உங்களிடமிருப்பதை பகிர்ந்துகொள்வதற்காக, அவர்களுக்கு நன்றி செலுத்துங்கள். இல்லாவிட்டால், கொடுக்காமல் இருப்பதே மேல் கேள்வி 3:

" ஏன் , அன்பிற்குப் பின்னால் , பொறாமை நிழல் போலத் தொடர்ந்து வருகிறது?"

அன்பிற்கும் , பொறாமைக்கும் எந்தவித சம்மந்தமும் இல்லை. மற்றும் , நீங்கள் அன்பு என்று அழைப்பதற்கும் உண்மையான அன்புக்கும் எந்த சம்மந்தமும் இல்லை. நீங்கள் அதன் அர்த்தத்தை உணராமலேயே, அனுபவப்படாமலேயே இந்த அழகான வார்த்தைகளை உபயோகிக்கிறீர்கள் நீங்கள் இந்த அன்பு என்ற வார்த்தையை, எந்தவித அனுபவமும் இல்லாமலேயே, பிரக்ஞையற்ற நிலையில் வெறுமனே, உபயோகிக்கிறீர்கள் இந்த கடவுள் அன்பு' நிர்வாணா மற்றும் பிரார்த்தனை' என்ற வார்த்தைகளை வெறுமனே பிரக்ஞையற்று உபயோகிப்பதில் உள்ள அபாயம் என்னவென்றால் , நீங்கள் இந்த வார்த்தைகளை வெறுமனே அடிக்கடி உபயோகித்துக்கொண்டு இருப்பதால் , உங்களுக்கு அது பற்றித் தெரியும் என்ற அகங்கார உணர் உங்களிடம் ஏற்படுகிறது. இது அபாயகரமானது. வு

உங்களுக்கு அன்பைப்பற்றி என்ன தெரியும் ? உங்களுக்கு அது பற்றி உண்மையிலேயே சரியாகத்

தெரிந்திருந்தால் , இந்தக் கேள்வியை நீங்கள் கேட்டிருக்கவே மாட்டீர்கள் . ஏனென்றால் , அன்போடு பொறாமையும் கலந்து இருக்காது. அதைப்போல பொறாமை இருக்கும் இடத்தில் , அன்பு இருக்காது. பொறாமை, அன்பின் ஒரு பகுதி அல்ல . அது. தன்னுடைமையின் (POSSESSIVENESS) ஒரு பகுதிதான் . நீங்கள் எல்லாவற்றையும் அடைய விரும்புகிறீர்கள் . அதன் மூலம் , நீங்கள் வலுவாக இருப்பதாக நினைக்கிறீர்கள் . அப்பொழுது உங்களுடைய எல்லைகள் பெரிதாகிக்கொண்டே போகிறது. அந்த எல்லைக்குள், யாராவது நுழைந்தால், நீங்கள் கோபமடைகிறீர்கள் . இல்லாவிட்டால் , உங்களைவிட வேறுயாரும் பெரிய வீடு வைத்திருந்தால் , நீங்கள் பொறாமையடைகிறீர்கள் . அல்லது வேறுயாராவது, உங்களுடைய சொத்தை அபகரிக்க நினைத்தால் நீங்கள் கோபமடைகிறீர்கள் மற்றும் பொறாமைப்படுகிறீர்கள்.

ஆகவே, நீங்கள் அன்போடு இருந்தால் , பொறாமை அங்கு தலைகாட்டாது. அது நடக்காத காரியம்.

நீங்கள் ஒரு பெண்ணைக் காதலித்தால் , எப்படி நீங்கள் பொறாமைப்பட முடியும்? நீங்கள் ஒரு ஆணை உண்மையிலேயே காதலித்தால் , எப்படி உங்களால் அவன்மேல் பொறாமைப்பட முடியும் ? உங்களுடைய மனைவி, வேறு ஒரு ஆணுடன் சிரித்துப் பேசினால் , நீங்கள் எப்படி பொறாமைப்பட முடியும் ? நீங்கள் மகிழ்ச்சியல்லவா அடைய வேண்டும் ? அவளுடைய மகிழ்ச்சிதானே, உங்களுடைய மகிழ்ச்சி. அவளுடைய மகிழ்ச்சிக்கு எதிராக எப்படி உங்களால் பொறாமைப்பட முடியும்?

இந்த நிகழ்ச்சியை சற்று உற்றுக் கவனியுங்கள். இது எல்லா இடத்திலேயும் , எல்லாக் குடும்பத்திலேயும் , நடந்து கொண்டுதான் இருக்கிறது. தன்னுடைய கணவன் , தொடர்ந்து ஒரு செய்தித்தாளை வாசித்துக்கொண்டு இருந்தால் அவனுடைய மனைவி, அந்தச் செய்தித்தாளின் மேல் , பொறாமைப்படுவது சகஜம் தான் இருக்கவேண்டிய இடத்தில் , அந்த செய்தித்தாள் இருப்பதாக அவள் கருதுகிறாள். அவள்,

அங்கு இருக்கும்பொழுது, தன் கணவன் எப்படி அதில் கவனம் செலுத்தலாம் ? அது, அவளை அவமானப்படுத்துவதுபோல ஆகாதா? அவள் , அங்கு அவனுக்கு முன்னே உட்கார்ந்திருக்கும் பொழுது, அவளையல்லவா அவன் ஆக்ரமித்துக்கொண்டிருக்க வேண்டும் ? ஆகவே, இப்பொழுது அவள் , தனக்குப் போட்டியாக அந்த செய்தித்தாள் இருப்பதாகக் கருதுகிறாள்.

இப்படிப்பட்ட மனிதர்களைப்பற்றி என்ன சொல்வது? தன் மனைவி உட்கார்ந்திருக்கும் பொழுது, அவளுடைய கணவன் , இன்னொரு பெண்ணிடம் உற்சாகமாகச் சிரித்துக்கொண்டு பேசுவது, சகஜம்தான் . மக்கள் ஒன்றிலேயே எப்பொழுதும் ஈடுபட்டால் , அது அவர்களுக்கு அலுப்பையே கொடுக்கும் . ஏதாவது புதியவற்றில் , மனம் உற்சாகமாக ஈடுபடவே செய்யும் . இதை கணவனும் , மனைவியும் சற்று ஆழ்ந்து புரிந்து கொள்ள வேண்டும். ஆனால் , மேற்சொல்லிய நிகழ்ச்சியில் , மனைவி கோபமாகத்தான் இருப்பாள் . ஒரு ஜோடி சேர்ந்து செல்லும் பொழுது, ஆண் சோகமாகச் சென்றால், அந்த ஜோடி கல்யாணமான கணவனும் மனைவியும் என்று தெரிந்து கொள்ளுங்கள். அப்படியில்லாமல், இருவரும் சந்தோஷமாகச் சென்றால் , அவள் அவனுடைய மனைவி இல்லை என்பதை அறிந்துகொள்ளுங்கள்.

ஒரு சமயம், நான், புகைவண்டியில் சென்றுகொண்டு இருந்தேன் . எனக்கு எதிரே, ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள் . ஒவ்வொரு புகைவண்டி நிலையத்திலும் , வண்டி நிற்கும் பொழுது, ஒருவன் வேறு ஒரு பெட்டியிலிருந்து இறங்கிவந்து, பூ என்றும், பழம் என்றும் இப்படி பலவற்றை வாங்கிகொண்டு வந்து கொடுத்துவிட்டு, சற்று சிரித்துப்பேசியபின் , திரும்பச் செல்வான்.

நான் அவளிடம் , '' யார் அந்த மனிதன் ?'' என்று கேட்டேன் அவள் , " அவர் , என்னுடைய கணவர் என்றாள்.

நான் , ' எனக்கு நம்பிக்கை இல்லை. உங்களுக்குத் திருமணமாகி எவ்வளவு வருடம் ஆகிறது?'

உயர்நிலைக் காட்டும் " தந்த்ரா" அவள் சற்று சங்கடப்பட்டுக் கொண்டு, " நீங்கள் வற்புறுத்துவதால் சொல்கிறேன். எங்களுக்குக் கல்யாணம் ஆகவில்லை. ஆனால், இதை எப்படி நீங்கள் அறிந்து கொண்டீர்கள்?"

. நான், " ஒரு கணவன், ஒவ்வொரு நிலையத்திலும் இறங்கி, தன் மனைவிக்கு, ஏதாவது வாங்கிக்கொண்டு வந்துகொடுத்து, மகிழ்ந்து செல்வதை நான் பார்த்ததே இல்லை. ஒரு கணவன், தன் மனைவியை விட்டுப்பிரிந்து, வேறு ஒரு பெட்டியில் பயணம் செய்தால், அவள் பாதி வழியிலே இறங்கிச் சென்று விட்டாளா என்று, கடைசி நிலையத்தில் தான் மெதுவாக வந்து எட்டிப்பார்ப்பான். இப்படி ஒவ்வொரு நிலையத்திலும் இறங்கி, இறங்கி, ஏதாவது வாங்கிக்கொண்டு வந்து கொடுத்துவிட்டுச் செல்ல மாட்டான்."

அவள், "ஆமாம். அவர் என்னுடைய கணவன் இல்லை. அவர் என் கணவனின் நண்பர்! என்றாள்

நீங்கள் எப்பொழுதும், உங்கள் மனைவிமேல், உண்மையான அன்புடன் இருக்க முடியாது. அதைப் போலத்தான் எல்லா கணவரும், நண்பர்களும், மனைவிகளும் அப்படி உண்மையான அன்போடு இருந்தால், அவள் / அவனுடைய மகிழ்ச்சியே, தன்னுடைய மகிழ்ச்சியாக எண்ணிக்கொள்வார்கள். நீங்கள் உண்மையிலேயே, அன்புடன் இருந்தால், இப்படி தன் உடமையாக ஒருவரை ஒருவர் கருதிக்கொள்ளமாட்டீர்கள். மற்ற விஷயங்களில் எல்லாம் விட்டுக்கொடுக்கும் நீங்கள், மற்ற விஷயங்களில் அவனுடைய / அவளுடைய மகிழ்ச்சியே, தன்னுடைய மகிழ்ச்சி என்று கருதும் நீங்கள், இதில் மட்டும் ஏன் அப்படி உங்களால் எண்ண முடியவில்லை? இதில் தன்னுடைமை ஆதிக்கம், மிகவும் அதிகம். மேலும், இதைச் சமூகம் ஒருக்காலும் அங்கீகரிக்காது.

அன்பு, எப்பொழுதும் முழுச்சுதந்திரத்தையே அளிக்கும். உண்மையான அன்புமாத்திரம்தான். இதை அளிக்க முடியும். அப்படி முழுச் சுதந்திரத்தை, அன்பு அளிக்காவிட்டால், அது உண்மையான அன்பு இல்லை.

அது உங்களுடைய அகங்காரத்தின் வெளிப்பாடுதான். ஆனால், அது வெளியே தெரியாது.

உங்களுடைய மனைவி அழகாக இருக்கிறாள் என்று வைத்துக்கொள்ளுங்கள் . உங்களுடைய மனைவி, அழகு என்பதை அந்த நகரத்தில் உள்ள எல்லோரிடமும் காட்டவே விரும்புவீர்கள் . அவள் ஏதோ, உங்களுக்குச் சொந்தமான பொருள் ' என்றுதான் கருதிக்கொள்வீர்கள் . நீங்கள் ஒரு உயர்ந்த கார் வைத்திருந்தால் , ஒரு பெரிய வீடு வைத்திருந்தால் , அவைகளைப் பிறர் பார்த்து, தன்னை மதிக்க வேண்டும், பாராட்ட வேண்டும் என்று கருதுகிறீர்களோ, அதைப்போல , உங்களுடைய மனைவியைப் பார்த்து, பிறர் பொறாமைப்படவேண்டும் என்றுதான் நினைப்பீர்கள் . நீங்கள் வைர நகைகளை, அவளுக்கு அளிக்கிறீர்கள் என்றால் , அது அன்பினால் அல்ல . உங்களுடைய பணக்கார அகந்தையை, வெளிப்படுத்துவதற்கு அவளை, ஒரு சாதனமாக உபயோகித்துக்கொள் கிறீர்கள் . அவளை, ஒரு கிளப்பிலிருந்து, அடுத்த கிளப்புக்கு அழைத்துச் செல்கிறீர்கள். ஏனென்றால், அவள் உங்களுக்குச் உ

சொந்தமான ஒரு பொருள் '' அவள் உங்களை எப்பொழுதும் தொங்கிக்கொண்டு இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள் . அதில் அவள் சற்று மாறுபட்டால் , நீங்கள் அவள் மேல் கோபம் அடைகிறீர்கள் . நீங்கள் அவளைக் கொன்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆகவே, நீங்கள் யாரை காதலிக்கிறீர்கள் ? உங்களுடைய மனைவியையா, அல்லது பணம் , அந்தஸ்த்து என்று, உங்களுடைய அகங்காரத்தைக் காதலிக்கிறீர்களா?

ஒரு நிகழ்ச்சி

ஒரு ரபியும், ஒரு பாதிரியாரும், பக்கத்தில் பக்கத்தில் வசித்துக்கொண்டு இருந்தார்கள் . ஆனால் , அவர்களுக்குள்ளே சில கருத்துவேறுபாடுகளும் , பொறாமை உணர்வும் இருந்து கொண்டே இருந்தது. ஒருவர் எதை வாங்கினாலும் , மற்றவர் , அதைக் காட்டிலும் உயர்வாக வாங்கவேண்டும் என்றுதான் நினைப்பார்.

ஒரு நாள் , அந்த பாதிரியார் ஒரு புதிய விலையுர்ந்த காரை வாங்கினார் . அதைப்பார்த்த ரபி அதை விட விலையுயயர்ந்த வேறு ஒரு புதிய காரை வாங்கிக் கொண்டு வந்து விட்டார் . ஒருநாள் , அந்த ரபி. ஜன்னலைத் திறந்து பார்க்கும்பொழுது, அந்தப் பாதிரியார் , காரின் முன்பக்கமீது, தண்ணீர் தெளித்துக்கொண்டிருப்பதைப் பார்த்து, ' காரின் ரேடியேட்டரில் (RADIATER) அப்படி தண்ணீர்விடக்கூடாது என்று சத்தமாகச் சொன்னார்.

அதற்கு அந்தப் பாதிரியார் , " தெரியும் . ஆனால் , இப்பொழுது என்காரை புனித நீரால் கழுவி, அதை கிருஸ்துவ மதத்துக்கு மாற்றுகிறேன் !" இதற்குமேல் , உன்னால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டார்.

சிறது நேரத்துக்குப் பிறகு, அந்தப் பாதிரியார் , ஜன்னலைத் திறந்து பார்க்கும் பொழுது, அதிர்ச்சியடைந்துவிட்டார். அந்த ரபி, அவருடைய புதிய காருக்குப் பக்கத்தில் , தரையில் படுத்தவாறு, ஒரு ரம்பத்தைக்கொண்டு, அந்த காரின் புகைவெளியேறும் குழாயின் முன்பகுதியை, ஒரு அங்குலம் அளவுக்கு துண்டாக்கிக்கொண்டு இருந்தார் ! இதுதான் மனம் ! அது எப்பொழுதும் போட்டியிலேயேதான் இருக்கும் . இப்பொழுது, அந்த ரபி, தன் காருக்கு சுன்னத் செய்து, அதை முஸ்லீம்மதத்துக்கு மாற்றுகிறார். இப்படித்தான், நாம் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம் . இதுதான் அகங்காரத்தின் வெளிப்பாடு அதற்கு, அன்பு என்றால் என்னவென்று தெரியாது; அதற்கு நட்பு மற்றும் கருணை என்றால் என்னவென்று தெரியாது. அகங்காரம் , எப்பொழுதும் தன் முனைப்பு உடையது, தீவிரப் போட்டி மனப்பான்மையுடையது.

ஆகவே, நீங்கள் கேட்ட கேள்வி சரியில்லை. பொறாமை அன்பை நிழல்போல , ஒருபோதும் தொடராது. அன்பு, மிக மெல்லிய ஒளி ஊடுருவும் ' பிலிம் போன்றது. அதற்கு நிழலே கிடையாது. அது ஒரு பொருள் அல்ல . அது. எந்த நிழலையையும் உண்டாக்காது. இந்த உலகத்தில் உள்ளவைகளில் , நிழல்தராத ஒரு நிகழ்வு எதுவென்றால் , அது அன்புதான்.

, கேள்வி 4:

"அடக்குதல் என்றால் என்ன?"

நீங்கள் , வாழக்கூடாத வகையில் , வாழ்வதுதான் அடக்குதல் ' என்பதாகும் . நீங்கள் வேறு ஒருவனாக இருப்பதே அடக்குதல் ' நீங்கள் செய்ய விரும்பாத காரியத்தைச் செய்வதுதான் அடக்குதல்

உங்களையே நீங்கள் அழித்துக்கொள்வதுதான் , அடக்குதல்

அடக்குதலுக்கு, மறுபெயரே தற்கொலை' என்பதாகும். அது மெல்ல மெல்ல உங்களைச் சாகடிக்கும் . அது உங்களை நிச்சயமாகக் கொல்லும் வெளிப்படுத்துவது தான் வாழ்க்கை, அடக்குதல் என்பது தற்கொலை.

இதுதான் தந்த்ராவின் முக்கியச் செய்தி: அடக்கப்பட்ட வாழ்க்கையில் வாழாதீர்கள் . அதற்கு வாழாமல் இருப்பதே மேல் வாழ்க்கை என்பது வெளிப்படுத்தலும் புதுமையை உண்டாக்குவதும் , மகிழ்ச்சியும் நிறைந்ததுதான் . இயல்பாக வாழுங்கள் . கடவுள் விரும்பும் வாழ்க்கையில் வாழ முற்படுங்கள் . பாதிரியார்களைப் பற்றிக் கவலைப்படவேண்டாம் உங்களுடைய உள்ளுணர்வை, உடலை, இதயத்தை மற்றும் அறிவுக்கூர்மையை காதுகொடுத்துக் கேளுங்கள் . உங்களை நம்புங்கள் . உங்களுடைய உயிர்த்தன்மை, உங்களை எங்யேயெல்லாம் அழைத்துச் செல்ல விரும்புகிறதோ, அங்கேயெல்லாம் தயங்காமல் செல்லுங்கள் . நீங்கள் எதையும் இழக்கநேராது. அப்படி இயல்பாகச் சென்றால் உங்கள் வாழ்க்கையில் ஒருநாள் அந்தத் தெய்வீக நிலையின் வாசலை கண்டிப்பாக அடைவீர்கள்.

இயல்பான இயற்கைத் தன்மைதான் உங்களுக்குள்ளே உள்ள கடவுள். இயற்கை உங்களை இழுப்பது என்பது, உங்களுக்குள்ளேயுள்ள கடவுள் தன்மை உங்களை இழுப்பதற்கு சமம்தான் . உங்களுக்கு விஷமிடுபவற்களின் பேச்சுக்கு செவிசாய்க்காதீர்கள் . இயற்கையின் இழுப்போடு ஒத்துச்செல்லுங்கள். அதற்கு மேலான நிலை ஒன்று இருக்கிறது. அந்த மேலான நிலையின் வேர், கீழான

நிலையில்தான் இருக்கிறது. சேற்றிலிருந்துதான் செந்தாமரை மலரவேண்டும் உடல்வழியாகத்தான் , ஆன்மா வளரவேண்டும். பாலுணர்வு மூலமாகத்தான், சமாதிநிலை ஏற்படவேண்டும்.

நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . பிரக்ஞைத் தன்மை, உங்கள் உணவிலிருந்துதான் வளரவேண்டும் . கீழை நாட்டில் , உணவை, அன்னம் பிரம்மம் (ANNAM BRAHM) என்று அழைக்கிறார்கள். அதாவது, உணவுதான் கடவுள் என்பதாகும் . ஏன் இப்படி உணவைக் கடவுளுக்கு சமம் என்று கூறுகிறார்கள் . உணவிலிருந்துதான் கடவுள் வளருகிறார் . கீழானநிலை, மேலானநிலையோடு சம்மந்தப்பட்டிருக்கிறது.

இப்பொழுது. உங்களுடைய பாதிரிமார்கள் , கீழான நிலையை அடக்குங்கள் என்று உங்களுக்குப் போதிக்கிறார்கள். தர்க்கரீதியாக இது சரிதான்.

ஆனால் , அவர்கள் ஒன்றை மறந்துவிட்டார்கள் . அதாவது, கடவுள் தர்க்கத்துக்கு அப்பாற்பட்டவர் என்பதுதான் அது. அவர்கள் சொல்வது மிகவும் தர்க்கரீதியானது என்பதால்தான் , நீங்கள் அதை நம்புகிறீர்கள். ஆகவேதான், பலநூற்றாண்டு காலமாக, மக்கள் அவர்களைப் பின்பற்றி வருகிறார்கள். நீங்கள் மேலான நிலையை அடைய வேண்டும் என்றால் , கீழான நிலைக்கு எந்த முக்யத்வமும் கொடுக்க வேண்டாம் என்று அவர்கள் சொல்வது, உங்களுடைய பகுத்தறிவுக்கு ஏற்றதாக இருக்கலாம் . நீங்கள் மேலானநிலையை அடைய வேண்டும் என்றால், அந்த மேலான நிலையிலேயே கவனம் வைக்கவும், கீழான நிலையை ஒதுக்கவும் என்று அவர்கள் சொல்வது, மிகச்சரியானது என்றே தோன்றும். ஆனால் , இதில் உள்ள பிரச்சினை என்னவென்றால் , கடவுள் தர்க்கத்துக்கு பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டவர் என்பதுதான்.

ஒருநாள் , துருவா (DHRUVA) என்னிடம் பேசிக்கொண்டு இருந்தார். சில சமயம் தானும் மற்றும் தன்னுடைய சகஜ் (SAHAJ ) குழுவில் உள்ளவர்கள் அனைவரும் முழு மௌனமாகிவிடுகிறார்கள்

என்பதை அறிந்து ஆச்சரியப்பட்டிருக்கிறார் . அந்தச் சில கணங்கள், மிகமிக அழகு வாய்ந்தது. அவர், அந்த அழகு எப்படி, எங்கேயிருந்து வந்தது என்பது புரியாத புதிராகவே இருக் கிறது. அப்பொழுது அது எங்களுடைய கட்டுப்பாட்டில் இல்லை, அதைப்பற்றி எங்களால் நினைக்கவும் முடியவில்லை. அது தானகவே வந்து எங்களை ஆக்கிரமித்துக்கொள்கிறது. ஆனால் , அது நிகழும்பொழுது, உடனே அந்தக் குழுவில் உள்ள அனைவருமே, தங்களைவிட மிக மேலான ஒன்று. மிக உயர்ந்த தெய்வீகமான ஒன்று தங்களை வந்து அடைந்திருப்பதை மட்டும் உணர்கிறோம் . ஆனால் , அதை எங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லோருமே முழு அமைதி நிலையை அடைந்து விடுகிறோம்' என்று சொன்னார்.

இப்பொழுது, அவருடைய தர்க்கரீதியான மனம் , அந்தக் குழுவில் உள்ள அனைவருமே, தன் நோக்கப்படி அந்த மௌனநிலையை அடைய வேண்டும் என்று நினைக்கிறது. நான் அவரிடம் , ''நீங்கள் அதை தர்க்கரீதியாகச் சிந்திக்கலாம். ஆனால் கடவுள் தர்க்கத்திற்கு அப்பாற்பட்டவர் . நீங்கள் ஒரு சில கணங்கள் மௌனமாக இருந்தால் , அந்தக் கணங்கள், மீண்டும் எப்பொழுது வரும் என்று சொல்ல முடியாது, வராமலேகூட போகலாம் என்றேன்.

வாழ்க்கை, எப்பொழுதும் இரண்டு மாறுபட்ட தன்மைகளில் (POLARITY) தான் இயங்குகிறது. நீங்கள் பகல் முழுவதும் கடுமையாக உழைத்தால்தான், கடுமையாக விறகு வெட்டினால்தான், இரவு முழுவதும் நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்க முடியும். ஆனால், மறுநாள் காலை, நீங்கள் தர்க்கரீதியாக , " பகல் முழுவதும் , கடுமையாக உழைத்து, களைப்படைந்ததால் , இந்த ஆழ்ந்த உறக்கத்தை அடைந்தேன் . மாறாக , பகல் முழுவதும் ஓய்வில் இருந்தால் , இதைவிட மிக ஆழ்ந்த தூக்கத்தை அடையலாம் என்று கருதுகிறேன் " என்று நினைத்து அப்படிச் செய்தால் , உங்களால் ஆழ்ந்த தூக்கத்தை அடைய முடியுமா? நீங்கள் சாதாரண தூக்கத்தையும் இழந்துவிடுவீர்கள். ஆகவேதான்,

பெரும்பாலான பணக்காரர்கள்

அவதிப்படுகிறார்கள்.

கடவுள் தர்க்கரீதியானவர் இல்லை. அங்கும் . இங்கும் அலைந்து கடுமையான வெயிலில் , பகல் முழுவதும் பிச்சை எடுக்கும் ஒரு பிச்சைக்காரனுக்கு, கடவுள் , இரவில் ஆழ்ந்த தூக்கத்தை கொடுக்கிறார் . அதைப்போல , உழைப்பாளிகள் அனைவருக்குமே, ஆழ்ந்த தூக்கத்தைக் கொடுக்கிறார்.

இது ஒரு மாறுபட்ட நிலைதான் நீங்கள் எவ்வளவுக்கெவ்வளவு உங்களுடைய சக்தியை செலவிட்டு, களைப்பை அடைகிறீர்களோ, அந்த அளவுக்கு, நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தை அடைய முடியும். ஏனென்றால், ஆழ்ந்த தூக்கத்தில்தான், நீங்கள் அதிக சக்தியைப் பெற முடியும் . உங்களுக்குக் கொடுத்த சக்தியை, நீங்கள் செலவிடாமல் இருந்தால் , மேற்கொண்டு அதைக் கொடுப்பதால் என்ன பயன் ? நீங்கள் வேலையே செய்யாவிட்டால் , எதற்காகத் தூங்க வேண்டும் ? யார் . தன் சக்தியை செலவிடுகிறார்களோ, அவர் களுக்குத்தான் அது கொடுக்கப்படுகிறது.

இப்பொழுது, துருவா தர்க்கரீதியாக நினைக்கிறார் . ஆனால் , அதைத் தன் மனத்தின் வழியாக , அவர் அடைய நினைத்தால் , அந்தச் சில கணத்தைக்கூட அவர் இழக்க நேரிடும். அப்பொழுது, அந்தக் குழுவில் உள்ள அனைவரது மனங்களும் வேலை செய்து கொண்டுதான் இருக்கும் . ஆனால் , அவர்கள் வெளியில் அமைதியாக இருப்பது போலத்தான் தெரியும். ஆனால் அவர்களுடைய மனம், அவர்களை விரட்டிக்கொண்டே இருக்கும் . இப்பொழுது அவர்கள் கடுமையாக வேலை செய்துகொண்டு இருக்கிறார்கள், அவர்கள் , இப்பொழுது தங்களுடைய உணர்வுகளை, சக்தியை, தங்களிடம் ஏற்படும் எண்ணங்களை வெளியே தள்ளிக்கொண்டுதான் இருக்கிறார்கள் . இப்படி எல்லாவற்றையும் வெளியே தள்ளி, உடலாலும், மனதாலும் களைப்படைந்து. மேற்கொண்டு வெளியே

தள்ளுவதற்கு எதுவுமே இல்லாதநிலையில் , திடீரென்று, அந்தக் கணம் வருகிறது, அந்தப் பேரமைதி உங்களை வந்து ஆட்கொள்கிறது. அப்பொழுது, உங்களுடைய உயிர்த்தன்மைக்கும் , அந்த பிரபஞ்ச பேரியிக்கத்திற்க்கும் தொடர்பு ஏற்படுகிறது.

வேலையிலிருந்துதான் , ஓய்வு வெளியேற்றத்திலிருந்துதான் , அமைதி கிட்டும் . இப்படித்தான் , கடவுள் மாறுபட்ட தன்மையில் வேலை செய்கிறார் . அவர் , தர்க்கத்துக்கு மிகமிக அப்பால் இருக்கிறார்.

இப்பொழுது, நீங்கள் ஒரு பாதுகாப்பான வாழ்க்கையை அடைய நினைத்தால், முதலில் நீங்கள் ஒரு பாதுகாப்பற்ற வாழ்க்கையில் வாழ வேண்டும் . நீங்கள் உயிருடன் வாழநினைத்தால், முதலில் நீங்கள் எந்தக் கணத்திலும் இறப்பதற்குக் கூடத் தயாராக இருக்க வேண்டும். இப்படித்தான் கடவுள் தர்க்கத்தக்கு மாறாக வேலை செய்கிறார் . நீங்கள் , உண்மையிலேயே உண்மையாக இருக்கவேண்டும் என்றால் , நீங்கள் அபாயத்தை சந்திக்கத் தயாராக இருக்க

வேண்டும் . உதாரணமாக , நீங்கள் ஒருபோதும் கோபப்படக்கூடாது என்று போதிக்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்களும், கோபமே அடையாத ஒருவன், மிகவும் அன்பு மயமாகவே இருப்பான் என்று கருதுகிறீர்கள் . நீங்கள் நினைப்பது தவறு. கோபமே அடையாத ஒருவனால் , உண்மையான அன்பு செலுத்த முடியாது. அவைகள் இரண்டும் ஒன்றாகவே இருக்கும் , ஒரே பெட்டியில்தான் இருக்கும் . ஒரு மனிதன் , உண்மையிலேயே அன்புடன் இருந்தால் , சில சமயம் , அவன் உண்மையிலேயே கோப உணர்வில் இருக்கக்கூடும் . அது, அந்த முழுமையான அன்பிலிருந்து வெளிப்படுவதால் , அதுவும் முழுமையாக, அழகாக இருக்கும். அப்பொழுது, அந்தக் கோபசக்தி, மிகவும் சூடாகவே இருக்கும் ! ஆனால் , அந்த கோபத்தால் , நீங்கள் துன்பப்படமாட்டீர்கள் ! பார்க்கப்போனால் , நீங்கள் அவருடைய

கோபத்தைக்கண்டு, நன்றியுடையவர்களாக இருப்பீர்கள்! நீங்கள் கவனித்தது இல்லையா? நீங்கள் ஒருவரை, உண்மையிலேயே நேசித்தால் , அவருக்கு மாறுபட்டு நீங்கள் ஏதாவது செய்தால் , அவர் உண்மையிலேயே, முழுமையாக கோபப்படக் கூடும் . அவர் அந்த அளவுக்கு உங்கள் மேல் அன்போடு இருப்பதால் , நீங்கள் , அவர் கோபப்பட்டது சரிதான் என்று நினைப்பீர்கள் . அதற்காக மேலும் நன்றியுடையவராக இருப்பீர்கள் . நீங்கள் எதையும் கொடுக்க விரும்பாதபொழுது, எந்த அபாயத்தையும் சந்திக்கத் தயாராக இல்லாதபொழுது, நீங்கள் சிரித்துக்கொண்டே இருக்கலாம். ஆனால், அதில் எந்த ஆழமும் இருக்காது.

உங்களுடைய குழந்தை, ஒரு பள்ளத்தில் குதிக்க முயன்றால் , உங்களால் கோபப்படாமல் இருக்க முடியுமா? நீங்கள் கத்தமாட்டீர்களா? உங்களுடைய சக்தி சூடு அடையாதா? நீங்கள் சிரித்துக்கொண்டேதான் இருப்பீர்களா?

ஒரு கதை

ஒரு சமயம் , சாலமன் (SALOMAN) அரண்மனை நீதி மண்டபத்தில் ஒரு குழந்தைக்காக, இரண்டு பெண்கள் உரிமை கொண்டாடினார்கள். இதற்கு எப்படித் தீர்ப்புக் கூறுவது? அந்தக் குழந்தையால் பேசமுடியாது.

சாலமன் அவர்களை நன்றாகக் கவனித்து விட்டு, மிகுந்த யோசனைக்குப்பின் , "இப்பொழுது நான் ஒரு காரியத்தைச் செய்யப்போகிறேன் . அதாவது, இந்தக் குழந்தையை இரண்டாக வெட்டப் போகிறேன் . அதில் ஆளுக்குப் பாதி எடுத்துக்கொள்ளுங்கள். அதைத்தவிர வேறுவழி, எனக்குத் தெரியவில்லை. அது, A க்கு உரியதா அல்லது B க்கு உரியதா என்று எந்த சாட்சியமோ, ஆதாரமோ இல்லை. " என்றார். 3

அந்தக் குழந்தையை ஏந்திக்கொண்டிருந்த அந்த பெண்மணி, சிரித்தவாறே இருந்தாள் . ஆனால் , அடுத்தவள் , அந்த அரசனையே கொல்லும் அளவுக்கு, பைத்தியம் போல் சீற்றம் கொண்டு “ நீங்கள் என்ன சொல்கிறீர்கள் . உங்களுக்குப் பைத்தியம் ஏதும் பிடித்து விட்டதா, என்ன ?" என்று கேட்டு, கோபத்தில் நெருப்புப் போல மாறிவிட்டாள் . மேலும் அவள் ,

"இதுதான் உங்கள் டைய

தீர்ப்பு என்றால் நான் என்னுடைய உரிமையை விட்டுக் கொடுத்துவிடுகிறேன் அந்த குழந்தை உயிரோடு, அவளிடமே இருக்கட்டும் . ஆமாம் . அது என்னுடைய குழந்தை இல்லை. அது, அவளுடையதுதான் " என்று வருத்தமாகவும் கோபமாகவும் சொன்னாள் . ஆனால் , அவளுடைய கண்களிலிருந்து நீர் வழிந்துகொண்டே இருந்தது.

இதைப் பார்த்த அந்த அரசன் , " இந்தக் குழந்தை உன்னுடையதுதான் . நீ , அதை எடுத்துச் செல்லலாம் என்று தீர்ப்பு வழங்கினார்.

அடுத்தவள், சிரித்தவாறே இருந்தாள். அரசன் முதலில் சொன்ன தீர்ப்பு, அவளை ஒன்றும் செய்யவில்லை. ஏனென்றால் , அவளுக்கு அந்தக் குழந்தையிடம் உண்மையான அன்பு இல்லை

நீங்கள் அன்போடு இருந்தால்தான் , உங்களால் கோபப்பட முடியும் அந்த அன்புதான் , அதற்கு உரிமை கொண்டாட முடியும் . நீங்கள் உங்களை நேசித்தால் இது வாழ்க்கைக்கு மிகவும் அவசியம், இல்லாவிட்டால் அதை இழந்துவிடுவீர்கள் - நீங்கள் வாழ்க்கையை ஒருக்காலும் அடக்கமாட்டீர்கள் மாறாக , அதை வெளியிடுவதில் தான் ஆனந்தமாக இருப்பீர்கள் அது மகிழ்ச்சியோ, துக்கமோ, உச்ச இன்பமோ, கீழான இன்பமோ, பகல் , இரவு என்று எல்லாவற்றையும் வெளியிடுவதிலேயே குறியாக இருப்பீர்கள் . ஆனால் , நீங்கள் செயற்கையாக வாழவே, கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள் . நீங்கள் பழைய கொள்கைகளில் பிடிவாதமாக இருக்கவே ஆசைப்படுகிறீர்கள் . நீங்கள் கோபமாக இருந்தால் , அது வெளியே தெரியாதபடி, நீங்கள் பொய்யாக , சிரித்துக் கொண்டிருக்கப் பழகிக் கொண்டு இருக்கிறீர்கள் . நீங்கள் பிறரை, கோபமாக அடிக்க நினைத்தால் , அதை அடக்கிக்கொண்டு விடுகிறீர்கள் . நீங்கள் பாலுணர்வை மிகவும் உணர்ந்தால் , அதை அடக்க , ஏதாவது மந்திரங்களை சொல்கிறீர்கள் . உங்களுடைய மனத்தை இப்படி திசை திருப்ப முயற்சி

செய் கிறீர்கள் . உங்களுக்குள்ளே உள்ளவற்றில் , நீங்கள் ஒரு போதும் உண்மையாக இருப்பதில்லை. .

ஜோ (JOE) தன்னுடைய மகளை அழைத்துக்கொண்டு, அவள் விளையாட ஒரு பூங்காவுக்குச் சென்றார் . வழியில், ஒரு ஹோட்டலுக்கு முன்பு நின்றார்கள் பிறகு அவர் ஏதோ நினைத்துக்கொண்டு, அவளை அழைத்துக்கொண்டு, பூங்காவுக்குச் சென்றார் . அப்பொழுது, அவள் , " அப்பா, நான் விரும்புகிறேன்..." என்றாள். அவர், அவளை மேலும் பேச விடாமல் தடுத்து, அவளுக்கு சோளப் பொறி வாங்கிக் கொடுத்தார்.

பிறகு, அவர்கள் ஒரு ஐஸ்கிரீம் கடைக்கு முன்னால் வந்தபொழுது, அவள் மீண்டும் , " அப்பா, நான் விரும்புகிறேன் ...." என்று மீண்டும் சொன்னாள். அவர் சற்று நின்று கோபமாக அவளிடம், "நீ விரும்புகிறாய்... நீ விரும்புகிறாய் .... நீ என்ன விரும்புகிறாய் என்பது எனக்குத் தெரியும் . நீ இப்பொழுது ஐஸ்கிரீமை விரும்புகிறாய் " என்றார்.

அவள் , கெஞ்சியவாறு, " அப்பா, நான் வாந்தி எடுக்க விரும்புகிறேன்" என்றாள்.

இதைத்தான் , ஆரம்பத்திலிருந்தே, அவள் சொல்ல நினைத்தாள். ஆனால், யார் கேட்கிறார்கள்?

உங்கள் இயல்பை நீங்கள் உணராமல் தடுப்பதே அடக்குதல் என்பது. அது. உங்களை அழிப்பதற்காகத் திணிக்கப்பட்ட ஒரு தந்திரம், உங்களை அழிப்பதற்கும், நீங்கள் வலிமையற்று, தைரியமற்று இருப்பதற்கும் , அடக்குதல் என்பது வழிவகுக்கும் . உங்களையே நீங்கள் எதிரியாக நினைக்க வழி செய்யும் நீங்கள் உங்களிடமே சண்டைபோட்டுக் கொள்ளும் சூழ்நிலையை, அது ஏற்படுத்திவிடும் . அப்படி நீங்கள் உங்களுக்குள்ளே சண்டைபோட்டுக் கொண்டிருந்தால் , உங்களுடைய தைரியம் மிகவும் குறைந்துவிடத்தான் செய்யும்.

இந்த சமூகம் , மிகவும் தந்திரமாக ஒரு பெரிய ஏற்பாட்டைச் செய்திருக்கிறது. ஒவ்வொருவரும் ,

தனக்கு எதிராகவே இயங்கவேண்டும் என்று அது அந்தத் தந்திரமான விளையாட்டை உங்கள் மேல் திணித்திருக்கிறது. ஆகவே, நீங்கள் தொடர்ந்து உங்களிடமே சண்டைபோட்டுக் கொண் இருக்கிறீர்கள். வேறு வேலை எதையும் செய்ய உங்களிடம் சக்தி எதுவும் மீதமில்லை. இந்தத் தொடர்ந்த சண்டையை, நீங்கள் உணர்ந்திருக்கிறீர்களா? இந்தச் சமூகம் , உங்களை பலகூறுகளாக போட்டிருப்பதை உணரவில்லையா? உங்களை எப்பொழுதும் ஒரு குழப்பநிலையில் , வைத்திருப்பதை நீங்கள் அறியவில்லையா? உங்களால் , உங்களை அறிந்துகொள்ள முடிகிறதா? நீங்கள் எங்கே செல்கிறீர்கள் , என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் , எதற்காக இந்த உலகத்தில் இருக்கிறீர்கள் என்பது பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. ஆமாம் , இந்த சமூகம் , உங்களை மிக்க குழப்பத்தில்தான் அமுக்கி வைத்திருக்கிறது.

இந்த குழப்ப நிலையிலிருந்துதான் , நீங்கள் கருதும் பெரிய தலைவர்கள் இந்த உலகத்தில் உண்டாகியிருக்கிறார்கள் . உதாரணமாக , அடால்ப் ஹிட்லர் , மா சேதுங் , ஜோசப் ஸ்டாலின் மற்றும் வாட்டிக்கான் போப்பு - இப்படிப்பட்ட ஆயிரக்கணக்கான அருந் தலைவர்கள் தோன்றியிருக்கிறார்கள் . உங்களுடைய அழிவுக்கு, இவர்களைப் போன்றவர்கள்தான் காரணம்.

தந்த்ரா, "எதையும் வெளியிடும் தன்மையில் இருங்கள் " என்று கூறுகிறது. ஆனால் , நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . வெளியிடுதல் என்பது பொறுப்பற்ற செயல் அல்ல . அது, " நீங்கள் எதையும் அறிவுப்பூர்வமாக வெளியிடுங்கள் " என்றுதான் கூறுகிறது. அதனால் பிறருக்கு எந்தத் தீங்கும் உங்களால் ஏற்படாது. தனக்கே தீங்கு செய்துகொள்ளும் எந்த மனிதனும் , ஒரு வகையில் அபாயகரமானவன்தான் . அவனையே, அவன் விரும்பாதபொழுது, அவன் அபாயகரமானவனாக மாறிவிடுகிறான். அவன் யாரையும் துன்புறுத்துவான். அவனால் எல்லோருக்கும் ஆபத்துதான்.

' நீங்கள் துக்கமாகவும், கவலையோடும் இருந்தால் , நீங்கள் உங்களை சுற்றியுள்ளவர்களையும் , அதே நிலைக்குக் கொண்டுவந்து விடுவீர்கள் அதைப்போல நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் , நீங்கள் ஒரு மகிழ்ச்சியான சமூகத்தை உண்டாக்க முடியும் . ஏனெனில் ஒரு மகிழ்ச்சி நிறைந்த சூழ்நிலைதான், அந்த மகிழ்ச்சியை ஏற்படுத்த முடியும் நீங்கள் கொண்டாட்டத்தில் இருந்தால்தான் , மற்றவர்களையும் கொண்டாட்டத்தில் ஆழ்த்த முடியும் இதுதான் உண்மையான மதம் . உங்களுடைய மகிழ்ச்சிதான் , இந்த முழு உயிர்த்தன்மையை ஆசீர்வதிக்கும்

ஆனால் , அடக்குதல் உங்களைப் பொய்யான நிலையில் தா வைத்திருக்கும் . இந்த அடக்குதலால் , உங்களுடைய கோபம், பாலுணர்வு, பேராசை போன்ற உணர்வுகள் அழிந்துவிடும் என்று நீங்கள் கருதுகிறீர்கள் இல்லை. அவைகள் ஒருக்காலும் மறையாது. அவைகள் உங்களுடைய பிரக்ஞையற்ற நிலையில் ஆழமாகச் சென்று, அங்கிருந்து வேலை செய்ய ஆரம்பித்து விடும் அப்படி அது கீழே செல்லும் பொழுதுதான் அது அபாயகரமாக வேலை செய்யும் . அப்பொழுது, அது மிகவும் வலிமை நிறைந்ததாகிவிடுகிறது. உங்களுடைய , சகல மனநல சிகிச்சைளும் , இந்த ஆழமான நிலையில் மறைந்திருக்கும் உணர்வுகளையும் , வெளியே கொண்டு வருவதில் தான் , அடங்கியிருக்கிறது. நீங்கள் , அதைப் பிரக்ஞை மனநிலைக்குக் கொண்டு வந்துவிட்டால், அதை வெளியேற்றிவிடலாம்.

ஆனால் , இந்தச் சமூகமும் , உங்களுடைய பெற்றோர்களும் உங்களை அழித்துவிட்டார்கள் . உங்களுடைய குழந்தைகளை, நீங்கள் அழித்துக்கொண்டு இருக்கிறீர்கள் . இப்பொழுது, இது ஒரு விபரீதமான வட்டமாகிவிட்டது. இதிலிருந்து, ஒருவன் தைரியமாக வெளியே வரவேண்டும்.

நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்துகொண்டால், நான் உங்களுக்குக் கொடுக்கும் சந்நியாசம் , நீங்கள் அந்த விஷத்தன்மையுடைய வட்டத்திலிருந்து வெளியே வரவேண்டும் என்ற நோக்கத்தில் தான் . அதனால் ,

நீங்கள் உங்களுடைய பெற்றோர்களிடம் சண்டை போடாதீர்கள் - அவர்களால் இதைவிட, நல்லவிதமாகச் செய்ய முடியாது. ஆனால், இப்பொழுது நீங்கள் அதிக பிரக்ஞைத் தன்மையுடன் செயல்படுங்கள் . உங்களுடைய குழந்தைகளை உங்களுடைய பெற்றோர்கள் உங்களை வளர்த்தது போல, நீங்களும் வளர்க்காதீர்கள் . அவர்கள் , எந்த உணர்வுகளையும் வெளியிட அனுமதியுங்கள் . அவர்கள் உண்மையாக இருக்க , உதவி செய்யுங்கள் . அப்பொழுது, அவர்களுக்குள்ளே உள்ளதை, தைரியமாக வெளியிட முடியும். அதற்காக, அவர்கள் தன் வாழ்நாள் முழுவதும், நன்றியுடைவர்களாக இருப்பார்கள் . ஏனென்றால் , அவர்களுக்குள்ளே எந்தச் சண்டையும் இருக்காது. அவர்கள் தன் இயல்பான ஒரே நிலையில் இருப்பார்கள். அவர்கள் ஒருபோதும் துண்டு துண்டாக இருக்கமாட்டார்கள் . அவர்கள் எந்தக் குழப்பத்திலும் இருக்கமாட்டார்கள் . அவர்களுக்கு, தாங்கள் என்ன செய்கிறோம் என்பது நிச்சயமாகத் தெரியும்.

உங்களுக்கு, நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது உண்மையாகத் தெரிந்தால் , நீங்கள் அதை உண்மையாகச் செய்வீர்கள். நீங்கள் உ உங்களுடைய குழப்பத்தில் , என்ன செய்கிறோம் என்று தெரியாவிட்டால் , நீங்கள் அந்தச் செயலை எப்படி முழுமையாகச் செய்ய முடியும்? அப்பொழுது, யாராவது வேறு ஒருவர் , அதை எப்படிச் செய்வது என்று போதித்தால், அதை உடனே பின்பற்ற வேறு ஒருவர், அதை எப்படிச் செய்வது என்று போதித்தால், அதை உடனே பின்பற்ற ஆரம்பித்துவிடுகிறார்கள் . அப்பொழுது, யார் வேண்டுமானாலும் உங்களுடைய தலைவனாக முடியும் . உங்களை யார் வேண்டுமானாலும் , ன்னுடைய வாதத்திறமையால் , உங்களைத் திருப்திப்படுத்த முடியும் . இப்பொழுது, நீங்கள் அவர்களுக்குப் பின்னால் செல்லத் தயாராகிவிடுகிறீர்கள் . இப்படி, நீங்களும் , உங்களுடைய முன்னோர்களும் , பல தலைவர்களை பின்பற்றி வந்திருக்கிறீர்கள் . அதாவது, உங்களை நீங்களே அழித்தே வந்திருக்கிறீர்கள்.

ஆகவே, என்னுடைய இயல்பைப் பின்பற்றுங்கள்.

ஒவ்வொரு பரம்பரையும் , அந்தப் பரம்பரையில் உள்ளவர்களை, அழித்தே வந்திருக்கிறது. ஆகவே, ஒருவன் , பிரக்ஞையோடு, ஜாக்கிரதை உணர்வோடு இல்லாவிட்டால் , அவனுக்கு ஏற்படும் அழிவை, அவனால் தவிர்க்கவே முடியாது.

கேள்வி 5:

" என்னை வெறுக்கும் ஒரு பெண்ணை, ஏன் நான் , திருமணம் செய்துகொண்டேன் ? நானும் அவளை வெறுக்கிறேன்."

உங்களை வெறுக்கும் ஒரு பெண்ணை, நீங்கள் திருமணம் செய்துகொண்டதைப்பற்றி, எனக்கு என்ன தெரியும் ? யார் உங்களை வெறுப்பது? இது என்னுடைய யூகமாக இருக்கலாம் . அதாவது, நீங்கள் இருவரும் வெறுப்பதால்தான் , நீங்கள் இருவரும் திருமணம் செய்து கொண்டீர்கள் என்று நான் நினைக்கலாமா?

திருமணத்தில் இரண்டு வகை உண்டு. காதலினால் ஏற்படும் திருமணம் வெறுப்பினால் ஏற்படும் திருமணம் . காதலித்து திருமணம் செய்துகொள்வது. மிகவும் அரிதுதான் . ஏனென்றால் , அங்கு உண்மையான அன்பு நிகழ்வதே இல்லை. என்னைப் பொருத்தவரையில் , இது மிகவும் சரிதான் . ஏனென்றால் , அவர்கள் உங்களை கொடுமைப்படுத்தத்தான் விரும்புகிறார்கள் . அவர்கள் உங்களைக் திருமணம் செய்து கொள்ளும் அடிப்படை நோக்கமே அதுதான் . அப்பொழுதுதான் உங்களை நிச்சயமாக, நிரந்தரமாக, கொடுமைப்படுத்த முடியும்!

ஒரு நிகழ்ச்சி

முல்லா நசுருதீன் , ஒரு க்கட்டான சூழ்நிலையில் மாட்டிக் கொண்டுவிட்டார். அவர், மூன்று பெண்களை விரும்பி, அவர்களைத் திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்து, காதல் உறவை ஏற்படுத்திக் கொண்டு

விட்டார் . பிறகு, ஒவ்வொரு பெண்ணும் , அவர் வாக்களித்தபடி தன்னை மணந்துகொள்ளும்படி வற்புறுத்தினார்கள் முல்லாவுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. கடைசியில் , ஒரு வக்கீலைச் சந்தித்து ஆலோசனை கேட்டார்.

அந்த வக்கீல் , ' நான் ஒன்று சொல்கிறேன் . அதாவது, நீங்கள் தற்கொலை செய்து கொண்டுவிட்டதாக , எல்லா நாளிதழிலும் , செய்தியை வெளியிட ஏற்பாடு செய்துவிட்டார்கள் . அவருடைய சுற்றத்தினர் மற்றும் நண்பர்கள் எல்லாம் கூடி, சோகமே உருவாக நின்று முல்லாவுக்கு கடைசி அஞ்சலி செலுத்திக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது, அவர் காதலித்த முதல் பெண் , அங்கு வந்து, அவரது உடலைப் பார்த்து பெருமூச்சுவிட்டவாறு, ' பாவம் , நசுருதீன் . நல்ல மனுஷன் அவரை இழந்தது என் துர் அதிர்ஷ்டம்தான் என்று சொல்லிவிட்டுச் சென்றாள்.

இரண்டாவது பெண் அடுத்துவந்து, " வணக்கம் . நசுருதீன் கெட்டகாலம் வந்தால் , சேர்ந்தேதான் வரும் என்று ஆறுதலாகச் சொல்லிவிட்டுச் சென்றாள்.

ஆனால் , அவர் காதலித்த மூன்றாவது பெண் அங்கு சற்று கோபத்துடன் வந்து, " நீ ஒரு அருவருப்பான , கோழையான எலி. '' நாம் இருவரும் திருமணம் செய்துகொண்ட பின் , உன் மடியிலேயே உயிரைவிடுவேன் '' என்று சத்தியம் செய்தாய் . இப்பொழுது என்னை ஏமாற்றிவிட்டாய் . அதற்காக , நீ இறந்தாலும் சரி, நான் உன்னுடைய உடலைச் சுடத்தான் போகிறேன். அப்படியாவது, எனக்கு திருப்தி ஏற்படட்டும் !" என்று தன் கைப் பையிலிருந்து ஒரு துப்பாக்கியை எடுத்து, அவரது உடலுக்கு நேரே குறிபார்த்தாள் . அப்பொழுது, '' ஹலோ, ஒன்றும் பதட்டப்படாதே' என்று அந்தப் பிணம் கூவியவாறு , எழுந்து உட்கார்ந்து கொண்டது! அது மீண்டும் , " கவலைப்படாதே. நான் உன்னை திருமணம் செய்துகொள்கிறேன்!" என்று கூறியது.

உன்னை வெறுக்கும் பெண்ணை, அவளை வெறுக்கும் நீங்களும், எப்படித் திருமணம் செய்து கொண்டீர்கள் என்று எனக்குப் புரியவே இல்லை. ஆனால், நன்றாகக் கவனியுங்கள். நீங்கள் மிகுந்த குழப்பத்தில் இருக்க வேண்டும். ஆனால் கவலைப்படாதீர்கள். எல்லோரும் அப்படித்தான் - இது இயல்பானதுதான்.

எல்லோரும், எப்பொழுதும் குழப்பத்திலேயே இருக்கிறார்கள். தாங்கள் என்ன செய்கிறோம், எதற்காகச் செய்கிறோம் என்று எதையும் சிந்திக்காமல்தான் செய்கிறார்கள். சிலசமயம், ஒரு பெண்ணின் கவர்ச்சியான முகத்தைப் பார்த்து, நீங்கள் திருமணம் செய்து கொள்கிறீர்கள். அவளுடைய அழகான முகத்துக்கும், திருமணத்துக்கும் என்ன சம்மந்தம்? இரண்டு, மூன்று நாட்களில், உங்களுடைய தேனிலவு மோகம் அகன்று விடும். பிறகு அவளுடைய முகத்தை மீண்டும் பார்க்கமாட்டார்கள்! நீங்கள் ஒருக்காலும், ஒரு உண்மையான பெண்ணை திருமணம் செய்துகொள்ள மாட்டீர்கள். நீங்கள் ஒரு முகத்தை, ஒரு உடலைத்தான் திருமணம் செய்து கொள்கிறீர்கள். இவைகளுக்கும், திருமணத்துக்கும் என்ன சம்மந்தம்? |

ஒரு சமயம், அவளுடைய இனிமையான குரலைக் கேட்டு, மகிழ்ந்து அவளை திருமணம் செய்து கொண்டிருக்கலாம். முட்டாள் தனமான காரணங்களுக்காக, மக்கள் திருமணம் என்ற வலையில் விழுகிறார்கள். இப்பொழுது அந்த இனிமையான பாடும் குரல், உங்களுக்குச் சமைத்துப் போடாது; உங்களுடன் படுக்கையில் படுத்துக்கொள்ளாது. சில நாட்கள் கழித்து, அந்த இனிமையான குரலை மறந்தேவிடுவீர்கள். உண்மையாக அவளுடன் வாழ்வதற்கும், இந்த குரலுக்கும் எந்தவித சம்மந்தமும் இல்லை.

ஒரு சில பெண்களுக்கு, நல்ல வளைவுகளுள்ள, வலுவான உடற்கட்டு இருக்கலாம். இதற்கும், வாழ்க்கைக்கும் என்ன சம்மந்தம்? சில பெண்கள் நடப்பது கவர்ச்சிகரமாக இருக்கும். அதற்காக, நீங்கள் உங்கள் வாழ்க்கையைத் தியாகம் செய்ய வேண்டிய

அவசியம் என்ன? சற்று சிந்தித்துப்பாருங்கள். இந்தச் சாதாரண விஷயங்களுக்கு, ஏன் அவ்வளவு முக்யத்வம் கொடுத்து, உங்களுடைய சுயசிந்தனையை இழக்கிறீர்கள்?

அணுகுமுறைளே, உண்மையான அஸ்திவாரமே வாழ்க்கைக்குத் தேவை. உண்மையான

ஆனால் , நீங்கள் இப்படி மேலோட்டமான , மாறக்கூடியவைகளுக்கு முக்யத்வம் கொடுக்கிறீர்கள். இதற்கு முக்கிய காரணம் , நீங்கள் பிரக்ஞையாக செயல்படாததுதான் . நீங்கள் உங்களுடைய கலியாணத்தில் மட்டுமல்ல ; உங்களுடைய வாழ்க்கையையே அப்படித்தான் நடத்துகிறீர்கள் . எதையும் ஆழமாகப் பார்ப்பது இல்லை. வாழ்க்கை, உங்களிடமிருந்து அதிகமான பிரக்ஞைத் தன்மையையும் , பொறுப்பையும் , புரிந்துகொள்ளுதலையும் மற்றும் அறிவுக்கூர்மையையும் எதிர்ப்பார்க்கிறது.

அறிவு கூர்மையுடன் இருக்க ஆரம்பியுங்கள் . உங்களுடைய துன்பம் மெல்ல , மெல்ல குறைய ஆரம்பிக்கும்.

எதையும் உற்று கவனியுங்கள் . எல்லாவற்றிற்கும் , நீங்கள் வெறுமனே ஒரு சாட்சியாக இருந்து பாருங்கள். அதில் சம்மந்தப்படாதீர்கள் . அப்பொழுது உண்மைநிலை என்ன என்பது விளங்கும்.

மனமற்ற நிலைதான் , அதன் கதவு'' (NOMIND IS THE DOOR)

மகிழ்ச்சியில் துள்ளுகிறபோது பார்க்கும் மனமும் வளமாகிறது அதனால் இதற்கு அது உபயோகமாகிறது அது பொருட்களின் பின்னால் ஓடினாலும் அதிலிருந்து அது விலகிப்போவதில்லை.

சந்தோஷம் மற்றும் பூரிப்பின் மொட்டுக்களும் பெருமையும் வளரும் போது எதுவும் எங்கும் போய்விடுவதில்லை பேசவொண்ணாப் பேரின்பம் கனிகிறது

என்ன நடந்தது எங்கே எதனில் என்பதெல்லாம்

ஒன்றும் இல்லாதது ஆகிவிடும். இருந்து அது இதற்கும் அதற்கும் பயனளிக்கும் . ஆவல்வெறி இருக்கிறதோ இல்லையோ முறை என்பது ஒன்றுமே இல்லாத தன்மை.

உலகு என்னும் சேற்றில் ஆசையுடன் புரளும் பன்றிபோல் நானிருந்தால் மாசு இல்லாத மனதில் என்னதான் கறை என்பதை நீ சொல்லவேண்டும் எது ஒன்றும் ஒருவனைப் பாதிக்காதபோது எப்படி ஒருவன் பிணைப்பில் கட்டுண்டு இருக்க முடியும்?

உண்மையை நெருங்குவதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன ; ஒன்று அறிவுடைமை (INTELLECT) அடுத்தது அறிவுக் கூர்மை (INTELLIGENCE) முதல்வகையில் , தத்துவார்த்தம் , நினைவு, ஆராய்தல் இவைகள் கலந்திருக்கிறது. அடுத்த வகையில் அறிவுக்கூர்மை மட்டுமே இருக்கிறது.

அறிவுடைமை ஒன்றைப்பற்றி அலசி ஆராய்ந்து அதைப்பற்றிய கொள்கை கோட்பாடுகளை வகுக்கும் . எல்லாக் கொள்கை கோட்பாடுகளும் அர்த்தமற்றது. ஏனெனில் உங்களுக்குத் தெரியததைப் பற்றி நீங்கள் என்ன கொள்கை கோட்பாடுகளை வகுக்க முடியும் ? உங்களுக்குப் புரியாததைப் பற்றி நீங்கள் நினைக்கக் கூட முடியாதே?

நீங்கள் அறியாததைப் பற்றி நீங்கள் நினைக்க முடியாது. அதற்கு எந்த வழியும் கிடையாது. உங்கள் மனதில் பதிந்துள்ளவைகளைத் தான் நீங்கள் மீண்டும் நினைவுக்குக் கொண்டுவர முடியும் ஆமாம் நீங்கள் பழைய எண்ணங்களிலிருந்துதான் புதியவற்றை உருவாக்க முடியும். ஆனால் உண்மையை ஒருபோதும் கண்டுபிடிக்க முடியாது. இதனால் உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்கிறீர்கள்.

அறிவு பெற்றவள் (INTELLECT) இந்த உலகத்தில் மிகப் பெரிய ஏமாற்றுக்காரன். பல நூற்றாண்டுகளாக இவன் மனிதனை ஏமாற்றியே வந்திருக்கிறான் . அவனும் ஏடாறி இருக்கிறான் . அறிவு பெற்ற மனம் உண்மையை விளக்க முயல்கிறது. அந்த மனதிற்குள் நீங்கள் புழுதியையும் தூசியையும்தான் அடைத்து

வைத்திருக்கிறீர்கள் . அதன்மூலம் நீங்கள் உண்மையை நேரடியாகப் பார்க்க முடியாது. உங்களுக்கும் உண்மைக்கும் நடு இவில் அது ஒரு பெருத்த இடைவெளியை உண்டுபண்ணுகிறது. நீங்கள் உண்மையிலிருந்து துண்டிக்கப்படுகிறீர்கள் . உங்கள் மத ஏடுகளில் நீங்கள் உங்களையே தொலைத்து விடுகிறீர்கள்.

தந்திரா, வெறும் அறிவுக்கூர்மைக்கு மட்டும்தான் , வழிகாட்டுகிறது. அறிவு பெறுவதற்கு அல்ல . அது எந்தக் கேள்விக்கும் பதில் அளிப்பது கிடையாது. எதையும் விளக்குவது இல்லை. அது, கேள்வியாக இல்லை, வெறும் தேடுதலாக இருக்கிறது மற்றும் தாகத்துடன் இருக்கிறது. அது உண்மையைப்பற்றி விசாரிக்கவில்லை. அது, உண்மைக்குள் வெறும் விசாரிப்பாக உள்ளது. அது. உண்மைக்குள் ஆழமாகச் செல்கிறது. நீங்கள் உண்மையை உண்மையாகப் பார்க்க, உங்களை சுற்றியுள்ள மேகத்தை அது அழிக்க முயற்சிக்கிறது.

தந்த்ரா எண்ணங்களுக்கு அப்பால் செல்கிறது. அது அன்பையும் காதலையும் ஏன் போற்றுகிறது? ஏனெனில் அந்த முடிவான உண்மை நிலைக்கு அன்பு நிலை (LOVE ORGASM) ஒரு அடையாளமாக இருக்கிறது. காரணம் அந்த அன்பு நிலையில் தான் . அந்தக் கணத்தில் தான் நீங்கள் உங்கள் மனதை இழக்கிறீர்கள் . சாதாரண மனிதனுக்கு ஏற்படும் மனமற்ற நிலை (NO MIND)

அப்பொழுது மாத்திரம்தான் உண்டாகிறது. அந்த உண்மையின் ஒளிக்கீற்றை சாதாரண மனிதன் உணர்வதற்கு இது ஒன்றே சாத்தியமாகிறது.

ஆகவே தான் உடலுறவு உச்ச இன்பநிலை, தந்த்ராவின் பாதையில் , மிக முக்கிய பங்கு வகிக்கிறது. அது, அந்த முடிவான உண்மைநிலை இல்லை. ஆனால் , அதைப்பார்ப்பதற்கு, தகுந்த சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுக்கிறது. அது, ஒரு சில கணநேரம் சிறிய ஜன்னலை, உங்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்கிறது. அந்த ஜன்னல் ,

நீண்டநேரம் இருப்பதில்லை - ஆனால் , அது உண்மையோடு ' சற்று தொடர்புகொள்ள , ஒரு சந்தர்ப்பத்தை அளிக்கிறது. இல்லாவிட்டால் , நீங்கள் எப்பொழுதும் எண்ணங்கள் என்ற மேகத்தால் சூழப்பட்டிருப்பீர்கள் அந்த எண்ணங்கள் , உங்களுக்கு எதையும் விளக்காது. அது கொடுக்கும் விளக்கங்களெல்லாம், முட்டாள்தனமானதுதான்.

நான், இப்பொழுது ஒரு ஜோக் சொல்லப் போகிறேன்.

ஒருவன் , கடவுளிடம் நேரடியாகப் பேசுவதுபோல , கடவுளே, என்னை ஏன் இப்படி கருப்பு நிறத்தில் படைத்தாய்?' என்று உருக்கமாகக் கேட்டான்.

கடவுள் இதைக் கேட்டு, ஏதாவது பதில் சொல்ல வேண்டுமே என்று நினைத்ைது, மிகவும் தத்துவரீதியாக , விளக்கமாக , '' மகனே, நான் ஏன் உன்னை கருப்பு நிறத்தில் படைத்தேன் என்றால் , நீ காட்டின் வழியே செல்லும் பொழுது. உனக்கு அதிக வெப்பதால் , மயக்கம் வந்து விடக் கூடாது (SUN STROKE) என்பதற்காகத்தான்' என்றார்.

அதற்கு அவன் , '' ஆமாம் . ஆமாம் . நான் புரிந்துகொண்டு விட்டேன் . கடவுளே, ஏன் , என் தலைமுடியை இவ்வளவு தடினமாகப் படைத்திருக்கிறாய்?''

கடவுள் . '' மகனே, அதை ஏன் அப்படிப் படைத்தேன் என்றால் , நீ காட்டுக்குச் சென்று , எருமை, சிங்கம் யானை போன்ற கொடுமையான மிருகங்களை வேட்டையாடச் செல்லும்பொழுது, மரக்கிளைகளில் , உன் மயிர் சிக்கக்கொண்டு விடக்கூடாது பார் , அதற்காக''

அவன் , '' ஆமாம் ஆமாம் . நீங்கள் சொல்வது சரிதான் . அடுத்து. நீங்கள் ஏன் என் கால்களை இவ்வளவு நீளமாகப்படைத்திருக்கிறீர்கள்?''

கடவுள் , ' அது எதற்காகவென்றால் , நீ , காட்டுக்குச் சென்று அந்த கொடுமையான மிருகங்களால் , தாக்கப்பட நேர்ந்தால் , நீ வேகமாக ஓடித் தப்பித்துச் செல்வதற்காகத்தான் . வேறு ஏதாவது கேள்வி இருக்கிறதா?''

அவன் , '' கடவுளே, நான் இந்த புனா நகரில் , என்ன

முட்டாள் தனமான வேலைகளை செய்துகொண்டு இருக்கிறேன்?!!"

ஆக, எல்லா விளக்கங்களும் முட்டாள்தனமானதுதான். எந்த விளக்கமும் , எதையும் விளக்காது. ஏன் , கடவுளால்கூட சரியாக விளக்க முடியாது.

மனிதனுடைய உண்மைத்தன்மை, ஒரு புரியாத புதிர் . எந்தப் பதிலாலும் , அதை விளக்க முடியாது. ஏன்னென்றால், முதலில் அது கேள்வியே இல்லை. அது

ஒரு புரியாத புதிர் . அதில் நீங்கள் வெறுமனே, மகிழ்ச்சியாக வாழவேண்டியதுதான் . அது உங்களால் தீர்க்கக்கூடிய பிரச்சினை இல்லை. ஒரு பிரச்சினைக்கும் , புரியாத புதிருக்கும் (MYSTERY) உள்ள வித்தியாசம் என்ன ? புரியாத புதிர் என்பது உயிர்த்தன்மையானது (EXISTENTIAL) , பிரச்சினை என்பது அறிவோடு கூடிய மனதினால் உண்டாக்கப்படுவது. அந்த புரியாத புதிரை மனம் உண்டாக்கவில்லை. ஆகவே, அதனால் அதை விளக்க முடியாது. நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் . பிரச்சினை என்பது உங்களுடைய மனதினால் உண்டாக்கப்படுவது. ஆகவே, அதனால், அதைத்தீர்க்க முடியும் - அதற்கு அது ஒன்றும் பெரிய பிரச்சினை இல்லை. ஆனால் உங்களைச் சுற்றியிருக்கும் உயிர்த்தன்மை, மரங்களாகவும் , மிருகங்கள் , பறவைகள், நட்சத்திரங்கள், மக்கள், ஏன் நீங்களே கூட ஒரு புரியாத புதிர்தான் . இதை எப்படி உங்கள் மனம் தீர்த்து வைக்கமுடியும், விளக்க முடியும்?

உங்களுடைய மனம் , இப்பொழுதுதான் உண்டாக்கப்பட்டிருக்கிறது. மனமற்ற , அந்தப் பிரபஞ்ச பேரியக்க மகாசத்தி, கற்பனைக்கெட்டாத காலம் முதல் இயங்கிக்கொண்டு இருக்கிறது. மனம் என்பது இப்பொழுது உங்களால் உண்டாக்கப்பட்டது. அது உங்களுடைய சேர்க்கைதான் . விஞ்ஞானிகள் என்ன சொல்கிறார்கள் என்றால், மனிதனுடைய வாழ்நாளை, 24 மணி நேரம் என்று வைத்துக்கொண்டால் , மனம்

என்பது, இரண்டு வினாடிக்கு முன்புதான் ஏற்பட்டது - நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள் , இரண்டே இரண்டு விநாடிக்கு முன்புதான் !! இப்படியிருக்கும் பொழுது, அது எதை, எப்படித்தீர்க்கும் ? அதற்கு வாழ்வின் ஆரம்பமும் தெரியாது, முடியும் தெரியாது. அது இப்பொழுது, சில விநாடிகளுக்கு முன்பு ஏற்பட்டது. அந்த அளவுக்கு, அதனிடம் சக்தி இல்லை.

இந்தப் புரியாத புதிரை, தெரியாத தன்மையை, உண்மையாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றால், ஒருவன் முதலில் மனதை விடவேண்டும் . அந்த உயிர்த்தன்மையோடு ஒன்றாகக் கலந்து அதில் மறைய வேண்டும் . இதைத்தான் , தந்த்ரா சொல்லுகிறது.

நன்றாகப் புரிந்துகொள்ளுங்கள் . தந்த்ரா ஒரு தத்துவமல்ல . தந்த்ரா முழுக்க முழுக்க உ உயிர்த்தன்மையானது. அப்படி சொல்லும்பொழுது, சாத்ரே, (SARTRE), கேமஸ் (CAMUS) மற்றும் மார்சல் (MARCEL) போன்றவர்கள் விளக்கிய உயிர்த்தன்மையைப் பற்றி, நான் சொல்லவில்லை. அவர்கள் கூறிய , அந்த விளக்கங்களும் தத்துவ ரீதியானதுதான் , தர்க்கரீதியானதுதான் . அது தந்த்ரா கூறும் வழியல்ல . இரண்டுக்கும் உள்ள வேறுபாடு மிகப்பெரியது.

உயிர்த்தன்மையைப்பற்றி, தத்துவார்த்தமாகப்பேசும் , நீங்கள் அறிஞர்கள் என்று கருதும் மேற்கத்திய அந்தத் தத்துவவாதிகள், துக்கம், சோர்வு, அடக்குதல், பரபரப்பு, கவலை, ஆதரவற்றத்தன்மை, அர்த்தமற்றத்தன்மை, தேவையற்ற தன்மை போன்ற எதிர்விளைவுகளைப் (NEGATIVE) பற்றித்தான் பேசுகிறார்கள் . ஆனால் , தந்திரா, நேர் விளைவுகளான (POSITIVE) அழகுத்தன்மை; ஆனந்தம்,

மகிழ்ச்சி என்பவற்றை மட்டும் தான் எடுத்துக் கொள்கிறது. தந்த்ரா உயிர்த்தன்மை அல்லது உயிர் இயக்கம் என்பது ஒரு முடிவில்லாத தெய்வீகமான உச்ச இன்பம் . அதுவே பேரின்பம் (ECSTASY)" என்று கூறுகிறது.

இவர்கள் இருவரும் , வேறு வேறு திசையில் செல்கிறார்கள் சாத்ரே உயிர்த்தன்மையைப் பற்றி எப்பொழுதும் நினைத்துகொண்டே இருக்கிறார் . ஆனால் , தந்த்ரா என்ன சொல்கிறது என்றால் , உயிர்த்தன்மையைப் பற்றி, நினைப்பதால் எந்த பிரயோஜனமும் இல்லை. அது குருட்டுத்தனமானது. அதனால் , நீங்கள் எந்தக் தெய்வீகத்தன்மையையும் அடையமாட்டீர்கள் . அது முடிவில் , படுபாதாளத்தில்தான், உங்களைத்தள்ளும்.

நீங்கள், உங்களைச் சுற்றியுள்ளவர்களை முட்டாளாக்க, தத்துவம் மிகச் சிறந்தது. அதனால் , நீங்கள் குன்றை மலையாக்கலாம் . அதில் நீங்கள் மகிழ்ச்சியும் அடையலாம். அவ்வளவுதான்.

ஒரு நாள் , ஒரு அருமையான தத்துவார்த்த துணுக்கைப் படிக்கநேர்ந்தது. அதைத் தியானமாக்குங்கள்.

எனக்கு ஒரு வித்தியாசமான அனுபவம் ஏற்பட்டது. அதே அனுபவம் , உங்களுக்கும் இரண்டு, மூன்று தடவை வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கலாம் , அல்லது இனிமேல் ஏற்படலாம் . அந்த வாய்ப்பு மீண்டும் ஏற்படும்போது மேலும் திறமையாகச் சமாளிக்கலாம் . இதைத் தியானமாக்குங்கள்.

நேற்று, நான் ஒரு சாப்பாட்டு விடுதிக்குச் சென்று, சாப்பாடு கொண்டு வரச்சொன்னேன் . என்னுடன் , வேறு சிலரும் சாப்பாட்டுக்காக , அந்த மேஜையை சுற்றி உட்கார்ந்திருந்தார்கள் . நான் சாப்பாட்டுடன் , பாலும் கொண்டு வரச்சொன்னேன் . நான் பாலைவிரும்புவன் என்பது உங்களுக்கும் தெரியும் அதுவும் குளிர்ந்தபால். பாலும் வந்தது. நான், அதைக் குடிப்பதற்கு சற்று முன்பு, நன்றாகக்கவனிக்கையில் , அதில் , மிக மிக சிறிதாக ஏதோ ஒன்று கருப்பாக மிதந்து கொண்டு இருந்தது. அதைப் பார்த்ததும், இந்த உலகத்தில் உள்ள மற்ற அனைத்தும் , எனக்கு ஒரு பொருட்டாகத் தெரியவில்லை. அந்த அளவுக்கு, அது என்னைப்பாதித்தது ! அடுத்த சில நிமிடங்களுக்கு, அதுதான் எனக்கு மிகமிக முக்கியமாகிவிட்டது. இந்த காலத்தில் , அது எதுவாக இருக்கும் என்று யாருக்குத் தெரியும் ? அது விஷத்தன்மையுள்ள ஒரு ரசாயனப் பொருளாக இருக்கலாம் ; இல்லை, டைபாய்டு

ஜுரத்தை உண்டு பண்ணும் , விஷக் கிருமிகளின் கூட்டமாகக்கூட இருக்கலாம் . அது, எதுவாக இருந்தாலும், நான் அதை குடிக்க விரும்பவில்லை.

உங்களுக்கே தெரியும்! நான் எல்லாவற்றிலும் சுத்தம் பார்ப்பவன் . ஆனால் , இதற்குமுன் இதைப்போன்ற கருப்புநிற சிறிய பொருளை, வேறு உணவுப்பொருள்களோடு நானும் பார்த்திருப்பேன் . நீங்களும் பார்த்திருப்பீர்கள். ஆனால், இந்த அளவுக்கு, அது அப்பொழுது முக்கியமாகப்படவில்லை. இப்பொழுது, ஏன் அது என்னைக் கலங்கடிக்கிறது என்றால், அது எங்கிருந்து

வந்தது என்று புரியவில்லை. இப்பொழுது, இதுதான் என்னுடைய பிரச்சினையே. ஆகவே, அதை, அந்தப் பாலிலிருந்து எடுத்தெறிய முயன்றேன் . ஆனால் , அது அவ்வளவு சுலபமான காரியமில்லை என்பது உங்களுக்கேத் தெரியும் . நீங்கள் ஒரு கரண்டியை கொண்டு சென்றால் , அது உடனே மோப்பம் பிடித்துவிடுகிறது. அதை, அந்தக் கரண்டியால் தொட்டதுதான் தாமதம். அது இங்கும், அங்கும் ஓடுகிற வேகம் என்ன! அப்படியே முயன்று மெல்ல கரண்டியில், பாலுடன் எடுத்து மேலே கொண்டுவந்தால் , அது எகிறிகுதித்தது. மீண்டும் அந்த டம்ளரில் உள்ள பாலுடன் சேர்ந்துவிட்டு, ஆனந்தமாகக் குதித்துக்காட்டுகிறது. மீண்டும் , மீண்டும் அதை மெதுவாக எடுக்க முயன்றால் , அது நம்மை விட புத்திசாலியாகிவிட்டது. ஆமாம், இப்பொழுது நீங்கள், அதைப் பொருத்த வரையில், ஒரு முட்டாள்தான்!

நீங்கள் , உங்களுடைய விரலைக்கொண்டு மெதுவாக எடுக்க முயன்றால் , அது, மிகவும் லாவகமாக கீழே அமிந்துவிடுகிறது. மேலும் , நாலுபேர்களுக்கு மத்தியில் , விரலை பாலில் விடுவது, அவ்வளவு நாகரீகமான செய்கையில்லை. அப்படியே, என் விரலால் அதை எடுக்க முயன்றால் , யாராவது புத்திசாலி, அதைப் பார்த்து என்ன காரியம் செய்கிறீர்கள் என்று அருவருப்பாகக் கேட்டால், நீங்கள் என்ன பதில் சொல்வீர்கள்? உண்மையைச்சொன்னால்,

நாகரீகமாக இருக்குமா? நீங்கள் எவ்வளவோ கடினமான கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லியிருப்பீர்கள் . ஆனால் , இப்பொழுது உங்களிடமிருந்து பதில் வராது!

ஆனால் , இன்னொரு காரியம் பண்ணலாம் . மிகவும் ஜாக்கிரதையாக உங்கள் கண்களை, அதிலேயே வைத்துக்கொண்டு, பாலை மட்டும் குடிக்க முயலலாம். ஆனால் , அதுவும் சுலபமான வேலையில்லை நீங்கள் எவ்வளவோ கடினமான வேலைகளைப் புத்திசாலித்தனமாகச் செய்திருக்கலாம் . ஆனால் , இந்த மிக மிகச் சிறிய கருப்புப் பூதம் , உங்களுடைய கண்களில் விரலைவிட்டு ஆட்டுகிறது!

சரி, இப்பொழுது நான் செய்ததை, உங்களிடம் ரகசியமாகக் கூறுகிறேன் . நீங்களும், அதே முறையை மிகவும் ரகசியமாகக் கையாளலாம் . அதைப்பற்றி, இந்த கருப்புப் பொருளுக்கோ, மற்றவர்களுக்கோ எதுவும் தெரியாது! மிகவும் சுலபமான முறை. இதோ......

அதாவது, அந்தப்பாலை, எடுத்துக்கொண்டு, யாரும் உட்கார்ந்திராத , அடுத்த மேஜைக்குச் சென்று, அப்படியே குடித்துவிட்டேன்! எப்படி?

ஆகவே, குன்றை, மலையாக்குவதுதான் ' தத்துவம் ' என்பது! நீங்கள் உங்களுடைய கருத்துகளில் சென்றுகொண்டே இருப்பீர்கள். ஆனால், முடிவு என்று எதுவும் வராது. சுமார் 5000 வருடங்களாக , மனிதன் ஒவ்வொன்றைப் பற்றியும் தத்துவார்த்தமாக அலசி ஆராய்ந்திருக்கிறான் . அதாவது ஒன்றின் ஆரம்பம் , நடு, மற்றும் முடிவு என்று எல்லாவற்றையும் சிந்தனை செய்திருக்கிறான் . வேறு விதமாகச் சொன்னால் , அவனுடைய குறுகிய மனத்தோடு, எல்லாவற்றிலும் புகுந்து விளையாடியிருக்கிறான்! ஆனால், எந்த

உயர்நிலைக் காட்டும் ' தந்த்ரா' ' ஒரு மிகச்சிறிய கேள்வியைக்கூட , அவனால் தீர்த்து வைக்க முடியவில்லை. தத்துவத்தால் , எதற்கும் உண்மையான விடைகாண முடியாது என்பது நிரூபணமாகிவிட்டது. இது தெரிந்திருந்தும் , அவன் அதைத் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறான் . ஏன்? அது, உங்களுக்கு உறுதிமொழிகொடுத்து, இங்கும் அங்கும் அழைத்துச்

செல்கிறது. அது உங்களுக்கு ஒரு பொழுதுபோக்காக இருக்கிறது. முடிவில் அது எந்த விடையையும் கொடுப்ப தில்லை. அவ்வளவுதான்.

அது மிக மலிவானது. அதற்கு ஈடுபாடு தேவை யில்லை. ஆகவேதான் மனிதன் , அந்த முயற்சியை விடமாட்டேன் என்கிறான். மற்றும், அதில் அவனுடைய பங்கு என்று ஏதுவும் இல்லை. அவன் , நாற்காலியில் உட்கார்ந்தவாறே, சிந்தனைசெய்து கொண்டிருக்கலாம், அல்லது கனவு கண்டு கொண்டிருக்கலாம் . நீங்கள் ' உண்மையை' உண்மையாகப்பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. அப்படிப் பார்த்துவிட்டால் , தத்துவமே தேவையில்லையே? அதற்கு மிகுந்த தைரியம் வேண்டும் . தீரச் செயல்மிக்க தைரியம் தேவை. நீங்கள் அதை அறிந்து கொள்வதற்கு, உங்களுடைய உயிரை வெறுத்து அல்லது துச்சமென மதித்து. அறியாத ஒன்றினுள் நுழைய வேண்டும் . அதில் , உங்களையே, நீங்கள் தொலைத்துவிடலாம் ; திரும்பியே வராமல்கூட போகலாம் . யாருக்குத் தெரியும் ? அல்லது நீங்கள் முற்றிலும் மாற்றம் அடைந்து, திரும்பிவரலாம். அது நல்லதற்கா, அல்லது கெட்டதற்கா என்று யாருக்குத் தெரியும்?

அந்த யாத்திரை, நீங்கள் இதுவரை அறிந்திராதது. நீங்கள் அதைப் பற்றி, எந்த முன்னேற்பாடும் செய்ய முடியாது. நீங்கள் , நீரில் குதிப்பது போல , எந்தவிதச் சிந்தனையும் இல்லாமல் கண்ணை மூடிக்கொண்டு குதிக்க வேண்டியதுதான் . அந்தக் கடுமையான இருட்டில் , தன்னந்தனியாக , எந்தவித வரைப்படமும் இல்லாமல் , எதற்காக , எங்கே செல்கிறோம் என்று தெரியாமல் , நீங்கள் செல்லவேண்டும் . அந்த உயிர்த்தன்மையினுள் , ஒரு தைரியமிக்க பிசாசுதான் நுழைய முடியும்.

ஆகவேதான், இந்தப் பூமியின் இயல்பானதன்மையை உடையவர்களுக்கு மட்டும் தந்த்ரா பொருந்தி வருகிறது... அதில் சாரஹாவும் ஒருவர்.

இப்பொழுது, சூத்திராவைப் பார்ப்போம்.

மகிழ்ச்சியில் துள்ளுகிறபோது பார்க்கும் மனமும் வளமாகிறது அதனால் இதற்கு அது உபயோகமாகிறது அது பொருட்களின் பின்னால்

ஓடினாலும் அதிலிருந்து அது விலகிப்போவதில்லை.

அந்த அரசன் , சாரஹாவைப்பற்றி, மக்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் என்பதை அவரிடம் கூறியிருக்கவேண்டும் . அவர்கள் , சாரஹா சிற்றின்பத்தில் , புலன்கள் இன்பத்தில் மிகவும் ஈடுபட்டு விட்டார் என்று கூறுகிறார்கள். அவர்

இப்பொழுது ஒரு சந்நியாசியே இல்லை, அவருடைய துறவு உண்மையானது இல்லை என்று பலவாறாகக் கூறிக்கொண்டிருந்தார்கள்.

அவர், தான் ஒரு புத்த சந்நியாசியாக வேண்டும் என்று அரசனிடம் கேட்டு, உத்திரவு வாங்கியபின் , புத்தபிட்சுவாக மாறினார் . பிறகு, புத்தசந்நியாசிகளுக்கே உரித்தான கட்டுப்பாடுகள் , ஒழுக்க நியதிகள் என்று அதன் வழியே, தன் வாழ்க்கையை நடத்தினார். பிறகுதான் , அவர், அந்த அம்பு செய்யும் புரட்சிப் பெண்மணியைச் சந்திக்க நேர்ந்தது. அவள் , அவரை முழுமையாக மாற்றம் அடைய செய்துவிட்டாள். அவள், அவருடைய எல்லாத் தன்மையையும் அழித்துவிட்டாள் . அவள் , அவரைத் தன்னுடைய சுதந்திரத்தில் இருக்கும்படி செய்துவிட்டாள் . இப்பொழுது, அவர் தன்னுடைய இயல்பான சுதந்திரத்தில், எந்தவித இறந்தகாலமும், எதிர்காலமும் இன்றி, கணத்துக்குக்கணம் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்.

இந்த நிலையில் , அவரைப் பார்க்கும் சாதாரண ஜனங்கள், அவர் தங்களையெல்லாம் ஏமாற்றிவிட்டார் என்றும் , அவர் தன்னுடைய தெய்வீகத்தன்மையிலிருந்து, கீழே வீழ்ந்து விட்டார் என்றும் நினைக்கத் தொடங்கிவிட்டார்கள் . அவர் இதற்கு முன்பு, எவ்வளவு சிறந்த பிராமணன் , எவ்வளவு படித்தவர்? ஏன், அவர் இப்படி மாறிவிட்டார் என்று ஆச்சரியப்பட்டார்கள். அவரிடமிருந்து, அவர்கள் மிகவும் எதிர்பார்த்தார்கள் . அவர் , அந்த நாட்டுக்கு, சிறந்த அறிவுஞானத்தை வழங்குவார் என்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். ஆனால், இப்பொழுது

அவர் , ஒரு பைத்தியம் பிடித்த நாய் போல மாறிவிட்டாரே என்று மிகவும் வருத்தப்பட்டார்கள்.

இதைப் போல, பல ஆயிரம் கதைகள், அவரைப் பற்றி பரவியவாறு இருந்தது. இதை, அந்த அரசன் , சாரஹாவுக்கு எடுத்துரைத்து இருக்கவேண்டும் . மக்கள் அவரைப்பற்றி இழிவாகப் பேசுவதைக் கேட்டு, அந்த அரசன் மிகவும் வருத்தமடைந்தான் . ஏனென்றால் , அந்த அரசன் , அவரை மிகவும் விரும்பினான், மிகவும் மதித்தான். ஆனால், அவனும், மக்களைப் போலவே சாதாரண உலகத்தில் தான் இருந்தான். அவனுக்கு, தன்னைப் பற்றியோ , மற்றும் உண்மையைப் பற்றியோ, எந்த நுண்ணிய , ஆழ்ந்த அறிவும் இல்லை.

சாரஹா அந்த அரசினிடம் , " ஒரு தடவை, ஒரே ஒரு தடவை, நீ அந்தப் பேரின்பநிலையை அறிந்துகொண்டால் , அந்த உண்மையான வாழ்க்கையை ருசித்து விட்டால் , நீ அந்தக் கதைகளையெல்லாம், மறந்துவிடுவாய். அதைப் போல, இந்த முட்டாந்தனமான ஒழுக்கம் , விஷயஞானம் , மதிப்பு போன்றவைகளையும் மறந்துவிடுவாய் . ' உண்மையான அந்த வாழ்க்கையோடு தொடர்புகொள்ளாவிட்டால் இப்படியே நீ வாழ்ந்து, மடியலாம். வாழ்வு ஒரு புரியாத புதிர் தான். அது ஒரு மாபெரும் குழப்பம் அது மிகவும் புதுமையைப் படைக்கும் ஒரு தெய் வீகக் குழப்பம்தான் . ஆகவே, அது எல்லாவற்றிலேயும் குழப்பமாகவே இருக்கிறது.

மகிழ்ச்சியில் துள்ளுகிறபோது பார்க்கும் மனமும் வளமாகிறது

அதாவது. எனக்கு, என்ன நிகழ்ந்தது என்று என்னால் சொல்ல முடியவில்லை ஆனால் , என்னால் இந்த அளவு சொல்ல முடியும் . அதாவது, ஒரே ஒரு தடவை, அதை நீங்கள் ருசித்து விட்டால் , அது

உங்களிடம் ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தி விடும். நான் அதைப் பற்றிக் கூறி உங்களை திருப்திபடுத்தவேண்டியதில்லை என்னிடம் எந்தத்தத்துவமும் இல்லை. நான் அதை வெறுமனே அனுபவித்தேன் . அந்த அனுபவத்தை, உங்களோடு பகிர்ந்து கொள்வது இல்லை. நீங்கள் , உங்களிடம் நிலைப்படுத்தப்பட்ட கொள்கையி விருந்து முதலில் வெளியே வரவேண்டும். நீங்கள், என்னோடு சேர்ந்து, அந்த அறியாதவற்றை நோக்கிச் செல்லவேண்டும் . நான் , உங்களை, உயிர்த் தன்மையை சுத்தமாக , தெளிவாகப்பார்க்கக் கூடிய விதத்தில் அமைந்திருக்கும் அந்த ஜன்னலுக்கு அருகே அழைத்துச்செல்ல முடியும் . ஆனால் , நீங்கள் என் கைகளைப் பிடித்துக்கொண்டு, என்னோடு சேர்ந்துவரவேண்டும்.

இதுதான் ஒரு குரு, தன் சீடனுக்குச் செய்யும் உதவி, அனுக்கிரகம் எல்லாம் . இதை உருவகமாகச்சொன்னால் , அவர் , தன்கண்களை சீடனுக்கு ஒரு சிலகணம் வாடகைக்குக்கொடுக்கிறார். ஒரு தடவை, அதை ருசித்துவிட்டால் , பிறகு பிரச்சினையே இல்லை. பிறகு, அந்த ருசியே, உங்களை அங்கே இழுத்துச்சென்றுவிடும் . பிறகு, உங்களால் மீண்டும் பழைய இடத்திலேயே மேலும் இருக்கமுடியாத அளவுக்கு இந்த இழுப்பு அவ்வளவு வலிமையுடையதாக இருக்கும்.

மகிழ்ச்சியில் துள்ளுகிறபோது பார்க்கும் மனமும் வளமாகிறது

ஆனால் அதற்கு, உங்களிடம் அதைப்பார்க்கக் கூடிய , அந்த மகிழ்ச்சியை ருசிக்ககூடிய , மனக்கண் தேவை. அதாவது, பழைய கொள்கை குப்பைகளால் , அழுத்தப்படுத்தப்படுத்தாக , தெளிவான , இயல்பான , திறந்த மனம் தேவை. தத்துவங்கள் , மதங்கள் , மதவேதங்கள் , கொள்கை, கோட்பாடுகளில் , மிகவும் பற்றுள்ள மக்களுக்கு ஏற்படும் பிரச்சளை இதுதான் , அவர்களிடம் மிக அதிகமாக குருட்டு நம்பிக்கைகள் , அடுக்கு, அடுக்குகளாக , தீரைகள் மேல் திரைகளாக இருந்து கொண்டு, அவர்களது கண்களை சுத்தமாக மறைத்துக்கொண்டு இருக்கிறது. முதலில் , இந்தத் திரைகளை அகற்ற வேண்டும் . அப்பொழுதுதான் ,

உங்களிடம் அதைப்பார்க்கக்கூடிய தெளிவான கண்கள் ஏற்படும். இப்பொழுது உங்களிடம் இருப்பது வெறும் குருட்டு கண்கள் தான் . இது, அதைப் பார்த்துவிட்டதாக நடிக்கும்; அதைப் பார்த்துவிட்டதாக, உங்களிடம் கூறும், நம்பவைக்கும் அவ்வளவுதான்.

உங்களுடைய கண்களால் , அதைப் பார்க்கமுடியாது. உங்களுடைய காதுகளால் அதைக் கேட்க முடியாது. உங்களுடைய கைகளால், அதைத்தடவி

உணர முடியாது. உங்களுடைய கண்களால் இயல்பாகப் பார்க்கக் கூடிய அளவுக்கு, உங்களுடைய காதுகளால் , இயல்பாகக் கேட்கக்கூடிய அளவுக்கு நீங்கள் அவைகளுடைய இயல்பான , நுண்மையான உணர்வை அதன் ஓட்டத்தை எப்பொழுதோ இழந்துவிட்டீர்கள் . ஆகவேதான் , ஜீசஸ் மீண்டும் மீண்டும் தன் சீடர்களிடம் , ' கண்களையுடையவர்கள் , அதைப்பார்க்கட்டும் , காதுகளை யுடையவர்கள் , அதைக் கேட்கட்டும் " என்று கூறினார் . நன்றாகக் கவனியுங்கள் . காதுகேளாதவர்களிடமோ, குருடர்களிடமோ அவர் அப்படிச் சொல்லவில்லை உங்களால் இந்த உலகத்தை, எந்த அளவுக்குப் பார்க்க முடியமோ, எந்த அளவுக்குக் கேட்க முடியுமோ, அந்த அளவுக்கு அவர்களாலும் பார்க்க முடியும் , கேட்க முடியும் பின்பு, எதற்காக ஜீசஸ் , மீண்டும் , மீண்டும் , " உங்களுக்கு கண்கள் இருந்தால் ?" என்று கூறினார் ? உங்களைப்போன்று, வெளித்தோற்றத்தில் , குருட்டுத்தன்மையுடையவர்களிடமா, அவர் அப்படி பேசிக்கொண்டு இருந்தார் ? " உங்களுக்குக் கண்கள் இருந்தால் என்ற சொற்களில், ஏன் அந்த இருந்தால் " என்பதை அவர் சேர்க்க வேண்டும்.

அந்த " இருந்தால் என்ற வார்த்தை அங்கு மிகவும் அர்த்தமுடையது. ஏனென்றால் , மக்கள் கண்களையுடையவர்களாக இருந்தும் , பார்க்கும் சக்தியைப் பெறவில்லை அந்த அதைப் பொருத்த அளவில், அவர்கள் குருடர்கள்தான். ஆனால், அவர்கள் தங்களிடம் தெளிவான கண்கள் இருப்பதாக நம்பிக்கொண்டு இருக்கிறார்கள் . இது மிகவும்

ஆபத்தானது.

உங்களுடைய எண்ணங்கள் குறுக்கிடாமல் , அது உங்களை வேறு எங்கேயும் இழுக்காமல், ஆராயமல், நீங்கள் ஒன்றை இதுவரை பார்த்திருகிறார்களா? ஒரு ரோஜா மலரை, எந்தவித வார்த்தைகளும் இல்லாமல் வெறுமனே பார்திருக்கிறார்களா. அப்பொழுது உங்களுடைய மனம் , " இது ஒரு அருமையான ரோஜா மலர் , என்ன அழகு. ஆஹா' ' என்று கூறாமல் இருக்குமா? எப்பொழுது நீங்கள் அதை ஒரு அழகான ரோஜா மலர் என்று வார்த்தைகளாக்கி விட்டீர்களோ, அப்பொழுதுதே நீங்கள் உங்கள் எதிரில் உள்ள ரோஜாமலரைப் பார்க்கவில்லை. நீங்கள் இதுவரை பார்த்த கேள்விப்பட்ட பல ரோஜாமலர்கள் தான் அப்பொழுது உங்கள் முன்பு வரிசையாக நிற்கும் . நீங்கள் இப்பொழுது பார்க்கும் ரோஜாமலர் , அவைகளுக்குப் பின்னே சென்றுவிடும் . நீங்கள் அதைப்பார்த்து, அப்படிச் சொல்லும் பொழுது, உங்களுடைய கண்களுக்கு திரைபோட்டு விடுகிறீர்கள்.

மொழி என்பது எப்பொழுதுமே , உங்களுக்கும் , உங்களுடைய உயிர்த்தன்மைக்கும் இடையில் , ஒரு திரைபோலவே தடுத்துக்கொண்டு இருக்கிறது. உங்களால் , இந்த மலரை , உங்களுடைய வார்த்தைகளால் அசுத்தப்படுத்தாமல் , வெறுமனே பார்க்க முடியாதா? அதை, ரோஜா மலர் என்று சொல்லத்தான் , எண்ணித்தான் பார்க்கமுடியுமா? அந்த வார்த்தைகள் தேவைதானா? இதை, எந்தவித எண்ணமும் இல்லாமல் , உங்களைச் சுற்றி எந்தவித மேகமும் சூழாமல், வெறுமனே பார்க்க முடியாதா? ஒரு சில கணங்கள் கூட , உங்களால் வார்த்தைகள் இல்லாமல் இருக்க முடியாதா?

உயர்நிலைக் காட்டும் " தந்த்ரா' ' மொழியில்லாமல் இருக்க முடியாதா? அப்படி ஒரு சில விநாடி நேரம் , உங்களால் இருக்கமுடிந்தால் , உங்களுக்கு அந்த மனக்கண் அல்லது ஞானக்கண் ஏற்படும்.

அப்படி வார்த்தைகளற்று. சில விநாடி நேரமாவது இருக்க , முயற்சி செய்யுங்கள் . ஒரு மரத்துக்குக்கீழே

சற்று உட்கார்ந்து, இது என்ன மரம் , ஏன் எப்படி இருக்கிறது என்று எதுவும் விசாரிக்காமல், வெறுமனே பார்க்க முயற்சி செய்ய ஆரம்பியுங்கள் உங்களுடைய மனதை, அதனிடம் ஒருக்காலும் கொண்டுவராதீர்கள். அது X,Y என்று எதுவாகவேண்டுமானாலும் இருக்கட்டும் . அதைப் பார்த்து, எந்தத்தீர்ப்பும் வழங்காதீர்கள் வெறுமனே ஒரு சாட்சியாக இருந்து பாருங்கள்.

ஜீசஸ் , " நீங்கள் தீர்ப்புச் சொல்லாதீர்கள் என்றார் . மொழிதான் அந்தத்தீர்ப்புக்கு ஆதாரம் . தீர்ப்பு என்று வரும்பொழுது, வேறுபாடுகளும் , மற்றும் உங்களுடைய பழைய காலமும் கூடவே சேர்ந்து வரும். பழையகாலம் வரும்பொழுது நீங்கள் நிகழ்காலத்திலிருந்து விலக்கப்படுகிறீர்கள்.

உங்களுடைய மனம் உங்களுடையதுதான் . அது அங்கேதான் இருக்கிறது. கனமானதே மெல்லிய தோ நல்லதோ - கெட்டதோ, அது அங்கேயே இருக்கிறது. அறிவுள்ளதோ - அறிவற்றதோ, அறிந்ததோ - அறியாததோ அது அங்கேயே இருக்கிறது. ஒரு ஜெர்மாணியன் மனமோ - ஒரு இந்தியன் மனமோ, ஒரு அமெரிக்கன் மனமோ எதுவானாலும் அது அங்கேயேதான் இருக்கிறது. உண்மைத் தன்மை ஒரு ஜெர்மனாக இல்லை. ஒரு இந்தியனாக இல்லை ஒரு அமெரிக்கனாக இல்லை. இவர்களின் கண்களாலேயோ, அல்லது ஹிந்து, முஸ்லிம் , கிருஸ்துவக் கண்களாலேயே பார்த்தால் அந்த உண்மையைத் தவற விட்டு விடுவீர்கள்.

ஆகவே, ஆரம்பியுங்கள்.

நீங்கள் , தந்த்ராவில் குதிப்பதற்கு, அது உங்களைச் சரியான முறையில் தயார்ப்படுத்தும். ஆரம்பியுங்கள். நீங்கள் நடக்கும் பொழுதும் உட்காரும் பொழுதும் , நகரும் பொழுதும் , பேசும் பொழுதும் , நீங்கள் உண்மையோடு இருக்து, மீண்டும் மீண்டும் முயலுங்கள் - அதாவது, குறுக்கீடு எதுவுமில்லாத , எதிலும் பற்று இல்லாத அந்த உண்மையோடு இருக்க முயலுங்கள். மெல்ல, மெல்ல அந்தக்கதவுகள் திறக்க ஆரம்பிக்கும் சில கணங்கள், அது உங்களை நோக்கி வரும் அந்தச் சிலகணங்கள், உங்களுடைய மனத்தைச் சார்ந்தது இல்லை. அது உண்மை நிலையின் மனமற்ற

தோற்றம். வார்த்தைகளற்ற தோற்றம். இவைகள் தான் உங்களை மேலும் மேலும் தயார்ப்படுத்தும்.

சாரஹா, மகிழ்ச்சியில் துள்ளுகிறபோது பார்க்கும் மனமும் வளமாகிறது

ஆகவே, நீங்கள் முதலில் செய்ய வேண்டியது என்னவென்றால் உங்களுடைய மனத்தைப் பார்க்க வேண்டும் . அடுத்தது, நீங்கள் மகிழ்ச்சியை தவிர்க்காதீர்கள் . அலைகளைத்திறந்த மனத்தோடு, எதையும் வாங்கும் மற்றும் வரவேற்கும் தன்மையோடு அணுகி, உங்களுடையதாக்கிக் கொள்ளவும் எங்கெல்லாம் மகிழ்ச்சி இருக்கிறதோ, அங்கே கடவுள் இருக்கிறார் . சுருக்கமாகச்சொன்னால் , இதுதான் தந்த்ராவின் செய்தி. எங்கெல்லாம் மகிழ்ச்சி இருக்கிறதோ, அங்கேயெல்லாம் கடவுள் இருக்கிறார்.

மகிழ்ச்சி மூன்று நிலைகளாக இருக்கிறது. முதல் நிலையை நாம் மகிழ்ச்சி என்று அழைக்கிறோம் . (PLEASURE) இந்த மகிழ்ச்சி உடல் சம்மந்தப்பட்டது. இரண்டாவது நிலை இன்பம் (HAPPINESS) இது மனம் சம்மந்தப்பட்டது. மூன்றாவது நிலை பேரின்பம் (BLISS) இது ஆன்மிகம் சம்மந்தப்பட்டது. இந்த மூன்று நிலைகளும் ஒரே உண்மை நிலையின் வெளிப்பாடுதான் . அந்த ஒரு உண்மை நிலையே பேரானந்தம் (JOY)

இந்த ஆனந்தம் உடல்வழியாக வெளிப்பட்டால் அது இன்பம் , மகிழ்ச்சி. மனம் வழியாக வெளிப்பாட்டால் அது இன்பம் உடல் மற்றும் மனத்தின் வழியாகவோ அல்லது மனமற்று மற்றும் உடலற்று ஏற்படுமானால் அது பேரானந்தம் இதுவே மூன்று அடுக்குகள் . பேரானந்தம்தான் உண்மை. கடவுள் எல்லாம் இந்த உயிர்த்தன்மை பேரானந்தத்தால் ஆக்கப்பட்டுள்ளது.

சாரஹா சொல்வது என்னவென்றால் , இந்த பேரானந்தம் எங்கிருந்து வந்தாலும் , அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருங்கள் . அதை மறுக்க வேண்டாம் . அதை நிந்தனை செய்யவேண்டாம் . அது உடல் வழியாக வெளிப்பட்டால் , அதனால் என்ன ? அப்பொழுது, கடவுள் உங்கள் உடலைத்தட்டுகிறார் .

நீங்கள் உட்காந்திருக்கும்பொழுது, ஒருவித மகிழ்ச்சி தானே ஏற்பட்டால், நீங்கள் சாப்பிடும்பொழுது, ஒருவித மகிழ்ச்சி ஏற்பட்டால் , அந்த மகிழ்ச்சி, அந்த உணவிலிருந்து வந்ததுதான் . இப்பொழுது கடவுள் உணவாக இருக்கிறார் . நீங்கள் அவரை விழுங்குகிறீர்கள்.

நீங்கள் காதலிக்கும் ஆணின் / பெண்ணின் கைகளை முதன் முதலாகத் தொடும் பொழுது அல்லது மிகுந்த அன்புநிலையில் , ஒரு நண்பனோ அல்லது வேறு யாரோ உங்களைத் தொடும் பொழுது, உங்களுடைய உடலில் ஒரு புல்லரிப்பு ஏற்படும்; ஒரு ஆனந்த நடனம் உண்டாகும் ; சிலசமயம் மின்சாரம் தாக்கியது போல , ஒரு இன்ப அதிர்ச்சி ஏற்படும் . உங்கள் உடலில் ஒரு புத்துணர்ச்சி ஏற்படும் . அப்பொழுது உங்களுடைய வாழ்வே, புதுமையாக இருக்கும் . நீங்கள் அதற்கு முன்பு, அப்படி இருந்ததை உணரமாட்டீர்கள். அதுதான் ' இன்பம் ', கடவுள் எல்லாம் . கடவுள் இப்பொழுது உடல்வழியாக வருகிறார் . நீங்கள் ஒரு அருமையான சங்கீதத்தைக் கேட்கும்பொழுது, நீங்கள் மிகவும் சந்தோஷமாக இருக்கிறீர்கள் . அப்பொழுது, கடவுள் மனம் வழியாக வெளிப்படுகிறார் . அதைப்போல , நீங்கள் அந்த ரோஜா மலரை தொடாமலும் , மனதை அதில் கொண்டுவராமலும் , வெறுமனே பார்த்தால் , அந்த களிப்பு, திடீரென்று உங்களிடம் ஏற்படும் - மென்மையான, அமைதியான, எல்லையற்ற உயர். - 18

நிலையில் , ஒரு தெய்வீக ஆசிர்வாதமாக , அது ஒரு சில கணம் உங்களை வந்து அடையும். ஆனால் , எல்லாமே இந்த பேரானந்தம் (JOY) என்ற மூலா தாரத்தையே அடிப்படையாகக்கொண்டது.

ஆங்கில மொழியில் உள்ள, அழகான வார்த்தைகளில் 'பேரானந்தம்' (JOY) என்பதும் ஒன்று. அது எல்லாவித சந்தோஷநிலைகளையும் தன்னுள்ளே கொண்டிருக்கிறது.

முதலில் , நீங்கள் இந்த இன்பத்தை அடைவதில் குறியாக இருக்கவேண்டும் என்று தந்த்ரா கூறுகிறது. அதை, இப்படி இதில் வலியுறுத்துவதைக் கண்டு

உங்களுக்கு ஆச்சரியம் ஏற்படலாம் . நாம் , இந்தக் களிப்பை அடைவதற்கு ஏற்றநிலையில் இல்லையா என்று? ஆமாம் . இது மிகவும் வருத்தமான விஷயம்தான் . ஆமாம் . இதுதான் உண்மை. நீங்கள் மட்டுமல்ல , யாருமே அதற்குத்தயாராக இல்லை. நாம், துன்பப்படுவதற்கு தயாராக இருக்கிறோம் . அதை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறோம் . நாம் , துன்பப்படுவதற்கு தயாராக இருக்கும் அளவுக்கு, இன்பம் அடையத்தயாராக இல்லை. அதற்கு, சில காரணம் உண்டு.

இன்பம் உங்களுடைய அகங்காரத்தை அப்புறப்படுத்திவிடும் . மாறாக , துன்பம் உங்களிடம் வலுவான அகங்காரத்தை ஏற்படுத்தும் . உங்களிடம் இன்பம் ஏற்படும்பொழுது, நீங்கள் , உங்களையே அதில் தொலைத்துவிடுகிறீர்கள் . அங்கு, உங்களுடைய அகங்காரம் , எல்லாம் மறைந்துவிடுகிறது. துன்பநிலை என்பது. அகங்காரத்தின் அடர்த்தியானநிலை. நீங்கள் துன்பத்தில் இருக்கும்பொழுது, நீங்கள் அதில் முழுமையாக இருக் கிறீர்கள் . மாறாக , நீங்கள் இன்பத்தில் இருக்கும் பொழுது, உங்களை அதில் இழந்து விடுகிறீர்கள் நீங்கள் அங்கு இல்லை. திரும்ப, மீண்டும் சொல்கிறேன் . நாம் அகங்காரம் நிறைந்தவர்களாக இருப்பதால், நாம், துன்பத்திற்கும், துயரத்துக்கும் , வருத்தத்துக்கும் , சோகத்திற்கும் அடிமையாக இருக்கிறோம் . எந்த அளவுக்கு அகங்காரம் இருக்கிறதோ, அந்த அளவுக்குத் துன்பமும் , துயரமும் இருக்கும் . நம்மைச் சுற்றி, ஒரு மகிழ்ச்சியற்ற சூழ்நிலையை ஏற்படுத்துகிறோம் . எல்லா இன்பநிலை களையும் , துன்பநிலைகளாக மாற்றுகிறோம் . உங்களுடைய அகங்காரம் நிலைத்து நிற்க , இதுதான் ஒரே வழி. நரகத்தில்தான் , துன்பம் வாழும் சொர்க்கத்தில், ஒருக்காலும் வாழ முடியாது.

அகங்காரமற்று இருந்தால் , உங்களால் சொர்க்கத்தை அடைய முடியும் என்று பலநூற்றுண்டுகாலமாக , நீங்கள் போதிக்கப்பட்டு வந்திருக்கிறீர்கள் . ஆனால் , நான் சொல்வது என்னவென்றால் : நீங்கள் அகங்காரமற்று இருந்தால், சொர்க்கம் உங்களைவந்து அடையும் சொர்க்கம் என்பது. நீங்கள் அடையக்கூடிய , எங்கேயோ உள்ள ஒரு அற்புத உலகம் இல்லை.

நீங்கள் அகங்காரமற்று இருந்தால், அதுவே சொர்க்க நிலை. நீங்கள் நிறைந்த அகங்காரத்தோடு இருந்தால், அதுவே நரகம் நரகம் என்பது இந்த பூமிக்கு வெகு ஆழத்திலும் , சொர்க்கம் என்பது அதன் மேலே எங்கேயோ இருக்கும் ஒரு உலகம்

இல்லை. அவைகளெல்லாம் ஒரு உருவகம் தான் . நீங்கள் இருக்கும் நிலையைத்தான், சொக்கம் என்றும் நரகம் என்று பிரித்துக்கூறுகிறார்கள்.

' நீங்கள் இருக்கும் பொழுது, நீங்கள் நரகத்தில் தான் இருக்கிறீர்கள் நீங்கள் இல்லாதபொழுது, நீங்கள் சொர்க்கத்தில் இருக்கிறீர்கள் . நீங்கள் , உங்களைத் தனியாக உணர்வதற்கு நீங்கள் மற்றவர்களிடமிருந்து வித்தியாசமானவர் என்றும் , தனித்தனிமையுடையவர் என்றும், இப்படி, அப்படி என்று நீங்கள், உங்களுடைய அகங்காரத்தோடு மிகுந்த பற்றுடையவர்களாக இருக்கிறீர்கள் . உங்களுடைய துன்பத்திற்கு இதுவே அடிப்படைக் காரணம் . இப்பொழுது, இந்த மாறுபட்ட தன்மையைப்பாருங்கள் . அதாவது உங்களுடைய அகங்காரம் , துன்பத்தை உண்டு பண்ணுகிறது. அதே சமயத்தில் , அது மகிழ்ச்சியாக இருக்கவேண்டும் என்றும் விரும்புகிறது. அது மகிழ்ச்சியில் , களிப்பில் பேராசைகொண்டு, அதைத் தேடித் தேடி அலைகிறது. ஆனால் , அது மேலும் மேலும் துன்பத்தைத்தான் ஏற்படுத்துகிறது. இப்பொழுது நீங்கள் மாட்டிக்கொண்டு விட்டீர்கள் . எந்த அளவுக்கு, உங்களுடைய அகங்காரம் அதிகமாகிறதோ, அந்த அளவுக்கு, உங்களுடைய துன்பமும் அதிகரிக்கிறது. அதே சமயத்தில், அது, அந்த அளவுக்கு, ஆனந்தத்தில் ஆர்வ முடையதாக இருக்கிறது. ஆனால் , அதனால் மகிழ்ச்சியை ஏற்படுத்தமுடியாது. மகிழ்ச்சி, அதனுடைய செயல்பாடு இல்லை. அந்த ஆழந்த பார்வைதான், தந்த்ராவின் உள்நோக்கும் பார்வை.

ஒரே ஒரு தடவை, நீங்கள் ஒரு சிலகணம் பேரானந்தத்தில் இருந்தால் , அது உங்களிடம் பெருத்தமாற்றத்தை ஏற்படுத்தும் என்று சாரஹா, அந்த அரசனுக்கு எடுத்துரைக்கிறார் . நீங்கள் என்ன உயிர்த்தன்மையில் இருக்கிறீர்கள் என்றும் , என்ன

மாதிரியான வாழ்க்கையை, வாழ்ந்துகொண்டு இருக்கிறீர்கள் என்றும் அந்த ஒரு சில கணநேரம் , உங்களுக்குத் தெளிவுபடுத்தும்.

மகிழ்ச்சியில் துள்ளுகிறபோது பார்க்கும் மனமும் வளமாகிறது

தத்துவத்தால், மனம் ஒருக்காலும் செழுமை அடையாது. விஷய ஞானத்தாலும் , கொள்கை கோட்பாடுகளினாலும் , அது செழுமையடையாது. அனுபவத்தால் மட்டுமே, அது செழுமையடையும். எந்த மனம் , உண்மைத்தன்மையைப் பற்றியும் , உண்மை நிலையைப்பற்றியும் , அனுபவரீதியாக உணர்ந்து கொள் கிறதோ, அந்த மனமே செழுமை நிறைந்ததாகும், வளமான தன்மையுடையதாகும்.

ஒரே ஒரு வளம் தான் இருக்கிறது - அதுவே உண்மை. ஒரே ஒரு வறுமைதான் இருக்கிறது - அதுவே பொய். நீங்கள் உண்மையை அறியாத நிலையில் , நீங்கள் பொய்யிலும் , தோற்றத்திலும் , கனவுகளிலும் , மற்றும் கற்பனைகளிலும்தான் வாழ்கிறீர்கள்.

ஏன் சாதாரண ஜனங்கள் , பொருள்களின் பின்னே ஓடுகிறார்கள் ? சிலர் , கார்களின் பின்னே, சிலர் வீடுகளின் பின்னே மற்றும் பலர் அதிகாரத்தின் பின்னே... இப்படி மக்கள், இந்த உலகப் பொருள்களின் எதன் பின்னேயாவது ஓடிக்கொண்டுதான் இருக்கிறார்கள் . ஏன் இப்படி? எதற்காக ஓடிக்கொண்டே இருக்கிறார்கள் ? அதன் அடிப்படைக் காரணம் ஆச்சரியப்படுவீர்கள். என்ன? நீங்கள்

அது பொருட்களின் பின்னால் ஓடினாலும் அதிலிருந்து அது விலகிப்போவதில்லை.

தப்பிச் செல்லவே தந்த்ரா என்ன சொல்கிறது என்றால் அவர்கள் தங்களிடமிருந்து விலகி ஓடவே ஆசைப்படுகிறார்கள் ! அவர்கள் பொருட்களை நோக்கி ஓடவில்லை. அவர்கள் , தங்களிடமிருந்து முயற் சிசெய்கிறார்கள் . உலகப் பொருள்கள் என்பது

வெறும் சாக்குதான் . உங்களுடைய முதுகைத் திருப்பிக்கொள்ள அவைகள் உதவி செய்கின்றன . நீங்கள் உங்களைக்கண்டுதான் பயப்படுகிறீர்கள் . உங்களைப்பற்றி, உங்களிடம் மிகுந்த பயம் இருக்கிறது.

ஆகவே, நீங்கள் முதலில் செய்ய வேண்டியது எல்லாம், அதைக்கண்டு பயப்படாமல் , அதனுடன் நட்பாக இருக்க முயலுங்கள் , அதனுடன் உரையாட முயற்சி செய்யுங்கள் . அப்பொழுதான் , உண்மையை நோக்கி, உங்களால் செல்ல முடியும்,

அது பொருட்களின் பின்னால் ஓடினாலும் அதிலிருந்து அது விலகிப்போவதில்லை.

சாரஹா என்ன சொல்கிறார் என்றால் : தங்களைத் தவிர்ப்பதற்கே, சாதாரண ஜனங்கள் , உலகப் பொருள்களை நோக்கி ஓடுகிறார்கள் . ஆனால் , உண்மை என்ன என்று அறிந்தவர்கள் , பொருள்களை நோக்கிச் சென்றாலும்,

ஓஷோ அதனுடைய கவர்ச்சியைக் கண்டு மயங்கமாட்டார்கள் அவைகளை வெறுமனே பார்த்து, ஆனந்தப்படுவா தங்களுடையதாக்கிக் கொள்ள ஒருநாளும் ஆடை உண்மையிலேயே, இவர்கள்தான் ஆனந்தமாக இருப்பவர்

இது, இங்கு ஒவ்வொருநாளும் நடக்கிறது. யாராவது, தியானத்துக்கு அருகில் நெருங்கிவரும் பொழுது. அவன் குழப்பம் அடைகிறான் , பயப்படுகிறான் . ஏன் ? ஏனென்றால் , நீங்கள் உங்களையே நன்றாகப் பார்க்கும் பொழுது அங்கே யாருமே இல்லை என்பதைக் கண்டு அதிர்ச்சியடைகிறீர்கள் . மிகவும் சுத்தமான , தெளிவான , ஆழமான ஒன்றும் அற்ற நிலையைக் கண்டு, உங்கள் மனம் பயந்து நடுங்குகிறது நீங்கள் , அப்பொழுது ஒரு மலை உச்சியில் இருப்பது போல உணர்ந்து, உங்களுடைய உடலும் , உள்ளமும் நடுங்கிக்கொண்டு இருக்கின்றன . ஒரு அடி, தவறாகவைத்தால், அவ்வளவுதான் . எல்லாம் முடிந்துவிடும் . ஆகவேதான் , அவர்கள் தங்களைவிட்டு ஓடுகிறார்கள் பொருள்களை நோக்கியல்ல . ' தங்களைவிட்டு ' என்று குறிப்பிடுவது. அவர்களது உயிர்த்தன்மையைத்தான் , இருப்பு நிலையைத்தான்

(BEING)

ஆனால் , சாதாரண ஜனங்களுக்கு, தங்களைத்தவிர் எதுவும் கிடைக்கவில்லை. அவர்கள் , தன்னைத்தவிர, வே தப்பிக்க முயற்சி செய்யவில்லை. ஆனால், அந்தப் அந்த பொருள்கள் ஆனந்தமடைவதற்கே, இருக்கின்றன; தன்னுடமையாக் மடையலாம். ஆனந்த அல்ல.

உங்களால் எப்படி ஆனந்தமாக இருக்கமுடியும் ? எப்பொழுதும் உங்களைக்கண்டு பயந்தவாறே இருக்கிறீர்க

சாரஹா செல்லுகிறார் . " நீங்கள் ஒரு தாந்திரிகளை ஆனந்தமாக இருக்கும் நிலையைப் பார்த்தோ அல்லது நல்ல உண்ணும் பொழுதோ அல்லது மது அருந்தும் பொழுதே தவறாக எடை போட்டு விடாதீர்கள் . வெளிப்பார்வையில் , ஒரு சாதாரணமனிதன் செய்வதற்கும் எந்த வேறுபாடும் - அவர்களுக்குள்ள வித்தியாசம் மிக ஆழமானது. மற்றும் மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது, இரண்டும் ஒன்று போ பெண்ணை விரும்பும் ஆணை. ஒரு சாதாரணமனிதன் தாந்த்ரிகன் என்றோ, எப்படி உங்களால் புரிந்து வெளிப்பார்வையில் , மேலோட்டமாகப் பார்க்கையி செய்கையும் ஒன்று போலவேதான் இருக்கும். எ

உதாரணமாக,

இரண்டு நாட்டியக்கலைஞர்கள் , இரண்டு அரங்கத் அதில் ஒருவர் , தன்னுடைய வித்தைக்கர்வத்தை வெளியே எல்லோரும் தன்னை ஒருபெரிய நாட்டியக்கலைஞன் என் என்று பார்ப்போரின் கண்களை ஆவலுடன் பார்த்துக்கொண்டு மக்களின் கைத்தட்டலை எதிர்ப்பார்த்து ஆடுகிறார் . அவருமை வலுவடைய, அவர்கள் உதவியே செய்கிறார்கள். இவர். வேலையாகக் கருதுகிறார்.

இன்னொருவர் , தன்னுடைய மகிழ்ச்சிக்காக ஆ நாட்டியத்தைக் கலையாகக் கருதுகிறார் மற்றும் ஒரு கலையாக மக்களின் கைத் தட்டலை எதிர்ப்பார்த்தோ அல்லது மக்க எதிர்பார்த்தோ அவர் ஆடவில்லை. அதைப் பற்றி அவ கவலைப்படவில்லை. அவர், அந்த நாட்டியத்தோடு ஒன்றிவி இதுவரையும் வேற்றுமைப்படுத்தி உங்களால் பார்க்க முடியு கஷ்டம்.

மாறாக, அந்தக் கர்வத்தோடு, கடமையாக எண்ணி

அதனுடைய கவர்ச்சியைக் கண்டு மயங்கமாட்டார்கள், ஏமாறமாட்டார்கள் . அவைகளை வெறுமனே பார்த்து. ஆனந்தப்படுவார்கள் . அவைகளை, தங்களுடையதாக்கிக் கொள்ள ஒருநாளும் ஆசைப்படமாட்டார்கள் உண்மையிலேயே, இவர்கள்தான் ஆனந்தமாக இருப்பவர்கள்

ஆனால் , சாதாரண ஜனங்களுக்கு, தங்களைத்தவிர்த்து ஓடுவதற்கு வேறு எதுவும் கிடைக்கவில்லை. அவர்கள் , தன்னைத்தவிர , வேறு எதனிடமிருந்தும் தப்பிக்க முயற்சி செய்யவில்லை. ஆனால் , அந்தப் பொருள்களால் , அவன் மடையலாம். அந்த பொருள்கள் எல்லாம் , அவன் ஆனந்தமடைவதற்கே, இருக்கின்றன ; தன்னுடமையாக்கிக் கொள்வதற்காக ஆனந்த அல்ல.

உங்களால் எப்படி ஆனந்தமாக இருக்கமுடியும் ? - ஏனென்றால், நீங்கள் எப்பொழுதும் உங்களைக்கண்டு பயந்தவாறே இருக்கிறீர்களே -

சாரஹா செல்லுகிறார் . " நீங்கள் ஒரு தாந்த்ரிகரை, ஒருபெண்ணுடன் ஆனந்தமாக இருக்கும் நிலையைப் பார்த்தோ அல்லது நல்ல சுவையான உணவை உண்ணும் பொழுதோ அல்லது மது அருந்தும் பொழுதோ, பார்த்து, அவரை தவறாக எடை போட்டு விடாதீர்கள். வெளிப்பார்வையில், அவர் செய்வதற்கும், ஒரு சாதாரணமனிதன் செய்வதற்கும் எந்த வேறுபாடும் இருக்காது. ஆனால் , அவர்களுக்குள்ள வித்தியாசம் மிக ஆழமானது. மற்றும் மிக முக்கியமானது. மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது, இரண்டும் ஒன்று போலவே தெரியும். ஒரு பெண்ணை விரும்பும் ஆணை, ஒரு சாதாரண மனிதன் என்றோ அல்லது தாந்த்ரிகன் என்றோ, எப்படி உங்களால் புரிந்து கொள்ள முடியும் ? வெளிப்பார்வையில் , மேலோட்டமாகப் பார்க்கையில் , இருவருடைய செய்கையும் ஒன்று போலவேதான் இருக்கும்.

உதாரணமாக,

இரண்டு நாட்டியக்கலைஞர்கள், இரண்டு அரங்கத்தில் ஆடுகிறார்கள் அதில் ஒருவர் , தன்னுடைய வித்தைக்கர்வத்தை வெளியே காட்டவேண்டும் , எல்லோரும் தன்னை ஒருபெரிய நாட்டியக்கலைஞன் என்று கருதவேண்டும் என்று பார்ப்போரின் கண்களை ஆவலுடன் பார்த்துக்கொண்டு ஆடுகிறார் . அவர் மக்களின் கைத்தட்டலை எதிர்ப்பார்த்து ஆடுகிறார் . அவருடைய கர்வம் , மேலும் வலுவடைய , அவர்கள் உதவியே செய்கிறார்கள் . இவர் , நாட்டியத்தை ஒரு வேலையாகக் கருதுசிறார்.

இன்னொருவர் , தன்னுடைய மகிழ்ச்சிக்காக ஆடுகிறார் . இவர் , நாட்டியத்தைக் கலையாகக் கருதுகிறார் மற்றும் ஒரு கலையாக ஆடுகிறார். அவர், மக்களின் கைத் தட்டலை எதிர்ப்பார்த்தோ அல்லது மக்களின் பாராட்டை எதிர்பார்த்தோ அவர் ஆடவில்லை. அதைப் பற்றி அவர் கொஞ்சம் கூட கவலைப்படவில்லை. அவர் , அந்த நாட்டியத்தோடு ஒன்றிவிடுகிறார் . இவர்கள் இதுவரையும் வேற்றுமைப்படுத்தி உங்களால் பார்க்க முடியுமா? இது மிகவும் கஷ்டம் . மாறாக , அந்தக் கர்வத்தோடு, கடமையாக எண்ணி ஆடும் கலைஞரை,

உயர்நிலைக் காட்டும் ' தந்த்ரா' ' நீங்கள் ஒரு சிறந்த கலைஞராகக்கூடக் கருதக்கூடும். ஏனென்றால், அவர், நீங்கள் புரிந்துகொள்ளக்கூடிய , அகங்கார மொழியிலேயே பேசுகிறார் . கலையை கலையாகக் கருதி, ஒன்றி ஆடும், அந்த இரண்டாவது கலைஞரை, நீங்கள் ஒரு கிறுக்கன் என்று கூட நினைக்கக் கூடும். இவர் , அப்போதைக்கப்போது, நிகழ்காலத்தில் ஒன்றிய நிலையில் ஆடுகிறார் . அந்த நிலையில் நீங்கள் இருந்தொலொழிய , அதை உங்களால் புரிந்துகொள்ள முடியாது.

நீங்கள் ஒன்றைப் புரிந்துகொள்ள வேண்டும் என்றால் , உங்களுக்கு, அதன் பெயர் தெரிந்திருக்க வேண்டும் . ஒரு தாந்த்ரிகன் , ஒரு பெண்ணின் பக்கத்தில் உட்கார்ந்து, அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டிருப்பதற்கும் , ஒரு சாதாரண மனிதன் அப்படி உட்கார்ந்திருப்பதற்கும் , உங்களுக்கு

என்ன வேறுபாடு தெரியும்? அந்தச் சாதாரண மனிதன், தன்னிடமிருந்து தப்பிச் செல்ல நினைக்கிறான் . அவன் தன்னை மறக்க , அவளிடம் தன்னை இழக்கத்தயாராக இருக்கிறான் . முதலில் , அவன் தன்னையே விரும்புவது இல்லை. ஆகவேதான் , ஒரு பெண்ணை விரும்புகிறான். அப்பொழுது, அவன் தன் உண்மை நிலையை மறக்க இயலும் அந்தப் பெண்ணை, மனத்தை மறக்கடிக்கும் மதுவாக அவன் கருதுகிறான். அப்படி, அவன் ஓய்வு நிலையை அடைய முயற்சிக்கிறான். அப்படி ஒரு கணநேரமாவது, அவன் எந்தவிதப் பரபரப்பும் இல்லாமல் , ஓய்வாக இருக்க நினைக்கிறான்.

இப்பொழுது, ஒரு தாந்த்ரிகன் , மிகுந்த பரவசத்தோடு, ஒரு பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு இருக்கிறார் .... எங்கேயும் , எதனிடமிருந்தும் எதை நோக்கியும் ஓட முயற்சிக்கவில்லை. அவரிடம் , தப்பி ஓடுவதற்கு, எதுவுமே இல்லை. அவர் இப்பொழுது அந்த பெண்ணின் கையைப் பிடித்துக் கொண்டிருப்பது எதற்காகவென்றால் , தன்னிடமுள்ள அரிய பொக்கிஷத்தை , அவளுடன் பங்கிட்டுக் கொள்ளவே அப்படி செய்கிறார்.

எல்லோரிடமும் , எல்லாவற்றையும் , நீங்கள் பகிர்ந்து கொள்ள முடியாது. நீங்கள் அன்போடு இருக்கும் பொழுது மட்டுமே, சில விஷயங்களை உங்களால் பகிர்ந்து கொள்ள முடியும் . அதைப்போல , சில விஷயங்களை நம்பிக்கையில் மட்டுமே, பகிர்ந்து கொள்ள முடியும்.

மக்கள் என்னிடம் , நீங்கள் ஏன் பொது ஜனக்கூட்டத்தில் பேசக்கூடாது என்று கேட்கிறார்கள் . அது ஏனென்றால் , சிலவற்றை, நான் ஆழமான அன்பிலும் , மற்றும் சிலவற்றை ஆழமான நம்பிக்கையிலும்தான் , என்னால் பகிர்ந்து கொள்ள முடியும் . என்மேல் அன்போடு இருப்பவர்களோடு மட்டும்தான் என்னால் பேச முடியும். இல்லாவிட்டால் , அது அர்த்தமில்லாமல் , பயனற்றுப் போய்விடும் . மேலும் அதை புரிந்து கொள்வதற்குப் பதிலாக , அதைத் தவறாக அர்த்தம் பண்ணிக் கொள்வார்கள் . அதை அவர்கள் சரியாகப் புரிந்து கொள்ள , எந்த வழியும் கிடையாது.

நான் சொல்வதை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் நிலையில் இருந்தால்தான் , நான் உங்களோடு தொடர்புகொள்ள முடியும் உங்களுடைய இதயம் , தயாராக,

திறந்த நிலையில் இருந்தால் தான் , நான் உங்கள் இதயத்தோடு விளையாட முடியும் . அப்பொழுது ஒரு சிறந்த நாதம், உங்களிடம் பிறக்கும். ஆனால் நீங்கள் மூடிய நிலையில் , நம்பிக்கை இல்லாமல் , சந்தேகத்தோடு இருந்தால், என்னால் அந்த நாதத்தை, உங்களிடம் ஏற்படுத்த முடியாது. ஏனென்றால் , என்னால் உங்களுடைய உயிர்த்தன்மையின் ஆழத்திற்குச்சென்று, உங்கள் இதயத்தோடு விளையாடமுடியாது. என்னை, நீங்கள் உங்கள் உள்ளேசெல்ல அனுமதிக்காவிட்டால், அந்த நாதத்தை, என்னால் உண்டாக்க முடியாது.

அந்த நாதம் , உண்மையிலேயே இருக்கிறதா என்று நீங்கள் கேட்கிறீர்கள் . அதற்கு ஒரே வழி, அந்த நாதத்தை உங்களிடம் ஏற்படுத்தி, அதை நீங்களே உணரும்படி செய்ய வேண்டும் , வேறு வழி எதுவும் கிடையாது. நீங்கள் , " அந்த நாதம் என்னிடம் எழும்பட்டும் , பிறகு நான் உங்களை நம்புகிறேன் " என்று கூறலாம் . ஆனால் , பிரச்சினை என்னவென்றால் , நீங்கள் முதலில் என்னை நம்பினால்தான் , அந்த நாதமே உங்களிடம் எழும்பும். அதற்கு முன்பு, நீங்கள் அதை அறிந்து கொள்ளலாம்; ஆனால், அதை உணர்ந்துகொள்ள முடியாது. ஆகவே, நான் உங்களோடு தொடர்புகொள்ள , நம்பிக்கை அவசியமாகிறது.

ஒரு தாந்த்ரிகன், ஒரு பெண்ணின் கையை, அன்போடு பிடித்துக் கொண்டிருப்பது போல , வேறு சிலரின் கைகளைக் கூடப் பிடித்துக்கொண்டு இருக்கலாம் . ஆனால், தன்னிடம் நிகழ்ந்த, அந்த ஆன்மீக சக்தியை, யார் ஒருவர் தன்மேல் அன்பு வைத்திருக்கிறாரோ, அவரிடம் மட்டுமே செலுத்த முடியும், பகிர்ந்து கொள்ள

முடியும் . அதையும் ஒரு சில கணங்களுக்குத்தான் , ஒருவித சூழலில்தான் நிகழ்த்த முடியும்.

ஒரு குறிப்பிட்ட நேரத்தில்தான் , இருவரும் நெருங்கிவரும்பொழுது அந்தச் சக்தி ஒருவரிடமிருந்து மற்றவருக்குக் குதித்துப் பாயும் . நீங்கள் உண்மையான அன்போடு இருந்தால், நீங்கள் அந்தக் கணத்தை உணரலாம் . மாறாக , அவர்கள் 24 மணி நேரமும் , அதே நிலையில் இருக்க முடியாது. நீங்கள் உங்களுடைய மனைவிமேல் , குழந்தையின் மேல் , உங்களுடைய கணவனின் மேல் 24 மணிநேரமும், ஒரே அன்புப் பரிவர்த்தனையில் இருக்க முடியாது என்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம்தான் . அந்த உச்ச அன்பு, ஒரு சில நேரத்தில்தான் நிகழும். அப்பொழுது, உங்கள் இருவருடைய மேல் வட்டம் ஒன்றை ஒன்று தழுவியவாறு இருக்கும் . அந்த அளவுக்கு நீங்கள் இருவரும் நெருங்குவீர்கள். அப்பொழுதுதான், நீங்கள் உங்களுடைய சக்தியை மற்றவர்களுக்கு அளிக்க முடியும்.

இப்பொழுது சாரஹா, ' வெளியிலிருந்து ஒருவன் , தாந்த்ரிகனைப் பார்க்கும் பொழுது, பொருள்களை நோக்கி சாதாரண மக்களைப் போலத்தான் இருப்பார். சாதாரண வாழ்க்கை இன்பங்களை அனுபவிப்பவராகவே தோன்றும் . ஆனால் அவர்கள் அப்படி இல்லை. ஓடும்

சாரஹா '' மூழ்கி எழுந்தால் களிப்புக்கடலில் ஒரு தடவை செழுமையடையுமே காணும் மனம் , பார்வையில் நன்மை எனத்தெரியும் இதுவும் அதுவும்

சாதாரண மக்கள் ஈடுபடுவது, சம்சாரா'. எங்களைப் போன்ற தாந்த்ரிகன் ஈடுபடுவது நிர்வாணா' , சாரஹா, களிப்புக்கடலில் மூழ்கிய மனம் , சம்சாராவை நோக்கியும் ஓடலாம் , நிர்வாணாவை நோக்கியும் (இதுவும், அதுவும்) ஓடலாம். அதாவது, வெளியிலும், உள்ளேயும், உடல்ரீதியாகவும், ஆன்மீக ரீதியாகவும் , பார்க்கக் கூடிய நிலைக்கும் , பார்க்க முடியாத நிலைக்கும் , அது செல்ல முடியும் . அதை இரண்டுக்குமே உபயோகப்படுத்திக் கொள்ளலாம். இது ஒரு மிகச் சிறந்த அறிக்கை.

. சாதாரணமாக , நீங்கள் கருதிக் கொண்டிருக்கும் ஆன்மீக நிலையில் உயர்வாக இருப்பவர்கள், உங்கள் மனத்தை இந்த உலகத்தில் பயனுள்ள காரியங்களுக்கும் பயன்படுத்தலாம் அல்லது கடவுளை அறியவும் பயன்படுத்தலாம் என்றுகூறுவார்கள் . அவர்கள் எண்ணுவது, ஒன்று இதில் அல்லது அதில் ' என்றுதான் . ஆனால் தந்த்ரா, இப்படி வாழ்க்கையை இரண்டு விதமாக, கீழானநிலை என்றும் மேலான நிலை என்றும் , பொருள் பற்று என்றும் ஆத்மீகப் பற்று என்றும் , சம்சாரா என்றும் , நிர்வாணா என்றும் பிரிப்பது சரியில்லை என்று கூறுகிறது. இப்படி வாழ்க்கையை, இருவேறு கூறுகளாகப் போடுவது சரியில்லை. வாழ்க்கை, பிரிக்க முடியாத ஒன்று என்று அது குறிக்கிறது.

ஆனால் , உண்மையில் , நீங்கள் புத்தி கூர்மையுடையவராக இருந்தால் , நீங்கள் கடவுளோடு மட்டும் களிப்பில் இருக்க முடியாது என்றும் அதைப்போல சாதாரண வாழ்க்கையில் மட்டும் களிப்போடு இருக்கமுடியாது என்றும் புரிந்து கொள்ளுங்கள் . நீங்கள் கடவுளோடு களிப்பில் இருப்பது போல , இந்த பாறையோடும் களிப்பில் இருக்க முடியும்.

இந்த அருமையான , மிகச் சிறந்த அறிக்கையை கவனியுங்கள். உங்களுடைய மனம் உண்மையிலேயே, புத்தி கூர்மையுடையதாக இருந்து, களிப்பில் செழுமை யடைந்திருந்தால், நீங்கள் பேரானந்தத்தையும் (BLISS) மகிழ்ச்சியையும், இன்பங்களையும் ஒன்றாகவே கருதி ஆதரிப்பீர்கள் ஏனென்றால் , எல்லாமே கடவுளுக்கே சொந்தம் . எல்லாமே கடவுள் தன்மையின் வெளிப்பாடுதான் கீழான நிலையும் , மேலான நிலையும்.

அது பொருட்களின் பின்னால் ஓடினாலும் அதிலிருந்து அது விலகிப்போவதில்லை.

சாரஹா, ' நான் பொருள்களை நோக்கி ஓடுவதாக , நீங்கள் கருதுவது. உங்களுடைய கற்பனையே தவிர வேறல்ல ' என்று கூறுகிறார் . நான் எதை நோக்கியும் ஓடவில்லை. அப்படி ஓடுவதற்கு, எனக்கு எதுவுமே இல்லை, மேலும் யாரும் இல்லை.

ஒருவன் , உணவிலிருந்து, கடவுள் வரை, உடலுறவு இன்பத்திலிருந்து, சமாதி நிலை வரை எல்லாவற்றையும் ஒரே தன்மையில் ஆனந்தமாகக் கருதும் அளவுக்கு அவள் தன்னுடைய உள்ளுணர்வு உண்மை நிலையை அடைகிறான்.

அப்படி அவன் எந்த வேற்றுமையையும் பார்க்கக்கூடிய மற்றும் அப்படிப்பார்க்க வேண்டிய தேவையும் இல்லாத நிலையில்தான் இருக்கிறான்.

தந்த்ரா, இரண்டு உலகத்தையும் உங்களுக்கு அளிக்கிறது. தந்த்ரா "இதுவா இல்லை அதுவா ' என்ற நிலையில் இல்லை ; அது இதுவாகவும், அதுவாகவும் இருக்கிறது. அது, எல்லாவற்றையும் தன்னுள்ளே கொண்டதாக இருக்கிறது. இந்த வகையில் , எல்லா மதங்களுமே, ஏழ்மையாகவே இருக்கின்றன . அவைகள் , இந்த உலகத்தை அறவே விட்டு விட்டு, தேவையில்லாத , பொய்யான வேறு உலகத்தைக் காட்டிக் கொண்டு இருக்கின்றன . அவைகள் , " ஒன்று இந்த உலகத்தைத் தேர்ந்து எடுங்கள் அல்லது கடவுளைத் தேர்ந்து எடுங்கள் " என்று கூறுகின்றன . அவைகள் , கடவுளை இந்த உலகத்தின் எதிர்ப்பாகவே சித்தரிக்கின்றன . தந்த்ரா மட்டும்தான் ஒரு " முழுமையான மதம் " என்று கூறலாம் ஆமாம் . ஒரே ஒரு முழுமையான மதம் . இப்படிப்பட்ட முழுமையான நோக்கத்தைக் கொண்ட , வேறு எந்த மதமும் இந்த உலகத்தில் இதுவரை தோன்ற வில்லை.

ஆமாம்... அது இரண்டுமாக இருக்கிறது.

தந்த்ரா. " தேர்ந்து எடுக்கும் பேச்சுக்கே இடமில்லை. இரண்டுமே உங்களுடையதுதான் . நீங்கள் , சந்தைக்கடைக்கும் செல்லலாம் . அங்கே, அதை ஆனந்தமாக ஏற்றுக் கொள்ளலாம் , அதே சமயத்தில் அதைத் தாண்டியும் செல்லமுடியும் . அதையும் அனுபவிக்கலாம். ' என்று கூறுகிறது.

நீங்கள் ஒன்றைத்தான் தேர்ந்து எடுக்கவேண்டும் என்று அது உங்களைக்கட்டாயப்படுத்தவில்லை. தேர்ந்து எடுத்தல் என்பது முடிவில் அழிவைத் தான்

ஏற்படுத்தும். அப்படி, "இதுவா அல்லது அதுவா' என்று தேர்ந்து எடுப்பதால் , இந்த உலகம் , வெறும் உலகமாகவே இருக்கிறது. சொர்க்கம் என்ற மாற்றத்தை அது அடையவே இல்லை. அவைகளெல்லாம் , சொர்க்கம் நரகத்தை வேறு எங்கேயோ சுட்டிக் காட்டுகின்றன.

கடவுளைப் பற்றி, யாருக்கு அக்கறை? - அது, அவ்வளவு உண்மையாக இல்லை. மற்றும் அவர் எங்கேயோ இருக்கிறார் . ஒருவன் அதற்கு என்ன அவரசம் ? அதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் . என்று கடவுளைத் தள்ளிப்போடலாம் . ஆனால் , வாழ்க்கை ஓடிக் கொண்டே இருக்கிறது.

" தேர்ந்து எடுங்கள் " என்று வலியுறுத்தும் இந்த மதங்களெல்லாம் மக்களை, இந்த உலக ஆசைகளிலேயே மூழ்கடித்துக் கொண்டு இருக்கின்றன. ஆகவே, பல லட்சம் மக்களில், ஒருவன் தான் உண்மையான மதத்தன்மையோடு வெளியே வருகிறான் . ஆகவே, அவைகளெல்லாம் தேவையில்லாமல் இந்தத் தேர்ந்து எடுத்தலை வலியுறுத்துகின்றன. ஒருவன் அதை அடைவதற்காக, இந்த உலகத்தைத் துறக்க வேண்டும் , குடும்பம் , நண்பர்கள் என்று அவன் , அன்போடு இருக்கும் அனைத்தையும் துறக்க வேண்டும் . இப்படித் தேவையில்லாமல், எல்லாவற்றையும் பிரித்துப்பார்க்க, அவைகள் வழி செய்கின்றன.

இதனால் , அடுத்து இன்னொரு பிரச்சினையும் ஏற்படுகிறது. இப்படி இந்த உலகத்தை மறுத்து, கடவுளை அடைய நினைக்கும் இவர்கள், வாழ்க்கையை மறுத்த காரணத்தினால், ஒரு விபரீதமான எண்ணங்கள் உடையவராகி, வாழ்க்கையை உண்மையாகப் புரிந்து கொள்ளும் ஆற்றலை இழந்து, அறிவுக் கூர்மையை இழந்து புத்திசாலித்தனத்தை இழந்து, ஒரு முட்டாளாகி, நரம்புக் கோளாறு உடைய கர்வம் நிறைந்தவராக பிறருடைய துன்பத்தில் மற்றும் தன்னுடைய துன்பத்தில் இன்பம் காணுபவராகி ஒரு வித்தியாசமான , மாறுபட்ட மனநிலையை

உடையவராகிறார்கள் . அவர்கள் இந்த உலகத்தைவிட்டு, வேறு எங்கேயோ செல்லலாம் . அங்கு சென்று. அவர்கள் தங்களையே கொடுமைப்படுத்திக்கொள்ளலாம் . இந்த நாள் வரை அவர்களுடைய ஆன்மீகம் இப்படித்தான் இருக்கிறது. உங்களையே கொடுமைப்படுத்திக்கொள்ளுங்கள் உங்களிடமே வன்முறையைக் காட்டுங்கள் , உங்களையே கொல்லுங்கள் என்று அவைகள் உங்களை வற்புறுத்தி, மெல்ல மெல்ல, உங்களுடைய உயிர்த்தன்மைக்கு விஷமிடுகிறார்கள் . இப்படிப்பட்ட இவர்கள், மன ஆரோக்கியமும், உடல் ஆரோக்கியமும் குன்றியவர்களாகவே இருக்கிறார்கள்

ஆகவேதான் , பல லட்சம் மக்களில் , ஒருவன்தான் சுயசிந்தனையோடு உண்மையாகக் கடவுளை அடைகிறான் . 100 பேர்களில் 99 பேர்கள் , நரம்புக் கோளாறு கொண்டு, ஒருவித பைத்திய நிலையில்தான் இருக்கிறார்கள் . ஆகவே, பல லட்சம் மக்களில் , ஒருவன்தான் ஒரு புத்தராகவோ, ஒரு கிருஸ்துவாகவோ அல்லது ஒரு கிருஷ்ணாவாகவோ மாற முடிகிறது. இந்த மதங்களெல்லாம் , எப்படி மக்களை பாழ்படுத்தி வைத்திருக்கின்றன!

கொஞ்சம் சிந்தித்துப்பாருங்கள் . ஒரு தோட்டக்காரன் , தன் தோட்டத்தில் பல லட்சம் மரங்களை வளர்க்கிறான். ஆனால் , ஒரே ஒரு மரம் தான் பூக்கிறது. நீங்கள் , அந்தத் தோட்டக்காரனை, ஒரு தோட்டக்காரன் என்று கருதுவீர்களா? ஆனால் , நீங்கள் . அது அந்தத் தோட்டக்காரனின் தவறு இல்லை; அவன் வளர்க்காவிட்டால்கூட , அந்த மரங்கள் அப்படித்தான் இருக்கும் என்று கூறலாம் . ஆனால் , உண்மை அப்படியில்லை. அந்த ஒரு மரம் மாத்திரம்தான் , எப்படியோ, அந்தத் தோட்டக்காரனிடமிருந்து தப்பி விட்டது! மற்ற எல்லா மரங்களும் , அவனுடைய கண்காணிப்பில் இருந்தன . ஆகவே, அவைகளால் , தன் சுய சிந்தனையாக , தைரியமாக வளர முடியவில்லை. அவைகளுடைய சுயசிந்தனையையும் , தைரியத்தையும் அந்தத் தோட்டக்காரன் எடுத்துக் கொண்டு விட்டான் . அந்த ஒரு மரத்தை மட்டும் ஏனோ மறந்து விட்டான், இப்படித்தான் பெரும்பாலான மக்கள், மதத்தின் பிடியில் , மதத்தலைவர்களுடைய பிடியில் சிக்கிக் கொண்டு, வளர்ச்சியற்று இருக்கிறார்கள் .

எல்லா மரங்களுமே, மலர்ந்து காய்க்கக்கூடிய தன்மையிலேயேதான் இருக்கின்றன. அதைப் போல, ஒவ்வொரு மனிதனும் , கடவுளை அறியக்கூடிய நிலையில்தான் இயல்பாகவே இருக்கிறான்.

தந்த்ரா, மிக்க புதுமையான, மிகவும் முழுமையான ஒரு மதத்தை அறிமுகப்படுத்துகிறது. அது, நீங்கள் எந்த உலகத்தையும், தேர்ந்து எடுக்கத்

தேவையில்லை என்று கூறுகிறது. நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ, அங்கேயே இருங்கள் என்று அது கூறுகிறது. அங்கேயே, உண்மையாக , முழுமையாக இருங்கள் என்று அது கூறுகிறது. அப்பொழுது, கடவுளை, நீங்கள் அனுபவத்தால் உணர முடியும் என்று அது கூறுகிறது. அது, இந்த உலகத்துக்கு எதிராக இல்லை. அது கடவுளைச் சார்ந்து இருக்கிறது. அதனுடைய கடவுள் , இந்த உலகத்தையே அடக்கிக் கொள்ளும் அளவுக்கு, பரந்தது. விரிந்தது மற்றும் எல்லையில்லாதது.

என்னைப் பொருத்தவரையில் , இது மிகமிகச் சரியானது. அதாவது. படைப்புகள் அனைத்தும் , படைத்தவனை உள்ளடக்கிக்கொண்டு இருக்கிறது. படைப்புகள் அனைத்தும் படைத்தவனுக்கு எதிராகவே இருக்கும் என்பதில் என்ன அர்த்தம், என்ன தர்க்கம், என்ன அடிப்படை இருக்கிறது? கடவுள்தான் உங்களைப்படைத்தார் என்றால், கடவுள் தான் உங்கள் உடலையும் காம உணர்வையும் படைத்தார் என்றால், அது ஒருக்காலும் கடவுளுக்கு எதிராக இருக்க முடியாது.

ஜியார்ஜ் குருட்ஜீவ், 'எல்லா மதங்களும், கடவுளுக்கு எதிராகவே இருக்கின்றன என்கிறார் . தந்த்ராவைத்தவிர , எல்லா மதங்களும் அப்படித்தான் இருக்கின்றன. நீங்கள் கடவுளின் படைப்புக்கு எதிராக இருந்தால் , நீங்களும் கடவுளுக்கு எதிராக இருக்கிறீர்கள் என்பதை மறை முகமாக சுட்டிக்காட்டுகிறார்கள் . நீங்கள் ஒரு ஓவியத்துக்கு மறுப்புக் கூறினால் , அந்த ஓவியரையும் , அது

மறுப்பதாகாதா? நீங்கள் ஒரு கவிதையை மறுத்தால், அது, அந்த கவிஞனையே மறுப்பதாகாதா?

கடவுள் தான், இவைகளைப் படைத்தார் என்றால், அவைகள் ஒவ்வொன்றிலும் அவருடைய கையெழுத்து பொறிக்கப்பட்டிருக்கும் . ஆமாம் . அவருடைய கையெழுத்து, ஒவ்வொன்றிலும் இருக்கிறது. தந்த்ரா, இதை அடித்து சொல்கிறது. உங்களுக்கு அதைப்பார்க்கக்கூடிய, அந்த ஞானக்கண் அல்லது மனக் கண் தேவை, நுட்பமான செவிகள் தேவை. மற்றும் மகிழ்ச்சியாக இருக்க, எதையும் வாங்கிக் கொள்ளும், ஒரு திறந்த உள்ளம் தேவை. அப்பொழுது, அது நிகழ ஆரம்பிக்கும்.

சந்தோஷம் மற்றும் பூரிப்பின் மொட்டுக்களும் பெருமையும் வளரும் போது எதுவும் எங்கும் போய்விடுவதில்லை பேசவொண்ணாப் பேரின்பம் கனிகிறது

இதுதான் அந்த முக்கிய சாவி. அந்த ரகசியம் ! இவைகள் தான், சாரஹாவின் கடைசிச் சூத்திரம். அவர், இதுவரை சொன்னதற்கெல்லாம், இதுதான் அவருடைய முடிவான கருத்து. அதாவது உடலால் ஏற்படும் சந்தோஷங்கள் அனைத்தும், உங்களுடைய சக்தியை வெளியே தள்ளி, பிற பொருள்களினால்தான் ஏற்படுகிறது. சுருக்கமாகச் சொன்னால், உங்களுடைய புலன் இன்பங்களெல்லாம், பிறபொருள்களைச் சார்ந்தே இருக்கின்றன . அருமையான அறிவிப்பு! இதில் தவறேதும் இல்லை. ஆனால், பேரின்பம் (Joy) உங்களுடைய சக்தியை உங்களுக்குள்ளே செலுத்துவதால் ஏற்படுவது. இது

தன்னிலையை (SUBJECTIVE) சார்ந்தது. புலன் இன்பங்களுக்கு முன்நிலை (OBJECTIVE) அதாவது பிறபொருள்கள் தேவையாக இருக்கிறது. ஆனால் பேரின்பத்திற்கு நீங்களே போதும் வேறுயாரும், வேறு எதுவும் தேவையில்லை.

சந்தோஷம் (PLEASURE) என்பது உடலைச்சார்ந்து (PHYSICAL) இன்பம் சார்ந்தது. (PSYCHOLOGICAL). ஆனால், மூன்றாவதான பேரானந்தம் (BLISS) ஏற்படாதவரையில், மேற்கண்ட இரண்டும் மொட்டு

வடிவத்திலேயே இருக்கிறது. அந்தப் பேரானந்தம்தான் 1000 இதழ்கள் கொண்ட தாமரை - உங்களுடைய பிரக்ஞையின் முடிவான , உச்சத்தன்மை (ULTIMATE) இது மலர்ந்த நிலையில்தான் , அவைகளும் மலர்ந்து நிற்கும்.

- இப்பொழுது இதைச் சற்று ஆழ்ந்து புரிந்துகொள்ளவேண்டும் . ஒரு சாதாரண மனிதன் , உடல் மூலமாக ஒரு எல்லைக் குட்பட்ட இன்பத்தைத்தான் , பெற முடியும் . ஆனால் , ஒரு தாந்த்ரிகன் , மிகுந்த ஆனந்தத்தை, தன் உடல் மூலமாக அடைகிறான் . இதுவே பேரானந்தம் , எல்லையற்ற இன்பம் எல்லாம். (BLISS, ECSTACY.) அது மொட்டு வடிவத்தில் இல்லை, மலர்ந்து கொண்டு இருக்கிறது. ஒரு சாதாரண மனிதன், சங்கீதம், ஆடல், ஓவியம் , சிற்பம் போன்றவைகள் மூலமாக ஒருவித இன்பத்தை அடையலாம் . இவைகளெல்லாம் எல்லைக்குட்பட்ட இன்பங்கள் . ஆனால் , ஒரு தாந்த்ரிகன் எல்லையற்ற இன்பத்தை அடைகிறான் . இந்த முடிவான , எல்லையில்லாத ( முடிவு என்பது கடைசிநிலை எல்லையில்லாதது என்பது அதனுடைய இன்பமான தன்மை ) இன்பத்தை அடைகிறான் . அதுவே பேரானந்தம் இந்த முடிவான தன்மையை உணர்ந்த பிறகு, நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலிலும் , ஒவ்வொரு பொருளிலும் அதை உணரலாம் . அது, எல்லாவற்றிலும் பிரதிபலிப்பதை உணரலாம் . நீங்கள் கடவுளை உணர்ந்து அறிந்து கொண்டால் , நீங்கள் எங்கே நடந்தாலும் , ஒரு புனித (HOLY) பூமியில்தான் நடக்கிறீர்கள் என்பதை உங்களால் உணர்ந்து கொள்ள முடியும் . நீங்கள் பார்ப்பவற்றில் எல்லாம் , கடவுளைக்காண முடியும் . பிறகு, நீங்கள் சந்திப்பதில் எல்லாம் , கடவுளைச் சந்திப்பீர்கள்.

நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . அந்த மேலான அனுபவம் , அந்த கீழான அனுபவத்திலிருந்துதான் பிரதிபலிக்க வேண்டும் . அந்த மேலான அனுபவம் இல்லாமல் , அந்த கீழான அனுபவம் , வெறும் சிற்றின்பமாகவே (MUNDANE) இருக்கும் . இதுதான் பிரச்சினையே. ஆகவேதான் , பெண் இன்பத்தின் மூலமாக (SEX) அந்தப் பேரானந்த சமாதிநிலையை அடைய முடியும் என்று கூறும் . ஒரு

தாந்த்ரிகனை, சாதாரண மக்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆமாம் . அவர்களால் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் , இது புரிந்து கொள்ளக் கூடியதுதான். ஏன் இதை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை? அவர்களுக்குச் சமாதிநிலையைப்பற்றி, எதுவும் தெரியாது. அவர்களுக்கு இந்த சாதாரண , அருவருப்பான காம உணர்வு மட்டும்தான் தெரியும் , அதன் முடிவில் ஏற்படும் விரக்தியைத்தான் , ஏமாற்றத்தைத் தான் தெரியும். அதன் மூலமாக, அவர்கள் காமத்தைத்தான் மேலும் மேலும் அடைய முடியும்.

இந்த ஆங்கில வார்த்தையான ' லவ் (LOVE, காதல் , அன்பு ) என்பது மிகவும் அர்த்தமுள்ளது. இது சமஸ்கிருத வார்த்தையான ' லோபா' (LOBHA) என்ற வேரிலிருந்து வந்தது. இதன் அர்த்தம் என்னவென்றால் , பேராசை (GREED) மற்றும் காம இச்சை (LUST) என்பதாகும் . ஆகவே, ஒரு சாதாரண மனிதன் , ஒரு பெண்ணின் மேல் வைக்கும் அன்பு, பேராசையையும் , மற்றும் காம இச்சையையும் அடிப்படையாகக் கொண்டது. இந்தச் சாதாரண காம இச்சை கொண்ட அன்பிலிருந்து, அந்த முடிவான தெய்வீகப் பரவச நிலை எப்படி பிரதிபலிக்க முடியும் என்று ஒரு சாதாரண மனிதனால் , எப்படி அறிந்துகொள்ள முடியும் ? நீங்கள் , அந்த மேலான நிலையை அறிந்து கொண்டால் , அதில் அந்த கீழான நிலையும் சேர்ந்திருப்பதைப் புரிந்துகொள்ளலாம் . ஆகவே, அந்த மேலான நிலையை, எந்தக் கீழான நிலையும் தூண்ட முடியும் . எந்தக் கீழான நிலையிலிருந்தும் , அந்த மேலான நிலையை அடைய முடியும்

இது எப்படியென்றால் , நீங்கள் வீதியில் செல்லும் பொழுது, ஒரு சாதாரண கைக்குட்டையை, ஒரு ரூபாய் கூட பெறுமானமில்லாத கைக் குட்டையை, கண்டு எடுக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள் ஒரு நாள் , நீங்கள் ஒரு பெண்ணின் மேல் காதல் கொள் கிறீர்கள் . அடுத்து சில நாட்களில் , அதே பெறுமானமுள்ள கைக்குட்டையை கண்டு எடுக்கிறீர்கள். ஆனால், இது அந்த பெண்ணுக்குரியது. அதை, அவள் தவறவிட்டுச் சென்று விட்டாள் . இப்பொழுது, உங்களைப் பொறுத்தவரையில் , அதன் மதிப்பு என்ன ? வேறு யாராவது, 1000 ரூபாய் கொடுக்கிறேன் , அந்தக் கைக்குட்டையைக் கொடு என்று கேட்டால், நீங்கள் கொடுப்பீர்களா?! இப்பொழுது, அது சாதாரணக் கைக்குட்டை இல்லை. அந்த சாதாரணக் கைக்குட்டையில் , இப்பொழுது ஏதோ விலைமதிக்க முடியாத ஒன்று இருக்கிறது. அது, உங்களுடைய காதலியை மீண்டும் , மீண்டும் ஞாபகப்படுத்தக்கூடிய ஒரு பொருளாகிவிட்டது!

இதைப் போலத்தான் அதுவும் நீங்கள் சமாதி நிலையை அறிந்துகொண்டால், அந்த உடலுறவு உச்ச இன்பம் கூட, அந்த சமாதி நிலையை, அந்த பேரின்ப நிலையை ஞாபகப்படுத்தும். ஏன், எல்லா நிலைகளும், அந்த சமாதி நிலையைத்தான் ஞாபகப்படுத்தும் . அப்பொழுது, இந்த உலகத்தில் உள்ள அனைத்துமே, கடவுளால் நிரப்பட்டிருப்பதை உணர்வீர்கள்.

ந்தோஷம் மற்றும் பூரிப்பின் மொட்டுக்களும் பெருமையும் வளரும் போது

இன்பமும் , மகிழ்ச்சியும் கொண்ட அந்த மொக்கும் , கருணையும் நன்றியும் கொண்ட அந்த இலைகளும் , அந்தப் பேரின்ப நிலையை அடைந்தவனுக்குப் ஒன்றாகவே தெரியும் . அந்த மேலான நிலையை அடையாத சாதாரண மக்கள் , அவைகளை இலைகள் என்றும் மொக்கு என்றும் தனித்தனியாகப் பிரித்தே பார்ப்பார்கள் . அந்த மேலான நிலையை அடைந்தவர்களுக்கு, அது சாதாரண இலையாகத்தெரியாது. அவைகளின் வழியாகத்தான் , அந்த மேலான முடிவான

'' ஆன்மீக மலர் , மலர்ந்திருக்கிறது. இப்பொழுது நீங்கள் , அதே உயிர்ச்சத்துதான் , இன்பம் , மகிழ்ச்சி என்ற மொக்குக்கும் , கருணை அன்பு என்ற இலைகளுக்கும் மேலும் , அந்த பேரின்ப தெய்வீக மலருக்கும் செல்கிறது என்பதை அறிந்து கொள்வீர்கள். எல்லாமே, அந்தத் தெய்வீக ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை மலர , உதவி செய்கின்றன . அப்பொழுது. இந்தப் பேரியிக்க உயிர்த்தன்மையின் புகழை உணர்வீர்கள் . எல்லாமே, கடவுளின் புகழ் பாடுவதை உணர்வீர்கள்.

அந்த ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை, எப்பொழுது மலரும் ? அது உங்களிடமிருந்து எந்த உயிர்ச்சத்தும் வெளியே செல்லாதபொழுதுதான் நிகழும்

இப்பொழுது நன்றாகக் கவனியுங்கள். இன்பம் மற்றும் மகிழ்ச்சி (PLEASURE) எல்லாம் அதாவது உடல் இன்பம், மற்றும் புலன் இன்பம் அனைத்தும் , உங்களுடைய சக்தி வெளியே சென்றால்தான் ஏற்படும் . பேரின்பம் (BLISS), சக்தி, உங்களுக்குள்ளே (SUBJECTIVE) சென்றால் தான் ஏற்படும் . இது மனோரீதியானது

(PSYCHOLOGICAL) பேரானந்தம் (JOY) எப்பொழுது ஏற்படும் ? உங்களுடைய சக்தி எதுவும் வெளியே செல்லாதபொழுது, உங்களுக்குள்ளேயே வெறுமனே இருக்கும் பொழுது, அது ஏற்படுகிறது. நிகழ்கிறது. அப்பொழுது நீங்கள் எங்கேயும் வெளியே செல்லவில்லை. அப்படியே வெறுமனே இருக்கிறீர்கள். நீங்கள் , இந்த மரம் செடிகள் போல வெறும் உயிர்ப்பொருளாக அமர்ந்திருக்கிறீர்கள். இப்பொழுது, உங்களிடம் எந்தக் குறிக்கோளும் இல்லை. நிறைவேற்றக்கூடிய எந்த ஆசையும் உங்களிடம் இல்லை. உங்களுக்கு என்று எந்த எதிர்காலமும் இல்லை. நீங்கள் ' இப்பொழுது, இங்கே' வெறுமனே இருக்கிறீர்கள் . உங்களுடைய சக்தி, எங்கேயும் செல்லாதபொழுது எங்கேயும் ஓடாதபொழுது, எந்த இலக்கை நோக்கியும் , எதைத் தேடியும் செல்லாதபொழுது, நீங்கள் வெறுமனே, முழுமையாக இங்கே இப்பொழுது இருக்கிறீர்கள். அந்த நிலையில், உங்களுடைய சக்தி, ஒரு குட்டைபோல (POOL) தேங்கி, உங்களுக்குள்ளேயே இருக்கிறது. ' இப்பொழுது' (NOW) என்பது மட்டும்தான், உங்களுடைய காலமாக (TIME) இருக்கிறது. இறந்த காலம், மற்றும் எதிர்காலம் அனைத்தும் மறைந்துவிட்டன . ' இங்கே' (HERE) என்பதுதான் உங்களுடைய இடமாக இருக்கிறது. அப்பொழுது, உடல் ரீதியாகவும் , மனரீதியாகவும் வெளியே செல்லமுடியாத அந்த சக்தி, இப்பொழுது திடீரென்று மேல் நோக்கிப் பாய்கிறது. .. அப்பொழுது உங்களுடைய சிரசில், ஆயிரம் இதழ் கொண்ட தாமரை மலர்கிறது.

எதுவும் எங்கும் போய்விடுவதில்லை
பேசவொண்ணாப் பேரின்பம் கனிகிறது

ஆகவே, இன்பமும் , மகிழ்ச்சியும் மொக்காக இருக்கின்றன . கருணை மற்றும் நன்றியும் இலைகளாக இருக்கின்றன. அந்த முடிவான தெய்வீக ஆயிரம்

இதழ்கள் கொண்ட தாமரை, அவைகளின் நிறைவாரன, (FULFILMENT) பழமாக இருக்கிறது. இப்பொழுது

நீங்கள் உங்களுடைய சொந்த வீட்டுக்கு வந்துவிட்டீர்கள்.

என்ன நடந்தது எங்கே எதனில் என்பதெல்லாம் ஒன்றும் இல்லாதது ஆகிவிடும். இருந்து அது இதற்கும் அதற்கும் பயனளிக்கும் . ஆவல் வெறி இருக்கிறதோ இல்லையோ முறை என்பது ஒன்றுமே இல்லாத தன்மை.

இப்பொழுது, நீங்கள் செய்தவை அனைத்தும் , செய்யாதவை அனைத்தும் வெறும் கனவாகவே தோன்றும் . இப்பொழுது கர்மா (KARMA) அல்லது செயல் (ACTION) என்பது அர்த்தமில்லாததாகிவிடும். அவைகள் ஒன்றுமே இல்லை, தேவையும் இல்லை. அப்பொழுது, அந்தச் செயல்கள் எல்லாம் தண்ணீரின்மேல் போடும் கோடுகள்தான் என்று நீங்கள் உணர்வீர்கள். அவைகள் மறைந்து கொண்டே இருக்கும் . எதுவுமே அங்கு நிகழவில்லை. எல்லாம் அப்படியேதான் இருக்கிறது.

என்ன நடந்தது எங்கே எதனில் என்பதெல்லாம் ஒன்றும் இல்லாதது ஆகிவிடும். இருந்து அது இதற்கும் அதற்கும் பயனளிக்கும்.

சாரஹா' ஐயா, என்னை நன்றாகக் கவனியுங்கள் . நான் இதுவரை செய்ததும் , இப்பொழுது செய்துகொண்டு இருப்பதும், நிகழ்ந்தது அனைத்தும், அர்த்தமற்றது என்றும், அது ஒரு கனவு போலத்தான் என்றும் அறிந்து கொண்டிருக்கிறேன் ' என்று கூறுகிறார்

ஆவல்வெறி இருக்கிறதோ இல்லையோ முறை என்பது ஒன்றுமே இல்லாத தன்மை.

அது. ' இதற்கும் அதற்கும் உதவியது என்பது உண்மைதான் . இருந்தாலும் , அவைகளெல்லாம் கனவுதான். அது என்னை உண்மைக்கு மிக அருகில் கொண்டு வர உதவி செய்தது. நான் அந்தக் கனவோடு நின்றுவிட்டேன். இப்பொழுது தான், அது கனவு என்று எனக்குத்தெரிந்தது. அது பொய் என்று எனக்குத் தெரிந்தது. நான் எதுவுமே செய்யவில்லை. ஏனென்றால் , எதுவுமே செய்வதற்கில்லை. எல்லாம் கனவுதான் . ஆனால் , அந்த முடிவான நிலையை அடைவதற்கு அது உதவியது. அந்தக் கனவால் ,

சம்சாராவும் , நிர்வாணாவும் செழுமையடைந்தது. ஆகவே, அது, முழுமையாகப் பொய்யாக இருக்கவில்லை. அது எனக்கு உதவி செய்தது. ஆனால், உண்மையில்லை.

ஒரு சிறிய கதை.

ஒரு காட்டில் , ஒரு வேட்டைக்காரன் நடந்து செல்லும் பொழுது, ஒரு உறுமிக்கொண்டிருக்கும் புலியைச் சந்திக்க நேர்ந்தது. அவன் தன் துப்பாக்கியை மெல்ல எடுத்தான். ஆனால், அதில் குண்டு இல்லை என்பதை அறிந்து அதிர்ச்சியடைந்தான் . அவனைத்தாக்க , அது நெருங்கிக்கொண்டு இருந்தது.

அவன், "இப்பொழுது நான் என்ன செய்ய முடியும் ? என்னை, இந்தப்புலி கடித்துத்தின்னத்தான் போகிறது. என்று நினைத்து, பயத்தால் அப்படியே உறைந்து போனான். அந்தப்புலி, அவன் மேல் பாயத் தயராகும் பொழுது, அவனிடம் ஒரு புதுமையான உணர்வு ஏற்பட்டது. அவன் , " இவைகளெல்லாம் , வெறும் கனவுதான் என்று நம்புகிறேன் . நான் சற்று முயற்சி செய்தால் , நான் நிச்சயமாக விழித்து எழுவேன் என்று நினைத்துத் . தன்னையே உலுக்கிக் கொண்டு, விழிகளைப் பெரிதாக்கி, அதை விழித்துப் பார் தான் . அந்தப்புலி, ஒரு கணத்தில் திரும்பிச் சென்றுவிட்டது. அப்பொழுதுதான் , தான் தன் படுக்கையில் சுகமாகப்படுத்திருப்பது புரிந்து "அப்பா, தப்பித்தேன்" என்று பெருமூச்சுவிட்டான் . அவனுடைய உடம்பு இன்னும் நடுங்கிக்கொண்டு இருந்தது. ஆனால் , அவன் சிரித்துக் கொண்டும் இருந்தான் . " ஐயோ, அந்தப் புலி எவ்வளவு தத்ரூபமாக இருந்தது! கடவுளே, அது வெறும் கனவுதான் " என்று நினைத்து ஆறுதல் அடைந்தான்.

அவன் , திரும்ப சாதாரண நிலைக்கு வந்தபிறகு, ஒரு கப் டீயைத் தயாரித்தான் . அவன் , இப்பொழுதுதன் களைப்பை உணர்ந்து, வெளியே உள்ள சேரில் (CHAIR) அமர்ந்து, டீயைக் குடித்துவிட்டு, மெல்ல புகை பிடிக்க ஆரம்பித்தான் அவன் , தான் மிகுந்த தூக்கத்தில் இருப்பதை உணர்ந்து, அப்படியே படுத்துத் தூங்கிவிட்டான்.

சில மணி நேரம் சென்று, ஒரு புலி உறுமிக்கொண்டிருப்பதைக் கண்டான் . அவன் அதைப்பார்த்து, ' நான் மீண்டும் தூங்கவேண்டும் . நீ ஏன் திரும்பத் திரும்ப என்னிடம் வருகிறாய் . ஏ , முட்டாள் புலியே! நான் உன்னைக் கனவில் கண்டு, கண்டு அலுத்து விட்டது. இப்பொழுதும் நீ என் கனவில் வந்திருக்கிறாய் இப்பொழுது நான் பயப்படப்போவதில்லை'' என்று நினைத்துக்கொண்டு, அந்த புலியை நோக்கிச்சென்று, அதன் மூக்கில் ஒரு குத்துவிட்டான்.

அந்தப்புலி, " என்ன வேடிக்கையான ஆள் இவன் . என்னைப் பார்த்ததும் மனிதர்கள் ஓடத்தான் செய்வார்கள் . ஆனால் , இவன் ...' என்று ஆச்சரியமாக நினைத்துக்கொண்டு, அதுவே தப்பித்து ஓடிவிட்டது.

அந்தப்புலி, கதவைத்தாண்டிய பிறகு, தான் விழித்துக் கொண்டுதான் இருக்கிறோம் என்பதையும் அந்த புலியும் உண்மையானது என்றும் அறிந்து அதிர்ச்சியும், ஆச்சரியமும் அடைந்தான்.

ஆனால் , என்ன நிகழ்ந்தது? ஒரு உண்மையான புலியை எதிர்க்கக் கூடிய தந்திரத்தை, அந்தக்கனவு, அவனுக்குக் கற்பித்து, உதவியாக இருந்தது. எல்லாம் கனவுதான் . ஆனால் , உண்மையை அறிய , உண்மையை எதிர்கொள்ள அது உதவியது.

என்ன நடந்தது எங்கே எதனில் என்பதெல்லாம் ஒன்றும் இல்லாதது ஆகிவிடும். இருந்து அது இதற்கும் அதற்கும் பயனளிக்கும் . ஆவல் வெறி இருக்கிறதோ இல்லையோ முறை என்பது ஒன்றுமே இல்லாத தன்மை.

: " நீங்கள் பற்றும் , பாசத்தோடும் வாழ்ந்தாலும் சரி, வாழவிட்டாலும் சரி, உண்மையாக அறிந்தவர்கள் , பற்றும் , பாசமும் உள் ஆழத்தில், எந்த வேற்றுமையையும் ஏற்படுத்தாது என்றும், அவைகளில் எந்த வேற்றுமையும் இல்லை என்பதையும் அறிவார்கள் . உன்மையத்தில் , அது சுத்தமான வெறுமைநிலையில்தான் இருக்கிறது என்றும் ,

ஒன்றுமற்றதிரையில் , அவைகள் வெறும் நிழல்களாகத்தான் ஓடுகின்றன என்றும் அவர்கள் அறிந்து கொள்கிறார்கள்.

ஒரு அழகான காட்சியை, வெள்ளித்திரையில் ஓடவிட்டால், நீங்கள் அதன் அழகில் மயங்குகிறீர்கள். அதைப்போல , பயங்கரமான காட்சியை அதில் ஓடவிட்டால், நீங்கள் அதைக் கண்டு நடுங்குகிறீர்கள். ஆனால் , சரியாகப் புரிந்து கொண்டால் , அவைகள் வெறும் நிழல்கள் தான் என்று அவர்கள் அறிந்து கொள்வார்கள் . பாபிகள் என்பதும் , சந்நியாசிகள் என்பதும் இந்த உலகத்தில் , உங்களுடைய மனதால் ஏற்பட்ட செயல்களேதவிர வேறல்ல, நல்லது என்பதும் கெட்டது என்பதும் மனதால் இந்த உலகத்தில் திரையிடப்பட்ட செயல்களே தவிர வேறல்ல.

ஆகவே, சாரஹா, " ஐயா, மக்கள் சொல்வதைக் கேட்டு குழம்ப வேண்டாம் . அவைகள் எல்லாம் வெறும் திரையில் செலுத்தப்பட்ட நிழல் ஓட்டம்தான் . அவர்களெல்லாம் , சாரஹா ஒரு நல்ல ஒழுக்கமுள்ள மனிதன் என்று கூறினாலும் அல்லது ஒழுக்க மற்றவன் என்று கூறினாலும் , அவன் மக்களால் மதிக்கப்பட்டாலும் , தூற்றப்பட்டாலும் ஒன்றுதான் . அவைகள் எல்லாம் சாரஹா என்ற வெற்றுத்திரையில், மனங்களால் செலுத்தப்பட்ட நிழல் தோற்றங்கள்தான். அதனால் , அந்தவெற்றுத்திரை, பாதிக்கப்படப் போவதில்லை. மக்கள் மனங்கள் , ஒன்றுமற்றநிலையில் இருக்கும் சாரஹாவின்மேல் , செலுத்தும் எண்ணங்களே தவிர வேறல்ல . ஆனால் நான் ஒன்று மற்ற நிலையால் (NOTHINGNESS) இருக்கிறேன் என்பது எனக்கு நன்றாகத் தெரியும் " என்று சாரஹா கூறுகிறார்.

இந்த ஒன்றுமற்ற அனுபவமும் , ஆயிரம் இதழ்கள் கொண்டதாமரையின் அனுபவமும், ஒரே தன்மையின், இருவேறுநிலைகள்தான் . ஒரு நிலையில் , நீங்கள் அந்த முடிவான பேரானந்தத்தை உணர்கிறீர்கள் ; அடுத்த நிலையில் , எல்லாமே வெறும் கனவுதான் என்று அறிந்துகொள்கிறீர்கள் . எதையும் துறப்பதற்கோ, எங்கேயும் செல்வதற்கோ எதுவும் இல்லை. பொருள்கள் மாத்திரம் ஒன்றுமற்ற நிலையில் இல்லை, நீங்களும் அதே நிலையில்தான்

இருக்கிறீர்கள் . எல்லாமே, உள்ளும் , புறமும் வெறுமைதான் , வெறுமையைத் தவிர வேறில்லை. எல்லாமே வெறும் கனவுதான் . கனவில் என்ன நடக்கிறது? நீங்கள் ( மனம் ), உங்களை அதில் ஓடவிடுகிறீர்கள் . ஆனால் , எல்லாம் விதவிதமான கற்பனைகளேத் தவிர வேறல்ல.

கடைசி சூத்திரம்

உலகு என்னும் சேற்றில் ஆசையுடன் புரளும் பன்றி போல் நானிருந்தால் மாசு இல்லாத மனதில் என்னதான் கறை என்பதை நீ சொல்லவேண்டும் எது ஒன்றும் ஒருவனைப் பாதிக்காதபோது எப்படி ஒருவன் பிணைப்பில் கட்டுண்டு இருக்க முடியும்?

சாரஹா, 'நீங்கள், என்னைச் சாக்கடையில் உழலும் பன்றி என்று கூறினாலும் , என்னைப் பொருத்தவரையில் , நான் அதனால் பாதிக்கப்பட மாட்டேன் அவர்கள் , என்னைப் பெரிய ஞானி என்று கூறினாலும் , அசுத்தமான , மிகக் கீழான நிலையில் உள்ள பன்றி என்று கூறினாலும், எனக்கு ஒன்றுதான்

மாசு இல்லாத மனதில் என்னதான் கறை என்பதை நீ சொல்லவேண்டும்

என்னுடைய செயல்களால் , நான் பாதிக்கப்படுவது இல்லை என்னுள்ளே நான் வெறுமையாக இருக்கிறேன் . என் மனம் சுத்தமாக இருக்கிறது. என்னுடைய செயல்கள் , என்னை அசுத்தப்படுத்தவில்லை என்னுடைய ஒன்று மற்ற உயிர்த்தன்மை என்னுடைய செயல்களால் ஒருபோதும் பாதிக்கப்படவில்லை" என்று சொல்கிறார்.)

இந்த உலகச் செயல்களால், நான் இப்படியோ, அல்லது அப்படியோ பாதிக்கப்படவில்லை. அவைகளில் பற்றோ, பற்றற்ற தன்மையோ என்னிடம் ஏற்படவில்லை என்னிடம் எது நிகழ்ந்தாலும் , அதை ஒரு சாட்சியாக நின்றே பார்க்கிறேன் . அதை அப்படியே அனுமதிக்கிறேன் அதன் குறுக்கே பாய்வதில்லை

வாழ்க்கை, இப்படித்தான் இருக்கவேண்டும் என்று எந்த ஒழுக்க நியதிகளையோ, கட்டுப்பாடுகளையோ, நான் என்னுள்ளே ஏற்படுத்திக் கொள்ளவில்லை. நான் அப்போதைக்கப்போது வாழ்ந்துகொண்டு இருக்கிறேன் என்னிடம் எந்தத்தீர்ப்பும் இல்லை "இது இப்படித் தான் நடக்கவேண்டும் " என்று எதைப்பார்த்தும் நான் கூறுவதில்லை. என்னிடம் கூடாது' என்று எதுவுமே இல்லை.

இந்த வார்த்தைகளைத் தியானமாக்குங்கள் செய்யவேண்டும், "செய்யக்கூடாது' "திட்டம் இல்லை' "துக்கம் இல்லை' "சோர்வு இல்லை, வருத்தம் இல்லை' என்பவைகளைப் புரிந்துகொண்டு தியானமாக்குங்கள் ஏனென்றால் , எதுவுமே தவறாகப் போவது இல்லை. ''இதுதான் சரி என்ற எண்ணம் இல்லாதபோது, ''தவறு' என்ற எண்ணம் எப்படி உங்களிடம் ஏற்படமுடியும்?

இதுதான் முடிவான சுதந்திரம் மற்றும் முடிவான விடுதலை

' சரி' என்ற கட்டுப்பாடு இல்லாமல் , ' தவறு' என்பது எப்படி ஏற்படும் ? உங்களுக்கென்று ஒரு கொள்கை, ஒரு விதிமுறை என்று இல்லாதபொழுது, தவறு

என்பது ஏற்படவழியே இல்லை. அங்கே, பாபம் புண்ணியம் போன்றவார்த்தைகளுக்கும் மதிப்பு

இல்லை.

'ஆகவே, சாரஹா

எது ஒன்றும் ஒருவனைப் பாதிக்காதபோது எப்படி ஒருவன் பிணைப்பில் கட்டுண்டு இருக்க முடியும்?

சூத்ராவின் , இந்த கடைசி இரண்டு வரிகள் , மிகவும் அர்த்தமுடையது. மாகவும் அழகானது.

நீங்கள் உண்மையிலேயே உங்களுடைய சொந்த வீட்டுக்கு வந்துவிட்டால், அது உண்மையிலேயே என்ன என்பதை அறிந்துகொண்டால் , நீங்கள் விடுதலையடைந்து விட்டதாக உணரமாட்டீர்கள் . மாறாக , '' நான் விடுதலையடையவில்லை என்று நினைத்தது எவ்வளவு முட்டாள்தனம் என்று உங்களைப் பார்த்து கூறிக்கொள்வீர்கள் . இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் மிகப் பெரியது.

நீங்கள் உங்களுடைய சொந்தவீட்டிற்கு வந்து விட்டால், அது என்ன என்பதை அறிந்து கொண்டால் , நீங்கள் மிகுந்த பேரானந்த நிலையில் இருப்பீர்கள் . அப்பொழுது நீங்கள் , '' நான் விடுதலையடைந்துவிட்டேன் என்று கூறினால், நீங்கள் அதுவரை விடுதலையடைவில்லை என்று அர்த்தமாகிறது. அதாவது, அந்த விலங்கை, நீங்கள் உண்மையெனக் கருதிக் கொண்டு இருக்கிறீர்கள் . அதாவது. இன்னும் நீங்கள் உங்களுடைய கனவுலகில் இருக்கிறீர்கள் . இது இன்னொரு கனவு. ஒரு கனவு, விலங்கேடு இருப்பது. இன்னொரு கனவு விடுதலையடைவது.

சாரஹா சொல்வது என்னவென்றால் நீங்கள் உண்மையிலேயே, சரி, தவறு என்று எல்லாவற்றிலேயிருந்தும் விடுதலையடைந்தால் நல்லது கெட்டது என்பவற்றிலிருந்தும் விடுதலையடைந்தால், இப்படி எல்லாப் பந்த பாசங்கள், உணர்வு, பொருள்கள் என்று எல்லாவற்றிலேயிருந்தும் விடுதலையடைந்தால் , நீங்கள் விடுதலையிலிருந்தும் விடுதலையடைந்தவராக ஆவீர்கள் . பிறகு, உங்களுடைய முட்டாள் தனத்தைக் கண்டு நீங்களே திடீரென்று சிரிக்க ஆரம்பித்து விடுவீர்கள் . பற்று என்பது தானே நிகழாது. அது ஒருக்காலும் நிகழாது!

அது வெறும் நம்பிக்கைதான் . நான் என்னுடைய நம்பிக்கையின் வழியாக , எண்ணங்களின் வழியாக அதை நானே உண்டுபண்ணியிருக்கிறேன் . அது வெறும் கனவுதான் . இப்பொழுது கனவு முடிந்துவிட்டது.

ஆகவேதான் , இந்த சூத்திராவின் கடைசிவரி, கேள்விக் குறியில் முடிந்து இருக்கிறது. நீங்கள் , எந்த மத ஏடுகளாவது, கடைசியில் , கேள்விக் குறியோடு முடித்திருப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? நான் இதைத்தவிர , வேறு எதையும் இதுவரை பார்த்ததில்லை.

மத ஏடுகள் ஆரம்பத்தில் கேள்விக் குறியோடுதான் ஆரம்பிக்கும் கடைசியில் விடையோடுதான் முடிவுபெறும் அப்படித்தான் எந்தத் தர்க்க ரீதியான அறிக்கையும் இருக்கும் . அதனுடைய முன்னுரை கேள்வியில்தான் ஆரம்பிக்கும் , ஆனால் , சாரஹாவின் அழகிய பாடல்களின் , கடைசி வரி, இப்படி கேள்விக்குறியோடுதான் முடிந்திருக்கிறது.

உலகு என்னும் சேற்றில் ஆசையுடன் புரளும் பன்றி போல் நானிருந்தால் மாசு இல்லாத மனதில் என்னதான் கறை என்பதை நீ சொல்லவேண்டும் எது ஒன்றும் ஒருவனைப் பாதிக்காதபோது எப்படி ஒருவன் பிணைப்பில் கட்டுண்டு இருக்க முடியும்?

அவர் , தான் ஞானம் அடைந்து விட்டதாகச் சொல்லவில்லை. தான் விடுதலையடைந்துவிட்டதாகவும் , தன் சொந்த வீட்டுக்கு வந்து விட்டதாகவும் அவர் அறிக்கை விடவில்லை. அவர் , தான் வேறு எங்கேயோ சென்று விட்டதாகக் கருதும் எண்ணத்தைக் கண்டு, தனக்குச் சிரிப்புத்தான் வருகிறது என்று கூறுகிறார் . தான் எப்பொழுதுமே, தன் சொந்த வீட்டில்தான் இருப்பதாகவும் , எப்பொழுதுமே, இங்கே இப்பொழுது இருப்பதாகக் கூறுகிறார் . தான் வெறும் கனவில் இருந்தாகவும் , அந்தக்கனவில்தான், தான் எங்கேயோ சென்றுவிட்டதாகவும் கூறுகிறார். இப்பொழுது, அந்தக் கனவு மறைந்த நிலையில் , தான் எங்கே இருக்கவேண்டுமோ, அங்கேயேதான் இருப்பதாகக்

கூறுகிறார்.

ஆகவேதான் அவர்

எது ஒன்றும் ஒருவனைப் பாதிக்காதபோது எப்படி ஒருவன் பிணைப்பில் கட்டுண்டு இருக்க முடியும்?

யாருமே, எதுவுமே அங்கு விலங்கிடப்படவில்லை. அந்தத் தளை மறையும் போது தளையிடப்பட்ட மனிதனும் மறைந்து விட்டான். இந்த உலகம் மறையும் பொழுது, அகங்காரமும் மறைந்து விடுகிறது. இந்த உலகமும் , அகங்காரமும் ஒரே விளையாட்டின் இருவேறுநிலைகள் உள்ளே அகங்காரம் இருக்கும்பொழுது, வெளியே உலகம் இருக்கிறது. இவைகள் எப்பொழுதுமே ஒன்றாகத்தான் இருக்கும் , ஒன்றாகத்தான் வாழும் ஒன்று மறையும் பொழுது. அடுத்ததும் உடனே மறைந்துவிடும் . இப்பொழுது உள்ளும், புறமும் எதுவுமே இல்லை.

புத்தாவின் மிகச்சிறந்த உள்ளுணர்வோடு கூடிய அறிக்கையை, சாரஹா உறுதிப்படுத்துகிறார் . புத்தா, " பொருள்கள் என்று எதுவுமில்லை. அதைப்போல மனம் என்று எதுவுமில்லை. எல்லாம் சூன்யமாகவே இருக்கின்றன . மனம் என்பது உங்களுக்குள்ளே இல்லை. அதுவும் காலியாகவே இருக்கிறது. இந்த வெறுமையான நிலையை அறிந்துகொள்ள , உங்களுடைய பிரக்ஞைத்

தன்மையை, அதனுள் ஊடுருவச் செய்ய வேண்டும் - சுத்தமான முழுமையான பிரக்ஞைநிலை. .. இந்த பிரக்ஞைநிலை, வெறுமையாகவே, சூன்யமாகவே இருக்கிறது. அல்லது சூன்யமே, முழுமையான பிரக்ஞையில் ஒளிர்கிறது.

எவைகள் உண்மையாக இருக்கின்றனவோ, அவைகளைத் தந்த்ரா, மிகவும் ஆழமாகப் பார்க்கிறது. ஆனால் , நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . முடிவில் அது சொல்வது தத்துவம் இல்லை. மாறாக அது ஒரு விழிப்புணர்வு அறிக்கையை அளிக்கிறது நீங்கள் அதற்குள் செல்ல வேண்டுமானால் , மனமற்ற

நிலையில்தான் செல்ல வேண்டும், மனத்தோடு அல்ல.

மனமற்ற நிலைதான் தந்த்ராவின் வாசல்.

எண்ணமற்ற நிலையே தந்த்ராவுக்குள் செல்லும் வழி.

அந்த அனுபவமே தந்த்ராவின் சாவி.

## 10. வெறும் ஞாபகம் (JUST A REMEMBRANCE)

கேள்வி1:

" உங்களுடைய பேச்சைக் கேட்கும் பொழுதெல்லாம் , நான் உடனே குழப்பம் அடைகிறேன் , ஏனெனில் , உங்களுடைய பிரசங்கத்தில் , நீங்கள் சொல்லிய கொள்கைகளை, என்னால் வாழ்க்கையில் கடைப்பிடிக்க முடியவில்லை. இது ஏன்?"

நீங்கள் எதைப்பற்றி சொல்கிறீர்கள் ? கொள்கைகளா? அதைத்தான் நான் அழித்துக்கொண்டு இருக்கிறேன் . நான் உங்களுக்காக எந்தக் கொள்கையும் வழங்கவில்லை. வருங்காலத்துக்காக , நான் எந்தக் கற்பனையையும் வழங்கவில்லை. நான் உங்களுக்கு, எந்த வருங்காலத்தையும் ஒருபோதும் உண்டாக்கவில்லை. ஏனென்றால் , வருங்காலம் என்பது, நிகழ்காலத்தைத் தவிர்க்க , தள்ளி வைக்கச் செய்யும் ஒரு தந்திரம். இது உங்களையே தவிர்க்கவும், உங்களிடமிருந்து தப்பிச்செல்லவும் , செய்யும் ஒரு தந்திரம், ஒரு ஏமாற்று வேலைதான்.

கொள்கைகள் , ஆசைகளை உண்டாக்குகிறது. ஆசைகள் ஏமாற்றத்தை உண்டாக்குகிறது. நான் உங்களுக்கு, எந்த விதமான ' செய்ய வேண்டும் ' (SHOULD) அல்லது 'செய்யக்கூடாது' (SHOULD NOT ) என்பவகளை வழங்கவில்லை. நீங்கள் எல்லாக் கொள்கைகளையும் விட்டுவிடவேண்டும் என்றுதான் நான் சொல்லிக்கொண்டு இருக்கிறேன்.

ஆனால் , நான் உங்களைப் புரிந்து கொண்டேன் என்னுடைய பிரசங்கத்தைக் கேட்டு, நீங்கள் , '' நாடா எப்படி இருக்கவேண்டும் ?' மற்றும் '' அதற்கு நான் , என்ன செய்யவேண்டும் ?'' என்று நினைக்க ஆரம்பித்துவிடுகிறீர்கள் . மாறாக , எப்படி எல்லகொள்கைகளையும் நீங்கள்

விடவேண்டும் என்று நான் முயற்சி செய்கிறேன். ஆனால் நீங்கள் அதிலிருந்து கொள்கைகளை உண்டாக்க ஆரம்பிக்கிறீர்கள் நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள், என்னைத் தவறாக அர்த்தம் பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். நான் சொன்னவற்றை நீங்கள் உண்மையாகக் கேட்கவில்லை. மாறாக நான் சொல்லாதவற்றைத்தான், நீங்கள் கேட்டுக்கொண்டே இருக்கிறீர்கள் என்னை ஜாக்கிரதையாகக் கேளுங்கள்.

இப்படித்தான் எப்பொழுதும் நிகழ்கிறது. புத்தர், சொன்னது சரியா, உண்மையா என்பது பற்றி, நமக்கு எதுவும் தெரியாது. ஏனென்றால், புத்தர் சொன்னதை எழுதியிருப்பது, உங்களைப் போன்ற மக்கள் தான். ஜீசஸ், உண்மையிலேயே என்னசொன்னார் என்பது நமக்குத் தெரியாது. ஏனென்றால், அவர் சொன்னதாகச் சொன்னது, உங்களைப் போன்றவர்கள்தான். அவர்கள், தாங்கள் கேட்டதைத்தான்' எழுதியிருக்கிறோம் என்று சொல்கிறார்கள். ஆனால், அவர் என்ன சொன்னார் என்பது குறித்து அவர்கள் எதுவும் சொல்லவில்லை. இந்த இரண்டுக்கும் உள்ள வேற்றுமை மிகத் தெளிவானது; மிகப் பெரியது.

நான், ஒரு மொழியில் பேசுகிறேன் நீங்கள் வேறு ஒரு மொழியில் அதாவது உங்களுடைய மொழியில் அதை எடுத்துச் சொல் கிறீர்கள். நீங்கள் அதற்குள் சென்று, அதில் உங்களைப் புகுத்திக் கொள்கிறீர்கள், உங்களுடைய நோக்கப்படி, அதில் குறுக்கிடுகீறீர்கள்.

நீங்கள் சொல்கிறீர்கள், "உங்களுடைய பேச்சைக் கேட்கும் பொழுதெல்லாம், நான் உடனே குழப்பம் அடைகிறேன். இது ஏன்?" என்று கேட்கிறீர்கள்.

உங்களுக்கு, நீங்கள் யாரென்றே தெரியாததனால்தான், இந்தக் குழப்பம் ஏற்படுகிறது. உங்களைப்பற்றியே, நீங்கள் ஒரு தோற்றத்தை (IMAGE) ஏற்படுத்திக்கொண்டிருக்கிறீர்கள். அந்தத் தோற்றம், உண்மையாக நீங்கள் இல்லை, மற்றும் நீங்களாகவும் இருக்க முடியாது. அந்தத் தோற்றம், உங்களுடைய மனம் செய்த வேலைதான்,

கணக்குத்தான் . நீங்கள் , உங்களைப் பற்றி ஒரு தோற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறீர்கள் . அதைத்தான் , நீங்கள் , நீங்களாகக் கருதிக்கொண்டு இருக்கிறீர்கள். ஆகவேதான் , என்னை உண்மையாகக் கேட்கும் பொழுது, நீங்கள் குழப்பம் அடைகிறீர்கள் . ஏனென்றால் , நான் உங்களுடைய காலை, உங்களுடைய அஸ்திவாரத்தை இழுக்க முயற்சி செய்கிறேன் . அப்பொழுது, உங்களுடைய தோற்றம் சிதைக்கப்படுகிறது. அது. முன்பு இருந்தது போல , ஒருக்காலும் இருக்காது.

ஆனால் , ' நீங்கள் ', சிதைக்கப்படவில்லை. பார்க்கப்போனால் , அந்தத் தோற்றம் , உண்மையான உங்களுக்கு இடமே கொடுப்பதில்லை. அது உங்களை அனுமதிப்பதே இல்லை. நீங்கள் , மேலும் வளர்வதற்குத் தேவையான இடத்தை ஏற்படுத்தவே, அந்தத் தோற்றத்தை வெளியே துக்கி எறியவேண்டியதாக இருக்கிறது. அது, உங்களுடைய வீட்டை, முழுமையாக ஆக்ரமித்துக்கொண்டிருக்கிறது. ஆனால், நீங்களோ, உண்மையான

வெளிவராந்தாவில் வசித்துக்கொண்டு இருக்கிறீர்கள். அது, உங்களை உள்ளே வர அனுமதிப்பது இல்லை அது மாத்திரமல்ல . உங்களுடைய கொள்கைகளால் ஏற்படுத்தப்பட்ட அந்தத் தோற்றம் , உங்களை கண்டித்துக் கொண்ட இருக்கிறது. (CREATION) உண்டாக்கியவனை (CREATION) எப்பொழுதும் கண்டித்துக்கொண்டே இருக்கிறது.

இந்த முட்டாள்தனத்தை, சற்று ஆழமாகக்கவனியுங்கள் . நீங்கள் ஒரு மிக அழகான தோற்றத்தை, உருவத்தை - இயல்பாக , நீங்கள் அப்படித்தான் செய்வீர்கள் - உண்டாக்குகிறீர்கள் பிறகு, அதனோடு உங்களை ஒப்பிடும் பொழுது, உங்களையே நீங்கள் அருவருப்பாகப் பார்க்கிறீர்கள் நீங்கள் ஒரு மிகச்சிறந்த ஞானி என்ற தோற்றத்தை ஏற்படுத்திக்கொண்டு இருக்கிறீர்கள் பிறகு, நீங்கள் சாதாரணமாக மற்றவர்களைப் போலச் சில காரியங்களைச் செய்யும் பொழுது, நீங்கள்

உங்களையே வெறுக்கிறீர்கள் , கண்டித்துக் கொள் கிறீர்கள். அந்தத் தோற்றம் உங்களுடையது. ஆனால், அந்தத் தோற்றத்துக்கு முன் , நீங்கள் செய்வது உங்களுக்கே மிகவும் அபத்தமாக இருக்கிறது....

நான் இங்கே சொல்லிக்கொண்டு இருப்பதும் , அந்த அரசனுக்கு, சாரஹா சொல்லிக்கொண்டு இருப்பதும் ஒன்றுதான் . அதாவது தோற்றத்தை கைவிடுங்கள் என்பதுதான் அது. நீங்கள் அதை கைவிடும் பொழுது, எதுசரி, எது தவறு என்பதையும் கைவிடுகிறீர்கள் . பிறகு பாபி என்பது யார், ஞானி என்பது யார்? இப்படி ஒப்பிட்டுப் பார்க்க , உங்களிடம் எதுவுமே இல்லை. இந்த நிலையில், திடீரென்று ஒருநாள் நீங்கள் மிகவும் ஓய்வாக இருப்பதாக உணர்கிறீர்கள் உங்களுடைய குற்ற உணர்வும் , உங்களையே கண்டித்துக் கொள்வதும், பாபி என்ற தன்முனைப்பும், ஞானி என்ற அகங்காரமும் ஒருங்கே மறைகின்றன இப்படி எந்தவித வேற்றுமையம் இல்லாதபொழுது, எந்தவிதக் கொள்கையும் இல்லாதபொழுது, எந்தவித அகங்காரமோ, கர்வமோ இருப்பதற்கு வாய்ப்பே இல்லை. அவை உங்களுடைய கொள்கையிலிருந்து, கொள்கைகள் மூலமாக வாழ்ந்து கொண்டு இருக்கிறது. அகங்காரத்துக்கு, இப்படிப்பட்ட ஒழுக்கக்கொள்கைகள் அவசியமாகிறது.

உங்களையே, நீங்கள் ஒரு பாபி என்றும் எண்ணிக்கொள்ளலாம், அல்லது ஒரு ஞானி என்றும் எண்ணிக்கொள்ளலாம் . இப்படி ஏதாவது ஒரு அடையாளம் உங்களுக்குத் தேவையாக இருக்கிறது. அப்பொழுது, நீங்கள் ஒருவித அகங்காரத்தை உங்களிடமே ஏற்படுத்திக் கொள்கிறீர்கள். இரண்டுமே, கொள்கையின் வழியாக , இந்த உலகத்தில் வாழ்ந்து கொண்டு இருக்கின்றன . அப்படி கொள்கை, கோட்பாடு , நியதி என்று எதுவுமே இல்லாதபொழுது, நீங்கள் யார்? ஞானியா அல்லது பாபியா? நல்லவனா அல்லது கெட்டவனா? அழகானவனா, அருவருப்பானவனா? அப்பொழுது, நீங்கள் யார் ? நீங்கள் வெறுமனே நீங்களாக இருக்கிறீர்கள் . கொள்கை என்று எதுவும் இல்லாதநிலையில் , அகங்காரம் மற்றும் வேறுபாடு என்று எதுவும் கிடையாது.

அங்கே நீதிபதி, நீதி மற்றும் குற்ற உணர்வு என்று எதுவும் கிடையாது. உங்களுடைய உண்மைத் தன்மையில் , நீங்கள் வெறுமனே இருக்கிறீர்கள் இதைத்தான் நான் , உங்களுடைய இருத்தல்' (BENG) அல்லது உயிர்த்தன்மை என்று அழைக்கிறேன்.

இப்பொழுது, நீங்கள் மேலும் மேலும் குழப்பம் அடைகிறீர்கள் . ஏனென்றால் , அந்தத் தோற்றத்தில் உள்ள உங்களுடைய பிடி, இப்பொழுது தளர ஆரம்பிக்கிறது. இப்படி, அந்தப் பிடி சற்று தளர்ந்தாலும், நீங்கள் பயப்பட ஆரம்பிக்கிறீர்கள்.

உங்களுடைய கற்பனையின் , பயத்தின் வெளிப்பாடுதான் . இந்த கொள்கைகள் . நான் , இந்த கொள்கைகளை, உங்களிடமிருந்து அகற்றும் பொழுது நீங்கள் குழப்பம் அடைகிறீர்கள் , பயப்படுகிறீர்கள் . ஆகவே, கொள்கைகள் என்ற தோற்றத்திலிருந்து விடுதலையடையுங்கள் . மேலும் , மேலும் அந்தத்தோற்றங் களை ஏற்படுத்திக்கொள்ளாதீர்கள் . அப்பொழுது, எப்படி வாழ்க்கை, ஆழமான அமைதிநிலையை அடைகிறது என்று பாருங்கள் . எல்லாவற்றையும் அப்படியே ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம், உங்களிடம் ஏற்படுவதைக் காணுங்கள். அப்பொழுது, எந்தவிதக் காரணமும் இல்லாமல் , ஒரு மிகச்சிறந்த தெய்வீக ஆசீர்வாதம், உங்களைச் சுற்றிச் சூழ்ந்திருப்பதை உணர்வீர்கள் . அது உங்களுடையததான் - அதுவே நீங்கள் . நீங்கள் எதுவுமே செய்ய வேண்டாம் . நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ, அப்படியே அந்தக்கடவுளுக்கும் ஏற்றவாறு இருக்கிறீர்கள் . இதுதான் என்னுடைய முழுச் செய்தியே. இதுவேதான் , தந்த்ராவின் செய்தியும் . அதாவது, நீங்கள் இருக்கும் அதேநிலையில் , நீங்கள் கடவுளால் ஏற்றுக்கொள்ளப்படுகிறீர்கள் ! .

ஆனால் , நீங்கள் எப்பொழுதும் உங்களைக் கண்டித்து, வெறுத்து மற்றும் மறுத்தோதான் வந்திருக்கிறீர்கள் . இப்படி, நீங்கள் மாறுபட்டு செயல்படுவதற்கு, உங்களிடமே நீங்கள் கருணையற்று நடந்து கொள்வதற்கு, உங்களையே நீங்கள் கொடுமைப்படுத்திக்கொள்வதற்கு, தண்டித்துக்

கொள்வதற்கு, இந்தக் கொள்கைகள் காரணமாக இருக்கின்றன. இந்தக் கொள்கைகள்தான் உங்களைத் துன்பத்திற்கு உள்ளாக்குகிறது.

ஆனால் , நீங்கள் , உங்களுடைய பேச்சைக் கேட்கும் பொழுதெல்லாம் நான் உடனே குழப்பம் அடைகிறேன். ஏனெனில் , உங்களுடைய பிரசங்கத்தில் , நீங்கள் சொல்லிய கொள்கைகளை, என்னால் வாழ்க்கையில் கடைப்பிடிக்கமுடியவில்லை'' என்று சொல்கிறீர்கள்.

நீங்கள் எதைப்பற்றி பேசுகிறீர்கள் ? என்ன கொள்கைகள் ? நீங்கள் இதைத்தான் செய்ய வேண்டும் . இதைச் செய்யக்கூடாது, நீங்கள் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று நான் சொல்லவில்லையே? நான் சுருக்கமாக, "நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ, அப்படியே இருங்கள் '' என்றுதான் கூறுகிறேன் . உங்களுடைய , ' இப்படித்தான் இருக்கவேண்டும்'' என்ற கொள்கையை

உங்களிடமிருந்து எடுக்கவே முயற்சி செய்கிறேன் . நான் ஏற்கனவே, என்னுடைய சொந்த வீட்டில்தான் இருக்கிறேன் என்ற உணர்வை உங்களிடம் ஏற்படுத்த , உதவி செய்யவே நான் இங்கே இருக்கிறேன். நீங்கள் வேறு எங்கேயோ செல்வதற்கும் எதுவும் கிடையாது. அது. உங்களிடம் இருக்கிறது. சமாதிநிலையில்தான் , நீங்கள் இருக்கிறீர்கள் . கடவுள் உங்களிடம் , தன் அன்பை எப்பொழுதும் சொரித்தவாறே இருக்கிறார் . நீங்கள் எங்கே இருந்தாலும் , நிர்வாணாவில் தான் இருக்கிறீர்கள் . இதுதான் ஞானமடைதல் என்பது. இந்தக்கணம், எந்த ஆசையோ, எந்தக் கொள்கையோ, எங்கேயாவது செல்ல வேண்டும் என்று வேறு இடமோ, இப்படி எதுவுமே இல்லாதநிலையில் , நீங்கள் இப்பொழுது, இங்கே மிக ஓய்வாக - மனத்தாலும் , உடலாலும் இருக்கும் - அந்தக் கணம்தான் கடவுளுக்குரியது, அந்த கணம் தான் உண்மைக்கு உரியது.

ஆனால் , நீங்கள் என் பேச்சைக் கேட்டு, உங்களிடமிருந்து விலகி நடிக்க ஆரம்பிக்கிறீர்கள் . நீங்கள் என்னைக் கேட்டு, என் வார்த்தைகளைத்தான்

திரும்பத்திரும்பக் கூறுகிறீர்கள். ஆனால், அதனுடைய உள் அர்த்தத்தை, நீங்கள் பின்பற்றவில்லை. நீங்கள் வெறும் வார்த்தைகளைத்தான் புரிந்து கொண்டிருக்கிறீர்கள் , அதில் உள்ள ஆன்மாவை, உயிரை (SPIRIT) புரிந்துகொள்ளவில்லை.

நீங்கள் ஒரு கிளிப்பிள்ளை போல மாறுகிறீர்கள். நான் சொல்லிக் கொண்டிருப்பதை, நீங்கள் திருப்பிச் சொல்லலாம் . இதனால் பிரயோஜனம் இல்லை. நான் சொல்வதை நன்றாகப் புரிந்து கொள்ளுங்கள் . திரும்பச் சொல்லுதல் , உங்களுக்கு சங்கடத்தைத்தைத்தான் ஏற்படுத்தும் குரலை சற்று மாற்றுவதாலும், சிலவற்றை அழுத்திக் கூறுவதாலும், ஒரு கமா முற்றுப்புள்ளியை சிறிது மாற்றினாலும் , அதன் அர்த்தம் மாறிவிடும் . ஆகவே, நான் என்ன சொல்ல வருகிறேன் என்பதைக் கவனிக்கவும்.

கவனிப்பதில், பல வகைகள் இருக்கின்றன. ஒரு வழி. மனதால் கேட்பது. இது நீங்கள் மீண்டும் ஞாபகப்படுத்திக்கொள்ள , மிகவும் உதவும் . நீங்கள் , எப்படி மனதால் கேட்பது என்பதைத்தான் கற்றுக்கொண்டிருக்கிறீர்கள் . ஏனென்றால் , உங்களுடைய பள்ளியும் , கல்லூரியும் , பல்கலைக்கழகமும் , எப்படி நெட்டுறுப் போடுதல் என்பதை மிக நன்றாகவே போதித்திருக்கின்றன . ஞாபகப்படுத்திக் கொள்ளல் என்பது அறிந்து கொள்தல் என்ற தவறான அபிப்பிராயத்தை உங்களுக்கு உண்டாக்கி இருக்கின்றன . ஞாபகப்படுத்திக் கொள்ளல் என்பது அறிந்து கொள்ளல் அல்ல . ஞாபகம் என்பது வெறும் கிளிப்பிள்ளைத்தனம்தான் . உங்களுக்கு எழுத்துக்களைத் தெரியும், வார்த்தைகளைத் தெரியும்; ஆனால் , அதில் எந்த அர்த்தமும் இல்லை, எந்த முக்யத்வமும் இல்லை. அது வெறுமையாகவே இருக்கிறது. அர்த்தமற்ற அந்த வார்த்தைகள் , மிகவும் அ அபாயகரமானவை.

மற்றொருவழி, இதயத்தின் வழியாகக் கேட்பது. இதயத்தின் வழியாகக் கேளுங்கள். இதுதான் சரியான வழி. நீங்கள், ஒரு வாதப் பிரதிவாதத்தை

கேட்பது போல இல்லாமல், ஒரு சங்கீதத்தைக் கேட்பது போலக் கேளுங்கள் நீங்கள் ஒரு தத்துவத்தைக் கேட்பது போல இல்லாமல் , ஒரு பாடலைக் கேட்பது போலக் கேளுங்கள் . நீங்கள் ஒரு நாட்டியத்தைக் கவனிப்பதுபோல , என்னைக் கவனியுங்கள் . ஒரு காதலியை/காதலனை உணர்வது போல என்னை உணருங்கள் அப்பொழுது என்னுடைய வார்த்தைகள், அப்படியேதான் இருக்கும் . அது, என் அர்த்தத்தை தாங்கிச் செல்லும், ஒரு ஊர்திதான். ஆனால், அதுவே உண்மையான அர்த்தமாகாது. அந்த ஊர்தியை மறந்து விடுங்கள் அப்பொழுது, அதனுடைய அர்த்தம் , உங்களுடைய இதயத்துக்குள் புகுந்து, அங்கேயே தங்கி இருக்கும். அது உங்களுடைய இருப்புநிலையை மாற்றி, உங்களுடைய வாழ்வின் பார்வைக் கோணத்தை மாற்றி அமைக்கும்.

" நான் அறிந்து கொண்டவரையில் தியானத்துக்கு பெண் இன்பம் (SEX) ஒரு தடையாகவே இருக்கும் என்று கூறும் பௌத்தத்திலிருந்து எப்படி தந்த்ரா வளர முடியும்?"

இந்தக்கேள்விக்கும் , முதல்கேள்விக்கும் சம்பந்தம் இருக்கிறது.

புத்தர் சொன்னது, தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. ஆமாம் . தியானத்திற்குள் ஆழமாகச் செல்ல , ஒருவன் பெண் இன்பத்தைக் கடந்து செல்ல வேண்டும் என்று அவர் கூறியிருக்கிறார் . இதைக் கேட்கும் மக்கள் , அவர் பெண் இன்பத்துக்கு எதிராக இருந்தார் என்றே நினைத்தார்கள் - இயல்பாக அப்படி எண்ணத்தான் தோன்றும். ஆகவே, அவர்தன், பெண் இன்பம் அதற்கு ஒரு தடவையாக இருக்கும் . இல்லாவிட்டால் , அதை ஒருவன் தாண்டிச் செல்ல வேண்டும் என்று ஏன் அவர் சொன்னார் ?' என்று நினைக்கத்தொடங்கினர் . அதனால் , அதைக் கடந்து செல்வதற்குப் பதிலாக , அவர்கள் அதோடு சண்டைபோட ஆரம்பித்தார்கள் . அவர்கள், பெண் இன்பத்தோடு சண்டை போடுவதற்கே முக்யத்வம் கொடுத்தார்கள் . பௌத்தம் , உலகத்தில்

உள்ள மிகச் சிறந்த ஆன்மீகத்தன்மையுள்ள மதங்களில், ஒன்றாகும்.

புத்தருடைய சிலைக்கு முன்னால் அல்லது அவரது படத்துக்கு முன்னால் , நீங்கள் இருக்கும் பொழுது, ஒருவித தண்மையயான கருணையை, அன்பை உங்களால் உணர முடியவில்லையா? அது. அவருடைய தெய்வீக நிலையிலிருந்து வந்திருக்கக் கூடாதா? அந்த மிகச்சிறந்த கருணையும் , அன்பும் அவருடைய தெய்வீக நிலையிலிருந்தும் , அழகிய முகத்திலிருந்தும் வெளிப்பட முடியாதா? ஆனால் , தங்களையே கொடுமைப் படுத்திக்கொள்ளும் ஒருவனையே, ஆன்மீகவாதி என்று மக்கள் கருதத்தொடங்கி விட்டனர் . ஆனால் , ஒருவன் தன்னையே கொடுமைப்படுத்திக் கொள்ளும் பொழுது, அடுத்தவர்களையும் கொடுமைப் படுத்துகிறான் - பழி வாங்கும் உணர்வோடு. ஒருவன் துன்பத்தில் இருக்கும்பொழுது, மற்றவர்கள் மகிழ்ச்சியாக இருப்பதை விரும்பமுடியாது. அவன் , அடுத்தவர்களது மகிழ்ச்சியையும்

அழிக்கத்தொடங்குகிறான் . இதைத்தான் , நங்கள் மகாத்மா என்று கருதிக் கொண்டிருப்பவர்கள் , செய்துகொண்டு வருகிறார்கள். நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பதை, அவர்களால் பார்க்க முடியவில்லை. நீங்கள் எப்பொழுதாவது. மகிழ்ச்சியாக இருப்பதை அவர்கள் பார்க்க நேர்ந்தால் , அவர்கள் உடனே உங்களிடம் வந்து, " உங்களிடம் ஏதோதவறு நடந்துகொண்டு இருக்கிறது. மகிழ்ச்சியாக இருப்பவனெல்லாம் பாபிகள் ' என்று அறிவுரை கூறத்தொடங்குவார்கள்.

இதை உங்களிடமே, நீங்கள் பார்க்கலாம். ஏனென்றால், பல நூற்றாண்டு, காலமாக , நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும் பொழுது, ஒரு குற்ற உணர்வை உணரும்படி, நீங்கள் கருதிக் கொண்டிருக்கும் அந்த மகாத்மாக்களும் சந்நியாசிகளும் , உங்களிடம் ஏற்படுத்திவிட்டார்கள் . நீங்கள் துன்பத்தில் இருக்கும்பொழுது, நீங்கள் சரியாக இருக்கிறீர்களாம்! ஆகவேதான் , நீங்கள் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும் பொழுது, ஒருவித பரபரப்பையும் உணருகிறீர்கள்

ஏதோ சரியில்லை போல உணருகிறீர்கள் . இது எங்கேயிருந்து வந்தது? உங்களிடமிருந்துதான் மகிழ்ச்சியும் , ஆனந்தமும் ... தவறு என்றும் , துன்பம் துயரம் இவை எல்லாம் சரி என்றும் தவறாகக் கருதுகிறீர்கள்.

ஓஷோ எங்கேயோ, எதுவோ, த . சரியாகக் கணித்துக் கூறுதற்கு, ஆயிரக்கணக்கான சீடர்களை, நேர்ந்த , அந்த அடிப்படை புரிந்திருக்கவேண்டும் . அவர்கள் பதிலாக , அதனால் அவர்கள் தொடர்ந்து, சண்டைபோட்டுக் கொண்டிருப்பது இல்லையா?

இந்த மனப்பான்மை, வாழ்க்கைக்கு மிக எதிரானது. வாழ்க்கையை மறுக்கக் கூடியது. இந்த எதிரான மனப்பான்மை, மனிதகுலத்தின் இரத்த ஓட்டத்தில் ஆழமாகப் புகுந்து விட்டது. இதனுடைய மூலாதாரம் , நீங்கள் கருதிக் கொண்டிருக்கும் அந்த மகாத்மாக்களும் , சந்நியாசிகளும் மற்றும் மதத்தன்மையுடையவர்களும் தான் , அவர்கள் தான் , இதற்குக் காரணம். இந்த மனிதர்களெல்லாம், நரம்புக் கோளாறு உடையவர்கள் அவர்கள் , தங்களையே கொடுமைப்படுத்திக் கொள்பவர்கள் . (MASOCHISTS). அவர்களுடைய ஒரே மகிழ்ச்சி, மேலும் மேலும் துன்பத்தை தங்களிடமும் , உங்களிடமும் ஏற்படுத்துவதுதான்.

புத்தர் , தன்னையே வருத்திக் கொள்பவர் இல்லை. அப்படி இருக்க முடியாது. புத்தர் , எவ்வளவு அழகாக ஆனந்தமாக , மகிழ்ச்சியாக மற்றும் மிகச்சிறந்த பேரானந்த நிலையில் இருப்பதாகக் காணப்படுகிறார். அவரைக் கேட்பவர்கள் , அவரைத் தவறாக எங்கேயே புரிந்துகொண்டு இருக்கிறார்கள். ஆமாம். அவர் பெண் இன்பத்தைக் கடந்து செல்லுங்கள் என்று சொன்னது உண்மைதான் . ஒருவன் , அப்படி அதைக் கடந்துதான் செல்ல வேண்டும். ஏனென்றால், ஆன்மீகத்தில், மேலே செல்ல உதவும் ஏணியின் முதல்படியாக அது இருக்கிறது. ஆனால் , பெண் இன்பத்துக்கு எதிராகச் செல்லுங்கள் என்று அவர் கூறவில்லை. கடந்து செல்லுதல் என்பது வேறு, எதிராகச் செல்வது என்பது வேறு. இரண்டும் எதிரும், புதிருமானது. நீங்கள் பெண் இன்பத்தை மறுத்து, மாறாகச் சென்றால் , உங்களால் ஒருக்காலும் அதைக்கடந்து செல்ல முடியாது. நீங்கள்

அதில் மிக ஆழமாக ஊடுருவிச் சென்றால்தான் , அந்தக் கடந்து செல்லுதல் நிகழும். -

ஒருவன் உண்ணாவிரதம் எண்ணிக் கொண்டிருக்கிறான் . கு சுற்றிச் சுற்றி வரும் மகாத சூழப்பட்டிருந்தார் . அவர் தெ இருந்தார் - எதைச் சாப்பிடுவது அதுதான் , வாழ்க்கைக்கு மிகவும் எதைச் சாப்பிடக்கூடாது என்ப அவ்வளவு கவலைப்படமாட்ட தொடர்ந்து உண்ணாவிரதம் இரு மனம் எதைச் சுற்றி சுற்றி வருகிற உணவையேதான் நினைத்துக் செ நீங்கள் உணவைக்கடந்து செல்வது பசியோடு இருப்பது என்பது சரி இருப்பது, உணவின்மேல் உள்ள பின்பு, அது எப்படி தன்னைக்கடந் அதைக்கடந்து செல்ல வேண்டுபெ சரியாகச் சாப்பிடவேண்டும் . அதான சரியாக உண்ணவேண்டும் . எந்த உ ஏற்றது என்பதைக் கண்டு அறியவே

ஆமாம் , இதுதான் , நீங்கள் உன உணவைப்பற்றி நினைக்க மாட்ட பட்டினி போடுவதால் தான் , அவ இருக்கிறார்கள் . இப்படி நான் சொல் நீங்கள் அதிக அளவில் ஐஸ் கிரீம் உண்ணாவிரதம் தான். ஏனென்ற அளிப்பதில்லை. நீங்கள், தேன உள்ளதையும் போட்டு, உங்கள் வ திருப்தியடைய மாட்டீர்கள் . அது - நிரப்பலாம். ஆனால் மனதை நிரப்ப

அதற்கு, பால் உணர்வை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும் . மற்றும் அதனுடன் நட்பாக இருக்கவேண்டும்.

தவறான ஆகாரம், உங்களிட பண்ணும், உங்களுடைய பசி,

எங்கேயோ, எதுவோ, தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. புத்தரை, சரியாகக் கணித்துக் கூறுதற்கு, சாரஹாதான் வருகிறார் . புத்தரைப் பின்பற்றும் ஆயிரக்கணக்கான சீடர்களை, அவர் கவனித்திருக்க வேண்டும். அவர்களுக்கு நேர்ந்த. அந்த அடிப்படையான தவறை அவர் மிக ஆழமாகப் புரிந்திருக்கவேண்டும் . அவர்கள் பால் உணர்வைத் தாண்டிச் செல்வதற்குப் பதிலாக , அதனால் அவர்கள்

ஆட்கொள்ளப்பட்டிருக்கிறார்கள் . நீங்கள் தொடர்ந்து, சண்டைபோட்டுக் கொண்டிருந்தால், நீங்கள் அதையே நினைத்துக் கொண்டிருப்பது இல்லையா? அதனால் நீங்கள் சூழப்படவில்லையா?

ஒருவன் உண்ணாவிரதம் இருக்கும் பொழுது, அவன் உணவையே எண்ணிக் கொண்டிருக்கிறான் . சூழப்படுகிறான். அவன் மனம் அதையே தான் சுற்றிச் சுற்றி வரும் . மகாத்மாகாந்தி. எப்பொழுதும் உணவினால் சூழப்பட்டிருந்தார் . அவர் தொடர்ந்து உணவையே நினைத்துக்கொண்டு இருந்தார் - எதைச் சாப்பிடுவது, எதை சாப்பிடக்கூடாது என்று! அவருக்கு அதுதான், வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமாகப்பட்டது. எதைச் சாப்பிடுவது, எதைச் சாப்பிடக் கூடாது என்பது. சாதாரணமாக மக்கள் உணவைப்பற்றி அவ்வளவு கவலைப்படமாட்டார்கள் . ஆனால் , நீங்கள் ஒரு மூன்றுநாள் , தொடர்ந்து உண்ணாவிரதம் இருந்து பாருங்கள். அப்பொழுது உங்களுடைய மனம் எதைச் சுற்றி சுற்றி வருகிறது என்று கவனியுங்கள். நீங்கள் தொடர்ந்து உணவையேதான் நினைத்துக் கொண்டு இருப்பீர்கள் . ஆனால் இப்பொழுது, நீங்கள் உணவைக்கடந்து செல்வது, நல்லதுதான் . ஆனால் , அதற்கு, இப்படிப் பசியோடு இருப்பது என்பது சரியான வழியல்ல . ஏனென்றால் , பசியோடு இருப்பது, உணவின்மேல் உள்ள உங்கள் ஆசையை அதிகரிக்கத் தூண்டுகிறது. பின்பு, அது எப்படி தன்னைக்கடந்து செல்ல , உங்களை அனுமதிக்கும் ? நீங்கள் அதைக்கடந்து செல்ல வேண்டுமென்றால் , நீங்கள் சரியான நேரத்தில், அதை சரியாகச் சாப்பிடவேண்டும். அதாவது, சரியான ஆகாரத்தை, சரியான நேரத்தில் , சரியாக உண்ணவேண்டும் . எந்த உணவு சத்து உள்ளது, எந்த உணவு உங்களுக்கு ஏற்றது என்பதைக் கண்டு அறிய வேண்டும்.

ஆமாம், இதுதான், நீங்கள் உணவைக்கடந்து செல்ல உதவும் . பிறகு, நீங்கள் உணவைப்பற்றி நினைக்க மாட்டீர்கள். ஏதோ ஒரு முறையில், மக்களைப் பட்டினி போடுவதால் தான் , அவர்கள் உணவையே நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். இப்படி நான் சொல்வதைக் கேட்டு, நீங்கள் ஆச்சரியப்படலாம் . நீங்கள் அதிக அளவில் ஐஸ் கிரீம் சாப்பிடலாம் - இதுவும் ஒரு வகையில் உண்ணாவிரதம் தான் .

ஏனென்றால் , அது உங்களுக்கு போஷாக்கு அளிப்பதில்லை. நீங்கள் தேவையில்லாததையும் , சத்துக் குறைவாக உள்ளதையும் போட்டு, உங்கள் வயிற்றை நிரப்புகிறீர்கள் . ஆனால் , நீங்கள் திருப்தியடைய மாட்டீர்கள் . அது உங்களுடைய வயிற்றை வேண்டுமானால் நிரப்பலாம் . ஆனால் மனதை நிரப்பாது.

தவறான ஆகாரம் , உங்களிடம் திருப்தியற்ற நிலையைத்தான் உண்டு பண்ணும் உங்களுடைய பசி, அதனால் தீராது. ஏனென்றால், உங்களுடைய பசி

சத்தைத்தான் எதிர்பார்க்கிறது. உணவை மட்டும் அல்ல . நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . சத்தான உணவுதான் , உங்களுடைய பசியைத் திருப்திப்படுத்தும் , சாதாரண உணவு இல்லை. அதைப்போல , உங்களுடைய பசி, நல்ல ருசியான உணவையும் எதிர்பார்ப்பதில்லை. உணவின் அடிப்படையான தேவை என்னவென்றால் , அது உங்களுடைய உடலுக்கு ஒத்துக் கொள்கிறதா, உங்களுக்குத்தேவையான சக்தியைக் கொடுக்கிறதா என்பதுதான் அந்த சரியான உணவோடு, உங்களுக்கு ருசியும் சேர்ந்துவிட்டால் , நீங்கள் மிகுந்த திருப்தியை அடைய முடியும்.

நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . நான் ருசிக்கு எதிரானவான் ல்லை நான் ருசியை மிகவும் ஆதரிப்பவன்தான் . ஆனால் வெறும் ருசி மாத்திரம் , போஷாக்கைக் கொடுக்காது. அதைப்போல , ருசியே இல்லாத உணவும் முட்டாள்தனமானது. தேவையில்லாதது. ருசியும் , போஷாக்கும் சேர்ந்த உணவு இருக்கும்பொழுது நீங்கள் ஏன் அதை சாப்பிடக்கூடாது? ஒரு புத்திசாலி, ருசியும் , மணமும் , போஷாக்கும் உள்ள உணவையே தேர்ந்து எடுப்பான் . இது ஒன்றும் பெரிய பிரச்சினை இல்லை. மனிதன் சந்திரனுக்குச் செல்வான் ஆனாலும் தன் பசிக்கேற்ற சத்தான உணவைத் தேர்ந்து எடுக்கமாட்டான் மனிதன், பல அற்புதங்களைச் செய்யலாம். ஆனால், அவனால், அவனுடைய பசியை திருப்தியாக தீர்க்க முடியாது. இது, சரியான செயல் இல்லை இதை, எந்தப் படித்த மனிதனும் உணர்வது இல்லை.

சில மக்கள் பட்டினியை தேர்ந்து எடுக்கிறார்கள் . இதனால் , அவர்கள் தன் உடலை மெல்ல , மெல்ல அழிக்கிறார்கள் மற்றும் சிலர் , கண்டதையெல்லாம் தின்று வயிற்றை ஒரு குப்பைக் கூடைபோல ஆக்குகிறார்கள் . இவர்களும் தங்கள் உடலை அழிக்கிறார்கள் . இருவருமே, ஒரே படகில் சவாரி செய்கிறார்கள் இருவருமே, பட்டினியோடு தான் இருக்கிறார்கள் . இருவருமே, உணவின் பின்னால்தான் தொடர்ந்து ஓடிக்கொண்டு இருக்கிறார்கள் . ஒருவன் , சாப்பாடே வாழ்க்கை லட்சியமாகக் கொண்டு, உணவினால் ஆக்கிரமிக்கப்படுகிறான் . அடுத்தவன் , பசியோடு விரதம் இருந்து, உணவினால் ஆகிரமிக்கப்படுகிறான் இந்த இரண்டுக்கும் நடுவில்தான் , அதைத் தாண்டிச் செல்வதற்கான சாத்யக்கூறு இருக்கிறது.

இதைப்போலத்தான் உடலுறவும் , பெண் இன்பமும் . ஏன் , வாழ்க்கையில் உள்ள எல்லாச் செயல்களையும் , இப்படித்தான் தாண்டிச்செல்லவேண்டும்.

புத்தர், பெண் இன்பத்தைக்கடந்து செல்லுங்கள் என்று சொன்னதாகக் கூறும் அந்த மக்கள், உண்மையிலேயே அதைக் கடந்து செல்லவில்லை என்பது சாரஹாவுக்கு மிக நன்றாகத் தெரித்திருக்க வேண்டும் . மாறாக , அவர்கள் மேலும் மேலும் அதனால் ஆக்ரமிக்கப்பட்டு, ஆழமான பள்ளத்தில் விழுந்துகொண்டு இருக்கிறார்கள்.

ஒரு தடவை, நீங்கள் ஏதோ ஒன்றுக்கு எதிராக இருந்தால் , அதிலிருந்து வெளியே வர நீங்கள் ஏதாவது வழியைக் கண்டு பிடிக்கத்தான் செய்வீர்கள்

நீங்கள் ஏதாவது புறவழியைக் கண்டு பிடிக்கக்கூடும் . மனிதன் மிகவும் தந்திரமானவன் நீங்கள் ஏதாவது ஒன்றை மறைக்கவிரும்பினால் , உங்களுடைய தந்திரமான மனம் , வேறு ஏதாவது ஒரு வழியைக் கண்டு பிடித்தேதீரும் ஆகவேதான் , நீங்கள் உடலுறவைப் பற்றி கனவு காண்கிறீர்கள் . உங்களுடைய சந்நியாசிகள் , பெண் இன்பத்தைப்பற்றி மிக அதிகமாகவே கனவு காண்

கிறார்கள் . அப்படித்தான் காணவேண்டும் . பகலில் , அதை மறுப்பதாக வேடம் போடலாம். ஆனால், இரவில் . .? அவர்கள் பிரக்ஞையாக இருக்கும் பொழுது, அதை அவர்கள் மறைக்கலாம் , அடக்கலாம் . ஆனால் , அவர்கள் தூங்கும் பொழுது அவர்களுடைய கனவில், பெண் இன்பம் , பல வண்ணங்களில் , பல தோற்றங்களில் மேலே வந்து ஆட ஆரம்பித்து விடும். அது, இப்பொழுது அவர்களது மனதின் அடி ஆழத்தில் இருந்து வருகிறது. ஆனால் , காலையில் எழுந்ததும், அதனால் குற்ற உணர்வு கொள்கிறார்கள் . இந்தக் குற்ற உணர்வினால், அவர்கள் மேலும் மேலும் அந்தக் காம உணர்வை அடக்குகிறார்கள் . ஆகவே அடுத்த நாள் இரவில், மிக மோசமான கனவை காண்கிறார்கள். அல்லது மிக அழகான கனவை காண்கிறார்கள். இது அவர்களுடைய மனதைப் பொருத்தது, அவர்களுடைய எண்ணத்தைப் பொருத்தது.

நீங்கள், அதை அழகானது என்றோ கொடுமையானது என்றோ எடுத்துக் கொள்வது, உங்களைப் பொருத்தது. இரவில் , அது அழகானதுதான் , பகலில் கொடுமையானது மற்றும் பயங்கரமானதுதான் இரவில் , அதனால் ஆனந்தப்படுகிறீர்கள் பகலில் அதனால் , கஷ்டப்படுகிறீர்கள் . இப்படி, அவர்களிடம் ஒரு விபரீதமான வட்டம் ஏற்பட்டு, அந்த வட்டத்திலேயே நீங்கள் சந்நியாசிகள் என்று கருதிக்கொண்டிருக்ககும் அவர்கள் , சுழன்று சுழன்று வருகிறார்கள் . பகலில் அவர்கள் கஷ்டப்படுறார்கள் , இரவில் அவர்கள் இன்பமாக இருக்கிறார்கள் . இப்படி அவர்கள் இருகூறுகளாக்கப்படுகிறார்கள்.

நீங்கள் , உங்களையே ஆழமாகப்பார்த்தால் , இதை நீங்கள் சுலபமாகப் பார்க்க முடியும் நீங்கள் பகலில் அடக்கியவையெல்லாம் , அங்கேயேதான் இருக்கும் . அது உங்களைவிட்டுச் செல்லாது. அதிலிருந்து உங்களால் விடுபட முடியாது. அடக்கப்பட்ட அனைத்தும் அங்கேயேதான் இருக்கும் வெளியிடப்பட்டது அனைத்தும் மறைந்துவிடும் . அது உங்களுக்கு அடியில் தங்குவது மாத்திரமல்ல , அது மேலும் மேலும் சக்திமிகுந்ததாகியும் விடுகிறது. புத்தர் இறந்து 200 வருடங்களுக்குப்பிறகு, என்ன நேர்ந்தது என்பதை, சாரஹா நன்றாகக் கவனித்திருக்க வேண்டும் தவறான அணுகுமுறை, தவறான புரிந்து

கொள்ளுதல் மக்கள் பாலுணர்வனால் , கிட்டதட்ட முழுமையாகவே ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறார்கள் . குழப்பட்டிருக்கிறார்கள் அதைப் போலத்தான் , புத்த சந்நியாசிகளும் , பெண் சந்நியாசிகளும் இருக்கிறார்கள் . தந்த்ரா பௌத்தத்துக்கு எதிராக புரட்சிகரமாகப் பிறந்துள்ளது, புத்தருக்கு எதிராக அல்ல . அந்தப் பரட்சியின் மூலமாக , புத்தரின் உண்மையான தெய்வீக உணர்வை, சாரஹா மீண்டும் கொண்டு வந்திருக்கிறார் . ஆமாம் . ஒருவன் உடல் இன்பத்தைத் தாண்டித்தான் செல்லவேண்டும் அந்தத்தாண்டுதல் , புரிந்து கொள்வதால் ஏற்படவேண்டும் , அடக்குதலால் அல்ல , வெறுப்பதால் அல்ல .

, புரிந்து கொள் தலைத்தான் நம்புகிறது. நீங்கள் ஒன்றை முழுமையாக அறிந்து கொள்ளுங்கள் . அப்பொழுது, அதன் பிடியிலிருந்து, நீங்கள் வெளியே வரலாம் . சரியாக , முழுமையாகப் புரிந்து கொள்ளாதது அனைத்தும் , உங்களைச் சுற்றி, சுற்றியேவரும் , அது உங்களிடமே தங்கியிருக்கும்.

ஆகவே, நீங்கள் சொன்னது சரிதான் " தியானத்துக்கு, பெண் இன்பம் ஒரு தடையாகவே இருக்கும் என்று கூறும் பௌத்தத்திலிருந்து, எப்படி தந்த்ரா வளர முடியும்?" என்று கேட்கிறீர்கள். சரியாகச் சொன்னால், அதிலிருந்து தான் , தந்த்ரா வளர்ந்திருக்கிறது! அது. பௌத்தத்திலிருந்து, பௌத்தத்துக்கு மாறாக வளர்ந்திருக்கிறது; அது புத்தரின் சீடர்களுக்கு மாறாக இயங்குகிறது; புத்தருக்கு மாறாக அல்ல . அவர்களுடைய குருவுக்கு எதிராக இல்லை. சீடர்கள் , புத்தரின் வார்த்தைகளை மட்டும் எடுத்துச் செல்கிறார்கள் . சாரஹா, புத்தரின் ஆன்மாவை திரும்பக் கொண்டு வருகிறார்.

சாரஹாவை, புத்தருடைய ஞானத்தின் மறு அவதாரம் மற்றும் மறுபிறப்பு என்று கூறலாம் . சாரஹாதான் புத்தர்.

கேள்வி 3:

"தேனிலவு முடிந்துவிட்டது' என்பதன் அர்த்தம் என்ன?"

'தேனிலவு முடிந்துவிட்டது' என்றால், உங்களுடைய காதல் கற்பனை முடிந்துவிட்டது என்று அர்த்தம். தேனிலவு என்பது ஒரு கற்பனைதான். அது, உங்களுடைய மனத்தின் வெளிப்பாடு. உண்மையில் அது அப்படியில்லை. அது உங்களுடைய மனம் வெளியே செலுத்திய கனவுதான். தேனிலவு முடிந்துவிட்டது என்றால் அந்தக் கற்பனைக் கனவு முடிந்து விட்டது, இப்பொழுது கல்யாணம் தொடங்க வேண்டியதுதான் என்று அர்த்தம். எந்த அளவுக்கு, தேனிலவு எதிர்ப்பார்ப்புடன் இருக்கிறதோ, அந்த அளவுக்கு அதனுடைய ஏமாற்றமும் இருக்கும். அதனால் தான், காதல் திருமணங்கள் வெற்றியடைவது இல்லை. சாதாரண திருமணங்கள் வெற்றிபெறும் அளவுக்கு, காதல் திருமணங்கள் வெற்றியடைவது இல்லை.

காதல் திருமணங்கள் வெற்றியடைய முடியாது. அதனுடைய தோல்வி, அதிலேயே இருக்கிறது. காதல்திருமணம் என்பது ஒரு கற்பனைமயக்கம்தான். கற்பனைம்யக்கத்தால் உண்மையை ஒருக்காலும் வெற்றிகொள்ள முடியாது. அந்த கற்பனை மயக்கத்தில் எப்பொழுதும் இருக்க ஒரேவழி என்னவென்றால், நீங்கள் எப்பொழுதும் அந்தத் தேனிலவிலேயே இருக்க வேண்டும். அதற்கு ஒரே வழி, நீங்கள் உங்களுடைய காதலனை, காதலியை ஒருக்காலும் சந்திக்கக்கூடாது! அப்பொழுதுதான் அது சாத்யம் : நீங்கள் அந்தத் தேனிலவை, வாழ்க்கை முழுவதும் வைத்திருக்கலாம் - இருவரும் சந்திக்காமல் இருந்தால்.

சரித்திரத்தில், நிலைபெற்ற மிகச்சிறந்த காதலர்கள் யாரென்றால், சந்திக்க முடியாமல் இருந்த அந்தக் காதலர்கள்தான். லைலா - மஜ்னு, �Ùரீ - பரிஹத் - இந்த

இரண்டு காதலர்களும் , மிகச்சிறந்த காதலர்களாகக் கருதப்படுகிறார்கள் . அவர்கள் இருவரையும் சமூகம் சந்திக்க அனுமதிக்கவில்லை. அவர்கள் இருவரும் , எப்பொழுதும் தேனிலவிலேயே இருக்கும்படி, பல தடங்கல்களை, இந்த சமூகம் செய்து விட்டது. இது எப்படியென்றால் , நல்ல உணவு உங்களுக்கு எதிரே இருக்கும் போது, நீங்கள் அதை உண்ணமுடியாமல் செய்வதுபோலத்தான் . அப்பொழுது, உணவைப்பற்றிய கற்பனை உங்களிடம் இருந்து கொண்டே இருக்கும் நீங்கள் அதைச்சாப்பிட , அனுமதிக்கப்பட்டால் , பிறகு அந்த கற்பனை மறைந்துவிடும்.

. காதல் திருமணம் , வெற்றிபெறமுடியாது. வெற்றிபெறாது என்று நான் எந்த அர்த்தத்தில் சொல்கிறேன் ? காதலர்கள் , அது வெற்றிபெற வேண்டும் என்று நினைக்கிறார்கள் . ஆனால் அவர்களுடைய அர்த்தத்தில் , அது வெற்றிபெற முடியாது. திருமணம் என்பது வெற்றிபெறும். ஆனால், காதல் தோல்வியடைந்து விடும், ஏன், பிறகு காதலே இருக்காது! ஆகவேதான், முன் காலத்தில், உலகத்தில் உள்ள சமூகம் அனைத்தும் , அதனுடைய அனுகுவத்தின் மூலமாக , திருமணத்துக்கு ஆதரவாகவும் , காதலுக்கு எதிர்ப்பாகவும் தீர்மானித்தது. உலகத்தில் உள்ள பழைய சமூகங்களில் , இந்திய சமூகமும் ஒன்று. அது சுமார் 5000 வருடங்களுக்கு முன்பே இருந்து வந்திருக்கிறது. அதனுடைய நீண்ட அனுபவத்தின் மூலமாக, காதலற்ற திருமணத்தையே ஆதரித்தது. ஏனென்றால் காதலற்ற திருமணம் நிலைத்து நின்றது.

ஏனென்றால் , அதில் தேனிலவு என்று எந்த அம்சமும் கிடையாது. ஏனென்றால் , ஆரம்பத்திலிருந்தே, அது இயல்பான உண்மையாக இருந்தது. அது, எந்தக் கற்பனைக் கனவையும் ஏற்படுத்தவில்லை.

இந்தியாவில் , திருமணம் செய்து கொள்ளும் ஆணும், பெண்ணும் தங்களுடைய வருங்கால மனைவி/ கணவனை தேர்ந்து எடுக்க அனுமதிக்கப்படுவது

இல்லை. பையன் , பெண்ணைத் தேர்ந்து எடுப்பதையும் , பெண் , பையனைத் தேர்ந்து எடுப்பதையும் அனுமதிக்கமாட்டார்கள் . பெற்றோர்கள் தான் தேர்ந்து எடுப்பார்கள் . அவர்கள் உலகத்தையொட்டி, தங்களுடைய நீண்ட அனுபவத்தின் மூலமாக அப்படிச் செய்கிறார்கள் . ஆகவே, இளைஞர்கள் காதலில் ' விழ ' முடியாது. கலியாணத்துக்குப் பிறகு, அவர்கள் பணம் , அந்தஸ்த்து, கௌரவம் , குடும்பம் என்று வேறு பலவற்றை நினைக்க ஆரம்பித்துவிடுகிறார்கள் . அவர்கள், வெறும் காதலை மட்டும் நினைப்பதில்லை. அத்துடன் வேறு பலவற்றையும் நினைக்க ஆரம்பிக்கிறார்கள் . காதல் , அங்கு பிரதானமாக இருப்பதில்லை. பெற்றோர்கள் , ஒரு ஜாதகம் பார்ப்பவனிடம் சென்று, காதலைத் தவிர்த்து, மற்று எல்லாவற்றையும் பற்றி விசாரிப்பார்கள் . காதல் , அதில் இடம் பெறவே பெறாது. இரண்டு முன் பின் தெரியாத ஒரு ஆணையும் , பெண்ணையும் , இந்தச் சமூகமும் , பெற்றோர்களும் ஒன்று சேர்த்துவிட்டு, விலகி விடுகிறார்கள் . இயல்பாகவே நீங்கள் ஒருவரோடு ஒருவர் சேர்ந்து இருக்கும் பொழுது, உங்களையறியாமலே ஒருவித விருப்பம் அடுத்தவரிடம் ஏற்படத்தான் செய்யும். அந்த விருப்பம், கிட்டத்தட்ட நீங்கள்

உங்களுடைய சகோதரியின் மேல் வைக்கும் பிரியம் போலவே இருக்கும். அது காதல் அல்ல. நீங்கள், ஒரு குறிப்பிட்ட குடும்பத்தில் பிறந்த காரணத்தால் , நீங்கள் உங்கள் சகோதர சகோதரிகளைத் தேர்ந்தெடுக்கவில்லை. அவர்களும் உங்களைத்தேர்ந்து எடுக்கவில்லை. நீங்களெல்லாம் ஒரே பெற்றோர்களுக்குப் பிறந்தது, ஒரு தற்செயல்தான். அதனால், அவர்களிடம் ஒருவிதப் பிரியம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி பல காரணங்களுக்காகச் சேர்ந்து வாழ்வதால் , ஒருவித விருப்பு, வெறுப்பு ஏற்படுவது சகஜம்தான் . ஆனால் , அது ஒருக்காலும் காதலல்ல , வெறுப்பும் அல்ல . அது ஒருக்காலும் காதலாகவோ அல்லது வெறுப்பாகவோ இருக்க முடியாது. அது ஒருபோதும், இரண்டு மாறுபட்ட முனைக்குச் செல்லாது. அது மிகவும் சமச்சீர்நிலையில்தான் இருக்கும்

இதைப் போலத்தான் , பெற்றோர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட திருமணங்களும் இருக்கும் கணவனும் , மனைவியும் ஒன்றாக வாழும்பொழுது, கொஞ்சம் கொஞ்சமாக , ஒருவரை ஒருவர் விரும்ப ஆரம்பிப்பார்கள், உணர ஆரம்பிப்பார்கள்.

அடுத்து, இன்னொன்றையும் , இந்தச் சமூகம் செய்திருக்கிறது. திருமணத்துக்கு முன்பு, ஆண் பெண் உடலுறவை, அது அனுமதிப்பதில்லை. ஆகவே, கணவனும் , மனைவியும் , ஒருவருக்கொருவர் உடல் இன்பம் காண்பதைத்தவிர வேறுவழியில்லை. நீங்கள் ஒரே ஒரு உணவைத்தான் உண்ண வேண்டும் , வேறு எந்த உணவையும் உண்ணக்கூடாது என்ற ஒரு சூழ்நிலையில் , நீங்கள் அதைமட்டும்தான் , உண்பதைத்தவிர, வேறு வழியில்லை. இதுவும், இந்த சமூகம் செய்த தந்திரம்தான். ஒரு ஆணும், பெண்ணும் திருமணத்துக்கு முன்பே, உடல் இன்பம் அனுபவிக்க அனுமதிக்கப்பட்டால் , திருமணத்துக்குப் பின்பு, அவர்கள் ஒருவரை ஒருவர் விரும்பாமல் போகலாம் , காதலிக்காமல் போகலாம் ; இப்பொழுது, காமப்பசியால் , வேறு எங்கும் செல்ல முடியாத சூழ்நிலையில் , ஒருவரை ஒருவர் காதலித்துத்தான் ஆகவேண்டும் . குழந்தைகள் பிறக்க ஆரம்பித்து விடுகிறது. ... பிறகு அவர்களது உறவும் பலப்பட்டு விடுகிறது. மற்றும் சமூகமும் , மதமும் இதை நன்றாக இறுக்கமாக்கி விடுகின்றன . பிறகு என்ன , குடும்பபொறுப்பு, கடமை என்றாகி விடுகிறது.

ஆகவே, காதல் திருமணம் தோல்வி அடைவதற்கு, நிறையக் காரணங்கள் இருக்கின்றன . ஏனென்றால் , அது கற்பனையில், கவித்துவமாக வளர்ந்திருக்கிறது. ஆணும் , பெண்ணும் காதலில் விழும்பொழுது, அந்தக் காதல் கனவின் உச்சத்துக்கே செல்கிறார்கள் . அவர்கள் இருவரும் நெருங்கி வரும் வரையில், அந்தக் கனவு நீடிக்கவே செய்யும் . அடுத்து உடலுறவு இன்பம் கண்ட பின்பு, அவர்கள் திருப்தியடைந்துவிடுகிறார்கள் . இப்படி, உண்மையை நேரடியாகச் சந்தித்தபிறகு, அவர்களுடைய இன்பக் கனவு கலைய ஆரம்பித்து விடுகிறது. இப்பொழுது, முதல்தடவையாக , ஆண் அவளை ஒரு பெண்ணாகவும் அந்தப் பெண் , அவனை ஒரு

ஆணாகவும் பார்க்கத் தொடங்குகிறார்கள்.

அப்படி உண்மைநிலையை, உண்மையாகப் பார்க்கும் பொழுது, அவர்களுடைய தேனிலவு முடிந்துவிட்டது! 'தேனிலவு முடிந்து விட்டது

என்பதன் அர்த்தம் இதுதான் . அது, திருமணத்தில் மாத்திரம் நிகழ்வது இல்லை. அது வேறு பலவகை உறவுகளிலும் ஏற்படுகிறது. ஏன் , அது இங்கே என்னுடனும் நேரிடுகிறது!

கனவு நீங்கள் என்னோடு வரும்பொழுது, நீங்கள் தேனிலவில் இருக்கிறீர்கள் . என்னைப்பற்றிய கற்பனையில் இருக்கிறீர்கள் . ஆனால் , எனக்கும் அதற்கும் எந்த சம்மந்தமும் இல்லை. நீங்களே, அதைத்தனியாக உண்டாக்கிக் கொள்கிறீர்கள் . பிறகு கற்பனையில் மிதக்கிறீர்கள் , காண்கிறீர்கள் மற்றும் ஆசைப்படுகிறீர்கள் . " இது நிகழப்போகிறது, அது நிகழப்போகிறது, பகவான் இதைச் செய்யப் போகிறார், அதைச் செய்யப் போகிறார் " என்று என்னிடம் எதிர்பார்க்கிறீர்கள் . பிறகு, ஒரு நாள் இந்தக் கற்பனைத் தேனிலவு முடிந்துவிடும் . உண்மையாகச் சொன்னால், அந்தத் தேனிலவு முடிவதற்காகவே, நான் இங்கு உட்கார்ந்திருக்கிறேன்!. அது முடித்த பிறகுதான், நான் என்னுடைய வேலையை ஆரம்பிக்கிறேன் . அதற்கு முன்பு இல்லை. ஏனெனில் , உங்களுடைய கற்பனைத் தேனிலவில் , நான் அங்கம் வகிக்க விரும்பவில்லை. அது முடிவதற்காகவே இங்கு காத்துக் கொண்டு இருக்கிறேன் . நீங்கள் இந்த பூமியில் மீண்டும் நன்றாகக் கால்பதிக்க வேண்டும் . அப்பொழுதுதான் , ஏதாவது, உண்மையாகச் செய்ய முடியும் . பார்க்கப் போனால் , அந்தத் தேனிலவு முடிந்தபிறகுதான், நான் சந்நியாசமே கொடுக்கிறேன். சிலவில் இருக்கும் பொழுது, நான் சந்நியாசம் கொடுத்தால், அது மிகமிக ஆபத்தானது. ஏனென்றால், அப்பொழுது கொடுத்தால் , அந்தத் தேனிலவு முடிந்தபிறகு நீங்கள் என்னை வெறுக்கக்கூடும். அந்த சந்நியாசத்துக்கு மாறாக நடக்கக்கூடும். அதற்கு, நான் காத்திருப்பதே மேல்

ஒவ்வொரு உறவிலும் , நட்பிலும் , குரு - சீடன்

உறவிலும் - ஒரு கற்பனை கலந்த பகுதி இருக்கவே செய்யும் . அந்தக் கற்பனை, உங்களுடைய மனதால் ஏற்படுத்தப்பட்டது. உங்களுடைய அடக்கப்பட்ட ஆசைகள் , கனவாக வந்து கொண்டு இருக்கின்றன . சரியான சூழ்நிலையில், சரியாகப் புரிந்துகொண்டால், அந்த திருமணமும் முடிந்துவிடுகிறது, அந்தத் தேனிலவும் முடிந்துவிடுகிறது.

நன்றாகக் கவனியுங்கள்.

சில சமூகங்கள் இருக்கின்றன உதாரணமாக , ஹிந்து சமூகம். இது காதலைச் சொல்கிறது, இதனால், அந்தத் தேனிலவும் கொல்லப்படுகிறது. அங்கு வெறும் திருமணம் தான் இருக்கிறது. அமெரிக்காவில் , காதலை வைத்துக் கொண்டு, திருமணத்தைக் கொன்று விடுகிறார்கள் . அங்கு தேனிலவு மாத்திரம்தான் இருக்கிறது. திருமணம் மறைந்துவிடுகிறது.

ஆனால் , என்னைப் பொருத்தவரையில் , இந்த இரண்டின் ஆழத்திலும், ஏதோ சதித்திட்டம் இருக்கிறது என்றே நினைக்கத் தோன்றுகிறது. உங்களிடம் ஏதோ அடக்கப்பட்ட, எதிர்பார்ப்புகள் இருந்தால்தான், அந்தத் தேனிலவு உயிர் வாழ்கிறது. இல்லாவிட்டால் , நீங்கள் செலுத்துவதற்கு உங்களிடம் எதுவும் இருக்காது. அப்படிச் செலுத்துவதற்கு இன்னும் ஏதாவது பாக்கியிருந்தால்,

,

உங்களுடைய காதல் மீண்டும் மீண்டும் தோல்வியைத்தான் அடையும் . இப்படி ஏற்பாடு செய்யப்பட்ட திருமணத்தில் , ஒரு புரோகிதர் வந்து, சில மந்திரங்களைச் சொல்லி, அவர்களைத் தெய்வீகமாக இறுக்கி வைத்து விடுகிறார் . இல்லாவிட்டால் , அதுவும் தோல்வியடைந்து விடும் ! அது, அவர்கள் ஒன்று சேர்ந்த வாழ உதவி செய்கிறது. இல்லாவிட்டால் , அவர்கள் பைத்தியம் பிடித்து. தற்கொலை செய்துகொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. அவர்களை பிளவுபட்டு, மனநிலை பாதிக்கப்பட்டு நரம்புக் கோளாறு கொண்டு இருப்பதிலிருந்து. அந்தச் சடங்கு காப்பாற்றுகிறது.

ஆகவே, இந்த புரோகிதர்களும் , பாதிரிமார்களும் , அரசியல்வாதிகளும் அந்தத்திருமணத்தை நடத்தி வைக்கிறார்கள். ஏனென்றால் , காதல் என்பது மிகவும் ஆபத்தானது. இந்த சமூகம், காதல், கலியாணம் என்ற இரு முனைகளுக் கிடையே இயங்கிக் கொண்டு இருக்கிறது.

திருமண வாழ்க்கையில் அலுப்பு ஏற்பட்ட பிறகு வேறு ஆணையோ / பெண்ணையோ காதலிக்கத் தொடங்க ஆரம்பித்து விடுகின்றனர் . பிறகு அமெரிக்காவில் உள்ளவர்களைப்போல , காதலில் அலுப்பு ஏற்படும் பொழுது, அவர்கள் திருமணத்தைப் பற்றி நினைக்கின்றனர் . இரண்டுமே ஒரே பந்தயத்தின் இருவேறு முனைகள்

என்னைப் பொருத்தவரையில் , காதலும் திருமணமும் அற்ற ஒரு சமூகத்தையே எதிர்பார்க்கிறேன் . திருமணம் மறைய வேண்டும் . ஏனெனில் , ஒரு ஆணையும், பெண்ணையும், சட்டப்படி கட்டாயப்படுத்தி, ஒன்று சேர்த்து வாழவைப்பது என்பது ஒழுக்கங்கெட்ட செயல்தான் , நாகரீக மற்ற செயல்தான் , விருப்பம் இல்லாமல் , ஒரு பெண்ணையும் , ஆணையும் கட்டாயப்படுத்திச் சேர்த்து வாழவிடுவது என்பது இயற்கைக்கு புறம்பானது. கடவுளுக்கு புறம்பானது.

இப்படி மக்களைக் கட்டாயப்படுத்தாவிட்டால் , 99% வியாதிகள் மறைந்துவிடும்.

திருமணம் , ஆயிரம் பிரச்சினைகளை உண்டு பண்ணும் . ஆனால் , எதையும் தீர்த்து வைக்காது. ஆமாம் . அது மக்களை அடிமையாக்குவதில் வெற்றி கண்டிருக்கிறது. அது, மனிதனின் தனித்தன்மையை அழிப்பதில் வெற்றி கண்டிருக்கிறது. உங்களைச் சுற்றியுள்ளவர்களை, நீங்கள் பார்த்ததில்லையா? திருமணமாகாதவனிடம் , ஒருசில தனித்தன்மை இருக்கலாம் . ஆனால் , திருமணமானவன் , எல்லாத் தனித்தன்மைகளையும் இழந்துவிடுகிறான் . அவன் , மேலும் மேலும் , ஒரு மாதிரியாகவே இயங்குகிறான் . திருமணமாகாத பெண், ஒருவித சந்தோஷத்தில் தான் இருக்கிறாள் . அவளிடம் ஒருவித புதுமை மலர்ந்திருக்கிறது. திருமணமாண பெண் சோர்வாக , விரக்தியாக , எதிலும் ஆர்வமில்லாது அலுப்பாகவே இருப்பாள் . இது ரொம்ப மோசம் . மக்களை இப்படிக்

கட்டாயப்படுத்தி சோர்விலும் , அலுப்பிலும் வாழவைப்பவது என்பது மிகவும் அருவருப்பான செயல் மக்கள் இங்கே எதற்கு வாழ்கிறார்கள் என்றால்,

எவ்வளவு அருவருப்பானது! ஆனால் , திருமணம் இவைகள் அனைத்தையுமே எடுத்து விடுகிறது. இது ஆனந்தமாக , மகிழ்ச்சியாக கொண்டாட்டமாக இருக்கவே வாழ்கிறார்கள்

வெற்றியடைவது இல்லை திருமணம் , இந்த சமூகத்திலிருந்து மறைய வேண்டும். ஆனால், நீங்கள் இன்பமான கற்பனைகளையும் , கனவுகளையும் மற்றும் காதலையும் தேர்ந்து எடுத்தால் , நீங்கள் மறுபடியும் , திருமணம் என்ற எலிப்பொறிக்கும் மாட்டிக்கொண்டு விடுவீர்கள் . ஏனென்றால் , காதல் ஒருபோதும் அப்படியே இருக்காது. ஆகவே, அது வெற்றியடையாது. திருமணம் வெற்றியடையும் அளவுக்கு, வெறும் காதல் வெற்றியடையாது - பொருளாதாரம் பாதுகாப்பு குழந்தைகளுக்காக , சமூகத்துக்காக என்று எல்லாவற்றையும் திருமணம்தான தீர்த்துவைக்கிறது. ஆகவே, திருமணம் வெற்றியடையும் அளவுக்கு, காதல்

திருமணத்தைப் போலவே, காதலும் பல தொந்திரவுகளை ஏற்படுத்துகிறது அடக்கப்பட ஆசைகளினால்தான் காதல் உயிர்வாழ்கிறது. அந்த அடக்கப் பட் ஆசைகள் மறையும் போது காதல் மறைவதைப் போல திருமணமும் மறைந்து விடுகிறது.

ஒரு உண்மையான, இயற்கையான மனித குலத்துக்கு, திருமணத்தைப்பற்று எதுவும் தெரியாது மற்றும் தேனிலவைப் பற்றியும் தெரியாது. அதற்கு மகிழ்ச் மட்டுமே தெரியும் தன்னிடம் உள்ளதை, மற்றவர்களுக்கு பகிர்ந்து அளிக்கவே தெரியும் . நீங்கள் பிறருக்கு பகிர்ந்து அளித்தால், நல்லது. அப்படி பகிர்ந்து அளிக்க முடியாவிட்டாலும் நல்லதே. திருமணம் மறையும் பொழுது. இந்த அருவருப்பான விவாகரத்தும் மறைந்துவிடும் . மற்றும் தேனிலவு மறைந்துவிடும்

நீங்கள் சுதந்திரமாக மக்களைச் சந்தித்து, காதல் செய்யும் நிலையில் இருந்தால் , இந்தத் தேனிலவு

மறைந்துவிடும் . லைலா, மஜ்னு, ஸ்ரீ , பரிஹாத் போன்றவர்கள் ஏற்படவே மாட்டார்கள் . யாரும் அவர்களின் பாதையில் குறுக்கே நிற்கமாட்டார்கள் . நீங்கள் எந்தப் பெண்ணையும் சந்திக்கலாம் , எந்த ஆணையும் சந்திக்கலாம் . நீங்கள் யாரை விரும்புகிறீர்களோ, உங்களை விரும்புகிறார்களோ இந்த விருப்பங்களின் பாதையில் யாருமே குறுக்கிடமாட்டார்கள் - அதை நிறைவேற்றிக்கொள்ள முடியும் . அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் , கற்பனைக்கு ஏது இடம்? யார்

எல்லா வகையான உணவுகளும் இங்கே இருக்கின்றன. ஆனால், அதன் அருகில் நிற்பவர்கள், ஒரு காவல்காரனாகவோ அல்லது ஒரு நீதிபதியாகவோ அல்லது பாதிரியாராகவோதான் இருப்பார்கள் . அவர்கள் , உங்களிடம் இந்த உணவை உட்கொண்டால் , நரகத்துக்கும் , அந்த உணவை உட்கொண்டால் , சொர்க்கத்தும் , இந்த உணவை உட்கொள்ள விரும்பினால் , நீங்கள் நரகத்துக்கும் . அந்த உணவை உட்கொள்ள விரும்பாவிட்டால் , சொர்க்கத்தும் செல்லலாம் என்று கூறி, உங்களைச் சபித்து, பயப்படுமாறு செய்துவிடுவார்கள் . உங்களுக்கும்.

ஆனந்தமாக , மகிழ்ச்சியாக கொண்டாட்டமாக இருக்கவே வாழ்கிறார்கள் ஆனால் , திருமணம் இவைகள் அனைத்தையுமே எடுத்து விடுகிறது. இது எவ்வளவு அருவருப்பானது

திருமணம், இந்த சமூகத்திலிருந்து மறைய வேண்டும். ஆனால் , நீங்கள் இன்பமான கற்பனைகளையும் , கனவுகளையும் மற்றும் காதலையும் தேர்ந்து எடுத்தால் , நீங்கள் மறுபடியும் , திருமணம் என்ற எலிப்பொறிக்குள் மாட்டிக்கொண்டு விடுவீர்கள் . ஏனென்றால், காதல் ஒருபோதும் அப்படியே இருக்காது. ஆகவே, அது வெற்றியடையாது. திருமணம் வெற்றியடையும் அளவுக்கு, வெறும் காதல் வெற்றியடையாது - பொருளாதாரம் , பாதுகாப்பு, குழந்தைகளுக்காக , சமூகத்துக்காக என்று எல்லாவற்றையும் திருமணம்தான் தீர்த்துவைக்கிறது.

ஆகவே, திருமணம் வெற்றியடையும் அளவுக்கு, காதல் வெற்றியடைவது இல்லை.

திருமணத்தைப் போலவே, காதலும் பல தொந்திரவுகளை ஏற்படுத்துகிறது. அடக்கப்பட ஆசைகளினால்தான் காதல் உயிர்வாழ்கிறது. அந்த அடக்கப் பட்ட ஆசைகள் மறையும் போது காதல் மறைவதைப்போல திருமணமும் மறைந்து விடுகிறது.

ஒரு உண்மையான, இயற்கையான மனித குலத்துக்கு, திருமணத்தைப்பற்றி எதுவும் தெரியாது மற்றும் தேனிலவைப் பற்றியும் தெரியாது. அதற்கு மகிழ்ச்சி மட்டுமே தெரியும் தன்னிடம் உள்ளதை, மற்றவர்களுக்கு பகிர்ந்து அளிக்கவே தெரியும் நீங்கள் பிறருக்கு பகிர்ந்து அளித்தால் , நல்லது. அப்படி பகிர்ந்து அளிக்க முடியாவிட்டாலும் , நல்லதே. திருமணம் மறையும் பொழுது. இந்த அருவருப்பான விவாகரத்தும் மறைந்துவிடும் . மற்றும் தேனிலவு மறைந்துவிடும்.

நீங்கள் சுதந்திரமாக மக்களைச் சந்தித்து, காதல் செய்யும் நிலையில் இருந்தால் , இந்தத் தேனிலவு மறைந்துவிடும் . லைலா, மஜ்னு, ஸ்ரீ , பரிஹாத் போன்றவர்கள் ஏற்படவே மாட்டார்கள் . யாரும் அவர்களின் பாதையில் குறுக்கே நிற்கமாட்டார்கள் . நீங்கள் எந்தப் பெண்ணையும் சந்திக்கலாம் , எந்த ஆணையும் சந்திக்கலாம் . நீங்கள் யாரை விரும்புகிறீர்களோ, உங்களை யார் விரும்புகிறார்களோ இந்த விருப்பங்களின் பாதையில் யாருமே குறுக்கிடமாட்டார்கள் - அதை நிறைவேற்றிக்கொள்ள முடியும் . அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில், கற்பனைக்கு ஏது இடம்?

எல்லா வகையான உணவுகளும் இங்கே இருக்கின்றன. ஆனால், அதன் அருகில் நிற்பவர்கள், ஒரு காவல்காரனாகவோ அல்லது ஒரு நீதிபதியாகவோ அல்லது பாதிரியாராகவோதான் இருப்பார்கள் . அவர்கள் , உங்களிடம் இந்த உணவை உட்கொண்டால் , நரகத்துக்கும் , அந்த உணவை உட்கொண்டால் , சொர்க்கத்தும் , இந்த உணவை உட்கொள்ள விரும்பினால் , நீங்கள் நரகத்துக்கும் . அந்த உணவை உட்கொள்ள விரும்பாவிட்டால் , சொர்க்கத்தும் செல்லலாம் என்று கூறி, உங்களைச்

சபித்து, பயப்படுமாறு செய்துவிடுவார்கள் . உங்களுக்கும்,

உங்களுடைய ஆசைக்கும் நடுவில் , யாரும் நிற்காதபொழுது, உங்களுடைய ஆசைகள் சுதந்திரமாக இருக்கும் பொழுது, எந்த அடக்குதலும் உங்களிடம் ஏற்படாது.

அடக்குதல் இல்லாவிட்டால் , தேனிலவும் இருக்காது. தேனிலவு என்பது அடக்குதலின் பின் விளைவு. அது திருமணத்தோடுதான் இருக்கும் . அது உங்களை திருமணத்திற்குள் அழைத்துச்செல்லும் . அது ஒரு தூண்டில் போன்றது. ஆகவேதான் , பெண்கள் கலியாணத்திலேயே மிகவும் குறியாக இருக்கிறார்கள். ஏனென்றால் வெறும் தேனிலவு என்பது அற்ப ஆயுள் உள்ளது, கற்பனையில் மிதப்பது ஒரு பட்டத்தைப் போன்றது. ஆண்களைவிட , பெண்களுக்கு மிக நன்றாகத் தெரியும் . அவர்கள் , ஆண்களைவிட இந்த உலக வாழ்க்கையில் , யதார்த்தத்தில் மிகவும் தெளிவாகவே இருப்பார்கள் . ஆண்கள் கனவுலகில் சஞ்சரிப்பவர்கள். அவர்கள் இந்த சந்திரனைப்பற்றியும், நட்சத்திரங்களைப் பற்றியும் கனவு காண்பவர்கள் , இந்த அற்ப ஆசைகளைக்கண்டு, பெண்கள் எள்ளி நகையாடுவார்கள் . பெண்கள் , தங்கள் ஒவ்வொரு அடியையும் , கணக்குப் பார்த்தே வைப்பார்கள் ! இந்த தேனிலவு என்பது சுமார் இரண்டு வாரத்துக்குமேல் இருக்காது என்பது அவர்களுக்கு மிக நன்றாகவே தெரியும் . ஆகவேதான் , அவர்கள் திருமணத்திலேயே குறியாக இருக்கிறார்கள்.

காதலை நம்பமுடியாது. அது வந்த வேகத்தில் , சென்றுவிடும் . அது ஒருவித சலனம் நிறைந்த மனநிலைதான் . காதல் இருந்துகொண்டு இருந்தால் , இன்னும் அடக்கிய ஆசைகள் இருந்து கொண்டு இருக்கிறது என்று அர்த்தம்!

இன்னொரு வித்தியாசமான சமூகத்தில் , ஒருவித பேரானந்தம் இருக்கும் . அங்கு மகிழ்ச்சி, கொண்டாட்டம் என்ற வார்த்தைகளுக்கு, காதலைவிட, மிகவும் முக்யத்வம் இருக்கும் . இரண்டு பேர்களும் , தங்கள் சக்திகளைப் பகிர்ந்து கொள்ள விரும்பினால்,

அதற்கு எந்தத் தடையும் இருக்காது. அங்கு, ஒரே ஒரு கட்டுப்பாடுதான் இருக்கும் . அதாவது, ஒருவருக்கு விருப்பம் இல்லாவிட்டால் , அது நடைபெறாது; அதை ஆரம்பிக்க முடியாது. மற்ற எல்லா கட்டுப்பாடுகளும் மறைய வேண்டும்.

இப்பொழுது, குழந்தைகள் பிரச்சினைகளை எளிதாகத் தீர்த்துவைக்க , விஞ்ஞானம் பலவழிகளைக்கண்டு பிடித்திருக்கிறது. முன்பு உள்ள பெற்றோர்கள் , அவ்வளவு அதிர்ஷ்டம் செய்திருக்கவில்லை. இந்த வகையில் , நீங்கள் அதிர்ஷ்டசாலிகள் தான் . குழந்தைகளின் பிரச்சினையை தீர்க்க முடியும் . உங்களுடைய விருப்பப்படி எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் , நீங்கள் ஒரு பெண்ணுடன் தங்கியிருக்கலாம் . அதாவது, " என்னுடைய காதல் மற்றும் அன்பு, இந்த மனிதரோடு / பெண்ணோடு அதிகரித்துக் கொண்டேதான் இருக்கிறது. நாங்கள் இப்பொழுது பிரிவதற்கு எந்த காரணமும் இல்லை' ' என்று நினைக்கும் வரையில் நீங்கள் சேர்ந்தே வாழலாம் . நீங்கள் இப்பொழுது ஒரு ஆத்மார்த்தமான நண்பனைத் தேடிக்கண்டு பிடித்துவிட்டீர்கள் . எப்பொழுது, உங்களுக்குக் குழந்தை வேண்டும் என்று கருதுகிறீர்களோ, அப்பொழுது குழந்தையை பெற்றுக் கொள்ளலாம்.

பெரும்பாலும் கட்டுப்பாடு என்று போதும் ஒரு கடமையாக நினைக்கக்சு மகிழ்ச்சியாக இருக்கும் . எப்பொழுது அ அப்பொழுதே அது இறந்து விட்டது என தீர்க்கமுடியாத ஆயிரம் பிரச்சினைகளை உலகத்தில் உள்ள சூழ்நிலை இப்படித்தான வைத்தியரிடம் செல்லலாம் . ஒரு குருவிட இப்படிப் பலவற்றை செய்யலாம் - ஆனால் பிரச்சினை, அப்படியேதான் இருக்கும்.

இந்த அடிப்படையான பிரச்சினை, ஏ பாலுணர்வு சக்தியோடு சம்பந்தப்பட்டிருக்கி வேறு எங்கேயோ முயன்று கொண்டு இரு வெட்டிக்கொண்டே இருக்கிறீர்கள் . ஆனா இல்லை. மக்கள் எப்பொழுதும் துக்கமாகவே எல்லோருடனும் கூடி சந்தோஷமாக இருக்க ஏதோ ஒன்றை எப்பொழுதும் தாக்கிக் கொ வெறும் கடமையைச் செய்யவே விரும்புசி கிடையாது.

திருமணமும் , தேனிலவும் ஒன்றாக அவைகள் ,

ஒன்றாகவேதான் வரும் , ஒன்றாக அடக்கப்படாத மனநிலை உள்ள மக்கள் இந்த கொண்டாடத்தைத்தவிர வேறு எதுவும் தெரிய மனநிலைக்கு ஏற்ப அப்போதைக்கப்போது வாழ்க்கையின் முக்கிய அம்சமாகக் கருது வாழ்வார்கள்.

ஒரு புத்திசாலித்தனமான சமூக காப்பகத்தில் (COMMUNE) விட்டு மறையவேண்டும் . மக்கள் பொதுவாக வேண்டும். ஒரே தொழிலை செய்பவர்கள் ஓவியம் தீட்டும் பெண்களும் ஆண்களும் இருக்கவேண்டும் . இதைப்போல , கவின களின் குழுக்கள், தட்டான் குழுக்கள் மறைய வேண்டும்.

ஒரு புத்திசாலித்தனமான சமூகத்தில் - குழந்தைகளை ஒரு பொதுக் காப்பகத்தில் (COMMUNE ) விட்டு விடுவார்கள் . குடும்பம் என்பது மறைய வேண்டும் . மக்கள் பொதுவாக ஒரு இடத்தில், ஒரு குழுவாக வாழ வேண்டும் . ஒரே தொழிலை செய்பவர்கள் , ஒரே குழுக்களாக வாழவேண்டும் . ஓவியம் தீட்டும் பெண்களும் ஆண்களும் ஒன்று சேர்ந்து வாழ்ந்து, மகிழ்ச்சியாக இருக்கவேண்டும் . இதைப்போல , கவிஞர் குழுக்கள் , தச்சுவேலை செய்பவர் களின் குழுக்கள், தட்டான் குழுக்கள் என்று இருக்கவேண்டும். குடும்பம் மறைய வேண்டும்.

குடும்பம் என்பதுதான் பிரச்சினை. ஆனால் , ஒரு குழுவாக ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்ந்து, உடமைகள் அனைத்தும் பொதுவாக இருந்து, அன்பையும் , மற்றும் பொருள்களையும் பொதுவாகப் பங்கிட்டுக்கொண்டால் , எல்லைகள் உடைய குடும்பம் என்பது மறைந்துவிடும்.

பெரும்பாலும் கட்டுப்பாடு என்று எதுவும் இருக்கக்கூடாது. காதலை ஒரு போதும் ஒரு கடமையாக நினைக்கக் கூடாது அப்பொழுதுதான் , அது மகிழ்ச்சியாக இருக்கும் . எப்பொழுது அது கடமையாகக் கருதப்படுகிறதோ, அப்பொழுதே அது இறந்து விட்டது என்று அர்த்தம் . அப்பொழுது, அது தீர்க்கமுடியாத ஆயிரம் பிரச்சினைகளைக் கொண்டதாகி விடுகிறது. இந்த உலகத்தில் உள்ள சூழ்நிலை இப்படித்தான் இருக்கிறது. நீங்கள் ஒரு மனநல் வைத்தியரிடம் செல்லலாம் . ஒரு குருவிடம் வரலாம் , தியானம் செய்யலாம் இப்படிப் பலவற்றை செய்யலாம் - ஆனால், உங்களுடைய அடிப்படையான பிரச்சினை. அப்படியேதான் இருக்கும்.

இந்த அடிப்படையான பிரச்சினை, ஏதோ ஒரு வகையில் , உங்களுடைய பாலுணர்வு சக்தியோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆனால் , நீங்கள் அதைத்தீர்க்க , வேறு எங்கேயோ முயன்று கொண்டு இருக்கிறீர்கள் . நீங்கள் இலைகளை வெட்டிக்கொண்டே இருக்கிறீர்கள் . ஆனால் , மரத்தின் வேரை வெட்டுவதே இல்லை. மக்கள் எப்பொழுதும் துக்கமாகவே இருப்பதற்குக் காரணம் , அவர்கள் எல்லோருடனும் கூடி சந்தோஷமாக இருக்க விரும்புவதே இல்லை. அவர்கள் ஏதோ ஒன்றை எப்பொழுதும் தாக்கிக் கொண்டே இருக்கிறார்கள் . அவர்கள் வெறும் கடமையைச் செய்யவே விரும்புகிறார்கள். ஆனால், அதில் அன்பு கிடையாது.

திருமணமும் , தேனிலவும் ஒன்றாகவே அடைக்கப்பட்டிருக்கிறது. அவைகள் , ஒன்றாகவேதான் வரும் , ஒன்றாகவேதான் செல்லும் . அப்பொழுது அடக்கப்படாத மனநிலை உள்ள மக்கள் இந்த உலகத்தில் பரவி, ஆனந்தம் மற்றும் கொண்டாடத்தைத்தவிர , வேறு எதுவும் தெரியாதநிலையில் , அந்த மகிழ்ச்சியான மனநிலைக்கு ஏற்ப அப்போதைக்கப்போது தீர்மானம் செய்து, மகிழ்ச்சியே வாழ்க்கையின் முக்கிய அம்சமாகக் கருதி வாழ்வில் இரண்டறக் கலந்து வாழ்வார்கள் . இதைத்தான் தந்த்ரா எடுத்து சொல்கிறது.

கேள்வி 4:

நான் , மா பிரேம் சௌவ்யாவை (MA PREM SAVYA) காதலிக்கிறேன் . நான் இறக்கும் வரை, அவர் என்னோடு இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன் . இந்த , என்னுடைய கடைசி ஆசை சரியானதா?"

இந்த கேள்வி, பிரேம் அனிகெத் (PREM ANIKET) விடமிருந்து வந்துள்ளது.

முதலாவதாக : நீங்கள் இன்னும் உயிரோடு இருக்கும் பொழுது, எந்த ஆசையும் கடைசி ஆசையாக இருக்க முடியாது. அடுத்த கணம் , என்ன நேரிடும் என்று யாருக்குத் தெரியும் ? அதை எப்படி உங்களால் தெரிந்துகொள்ள முடியும்?

சௌவ்யாவை, உங்களுக்கு எவ்வவளவு நாட்களாகத்தெரியும்? ஒரு சில வாரங்கள் இருக்குமா? அதற்கு முன்பு, அவளைப்பற்றிக் கனவுகூட கண்டிருக்கமாட்டீர்கள் ? இப்பொழுது, இது நிகழும்பொழுது, இதுவே மீண்டும் நிகழலாம் . நீங்கள் இன்னும் சில வாரங்களுக்குப் பின்பு, வேறொரு பெண்ணைச் சந்திக்க நேரிடும் . ஆகவே, நீங்கள் இறக்கும் வரை, எதுவுமே கடைசி ஆசையாக இருக்க முடியாது. ஆசை என்பது ஒரு முடிவில்லாத தொடர் அதை நிறுத்துவதற்கு, இரண்டே வழிகள் தான் உண்டு ; ஒன்று இறப்பு, அடுத்தது ஞானமடைவது. இந்த இரண்டுமே, உங்களிடம் இன்னும் ஏற்படவில்லை. ஆமாம் இரண்டும்தான், அனிகெத்.

முதலில் , ஆசையைப்பற்றி நீங்கள் சரியாக அறிந்து கொள்வது நல்லது. ஒவ்வொரு ஆசையும் , புதிய ஆசைகளையே கொண்டுவரும் . ஒரு ஆசை, பத்து ஆசைகளை ஏற்படுத்தும். இது எப்படியென்றால், ஒரு விதையிலிருந்து, ஆயிரக்கணக்கான கிளைகளையும், பலலட்சம் இலைகளையும் கொண்ட மரம், உண்டாவது போல . ஆகவே, ஆசை என்ற ஒரு விதையிலிருந்து, அநேக ஆசைகள் ஏற்படுகின்றன.

உங்களுடைய வருங்காலத்தைப் பற்றி, நீங்கள் எதுவுமே நிச்சயமாகக் கூற முடியாது. சொல்லவும் கூடாது. வருங்காலம் என்பது ஒரு திறந்த வெளியாக

இருக்கிறது? இதை அறிந்து கொள்ளும், மனிதனின் முயற்சி நகைப்புக்குரியது. ஆனால், மனிதன் இதைத் தொடர்ந்து செய்து கொண்டுதான் இருக்கிறான். ஒன்று, அவன், தன்னுடைய இறந்தகாலத்தை மாற்றியமைக்க நினைக்கிறான். இது ஒருக்காலும் நடக்காது. என்ன நிகழ்ந்ததோ, அது நிகழ்ந்ததுதான். அதை மறுபடியும் செய்வதற்கு, எந்த வழியும் இல்லை. நீங்கள் அதைத் தொடக்கூட முடியாது. அதைத் திருத்தி, நல்லதாகவோ கெட்டதாகவே மாற்ற முடியாது. அது உங்களுடைய எல்லைக்கு அப்பால் சென்று விட்டது. இறந்தகாலம் முடிந்துவிட்டது. அது, தன் பாதையை நிறைவு செய்துவிட்டது. நீங்கள் அதற்குள், திரும்பியும் செல்ல முடியாது மற்றும் அதை மாற்றியமைக்கவும் முடியாது. இது நல்லதற்குத்தான் இல்லாவிட்டால், நீங்கள் அதற்குள் சென்று, உங்கள் இஷ்டப்படி செய்ய ஆரம்பித்துவிடுவீர்கள். நீங்கள் அப்படிப் பின்னோக்கிச் சென்றால், உங்களுக்குப் பைத்தியம் பிடித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

பிறகு, நீங்கள் ஒருக்காலும் நிகழ்காலத்துக்கு வரமாட்டார்கள். உங்களுடைய இறந்தகாலம், மிக நீண்டது. இறந்தகாலத்தின் கதவுகள் மூடியிருப்பது, நல்லதுதான். ஆனால், மனிதனின் முட்டாள் தனம், அதை மாற்றியமைக்க, அதில் திருத்தம் செய்ய நினைத்துக் கொண்டே இருக்கிறது. இதைப்பற்றி, நீங்கள் எப்பொழுதாவது நினைத்ததில்லையா? ஆனால், அதைப்பற்றி, நீங்கள் வெளியே சொல்லியிருக்கமாட்டீர்கள். உங்களுடைய கற்பனையில், நீங்கள் அதை அப்படிச் செய்திருக்கலாம், இதை இப்படிச் செய்திருக்கலாம், என்று நினைத்திருப்பீர்கள். இப்படி, நீங்கள் உங்களுடைய காலத்தைத்தான் வீணடிக்க முடியும் - இப்பொழுது, எதுவும் செய்யமுடியாது. அது உங்களுடைய கைகளிலிருந்து, நழுவி ஓடிவிட்டது.

நடந்து முடிந்ததை நீங்கள் சீர் செய்ய முடியாது. நடக்கக் கூடியதை, உங்களால் அறிந்து கொள்ள முடியாது. இவைகளை மனிதன் செய்து கொண்டேதான் வருகிறான். அவன், தன்னுடைய வருங்காலத்தை முன்கூட்டியே தெரிந்துகொள்ள

விரும்புகிறேன் . வருங்காலம் என்பது, இன்னும் நிகழாதது. வருங்காலம் , வெறும் திறப்பாகவே இருக்கிறது. அதை, உங்களுடைய அறிவால் தீர்மானிக்க முடியாது. அறிந்து கொள்ள முடியாது. அது இன்னும் நிதர்சனமாகவில்லை. அது வெறும் சாத்தியத்தில் தான் இருக்கிறது. வருங்காலத்தைப் பற்றி எதுவும் நிலையில்லை. வருங்காலத்தைப் பற்றி, வருங்காலத்துக்கே எதுவும் தெரியாது! ஆனால் மனிதன் முட்டாளாகவே இருக்கிறான் . அவன் , திரும்பத் திரும்ப , ஜோதிடனிடமும் , கை ரேகை பார்ப்பவனிடமும் , கிளிஜோஸ்யம் சொல்பவனிடமும் ஓடுகிறான் எப்படியாவது, வருங்காலத்தை முன் கூட்டியே தெரிந்து கொண்டு, அதைத் தனக்கு ஏற்றவாறு சாதகமாகச் செய்ய முயல்கிறான் . இது எவ்வளவு முட்டாள் தனம் ? நீங்கள் , அதை முன்பே அறிந்து கொண்டால் , அது வருங்காலமில்லை. அது இறந்த காலமாகிவிடுகிறது! இறந்த காலத்தைத்தான், உங்களால் அறிந்து கொள்ள முடியும் . வருங்காலம் , எப்பொழுதும் வருங்காலமாகவே இருக்கும் . அது, அறிந்து கொள்ள முடியாத நிலையிலேயே இருக்கும் . இதுதான் , அதனுடைய இயல்பான தன்மை? தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாதது. எல்லாம் நடக்கக்கூடிய சாத்யம் உண்டு, ஆனால் எதுவுமே நிச்சயமில்லை. இதுதான் வருங்காலம் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. இனிமேல் நடப்பதற்கு எதுவுமே இல்லை. இதுதான் இறந்தகாலம் , நிகழ்காலம் என்பது, நடந்து முடிந்ததிலிருந்து, நடக்க வேண்டியதற்கு, ஒரு வழியாக , ஒரு நடுமையமாக இருக்கிறது. அது இறந்ததிலிருந்து, உயிர்த்து எழும் நிலையில் இருக்கிறது.

இப்பொழுது நீங்கள், "இது என்னுடைய கடைசி ஆசை, சரிதானா?" என்று கேட்கிறீர்கள்.

இது உங்களுடைய கடைசி ஆசையாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறீர்கள் . அதன் பிறகு, நீங்கள் உண்மையாகவே தற்கொலைகூட

செய்துகொள்ளலாம் - ஏன் , தற்கொலை செய்து கொள்ளத்தான் வேண்டும் ஒன்று, நீங்கள் ஒரு புகை வண்டிக்கு முன்பு விழவேண்டும் , அல்லது கடலில் அல்லது ஒரு பள்ளத்தில் விழவேண்டும் . அப்பொழுதுதான் , அது உங்களுடைய கடைசி ஆசையாக இருக்கும் . அல்லது மனரீதியாகவாவது, நீங்கள் தற்கொலை செய்து கொள்ளத்தான் வேண்டும். இதைத் தான் , பெரும்பாலோர் செய்து கொண்டு வருகிறார்கள் . வேறு எந்தப் பெண்ணையும் பார்க்காதீர்கள் . கண்களை மூடிக்கொண்டு, பயந்தவாறே வாழுங்கள் ! நீங்கள் , யாரை விரும்புகிறீர்களோ அவர்களோடு மட்டும் ஒட்டிக்கொண்டு இருங்கள் இங்கும் அங்கும் உங்களுடைய பார்வையை ஓடவிடவேண்டாம் ; வேறு பெண்களைக் கனவில்கூட நினைக்க வேண்டாம் . இதுதான் மனரீதியான தற்கொலை. ஆனால் , இந்த இரண்டு வழிகளிலும் , நீங்கள் உண்மையாக வாழ முடியாது. ஏனென்றால் , வாழ்வதற்கு எந்த எதிர்காலமும் இல்லை. நீங்கள் உண்மையிலேயே வாழவிரும்பினால் , ஆமாம் . வாழத்தான் விரும்புகிறீர்கள் . இதைத்தான் நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள் நீங்கள் சௌவ்யாவுடன் வாழ விரும்புகிறீர்கள்.

ஆனால் , அதை கடைசி ஆசை' என்ற நோக்கத்தில் அணுக வேண்டாம். நீங்கள் ஏன், அதைக் கடைசி ஆசை என்று எடுத்துக் கொள்ள வேண்டும் ? நீங்கள் ஏன் உங்களுடைய சக்தியை பிற பெண்களோடு பின்பு பகிர்ந்து கொள்ளக் கூடாது? நீங்கள் ஏன் இவ்வளவு மனிதத்தன்மையற்று இருக்கிறீர்கள் ? ஏன் இவ்வளவு கஞ்சத்தனமாக இருக்கிறீர்கள்? சௌவ்யாவைப் போல, பிற பெண்களும் தெய்வீகமாக , தேவதையாகத் தெரியவில்லையா? கடவுள் உங்களைச் சுற்றி பல லட்சக்கணக்கான உருவங்களில் , தோற்றங்களில் , தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருப்பதை, உங்களால் கவனிக்க முடியவில்லையா? எதற்காக ஒரு உருவத்தோடு மட்டும் வாழ விரும்புகிறீர்கள் ? ஏன் இந்தப் பற்று?

இந்தப்பற்று அல்லது ஆசை. உங்களுடைய அடக்குதலிலிருந்து வந்திருக்கிறது. நீங்கள் உங்களுடைய ஆசைகளை வைத்திருக்கிறீர்கள் .

அப்பொழுது, உங்களை விரும்பும் , ஒரு பெண்ணை சந்தித்தபொழுது, அந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள ஆசைப்படுகிறீர்கள் . நீங்கள் இப்பொழுது அவளை இழக்கப் பயப்படுகிறீர்கள் . ஏனென்றால் , நீங்கள் அந்த நீண்ட இரவுகளில் , தனிமையில் பட்ட கஷ்டம், உங்களுக்குத்தான் தெரியும் இப்பொழுது, இந்தப் பெண்ணும் சென்றுவிட்டால் , நீங்கள் மீண்டும் தனிமையில் இருக்கவேண்டிவரும் . இப்பொழுது, நீங்கள் விரும்பும் அந்தப் பெண்ணும் , அவளுடைய தனிமையைக் கண்டு பயந்திருக்க வேண்டும் . ஆகவேதான் , அவள் உங்களோடு சேர விரும்புகிறாள் . உங்களைப் போலவே, அவளும் , நீங்கள் பிறகு வேறு பெண்களுடன் சென்றுவிடுவீர்களோ என்று பயப்படுகிறாள் . அவள் அந்தத் தனியான நீண்ட இரவுகள் மீண்டும் வரவேண்டாம் . இப்பொழுது, நாங்கள் இருவரும் எங்களுடைய நிலைமையப் புரிந்து கொண்டு விட்டோம். இருவரும் ஒன்றாகத்தான் வாழவேண்டும். ஒருவருக்கொருவர் துணையாகத்தான் இருக்கவேண்டும் . ஒருவரை ஒருவர் , தன்னுடைமையாக்கிக் அடக்கியே

கொள்ள வேண்டும்'' என்று நினைக்கிறாள்.

மக்கள் ஆனால் , இதைப்போல பாதுகாப்பை விரும்புபவர்களுக்கு, பிறகு என்ன நிகழ்கிறது என்று பாருங்கள் . முக்கியமாக , இதனால் அலுப்படைகிறார்கள் . நீங்கள் ஒரு காதலரை விரும்புகிறீர்கள் , பாதுகாவலனை அல்ல . உங்கள் மேல் அன்பு கொண்டிருப்பவரைத்தான் விரும்புகிறீர்கள். சிறை பாதுகாவலரை அல்ல. நீங்கள் இயல்பாக ஓடிக் கொண்டிருக்க விரும்புகிறீர்கள்; ஒரே இடத்தில் அடைபடுவதற்காக அல்ல. இந்த மாறுபட்ட ஆசைகளைச் சற்று கவனியுங்கள். நீங்கள் காதலோடு வாழ விரும்புகிறீர்கள் . நீங்கள் காதலுக்காக என்ன செய்தாலும் , அது, காதலுக்குத் தொந்தரவாகவே முடிகிறது, காதலை அழிக்கிறது. அந்த அன்பு இயல்பாக ஓடுவதை அது தடைப் படுத்துகிறது. நீங்கள் காதலோடும் , அன்போடும் வாழ விரும்புகிறீர்கள். மகிழ்ச்சியாக உங்கள வாழ்க்கையை

கழிக்க நினைக்கிறீர்கள். ஆனால், நீங்கள் அதற்காக என்ன செய்தாலும் , அது அதற்கு மாறாகவே செயல்படுகிறது. ஆமாம். மாறாகத்தான் இயங்குகிறது.

- இது ஏன் உங்களுடைய கடைசி ஆசையாக இருக்கவேண்டும்? இதுதான், உங்களுடைய கடைசி ஆசையாக இருக்கவேண்டும் என்று நான் கூறவில்லை. நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள் . என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். நான், இது ஏன் உங்களுடைய கடைசி ஆசையாக இருக்கவேண்டும் என்றுதான் கேட்கிறேன். அந்தக் காதல் மலர்ந்தால் , வெறுமனே எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் அன்புடன் சேர்ந்து வாழுங்கள் . அப்பொழுது. உங்கள் காதலியைவிட வேறு அழகான அன்புடன் கூடிய பெண் கிடைக்காத வரையில், நல்லதுதான், நீங்கள் அதிர்ஷ்டசாலிதான்! அதைப் போல , சௌவ்யாவும் வேறு அழகான அன்புடைய ஆணைச் சந்திக்காத வரையில் நல்லதுதான். மாறாக, உங்களைவிட அன்போடு கூடிய மற்றும், அவளுக்கு மகிழ்ச்சியையும், சிறந்த உடலுறவு உச்ச இன்பத்தையும் கொடுக்கக் கூடிய கம்பீரமான ஆணைச் சந்திக்க நேர்ந்தால், பிறகு என்ன? அவள், உங்களோடுதான் இருக்க வேண்டும் என்ற கட்டாயம் என்ன? அப்படிச் செய்தால், அவள் தனக்கு மாறாகவே, எதிர்ப்பாகவே செயல்படுகிறாள் . எதற்காக , அவள் உங்களோடு ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும்?

அவள் , உங்களோடு சேர்ந்து இருந்தால் , அவளால் உங்களை ஒருக்காலும் மன்னிக்க முடியாது. ஏனென்றால், உங்களால்தான், அவள், உங்களைவிட மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய ஒரு ஆணை இழந்து விட்டாள் . அவள் , எப்பொழுதும் உங்கள் மேல் கோபமாகவே இருப்பாள். ஆகவேதான் மனைவிகள் கணவர்கள் மேலேயும் , கணவர்கள் மனைவிகள் மேலும் கோபத்தோடு தான் இருக்கிறார்கள் , வாழ்கிறார்கள். அந்தக் கோபம் இயற்கைதான். அந்த கோபம் , இந்த உலகத்துச் சாதாரணப் பொருள்களுக்காக அல்ல. அது டீ ஏன் சூடாக இல்லை என்பதற்காக அல்ல. நீங்கள், காதலோடு இருந்தால், இது எல்லாம் அனாவசியம். டீ சூடாக இருந்தால் என்ன, குளிர்ச்சியாக இருந்தால் என்ன அல்லது டீயாக இல்லாமலேயே இருந்தால்தான் என்ன? உங்களுடைய

காதல் சூடாக இருந்தால் , எல்லாமே சூடாகவேதான் இருக்கும்.

' நீங்கள் காலையில் எழுந்திருக்கும் பொழுது, உங்களுடைய காலணி இருக்கவேண்டிய இடத்தில் இருந்தால் என்ன , இல்லாவிட்டால் என்ன ? இதில் யாருக்கு, என்ன அக்கரை?

எனவே காதல் மறைந்ததும் , அந்தச் சூடும் மறைந்துவிடும் . பிறகு, நீங்கள் எதற்கெடுத்தாலும் , கோபப்படுவீர்கள் . அந்தக் கோபத்தை வெளியே கூடச் சொல்ல முடியாது. ஏனென்றால் , அதை அந்த சமூகம் ஏற்றுக் கொள்ளாது. அதனால் , நீங்கள் அந்த கோபத்தில் உண்மையாகவும் இருக்க முடியாது. ஆகவே, உங்களுடைய பிரக்ஞைக்கு மேலே வராமலேயே, அதை ஆழக்குழிதோண்டிப் புதைத்து விடுவீர்கள் . ஆனால் , அந்தக் கோபம் நிரந்தரமாகவே இருக்கும் . ஏனென்றால் , அவளால் , பிற நல்ல பெண்களும் , உங்களுக்குக் கிடைக்காமலே போய்விட்டது. அவள் , உங்களை எப்பொழுதும் சூழ்ந்துகொண்டு, உங்களை கண்காணித்தபடியே இருக்கிறாள் . அது போல நீங்களும் அவளைக் கண்காணித்தபடியே இருக்கிறீர்கள் . இப்படி, நீங்கள் இருவரும் ஒருவர் மேல் ஒருவர் கோபத்திலேயே அடக்கிக் கொண்டு வாழ்கிறீர்கள் . உங்களுடைய இறந்தகால வாக்குறுதிகள் அனைத்தும் , இப்பொழுது சிறைகளாகிவிட்டன . இந்த கோபம் ஆரம்பத்தில் ஒன்றிலிருந்து கிளம்பி, பிறகு எல்லாவற்றிலும் பரவ ஆரம்பித்துவிட்டது. ஆகவே, ஒரு கட்டத்தில் , அந்தக் கோபம் எதற்காக , ஏன் எங்கே இருக்கிறது என்று கூட உங்களால் அடையாளம் காட்ட முடியாது. அப்பொழுது அது எதன்மீதும் தாவலாம் . ஏன் இது அங்கு இல்லை, அது ஏன் இல்லை, ஏன் இந்த டீ சூடாக இருக்கிறது, குளிர்ச்சியாக இருக்கிறது..! இப்படியாக..

ஆகவே, இந்த நீண்ட தொடர்வாழ்வு, கோபத்தைத்தான் ஏற்படுத்தும் . நாம் , தேவையில்லாமல் கோபத்தோடு இருப்பதற்காகவா, இந்த வாழ்க்கை இருக்கிறது? பிறகு, இந்த வாழ்க்கை ஏன் , எதற்காக , எந்த

நோக்கத்திற்காக தேவை? சௌவ்யா, திடீரென்று ஒருநாள் தகுந்த ஆணைச் சந்திக்க நேர்ந்தாலும் அவள் உங்களோடுதான் ஒட்டிக்கொண்டு இருக்க வேண்டும் . உங்களுக்குத் துரோகம் செய்யக்கூடாது அல்லவா?

இந்த வார்த்தை மிகவும் அருவருப்பானது.. துரோகம் பார்க்கப்போனால் , அவள் , உங்களோடு இருந்தால் , அவள் , தனக்கே , துரோகம் செய்து கொள்கிறாள் , தன்னுடைய உயிர்த்தன்மைக்கு, தன்னுடைய மகிழ்ச்சிக்கு , இன்பத்துக்கு மற்றும் கடவுளுக்கும் துரோகம் செய்து கொள்கிறாள் இப்பொழுது, கடவுள் வேறு ஒரு கதவைத்தான் தட்ட வேண்டும் . அவள் இனிமேல் உங்களை மனதார காதலிக்க முடியாது. அது ஒருக்காலும் முடியாது. கடவுள் எங்கிருந்தோதான், அவளை அழைக்க வேண்டும் . வேறு ஒன்றின் மூலமாகத்தான் , அவள் உயிர்த்துடிப்பாக இயங்க வேண்டும். வேறு கண்கள் வழியாகத்தான், கடவுளைக் காண வேண்டும் ; கடவுளும் அவளைக் காண வேண்டும் . இப்பொழுது அவள் என்னதான் செய்ய முடியும் ? அவள் , அந்த ஆணைச் சந்திப்பதைத் தவிர்க்கலாம். ஆனால், உங்களை எப்படி அவள்

மன்னிக்க முடியும்? இப்பொழுது கோபம்தான் அவளை ஆக்ரமித்துக் கொள்ளும் . இப்பொழுது, அவள் காரணமில்லாமலேயே கோபப்படுவாள். அந்தக்கோபம், உங்கள் காதலை முற்றிலும் அழித்துவிடும்.

நன்றாக ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள், காதல் ஒரு தென்றலைப்போல. இதோ அங்கே பாருங்கள். எந்தத் தென்றலும் அங்கே வீசவில்லை. மரங்கள் எவ்வளவு அமைதியாக இருக்கின்றன? அவைகள் என்ன செய்ய முடியும் ? அவைகளால் தென்றலை உண்டாக்க முடியாது. எப்பொழுது அது வருமோ, அப்பொழுது வரவேண்டியதுதான் . அப்பொழுது, அவைகள் ஆனந்தத்தால் நாட்டியம் ஆடும். அது போகும்பொழுது போக வேண்டியதுதான் . அது மீண்டும் வரும்வரை, அந்த மரங்கள் காத்திருக்க வேண்டியதுதான்.

காதலும் ஒரு தென்றலைப் போலத்தான் . அது வரும்பொழுதுதான் , வரும் . அது எந்தத் திசையிலிருந்து, யாரிடமிருந்து வரும் என்று யாரால் சொல்ல முடியும் ? இதுதான் தந்த்ராவின் விடுதலை. தந்த்ரா ஒரு அபாயகரமான தத்துவம். ஆமாம். அது ஒரு அபாயகரமான மதம்தான் . அதை பெரிய அளவில் சோதித்துப் பார்க்கவில்லை. எங்கேயோ, ஒரு சிலர் தான் கையாண்டுள்ளனர் . அவர்கள் மிகுந்த தொல்லைகளுக்கும் உள்ளானார்கள் . ஏனென்றால் , இந்த சமூகம் அதை அனுமதிக்கவில்லை. இது மிகப்பெரிய பாபமான காரியம் என்றுதான் அது நினைத்தது. ஆனால் , தந்த்ரா, '' உங்களுக்கு மேலும் இன்பம் கொடுக்க முடியாத , உங்களுடைய காதல் ஓட்டத்தைத் தடைப்படுத்தும் நிலையில் உள்ள ஒரு பெண்ணோடு சேர்ந்து வாழ்வது என்பதுதான் பாபமான காரியம் ' என்று சொல்கிறது. உங்களைக் காதலிக்காத , ஒரு பெண்ணோடு கூடுவது என்பது கற்பழிப்புதான் . அதைப் போல அவள் , காதலிக்காத ஒரு ஆணோடு வலுக்கட்டாயமாகச் சேருவதும் கற்பழிப்புதான். இதுதான் விபச்சாரம்.

தந்த்ரா மகிழ்ச்சியில் நம்பிக்கை வைக்கிறது. ஏனென்றால் , மகிழ்ச்சிதான் கடவுள் என்று தந்த்ரா சொல்கிறது. மகிழ்ச்சிக்காக , எல்லாவற்றையும் தியாகம் செய்து, அதிலேயே இருங்கள் . மகிழ்ச்சியும் , ஆனந்தமும் கடவுளாக இருக்கட்டும் . எப்பொழுதும் நீர்போல இளகி ஓடுங்கள்.

நீங்கள் , ' நான் மா பிரேம் சௌவ்யாவை விரும்புகிறேன் . நான் இறக்கும் வரை, அவள் என்னோடு இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன்'' என்று கூறுகிறீர்கள்.

நீங்கள் என்ன , சீக்கிரமே இறக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களா? நீங்கள் எவ்வளவு நாட்கள் வாழ்வீர்கள் என்று யாருக்குத்தெரியும் ? நீங்கள் ஏன் முதலில் , உங்களுடைய வருங்காலத்தைப்பற்றி நினைக்க வேண்டும் ? வருங்காலத்தைப் பற்றி நினைப்பது என்பது நிகழ்காலத்தைத் தவறவிடுவது ஆகும் . நீங்கள் ஏதோ பெரிய விஷயங்களைப்பற்றி நினைப்பதாக , எண்ணுகிறீர்கள் . இதைப் போல கற்பனையான விஷயங்களைப்பற்றி, சில முட்டாள்

கவிஞர்கள் ஏதோ கூறியிருக்கவேண்டும். கிட்டத்தட்ட எல்லா கவிஞர்களும் எப்பொழுதும் முட்டாளாகவே இருக்கிறார்கள். அவர்களுக்கு ,

வாழ்க்கையின் யதார்த்த அனுபவததைப்பற்றி எதுவும் தெரியாது. அவர்கள் வெறும் கனவு காண்பவர்கள் தான்.

இப்பொழுது பாருங்கள் நீங்கள் நினைத்துக் கொண்டு இருப்பது வீகமான (?) காதல் என்று - நீங்கள் இறக்கும் வரை, அவளோடு சேர்ந்து யாழ வேண்டும் என்று நினைக்கிறீர்கள் . இது ஒன்றும் மகத்தான காதல் இல்லை. நீங்கள் வாழ்கையைக் கண்டு பயப்படுகிறீர்கள். இப்பொழுது, இந்தக் கணம், நீங்கள் அதோடு மகிழ்ச்சியாக இல்லை. ஆகவேதான், நீங்கள் எதிர்காலத்துக்குச் செல்கிறீர்கள் இப்பொழுது நீங்கள் அதைத் தவறவிட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். அதை பின்பு அடைய விரும்புகிறீர்கள் . அது இன்றைக்கோ, நாளை அல்லது நாளை மறுநாளோ கிடைக்கலாம் கறு எதிர்பார்க்கிறீர்கள் . ஆகவேதான் , இந்தப் பயம் . உங்களுடைய எஞ்சிய வாழ்க்கை முழுவதும் அவளுடன் இருக்க முடியும்.

ஆனால் , ஏன் அந்த மகிழ்ச்சி இப்பொழுது இருக்கக்கூடாது? அதை நீங்கள் அடைய வேண்டியிருந்தால், ஏன் அதை இப்பொழுது அடையக் கூடாது? ஆனால் இப்பொழுது, எப்படி மகிழ்ச்சியாக வாழ்வது என்பது உங்களுக்குத் தெரியவில்லை. ஆகவேதான், எதிர்காலத்தைப்பற்றி நினைக்கிறீர்கள். ஆனால் , காலம் என்பதே ஒரு மாயைதான . இப்பொழுது என்பது மட்டும்தான் உண்மை. நாளை என்பதும், நாளை மறுநாள் என்பதும், ஏன் ஒரு வருடம் சென்றாலும், இன்று தான், இப்பொழுதுதான். காலம் என்பது இப்பொழுது மட்டும்தான் இருக்கிறது. கடவுள் எப்பொழுதும் , நிகழ்காலத்திலேயே இருக்கிறார் . நீங்கள் ஆனந்தமாக , பிரக்ஞையாக , வாழ விரும்பினால் , இப்பொழுதே வாழுங்கள் . ஏன் எதிர்காலத்தைப்பற்றி நினைக்கிறீர்கள் ? உங்களுடைய காதல் , ஜுவாலை போல கொழுந்து விட்டு எரியட்டும் . அது, இப்பொழுதே உங்களை

முழுமையாக எரிக்கட்டும் , முழுமையாக ஆட்கொள்ளட்டும்.

ஆனால் , இப்பொழுது, ' நான் இறக்கும் வரை' என்று நீங்கள் நினைக்கிறீர்கள்.

அதைப்பற்றி, யார் , என்ன சொல்வது? நான் அதைப்பற்றி, எதுவுமே கூறப் ' போவது இல்லை. எனென்றால் , நீங்கள் கொஞ்சம் சுதந்திரமாக இருக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன். அதைப் போல , சௌவ்யாவும் சுதந்திரமாக இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறேன் . இரண்டு தனிப்பட்ட சுதந்திரங்கள் சந்திப்பது போல , நீங்கள் இருவரும் சந்தியுங்கள் . சுதந்திரத்தோடு மற்றும் சுதந்திரம் இருக்கும்வரை, நீங்கள் சந்தியுங்கள் . எப்பொழுது, உங்களுடைய சந்திப்பு, உங்களுடைய சுதந்திரத்தில் தலையிடுகிறது என்று நீங்கள் உணரும் போது பிரிந்துவிடுங்கள் ; இருவரும் , வணக்கம் விடைபெறவேண்டிய நேரம் வந்துவிட்டது. நீங்கள் இருவரும் , சுதந்திரமாகச் சந்தித்த அந்த நாட்களுக்கு நன்றி சொல்லுங்கள் , அந்த இன்ப அனுபவத்துக்கு நன்றி சொல்லுங்கள் . ஆனால் , அதற்காக நீங்கள் என்ன செய்ய முடியும் ? உள்ளத்தில் நன்றியுணர்வோடும் , கண்களில் நீரோடும் , ஆன்மாவோடும், சொல்லி,

கருணையோடும் , நட்போடும் பெருந்தன்மையாக விடைபெறுங்கள் அந்தத்தென்றல் , இப்பொழுது வீசவில்லை. அவ்வளவுதான் அதற்காக நீங்கள் என்ன செய்ய முடியும் ? உங்களுடைய இயலாமையை உணர்ந்து, நன்றியோடு உங்களுடைய சுதந்திரத்தோடு விடைபெறுங்கள் ஒருவரை ஒருவர் தொங்கிக்கொண்டு இருக்கவேண்டாம் . அப்படிச் செய்தால் , நீங்கள் இருவரும் உங்களையே அழித்துக் கொள்கிறீர்கள்.

நீங்கள் உண்மையிலேயே, அடுத்தவரைக் காதலித்தால் , அந்தக்காதல் மறையும் பொழுது, அடுத்தவரை, சுதந்திரமாக இருக்க அனுமதியுங்கள் அடுத்தவரின் காதலுக்கு, நீங்கள் இப்படி நன்றி செலுத்துங்கள். அந்தக் காதல் வேறு எங்கேயோ, வேறு

நல்ல சூழ்நிலையில் , வளர்ந்து பூத்துக்குலுங்கட்டும் . அன்பே கடவுள் அந்த அன்பு எங்கு மலர்கிறது என்பது முக்கியமல்ல . மற்றும் அது யாருக்கு இடையே நிகழ்கிறது என்பதும் முக்கியமில்லை. அது A க்கும் B க்கும் . அல்லது C க்கும் பக்கும் , அல்லது E க்கும , Fக்கும் இடையே நடைபெறலாம். இங்கு தனிப்பட்ட நபர் முக்கியமில்லை, அன்புதான், காதல்தான் முக்கியம்.

அது எங்கு நிகழ்ந்தாலும் , யாரிடம் நிகழ்ந்தாலும் , நல்லதுதான் . இந்த உலகம் , அன்பற்று, காதலற்று வெறுமையாக இயங்குவதற்குக் காரணம் , அன்பும் காதலும் மறைந்த மக்கள், ஒருவரை ஒருவர் பிடித்துக் கொண்டிருப்பதுதான் மக்கள் இப்படி ஒருவரை ஒருவர் சுதந்திரமற்ற நிலையில் பிடித்துக் கொண்டிருக்காவிட்டால் , இந்த உலகம் அன்பால் நிறைந்துவழியும்.

உங்களுடைய காதலில் சுதந்திரமாக இருங்கள் . சுதந்திரத்தில் , சுதந்திரமாகச் சந்தியுங்கள் . சுதந்திரம் அழியக்கூடிய அறிகுறி தெரிந்தால் , உங்களுடைய காதல் மறைந்துவிட்டது. அந்தத் தென்றல் நின்றுவிட்டது என்று அர்த்தம் . ஏனென்றால் , காதல் , ஒருவரின் உண்மையான , நன்றியும் , கருணையும் கலந்தகாதல் ஒருபோதும் அடுத்தவரின் சுதந்திரத்தை அழிக்காது, அதனுள் தலையிடாது. அந்தச் சுதந்திரம் அழிந்தால் , இப்பொழுது காதல் இருந்த இடத்தில் , பொறாமை, வெறுப்பு, ஆதிக்கத்தன்மை, பாதுகாப்பு, மதிப்பு, சமூக அந்தஸ்து என்று இப்படி, பல வேண்டாத விஷயங்கள் வந்து அடைத்துக்கொள்ளும் . இவைகளெல்லாம் உங்களிடம் வந்து, உங்களை அசுத்தப்படுத்துவதற்கு முன்பு, அவைகளிலிருந்து தப்பி ஓடிவிடுங்கள்!

கேள்வி 5:

" நான் சந்நியாசம் எடுத்துக்கொள்ள விரும்புகிறேன் . ஆனால், அதை எடுத்துக் கொள்ள, பல வருடங்களாக தயங்கிக் கொண்டு இருக்கிறேன் . எனென்றால் , அதனால் பின்பு பல தொல்லைகளை சந்திக்க நேரிடும் என்று பயப்படுகிறேன் . நான் என்ன செய்வது?"

நீங்கள் , நிச்சயமாக தொல்லைக்குள்ளாவீர்கள்

என்பதை மட்டும், நான் உறுதியாகக் கூற முடியும்! நீங்கள் கஷ்டப்படமாட்டீர்கள் என்று என்னால்

' சொல்ல முடியாது. உங்களுடைய வாழ்க்கையில், குழப்பத்தை உண்டுபண்ண சந்நியாசம் ஒரு முறையாக, ஒரு ஏற்பாடாக இருக்கிறது. இதை ஆழ்ந்து புரிந்து கொள்ளுங்கள்.

உங்களை ஆனால், தொல்லைகளில் இரண்டு விதம் உண்டு ஒன்று அழிவைத்தரக் கூடிய தொல்லை; மற்றொன்று ஆக்கத்தைத்தரக்கூடிய தொல்லை. இந்த அழிவை உண்டு பண்ணக் கூடிய தொல்லைகளைத் தவிருங்கள். ஏனென்றால், அது அழிக்கவே செய்யும். ஆக்கம் தரக்கூடிய, புதுமையை உண்டாக்கக்கூடிய தொல்லைகளை வரவேற்கவும். ஏனென்றால், அது உங்களை மேலான பிரக்ஞைநிலைக்கு உயர்த்திச் செல்லும்

ஏற்கனவே, நீங்கள் பலதொல்லைகளில் இருக்கிறீர்கள். நிச்சயமாக, நான், மேலும் உங்களுக்குத் தொல்லைகளைக் கொடுக்க மாட்டேன்.

நீங்கள் வாழ்க்கை முழுவதும் அனுபவித்து வந்த தொல்லைகளைப் போல் நான் தொல்லை கொடுக்க மாட்டேன். உங்கள் வாழ்க்கைக்குப் புதிய வகையான தொல்லையைக் கொடுக்கப் போகிறேன். ஊக்கத்துடன் இருங்கள் வெகுகாலமாகக் காத்திருக்கிறீர்கள். நீங்கள் அதைப்பற்றி வெகுகாலம் நினைத்துக் கொண்டிருந்தீர்கள்.

நீங்கள் எவ்வளவு காலம் தான், அந்தப் பந்தயத்தில் கலந்து கொள்ள தாமதிக்கப் போகிறீர்கள்? விரைவில், அந்தப் பந்தயம் முடியப் போகிறது! ஆகவே, சீக்கிரம் கலந்து கொள்ளுங்கள்!

கேள்வி :

"நான், தானாகவே அதில் குதிக்க முடியாதா? ஒரு குரு அதற்கு அவசியம்தானா?"

பீட், தேவ் (PETE, DAVE) என்ற இரண்டு இளைஞர்கள், ஒரு கட்டடத்தில் நிறுத்தப்பட்டிருந்த ஏணியில் ஏறி, கட்டட வேலை செய்து கொண்டு இருந்தார்கள் . ஒருவன் , அந்த கட்டடத்துக்கு கீழே நின்று கொண்டு, ஏதாவது புதுமை அந்த கட்டடத்தில் இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டு இருந்தான் . அப்பொழுது, பீட் திடீரென்று மேலேயிருந்து, ஒரு குட்டிக்கரணம் போட்டு, பின்பக்கமாக சுழன்று, மேலும் 2 குட்டிக்கரணம் போட்டு , லாவகமாகத் தரையை வந்து அடைந்துவிட்டான் . அந்தக் கட்டடத்துக்கு கீழே நின்றவன் , அதைப்பார்த்து, ஆச்சரியம் அடைந்து, பீட்டரைப் பாராட்ட, அவனை நோக்கி வந்து, பீட்டரிடம், " நீ என்னோடு வந்து, இதைப் போலச் செய்து காண்பிப்பாயா?'' என்று கேட்டான்.

அதற்கு பீட்டர், "ஓ, தாராளமாக''

''அதற்கு நான் என்ன கொடுக்கவேண்டும்?"

"100 பவுண்டு"

ஓஷோ

100 பவுண்டா?

ஆமாம் எனக்கு 50 பவுண்டு என் அடிக்காலில் சுத்தியலால் அடித்த அந்த தேவுக்கு 50 பவுண்டு! என்றான்

- ஆகவே நீங்கள் தனியாக, அதில் குதிக்க முடியாது உங்களைத்தள்ள ஒரு குரு தேவை ஏனென்றால், அந்த ஆன்மீக யாத்திரை உங்களுக்கு இதுவரை பரிச்சயமில்லாதது நீங்கள் முற்றிலும் புதிதான , ஒரு இருட்டுப் பள்ளத்தாக்கில் குதிக்கவேண்டும் யாராவது உங்களை மிக வேகமாகத் தள்ளாவிட்டால் உங்களால் குதிக்க முடியாது. உங்களை யாராவது சுத்தியலால் அடிக்க வேண்டும்! கேள்வி 7:

நிர்வாணா என்றால் என்ன ?" இந்தக்கதை நிர்வாணாவைப்பற்றியது. இது ஒரு பழைய பௌத்த கதை

இனியதத்தா (ENYADATTA) என்ற ா டு இணையற்ற ஒரு அழகி தன்னுடைய உருவத்தைக் கண்ணாடியில் பார்த்து மகிழ்ச்சியடைவதிலேயே பெரும் விருப்பங்

கொண்டவள் எல்லோரையும் போல, இந்த விதத்தில் அவளும் ஒரு பைத்தியம் தான் ஒரு நாள் காலை, அவள் தன்னுடைய உருவத்தைக் கண்ணாடியில் பார்க்கும் பொழுது, தன்னுடைய உருவத்தில் தலையே இல்லை என்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்தாள் இப்பொழுது, அவள் மனநிலை பாதிக்கப்பட்டவளாக இங்கும் அங்கும் ஓடியவாறு. 'ஐயோ, என் தலையைக் காணோமே, எங்கே இருக்கிறது அது? யாரிடம் இருக்கிறது அது? அதைக் காணாவிட்டால், நான் இறந்து விடுவேனே என்று பலவாறாகப் புலம்பினாள்

அவளைச் சுற்றியுள்ளவர்கள், அவளுடைய தலை. அவளிடமேதான் இருக்கிறது என்று உறுதியாகக் கூறினாலும், அவள் அவர்களை நம்பமறுத்தாள் ஒவ்வொரு தடவையும், மீண்டும் மீண்டும் அவள் தன் உருவத்தைக் கண்ணாடியில் பார்க்கும்பொழுது, அங்கு தன்னுடைய தலை இல்லையென்பதை அறிந்து, மீண்டும் மீண்டும் கதறி அழுது. தனக்கு உதவி செய்யும் படி வேண்டினாள். அவளுடைய நிலையைக்கண்ட, அவளுடைய நண்பர்களும் சொந்தக்காரர்களும் அவளை வீட்டுக்கு இழுத்துச் சென்று, ஒரு தூணில் கட்டிப் போட்டுவிட்டார்கள்.

மேலும், அவளுடைய நண்பர்கள், அவளுடைய தலை, அவளிடமே இருக்கிறது என்று கூறினாலும், அவர்கள் எல்லாம் பொய் கூறுவதாகவே நினைத்தாள். அந்த நண்பர்களில் ஒருவன், அவன் தலையில் பலமாகக் குட்டினான். அப்பொழுது வலி பொறுக்க முடியாமல் அவள் கத்தினாள். அந்த நண்பன் அதுதான் உன்தலை! அது அங்கேயேதான் இருக்கிறது! " என்று உரக்கக் கத்தினான். பிறகுதான், மெல்ல அவள் தன் உண்மையான நிலையை உணர்ந்து தான் ஏமாற்றப்பட்டதை அறிந்து ஆச்சரியப்பட்டாள். அதாவது தானே, தன்னை ஏமாற்றிக் கொண்டதைப் பற்றி அதிர்ச்சியடைந்தாள்.

இதற்கு பெயர்தான் "நிர்வாணா!"

நீங்கள் அந்த நிர்வாணா நிலையிலிருந்து ஒருபோதும்

வேறுபட்டிருக்கவில்லை. நீங்கள் அதிலிருந்து ஒருபோதும் விலகி இருக்கவில்லை. அது உங்களுக்குள் ளேதான் இருக்கிறது. நீங்களும் அதற்குள்தான் இருக்கிறீர்கள் . இதுதான் உண்மையான நிலை. ஆனால் , இதை அறிந்துகொள்ள, உங்களிடம் சற்று பிரக்ஞை உணர்வு தேவை. உங்களுடைய தலையில் , ஒரு பலமான அடி தேவை.

உங்களுடைய தலை, அங்கேயேதான் இருக்கிறது. நீங்கள் அதை ஒரு தவறான கோணத்தில் , ஒரு தவறான கண்ணாடியில் பார்ப்பதால் , அதை உங்களால் பார்க்க முடியவில்லை. இல்லாவிட்டால் , நிர்வாணா என்பது நீங்கள் தேடிக் கண்டு பிடிக்கக்கூடிய ஒரு இலக்கு இல்லை. அது வேறு எங்கேயும் இல்லை. அது உங்களுடைய வாழ்வுக்குப்பிறகு இல்லை. அது இப்பொழுது இங்கேயே தான் இருக்கிறது. நிர்வாணா நிலையில் தான் , நீங்கள் உருவாக்கப் பட்டிருக்கிறீர்கள் . அது, உங்களுடைய ஒவ்வொரு நாடி, நரம்புகளிலும் மற்றும் ஒவ்வொரு திசுக்களிலும் இருக்கிறது. உங்களுக்கு இப்பொழுது சற்று ஞாபகம் தேவையாக இருக்கிறது. அவ்வளவுதான்.

''அதுதான் நீங்கள்''

*****